ஸ்ரீ:

# ஸ்ரீராமாயணம்

## ஆரண்ய காண்டம்

### தமிழ் வசனம்.

---

இஃது

ஸ்ரீவால்மீகி ராமாயணத்திற்கிணங்க

ஸ்ரீ. அ. வீ. நரஸிம்ஹாசாரியரால்

மொழி பெயர்க்கப்பெற்று



சென்னை

ஆர். வெங்கடேஶ்வரர் அண்டு கம்பெனியாரவர்களால்
ஆநந்த அச்சுக்கூடத்தில் அச்சிட்டு
வெளியிடப்பட்டது.

---

1926

(8-1)

## ஆரண்யகாண்டம்

# விஷயங்கள்.

ஸர்க்கம். பேஜ்.

# படங்களின் விவரம்.

---



---

ஸர்க்கம். பேஜ்.

ஸர்க்கம். பேஜ்.

ஸர்க்கம். பக்கம்.

ஸர்க்கம். பேஜ்



ஶ்ரீ

ஶ்ரீ ராமசந்த்ர பரப்ரஹ்மணேநம:

# ஶ்ரீராமாயணம்

## ஆரண்யகாண்டம்.



ஶ்ரீ ராமன்[1] மஹாதீரனும் எப்படிப்பட்ட சத்ருக்களுக்கும் சிங்கம் முதலிய எப்படிப்பட்ட துஷ்ட ஜந்துக்களுக்கும் எதிர்த்து அவமதிக்க முடியாதவனும் எதற்கும் பின் வாங்காதவனுமாகையால் பிறரால் கண்கொண்டு காணவுங் கூடாத மஹாரண்யமாகிய தண்டகாரண்யத்தில் ப்ரவேஶித்து அங்குள்ள தாபஸர்களின் ஆஶ்ரமங்களைக் கண்ணுற்றவனாயினன். அங்கு யாகத்தின்பொருட்டுக் கொண்டுவரப்பட்ட தர்ப்பங்களும் ஆறப்பரிமாறின மரவுரிகளும்

---

1 வால்மீகி மஹர்ஷி, பூர்வகாண்டத்தில் ஜகத்தின் உத்பத்தி முதலியவற்றிற்குக்காரணமும் வேதாந்தங்களில் ஓதப்படுவதுமாகிய பரப்ரஹ்மம் ஸமஸ்த அவித்யைகளையும் போக்குவதும் நித்யாநந்த பரிபூர்ணமும் யாவர்க்கும் அந்தர்யாமியாயிருப்பதும் எல்லையில்லாத ஔஜ்ஜ்வல்யகுணமுடையதும் நிகரின்றிய தர்மத்தை நடத்துவது மாயிருக்கை முதலிய அதன் கல்யாணகுணகனங்களை வர்ணித்து இப்பொழுது ஸஜ்ஜனங்களைக் காக்கையாகிற தர்மவிசேஷத்தைச் சொல்ல ஆரண்யகாண்டம் ஆரம்பிக்கின்றனர். அன்றியே பூர்வ காண்டத்தில் பித்ருவசன பரிபாலனமென்னும் தர்மத்தை அவஶ்யம் அனுஷ்டிக்க வேண்டுமென்று முக்யமாகத் தெரிவித்தனர். பின்பு

ஆங்காங்குப் புலப்பட்டுக்கொண்டிருந்தன. மேலும், அதில் தவம் வேதாத்யயனம் முதலியவற்றாலுண்டான தேஜோவிசேஷம் முழுவதும் விளங்கப்பெற்றிருக்கை யால் அது ஆகாயத்தினிடையில் பளபளவென்று ப்ர காசிக்கின்ற ஸூர்யமண்டலம்போல் ராக்ஷஸ அஸு ராதிகளுக்குக் கண்ணெடுத்துப் பார்க்கவும் முடியாத தாகி ப்ரகாசித்துக்கொண்டிருந்தது. அங்கு எப்படிப் பட்ட துஷ்ட ஜந்துக்களும் வைரம் உண்டாகாதிருந்த மையால் ஸகல ப்ராணிகளுக்கும் அது அனுகூலமாக தாயிருந்தது. ராக்ஷஸர்களிடத்தினின்று பயந்தவர்க ளுக்கும் அது வாஸயோக்யமாயிருந்தது. அவ்வாஶ்ரமங் களின் முற்றங்களெல்லாம் காற்புறமும் தெளிந்து விளக் கப்பெற்று மிகவும் அழகாயிருந்தன. ம்ருகங்கள் பலவும் அங்கு நிறைந்திருந்தன. பக்ஷி ஸமூஹங்களும் அங்கு எங்கும் புலப்பட்டுக்கொண்டிருந்தன. அங்குள்ள இடங் களெல்லாம் மிகவும் அழகாயிருக்குமாகையால் அப்ஸர ஸ்த்ரீகள் குவியலாக வந்து எப்பொழுதும் அங்கு நர்த் தனஞ் செய்துகொண்டு அதைப் பூஜித்து வருவார்கள். அங்கு விஶாலமான அக்னிஹோத்ர க்ருஹங்களும் ஸ்ருக்கு முதலிய யாகக்கருவிகளும் க்ருஷ்ணாஜினங் களும் [1] பரிஸ்தரணத்திற்கு வேண்டிய தர்ப்பங்களும் ஸமித்துகளும் ஜலகலசங்களும் காய் கிழங்குகளும் அமைந்தமாகி விளங்கிக்கொண்டிருக்கும். நல்ல பழங் களைக் கொடுப்பவைகளும் பரிசுத்தங்களுமாகிய [2] அரண்ய வ்ருக்ஷங்களும் அங்கு நிறைந்திருக்கும். பூத பலி முதலிய பலிகளாலும் வைஶ்வதேவம் முதலிய ஹோமங்களாலும் அது பூஜிக்கப்பட்டுப் பரிசுத்தமாகி வேதபாராயணத்வனிகள் ஓயாது நடக்கவும் தேவ

---

ஸஜ்ஜனஸம்ரக்ஷணமென்னும் தர்மத்தைத் தெரிவிக்க இந்தக் காண் டத்தை ஆரம்பிக்கிறாரென்று முணர்க.

1. அக்னியைச் சுற்றிலும் பரப்புதல்.
2. அரண்ய வ்ருக்ஷம்-காட்டு மரம்.

தார்ச்சனத்தின்பொருட்டுக் கொண்டு வரப்பட்ட [1] அடவிப்புஷ்பங்கள் நாற்புறத்திலும் இறையவும் தாமரை மலரப்பெற்ற தாமரையோடைகள் விளங்கவும் பெற்று அழகாயிருந்தது. அங்குக் காய்கிழங்குகளை ஆஹாரஞ் செய்பவர்களும் ஜிதேந்த்ரியர்களும் க்ருஷ்ணாஜினந்தரித்தவர்களும் ஸூர்யனையும் அக்னியையும் நிகர்த்தவர்களும் வயது சென்றவர்களுமாகிய மஹர்ஷிகள் எங்கும் வஸித்திருந்தனர். மேலும், அம்மஹர்ஷிகளும் பூஜிக்கத்தகுந்த மஹிமையுடையவர்களும் பரிசுத்தர்களும் ஆஹாரநியதி யுடையவர்களுமாகிய மஹர்ஷிகள் அந்த ப்ரகாசித்துக்கொண்டிருந்தனர். இங்ஙனம் ப்ரஹ்ம லோகத்தை நிகர்த்ததென்னும் புகழ்பெற்றுக் கர்ம காலங்களில் வேதமந்த்ரகோஷங்கள் நடக்கவும் ப்ரஹ்ம ஜ்ஞானிகளும் மஹாபாக்யசாலிகளுமாகிய ப்ராஹ்மணர்கள் களித்திருக்கவும்பெற்று விளங்குகின்ற அந்த ரிஷ்யாஶ்ரமங்களின் கூட்டத்தை மஹாதேஜஸ்வியும் செல்வம் நிறைந்தவனுமாகிய ஸ்ரீராமன் கண்டு தன் பெருவில்லினின்று நாணை இறக்கி அவ்வாஶ்ரமங்களுக்கு எதிராகப் போயினன். [2] அம்மஹர்ஷிகள் திவ்யஜ்ஞானமுடையவர்களும் (கண்ணுக்குத் தெரியாத விஷயங்களையும் நெஞ்சென்னும் உட்கண்ணால் கண்டறிய வல்லவர்களும்) ராமனது அவதாரரஹஸ்யத்தை

1. காட்டுப் புஷ்பங்கள்.

2. இதற்கு 'திவ்யஜ்ஞாநோபபந்நாஸ்தே ராமம் த்ருஷ்ட்வா மஹர்ஷய:| அபிஜக்முஸ்ததா ப்ரீதா வைதேஹீஞ்ச யஶஸ்விநீம்' (10-11) என்று மூலம். (திவ்யஜ்ஞாநோபபந்நா:) லோகவிலக்ஷண மான ஜ்ஞானமுடையவர்கள், 'ராமன் ராவணவதத்தின் பொருட்டு அவதரித்த விஷ்ணுவே, ஸீதை ஸ்ரீமஹாலக்ஷ்மியே. லக்ஷ்மணன் அவனது அம்ஶமே' என்னும் ஜ்ஞானமுடையவர்கள். (மஹர்ஷய:) அலௌகிகதத்த்வங்களை அறிய வல்லவர். ஆனதுபற்றியே அவர்கள் (ப்ரீதா:) ப்ரீதிருபமான பக்தியுடையவர்களாகி (அபிஜக்மு:) ராமனை எதிர்கொண்டனர்.

அறிந்தவர்களுமாகையால், ராமன் நாராயணுவதார மென்றும் ஸீதையும் லக்ஷ்மணனும் மஹானுபாவர் களென்றும் அறிந்திருப்பதுபற்றி மிகுந்த ப்ரீதியுடன் ராமலக்ஷ்மணர்களையும் பெரும்புகழுடையளாகிய ஸீதை யையும் கண்டு எதிர்கொண்டு சென்றனர். தார்மிகர் களும் வ்ரதங்களில் திடமாயிருப்பவர்களுமாகிய அம்

1. 'தேதம்ஸோமமிவோத்யந்தம் த்ருஷ்ட்வாவையர்மசாரிணஃ। லக்ஷ்மணஞ்சைவத்ருஷ்ட்வாது வைதேஹீஞ்சயமஸ்விநீம்।மங்களாநி ப்ரயுஞ்ஜாநாஃ ப்ரத்யக்ருஹ்ணந்த்ருடவ்ரதாஃ' என்று மூலம். (தே) வருங்காலம் நிகழ்காலம் கழிகாலமாகிய மூன்று காலங்களையு முணர்ந்த அம்மஹர்ஷிகள். (தம்) ராக்ஷஸர்களை அடக்கும்பொருட் டவதரித்த அந்த ராமனை. (உதியந்தம் ஸோமமிவ) இருட்டைப் போக்குவதற்காக உதயமாகின்ற சந்த்ரன்போன்றவனை. அன்றியே பிரதமையினன்று புதிதாக உதிக்கின்ற சந்த்ரன்போல் பூஜிக்கத் தகுந்தவனை. அன்றியே வனஸமூஹத்தின் மத்தியில் தோற்றுகை யால் மேகங்கள் சூழ்ந்த சந்த்ரன்போலிருக்கின்றவனை, (யர்மசா ரிணஃ) தர்மங்களை ஆசரிக்கின்ற அம்முனிவர்கள் (த்ருஷ்ட்வா) பார்த் து. தாம் ஆசரிக்கும் தர்மங்களால் ஆராதிக்கப்படுபவனை ப்ரத்யக்ஷ மாகக் கண்டு. அன்றியே-இதற்கு முன்பு தர்மபலத்தினல் பார்த்துக் கொண்டிருந்தார்களென்றும் இப்போது கண்ணார ஸந்தர்ஶனம் பண்ணப்பெற்றார்களென்றும் பொருள். (தயா லக்ஷ்மணம் வைதே ஹீஞ்சத்ருஷ்ட்வா)அப்படியே லக்ஷ்மணனையும்ஸீதையையும்பார்த்து, (மங்களாநி ப்ரயுஞ்ஜாநாஃ)தாம் அபேக்ஷித்த ரக்ஷணத்திற்குமுன்பே மங்களாசாஸனஞ் செய்பவராகி. அன்றியே-ராமனது ஸௌந்தர்ய ஸௌகுமார்யாதிகளைக் கண்டு ராக்ஷஸர்கள் மிகுந்திருக்கப் பெற்ற அவ்வனத்தில் அவர்களுக்கு என்ன விளையுமோவென்று வ்யாகுலப் பட்டு அவரது விரோதிகளெல்லாம் பறந்தோடும்படி ஆசீர்வாதங் களைச் செய்துகொண்டு. (த்ருடவ்ரதாஃ) அவனே தமக்கு ரக்ஷகனென் னும் நியமத்தைக் கெட்டியாகக் கைப்பற்றினவராகி (ப்ரத்யக்ருஹ் ணந்) அங்கீகரித்தனர். எதிர்கொண்டு காய் கிழங்கு முதலியவற்றைக் கொடுத்து உபசரித்தார்களென்றபடி. இங்ஙனம் கோவிந்தராஜர். அன்றியே (தே) அந்த ரிஷிகள், (மங்களாநி ப்ரயுஞ்ஜாநாஃ) 'மங்க லங்கள் உண்டாகுமாக' என்று மங்களாசாஸனஞ் செய்துகொண்டு

மஹர்ஷிகள் உதயமாகின்ற சந்த்ரன்போன்ற ராமனை யும் லக்ஷ்மணனையும் புகழுடைய ஸீதாதேவியையும் பார்த்து அவர்களுக்கு மங்கலாசாஸனஞ் செய்து கொண்டு பழம் முதலியவற்றைக் கொடுத்து உபசாரஞ் செய்தனர். [1] வனவாஸிகள் ராமனது திருமேனி ஸாமுத்ரிக லக்ஷணங்களெல்லாம் அமைந்திருப்பதை

---

(உதியந்தம்ஸோமமிவ) உதிக்கின்ற சந்த்ரன்போல் ஸகலஜனங்களுக்கும் ஆநந்தகரனாகிய, (தம்) அந்த ராமனை, (ப்ரத்யக்ருஹ்ணந்) தம திஷ்ட தெய்வதமாக ஸ்வீகரித்தனர். என்று மஹேஶ்வரதீர்த்தர். அன்றியே-அந்தரிஷிகள், (உதியந்தம்ஸோமமிவ) உதிக்கின்ற சந்த்ரன்போல் கண்ணுக்கினியனாயிருப்பவனை, (தஸ்மாத் ஸோமராஜாநோ ப்ராஹ்மணா:) (ஆகையால் ப்ராஹ்மணர்கள் ஸோமனை ராஜாவாகவுடையவர்கள்) என்னும் ஶ்ருதியின்படி அந்தப்ராஹ்மணர்கள் தமது குலரக்ஷகனாகிய ஸோமனைப்போல் தமக்கு ரக்ஷகனும், தர்மங்களைச் செய்பவனுமாகிய ராமனைப் பார்த்து, (யஶஸ்விநீம்) பாதிவ்ரத்யயஶஸ்ஸையுடைய, அன்றியே ராக்ஷஸகுலஸம்ஹாரத்திற்குத் தான் ஹேதுவாகையாலே கீர்த்தியமைந்தவளாகிய ஸீதையைக் கண்டு ஆசீர்வாதஞ்செய்தனர். அவர்கள் இவரது உண்மையை அறிந்துகொண்டது பற்றியே மேல் தம்மை ரக்ஷிக்கும்படி ராமனை ப்ரார்த்திப்பது பொருந்துகின்றது. இங்ஙனம் திலகவ்யாக்யானம் இவர் 'யர்மசாரிணம்' என்று பாடங்கொள்கிறதாகத் தெரிகின்றது.

1. இதற்கு 'ரூபஸம்ஹநநம்லக்ஷ்மீம் ஸௌகுமார்யம் ஸுவேஷதாம்' என்று மூலம். (ரூபம்) அதாவது 'அங்கான்யபூஷிதாந்யேவ ப்ரேக்ஷணீயைர்விபூஷணை:। யேநபூஷிதவத்பாந்தி தத்ரூபமிதிகத்யதே' (அங்கங்கள் பூஷணங்களால் அலங்கரிக்கப்படாமலே அலங்கரிக்கப்பட்டவைபோல் எதனால் ப்ரகாசிக்கின்றனவோ அது ரூபமெனப்படும்) என்று சொல்லப்பட்ட லக்ஷணமுடையது, (ஸம்ஹநநம்) ஸௌந்தர்யம். 'அங்கப்ரத்யங்ககாநாம்ய: ஸந்நிவேஶோ யதோசித:। ஸுஶ்லிஷ்டஸந்திபந்தஸ் ஸ்யாத் தத் ஸௌந்தர்யமிஹோச்யதே' (அங்கங்களும் உபாங்கங்களும் ஒன்றுக்கொன்று பொருந்தி ஸந்திபந்தங்கள் அழகாயிருக்கப்பெற்றிருக்கை ஸௌந்தர்யமெனப்படும்). (லக்ஷ்மீம்) காந்தி, லாவண்யமென்றபடி. 'முக்தாபலேஷுச்

யும் சரீரம் முழுவதும் விளங்குகின்ற ஸமுதாய சோபையையும் ஸௌகுமார்யத்தையும் அழகிய அலங்காரங்கள் அணிந்திருப்பதையும் மிக வியப்புடன் கண்டனர். [1] இவ்வளவேயன்றி அவ்வனசாரிகள் அனைவரும் அந்த ஸீதா ராம லக்ஷ்மணர்களைக் கண்டு இதுவரையில் என்றும் அப்படிப்பட்டவர்களைத் தாங்கள் கண்டவரல்லாமையால் மிகவும் ஆஶ்சர்யமடைந்து கண்ணிமை கொட்ட அறியாதவர்கள்போல் கண்களை ஓயாமல் மலரத்திறந்து அவர்களைப் பார்த்துக்கொண்டிருந்தனர். அவ்வாஶ்ரம ஸமூஹத்தில் மஹாபாக்யசாலிகளாகிய அம்முனிவர்கள் ஸகலபூதங்களுக்கும் ஹிதஞ்செய்யுந் தன்மையனாகிய ராமன் அதிதியாக வருகையில் அவனைத் தத்தமது பர்ணசாலைகளுக்கு அழைத்துக் கொண்டு போயினர். அப்பால், அக்னியைப்போல் பரிசுத்தர்களும் தர்மானுஷ்டான சீலர்களும் மஹாபாக்யசாலிகளுமாகிய அம்முனிவர்கள் ராமனுக்கு விதிப்படி குஶலப்ரஶ்னம் முதலிய ஸத்காரஞ்செய்து அர்க்யாதி

---

ச்சாயாயாஸ்தரலத்வமிவாந்தரா। ப்ரதிபாதி யதங்கேஷு தல்லாவண்யமிஹோச்யதே' (முத்துக்களில் தளதளவென்று விளங்குகின்ற காந்திபோல் அவயவங்களில் ப்ரகாசிக்கும் 'காந்தி லாவண்யமெனப்படும்.) (ஸௌகுமார்யம்) புஷ்பம் மலர்ந்தாற்போல் கோமலமாயிருக்கை. (ஸுவேஷதாம்) தகுந்த அலங்காரமுடையவனாயிருக்கை.

1. இதற்கு-'வைதேஹீம்லக்ஷ்மணம்ராமம் நேத்ரைரநிமிஷைரிவ। ஆஶ்சர்யபூதாந்தத்ருஶுஸ்ஸர்வே வநசாரிண:' என்று மூலம். 'ஆஶ்சர்யபூதா:' என்று மஹேஶ்வரதீர்த்தருடைய பாடம். வனத்தில் திரியும் பசு பக்ஷி ம்ருகாதிகளெல்லாம் ஆஶ்சர்யப்பட்டு ராமாதிகளைக் கண்டனவென்று பொருள். ப்ரஹ்மாதிகளுக்கும் புலப்பட அரிய பகவானாகிய ராமன் ஸீதா லக்ஷ்மணர்களோடுகூடப் பங்குவின் மேல் (முடவன்மேல்) கங்காப்ரவாஹ மென்றாற்போல் எமது முன்னிலையில் புலப்பட்டானல்லவா! என்று ஸகலஜகன்மோஹனமாகிய ராமனது திவ்யமங்கல விக்ரஹத்தைக் கண்டதனாலுண்டான ஆநந்தம் இடைவிடாமல் இருக்கவேண்டுமென்று கண்ணிமைகளைக் கொட்டாமல் ம்ருகாதிகளுங்கூட ஆஶ்சர்யப்பட்டுக் கண்டனவென்று கருத்து. இங்ஙனம் மஹேஶ்வரதீர்த்தர்.

களின் பொருட்டு ஜலங்கொண்டு வந்தனர். [1] தர்மத்தை உணர்ந்த அம்முனிவர்கள் மஹானுபாவனுகிய ராமனுக்கு வனத்திலுள்ள புஷ்பங்களையும் பழங்களையும் கிழங்குகளையும் தத்தமது ஆஸ்ரமங்களையும் 'இவையெல்லாம் உன்னதீனமே. இஷ்டப்படி உபயோகப்படுத்திக் கொள்ளலாம்' என்றுரைத்துக் காட்டிக் கைகளைக் கூப்பிக்கொண்டு அவனைப்பார்த்து மொழிந்தனர்:— 'மஹாயஶஸ்வியாகிய நீ வர்ணாஸ்ரமதர்மங்களைப் பரிபாலிப்பவனுகையால் வருந்தியிருக்கின்ற இம்முனிஜனங்கள் அனைவர்க்கும் ரக்ஷகனுகவேண்டும். ஏனெனில்? [2] அரசன் தேவதையென்னும் புத்தியால் பூஜிக்கத்தகுந்தவன்; ப்ரபுவென்னும் புத்தியால் வெகு மதிக்கத்தகுந்தவன்; துஷ்டநிக்ரஹஞ் செய்பவன். அரசனே குரு. 'எனக்கு இப்படிப்பட்ட மேன்மை ஏது' என்பாயோ? ராகவா! [3] அரசன் பூலோகத்தில் தேவேந்த்ரனுடைய

---

1. இதற்கு—'மூலம் புஷ்பம் ஃபலம்வந்யமாஶ்ரமஞ்சமஹாத்மநః। நிவேதயித்வாதர்மஜ்ஞாஸ்ததః ப்ராஞ்ஜலயோ஽ப்ருவந்' என்றுமூலம். (தர்மஜ்ஞாః) தர்மந்தெரிந்தவர்கள். ஶேஷியிடத்தில் செய்யவேண்டிய சேஷவ்ருத்தியாகிற தர்மத்தை யறிந்தவர்கள். கோவிந்தராஜர். (ப்ராஞ்ஜலயః) இவனே ஆதிபுருஷனென்னும் நிச்சயபுத்தியால் பக்திரஸம் மேலெழப்பெற்றுக் கைகூப்பி நிர்மலராயினரென்று கருத்து மஹேஶ்வரதீர்த்தர்.

2. அரசன் துஷ்டநிக்ரஹஞ் செய்பவனென்கையால் மான்யனென்றும், குரு என்கையால் பூஜ்யனென்றும் தோற்றுமென்று கோவிந்தராஜர். மான்யன்-மனனஞ் செய்யத்தகுந்தவன். மனனமாவது ப்ரீதியுடன் சிந்தித்தல். பகவதவதாரமாகையால் குரு, அதாவது அர்க்யம் முதலான ஸத்காரங்களைச் செய்து பூஜிக்கத் தகுந்தவனென்று மஹேஶ்வரதீர்த்தர்.

3. திக்பாலகர்கள் எண்மரில் ஒவ்வொருவனுடைய நான்காவது பாகமும் அரசனிடத்தில் ஸம்பந்தித்திருக்கிறதென்னும் ந்யாயத்தைப்பற்றி இங்கு இந்த்ரனது நாலாவது அம்சம் அரசனிடத்திலுண்டென்பதாகச் சொல்லப்பட்டது. இதற்கு 'அஷ்டாபிர்லோகபாலாநாம்மாத்ராபிர்நிர்மிதோ ந்ருபः' என்று ப்ரமாணம். இதற்கு 'இந்த்ரஸ்யேஹ சதுர்பாகः ப்ரஜா ரக்ஷதி ராகவ' என்று மூலம்

நான்கில் ஒருபாகமுடையவனுகி ப்ரஜைகளைப் பாதுகாக்கிறுகையால் அவன் மேலான போகங்களை அநுபவிக்கின்றனன்; உலகங்களால் பூஜிக்கப்படுகின்றனன். [1] இப்படி வருந்துகின்ற நாங்களெல்லோரும் உன் தேசத்தில்

---

'இதி பரமைஶ்வர்யே' என்னும் தாதுவின் மேலுண்டான இவ்விந்த்ர ஶப்தம் எல்லையில்லாத ஐஶ்வர்யத்தையுடைய பகவானையே முக்யமாகச் சொல்லுகிறது. 'இந்த்ரோ மாயாபிஃ புருரூப ஈயதே' என்று ஶ்ருதியும் இந்த்ரஶப்தத்தினுல் பரமாத்மாவைச் சொல்லுகிறது. ஆகையால் (இந்த்ரஸ்ய சதுர்பாகஃ) பரமாத்மாவினவதாரமாகிய நால்வரில் ஒருவனுகிய நீ, (போகாந் புங்க்தே) போகங்களையனுபவிக்கிறுயென்று பொருள். முன்பின் ஶ்லோகங்களுக்கு இவ்வர்த்தமே பொருந்துகின்றது. எப்படியெனில் ரிஷிகள் பரமாத்மாவாக நினைக்காமல் மற்ருெருவனுக நினைத்திருப்பார்களாயின், அப்பொழுது அஞ்சலி செய்திருக்கமாட்டார்கள்; ஆஶ்ரமத்தையும் ஒப்புவிக்க மாட்டார்கள்; உனக்கு நாங்கள் பிள்ளைகளைப்போல் காப்பாற்றத் தகுந்தவர்களென்றுஞ் சொல்லமாட்டார்கள். ஆகையால் இந்த்ரசப்தம் கேவலபரமாத்மாவையே சொல்லுமாகில்தான் பூர்வோத்தரங்களுக்குப் பொருந்துகின்றது. இங்ஙனம் கோவிந்தராஜர். அன்றியே—'இந்த்ரஸ்ய சதுர்பாகஃ' என்பதற்கு 'உனது ஆஜ்ஞைக்குட்பட்ட இந்த்ரனுடைய நான்கிலொருபாகமாகிய அரசனுங்கூட மேலான போகங்களை அனுபவிக்கின்றனன். உலகங்களால் வணங்கப்படுகின்றனன். இத்தகைய அரசனுக்கே இவ்வளவு ப்ரபாவம் உளதாயின் ஸகல ஜகத்ரக்ஷணத்தின் பொருட்டவதரித்த ஈஶ்வரனுகிய உனக்கு தர்ம பரிபாலனஞ் செய்தல் ரக்ஷித்தல் முதலிய குணங்கள் உளவென்று சொல்லவேண்டுமோ' என்று கருத்து. மஹேஶ்வரதிர்த்தர்.

1. இதற்கு 'தே வயம் பவதா ரக்ஷ்யா பவத்விஷயவாஸிநஃ। நகரஸ்தோ வநஸ்தோவா த்வம் நோராஜா ஜநேஶ்வரஃ' என்றமூலம். எங்களை ரக்ஷிப்பதற்கு உன்தேசத்தில் நாங்கள் இருப்பதே முக்யகாரணமென்கிருர்கள். (தேவயம்) அப்படி வருந்தியிருக்கின்ற நாங்கள், (பவதா) வருந்தினவர்களைக காப்பதில் தீக்ஷித்திருக்கிற உன்னுல். (ரக்ஷ்யாஃ) ரக்ஷிக்கத்தகுந்தவர்கள். எமது உபாஸானத்தைப் பத்றி

வஸிப்பவராகையால் நீ எங்களை ரக்ஷிக்கவேண்டியது அவஶ்யமாயிருக்கின்றது. பட்டணத்தி லிருப்பினும்

நாங்கள் உனக்கு ரக்ஷிக்கத்தகுந்தவரல்லோம். (ஹவஜீவிஷயவாஸிநஃ) உன்தேசத்தில் வஸிப்பவராகையே நாங்கள் உனக்கு ரக்ஷ்யரா கைக்கு ஹேதுவேயன்றி மற்றொன்றுமன்று. உபாஸனாதிகளில் பன லுக்கந் தவறுதல் நேரக்கூடும். உன் தேசத்தில் வாஸஞ்செய் வதில் அது உண்டாகாது. ஆகையால் உன்தேசத்தில் வஸிக்கையே ஏதமொன்றுமில்லாத ஹேதுவாகையால் இந்த ஹேதுவைப்பற்றி எங்களைக் காப்பாற்றத் தகுமென்றபடி. 'அப்படியே ஆகட்டும். நாங் கள் ரக்ஷிப்பதற்குரிய தேசத்தில் வஸிக்கும்பொழுது ரக்ஷிக்கிறோம்' என்று ராமனுக்கு அபிப்ராயமாக நினைத்துச் சொல்லுகிறார்கள் (நகரஸ்யோவநஸ்யோவா) நகரத்தில்-அதாவது-ஸிம்ஹாஸனத்தில் இருந்தாலும், அரண்யத்தில்-அதாவது-ஸிம்ஹாஸனத்தில் இராமற் போயினும், (த்வம்) ஸ்வதஸ்ஸித்தஸர்வசக்தியும் நிருபாதிகஸர்வ ஶேஷியுமாகியநீயே, (நஃ) எங்களுக்கு, (ராஜா) ரக்ஷகன். ஏனென்றால் (ஜநேஶ்வரஃ) ஒரு உபாதியுமின்றி நீ ஸகலஜனங்களுக்கும் ஶேஷி யல்லவோ? கோவிந்தராஜர். அன்றியே—(தே) கீழ்ச்சொன்னபடி ஆத்மாத்மீயங்களையும் (தம்மையும் தமக்குள்ளவற்றையும்) ராமனிடத் தில் ஸமர்ப்பித்திருக்கின்றவர்களும் (வயம்) உபாயந்தரமில்லாதிருத் தல் அபாயங்கள் பலவும் உண்டாயிருக்கப்பெறுதல் முதலிய லக்ஷ ணங்களுடையவர்களுமாகிய நாங்கள், (ஹவதா) நிருபாதிகமாகவே ஸர்வலோக ரக்ஷகனாகிய உன்னால், (ரக்ஷ்யாஃ) ரக்ஷிக்கத்தகுந்தவர்க ளாயிருக்கின்றனம், 'நான் உபாதியின்றி ஸகலர்க்கும் ரக்ஷகனாகை யால் உங்களை மாத்ரமேயன்றி உங்களுடைய சத்ருக்களையுங்கூட ரக்ஷிக்கவேண்டியவனாயிருக்கிறேனே' என்று அதிப்ரஸங்கம் வரு கையில் பரிஹரிக்கின்றனர்--(ஹவஜீவிஷயவாஸிநஃ) உன்தேசத் தில் வஸிப்பவராகையால் நாங்கள் உனக்கு ரக்ஷிக்கத்தகுந்தவரென்ற படி. ஸாகேதத்தில் பிறந்த ஜந்துக்களெல்லாவற்றிற்கும்ப்ரபத்தியின் அபேக்ஷையில்லாமல் ரக்ஷணம் நடப்பதுபோல உன்தேசத்தில் வஸிக் கிற எங்களுக்கும் ப்ரபத்தியை எதிர்பாராமல் தேசவாஸமாத்ரத் தைப்பற்றியே ரக்ஷணம் நடக்கவேண்டுமென்று கருத்து. இங்கு (விஷயவாஸிநஃ) என்கையால் ப்ரபத்தியை அபேக்ஷிக்காமலே ரக்ஷ

வனத்தில் வாஸஞ்செய்யினும் ஜனங்களுக்கு அதிபதி யாகிய நீயே எங்களுக்கு அரசன். 'நீங்கள் உங்களது தவமஹிமையால் ரக்ஷித்துக்கொள்ளலாகாதோ' என்

---

ணம் நடக்கவேண்டுமென்பொருபக்ஷம். முன்பின் ஸ்ரீலோகங்களில் ஆத்மாத்மீயபரஸமர்ப்பணஞ் செய்திருப்பதாகத் தெரிபவருகை யால் ப்ரபத்தி மூலமாகவே ரக்ஷணமென்று மற்றொருபக்ஷம். இரண்டாம் பக்ஷத்தில் ஆத்மாத்மீயரக்ஷாபரஸமர்ப்பணத்தாலேயே ரக்ஷணம் ஸித்திப்பதாயிருக்க, தேசவாஸத்தைச் சொல்லுவது வ்யர்த்த மென்று சங்கிக்கலாகாது. ரக்ஷகன் பார்த்துக்கொண்டிருக்கையில் அவன் ஸந்நிதானத்திலேயே ரக்ஷ்யவஸ்துவுக்கு நாசம் நேருவது மிகவும் தோஷமாகையால் எங்கேயோ ஓரிடத்திலன்றியே உன் தேசத்திலேயே உன் கண்முன்னமே உன் ரக்ஷ்யவஸ்துவாகிய எங்களுக்கு நாசம் உண்டாவது உனக்கு மிகவும் தோஷாவஹமென்று சொல்லுவதற்கே தேசவாஸித்வஞ் சொல்லப்பட்டதாகையால் வ்யர்த்தமன்று. மேலும், தேசவாஸித்வம் நிரபேக்ஷஸாதனமேயாகுமென்னும் நிர்ப்பந்தம் உண்டாயினும் அது கேவல மோக்ஷ விஷயத்திலேயே நிரபேக்ஷஸாதனமாகுமன்றி மோக்ஷத்தை யொழிந்த ரக்ஷணத்தில் அது ஸாதனமாவதால் விரோதமில்லை. இங்கு மஹர்ஷிகள் உபாயானுஷ்டானஞ் செய்வது மோக்ஷத்தை உத்தேசித்தன்று. துஷ்ட ராக்ஷஸநிரஸனத்தை அபேக்ஷித்தே செய்தார்கள். ஆகையால் மோக்ஷத்தையொழிந்த இப்படிப்பட்ட ரக்ஷணத்திற்குத் தேசவாஸத்தையுங்கூடக் காரணமாகச் சொல்லுவது யுக்தமே. (நமரஸ்யோவநஸ்யோவா) மற்ற மஹாராஜர்கள் புத்திபலத்தாலும் ஸ்தானபலத்தாலும் சதுரங்கபலத்தாலும் தமது ராஜ்யத்தை மாத்ரம் ரக்ஷிக்க வல்லராவார்கள். ஸகல லோகரக்ஷணஸமர்த்தனும் அஸஹாயசூரனுமாகிய உனக்கோ நகரவாஸத்தினால் பலம் அதிகமாகப்போகின்றதா? வனவாஸத்தினால் அது குறையப்போகின்றதா? ஸ்வாபாவிக நித்ய நிரதிசய சக்திஸம்பன்னனாகிய உன்னைக் கெடுப்பது ஒன்றுமில்லை யென்றபடி. ஸோபாதிகசேஷிக்கே தேசவிசேஷாதி ஸம்பந்தம் வேண்டுமேயன்றி நிருபாதிகசேஷிக்கு அப்படிப்பட்டது ஒன்றுமே அவசியமில்லையென்றபடி. ஆகையால் எங்கிருந்தபோதிலும் எங்களை நீ ரக்ஷிக்கவேண்டியதேயென்று ராஜசப்தார்த்தம். தனிஸ்லோகி.

பாயாயின், [1] நாங்கள் ஜிதேந்த்ரியர்களாகையால் எங்களுக்குக் கோபம் உண்டாகாது. மேலும், தபோநாஶம் நேருமென்னும் பயத்தினுல் கோபத்தை அடக்கிக்கொண்டிருப்பவர். ஆகையால் கோபித்துச் சாபமிட்டுத் தண்டனை செய்வதைக் கைவிட்டிருக்கின்றனம். மேன்மேலும் தவஞ் செய்து கொண்டிருக்கின்றனம். உனக்குப் புதல்வர்போன்றிருப்பவராகையால் நீ எங்களை எப்பொழுதும் தப்பாமல் ரக்ஷித்துக்கொண்டிருக்கவேண்டும்' என்றனர். அம்மஹர்ஷிகள் இங்ஙனஞ் சொல்லி வனத்திலுள்ள புஷ்பங்களாலும் பழங்களாலும் கிழங்குகளாலும் அன்றியே நினைத்தமாத்ரத்

---

1 இதற்கு—'ந்யஸ்ததண்டாவயம்ராஜந் ஜிதக்ரோதா ஜிதேந்த்ரியா:। ரக்ஷிதவ்யாஸ்த்வயா ஶஶ்வத் கர்ப்பபூதாஸ்தபோதநா:' என்று மூலம். (ந்யஸ்ததண்டா:) சாபத்தால் நிக்ரஹஞ்செய்யாதவர்கள். இதற்கு ஹேது—(ஜிதக்ரோதா:) தவம் நசித்துப்போமென்று கோபத்தைவிட்டவர்கள். இதற்கு ஹேது—(ஜிதேந்த்ரியா:) இந்த்ரியஜயத்தால் கர்மாதிகளில் ஸங்கமில்லாமையால் அதன் மூலமான கோபமில்லாதவர்களென்றபடி. எங்களுக்கு ஸாமர்த்யமிருந்தும் ஸ்வரூபத்திற்குப் பொருந்தாதாகையால் எங்கள் ரக்ஷணத்தை நாங்களே செய்து கொள்ளலாகாதென்று கருத்து, (த்வயாரக்ஷிதவ்யா:) நீ தவிர மற்ற எவரும் எங்களுக்கு ரக்ஷகராகமாட்டார்களென்றபடி. (கர்ப்பபூதா:) குழந்தைகளோடொத்தவர்கள். இதனுல் அநந்யார்ஹஶேஷத்வஞ் சொல்லப்பட்டது. (ஶஶ்வத்) எப்பொழுதும் அப்படிப்பட்டவர்களேயென்றபடி. இது ரக்ஷிதவ்யஶப்தத்தோடும் கர்ப்பபூதசப்தத்தோடும் அந்வயிக்கிறதாகையால் எமது அநந்யார்ஹஶேஷத்வமும் அநந்யஶரணத்வமும் வந்தேறியல்ல, ஸ்வாபாவிகங்களேயென்றபடி. ஆயினும் ஸாதனமில்லாமல் வெறுமனே ரக்ஷித்தால் எல்லோரையும் ரக்ஷிக்கவேண்டுமேயென்று சங்கித்துச் சொல்லுகிருர்கள்— (தபோதநா:) 'தஸ்மாந்ந்யாஸமேஷாந்தபஸாமதிரிக்தமாஹு:' என்கிறபடியே தடஸ்ஸாவது ந்யாஸமாகையால் நாங்கள் ப்ரபத்தியையே தனமாகவுடையவரென்றபடி. இங்கு ரக்ஷணமாவது மோக்ஷத்தைக் கொடுக்கையே. கராதிராக்ஷஸரிடத்தினின்றும் ரக்ஷித்தலைச் சரபங்காஶ்ரமவாஸிகள் வேண்டப்போகிருர்கள். இம்முனிவர்கள் மோக்ஷைகபராயணர்களாகையால் மோக்ஷங் கொடுத்தலே இவர்க்கு ரக்ஷணம். கோவிந்தராஜர்.

தில் எதிரில் ஸித்தமாயிருக்கின்ற மற்றும் பலவகை ஆஹாரங்களாலும் ராமலக்ஷமணர்களைப் பூஜித்தனர். அப்படியே தபஸ்ஸித்தியுடையவர்களும் அக்னியைப் போன்றவர்களும் சாஸ்த்ரங்களிற் சொல்லியபடி நடப்பவர்களுமாகிய மற்றுமுள்ள மஹர்ஷிகளும் நியாயத்தின்படி ப்ரபுவாகிய ராமனை ஸ்தோத்ராதிகளால் பூஜித்து ஸந்தோஷப்படுத்தினர். முதல் ஸர்க்கம் முற்றிற்று.

---

விராதனைக்காணுதலும், விராதன் ஸீதையை எடுத்துக்கொண்டுபோதலும், விராதனுக்கும் ராமலக்ஷ்மணர்களுக்கும் ஸம்பாஷணமும்.

ராமன் பிறகு அம்முனிவர்களிடம் அதிதிஸத்காரம் பெற்று ஸூர்யோதயமான வுடனே அவர்களெல்லோரிடத்திலும் விடை பெற்றுக்கொண்டு அரண்யத்தையே தொடர்ந்து சென்றனன். அவ்வரண்யத்தினிடையில் பலவகை மிருகங்கள் நிறைந்திருந்தன. பெரும்புலிகளும் செந்நாய்களும் ஆங்காங்குப் புலப்பட்டுக்கொண்டிருந்தன. [1] அங்குள்ள விருக்ஷங்களும் கொடிகளும் புதர்களும் முறிந்து பாழாகிக் குளங்களும் கலங்கி நலங்குலைந்து காணக்கூடாதிருந்தன. [2] பலவகைப் பறவைகளும் அங்குப் பயத்தினால் கூவுதலின்றி அசையாதிருந்தன. [3] சுவர்க்கோழிகள் ஜோய்யென்று கூவிக்கொண்டிருந்தன. லக்ஷமணன் பின் சென்றுவரப் பெற்ற ராமன் நடந்துகொண்டே இப்படிப்பட்ட அவ்வரண்யத்தின் மத்யபாகத்தைக் கண்டனன். ராமன் அங்ஙனம் ஸீதையோடும் லக்ஷமணனோடும் கூடப்போய்க்

---

1. உயர்ந்து பருத்துக் கடினமாயிருக்கின்ற விராதனுடைய தேஹத்தின் உறைதலால் விருக்ஷம் முதலியவை இந்நிலைமையிலிருக்கின்றனவென்று கருத்து.

2. விராதனிடத்தினின்று பயந்து பக்ஷிகள் நிச்சப்தமாயிருக்கின்றனவென்று கருத்து.

3, இவை கண்ணுக்குப் புலப்படமாட்டாவாகையால் இவற்றிற்கு அந்தப்பயம் இல்லாமையால் சப்திக்கின்றனவென்று கருத்து.

கொண்டிருக்கையில் பயங்கரமான மிருகங்களையுடைய அவ்வரண்யத்தில் பர்வதசிகரம்போல் உயர்ந்து பேரொலி செய்கின்ற ஓர் அரக்கனைக் கண்டனன். அவன் மிகவும் ஆழ்ந்த கண்களும் பெரியவாயும் அகன்ற சரீரமும் மேடுபள்ளமான வயிறும் உடையவனுயிருந்தனன். அவன் சரீரம் முழுவதும் ரக்தமும் மாம்ஸமும் தோயப்பெற்றிருக்கையால் மிகவும் வெறுப்புக்கிடமாயிருந்தனன். அவன் ஒன்றுக்கொன்று ஏற்றக்குறைவான அவயவங்களோடுகூடி மிகவும் உயர்ந்த உருவமும் விகாரவேஷமும் பொருந்திப் பயங்கரமாகப் புலப்பட்டனன். மேலும், அவன் குடலும் ரக்தமும் தோய்ந்து நனைந்த புலித்தோலை உடுத்து ஸமஸ்த பூதங்களுக்கும் பயங்கரனுகி வாயைத் திறந்துகொண்டு யமனைப்போல் தோன்றினன். மூன்று ஸிம்ஹங்களையும் நான்கு பெரும்புலிகளையும் இரண்டு செந்நாய்களையும் பத்துப்புள்ளி மான்களையும் குடல்படிந்து கொம்புகளுடன் கூடிப் பெரிதான யானைத்தலையொன்றையும் இருப்புமயமான சூலத்தில் குத்தி எடுத்துக்கொண்டு பெருங்கோஷத்துடன் கூச்சலிட்டுக் கொண்டிருந்தனன். அவன் ராமனையும் லக்ஷ்மணனையும் ஸீதையையும் பார்த்து மிகுந்த கோபாவேசத்துடன் ஸம்ஹார காலத்தில் யமன் ப்ரஜைகளின் மேல் எதிர்த்து வருவதுபோல அவர்கள்மேல் எதிர்த்தோடிவந்தனன். அவன் பூமி முழுவதையும் நடுங்கச்செய்பவன்போல் பயங்கரமான ஒரு கர்ஜனை செய்து ஸீதையை இடுப்பில் எடுத்துக்கொண்டு அப்புறஞ்சென்று ராமலக்ஷ்மணர்களைப்பார்த்துமொழிந்தனன்:— 'நீங்கள் ஜடைகளையும் மரவுரிகளையும் உடுத்து ஒரு பெண்பிள்ளையைப் பின்னே அழைத்துக்கொண்டு வில்லையும் பாணங்களையும் கத்தியையும் பிடித்து உங்கள் வாழ்நாள் தீர்ந்ததுபற்றி இத்தண்டகாரண்யத்திற்குள்

நுழைந்தீர்கள். என் கையில் அகப்பட்டபின்பு உங்கள் உயிர் தக்காது. நீங்கள் தாபஸர்களாகத் தோற்றுகிறீர்கள். ஆனால் ஸ்த்ரீயோடுகூட எப்படி வாஸஞ்செய்கிறீர்கள். முனிவேஷம் பூண்டு அதற்கிணங்காமல் வில்லு முதலியவற்றைத் தரித்து அதர்மத்தை ஆசரிக்கின்ற பாபிஷ்டர்களாகிய நீங்கள் யாவர்? உங்கள் வேஷத்தைப் பார்த்தால் முனிவர்களைப் பரிஹாஸஞ் செய்வதுபோலிருக்கின்றது. நான் விராதனென்னும் பேருடைய ராக்ஷஸன். நான் ஆயுதத்தைப் பிடித்து ரிஷிகளைக் கொன்று அவர்களது மாம்ஸத்தைத் தின்பவனாகி எப்பொழுதும் புகவரிதான இவ்வரண்யத்தில் திரிந்து கொண்டிருக்கின்றனன். அழகிய நிதம்பத்தையுடைய இப்பெண்மணி எனக்குப் பார்யையாகப் போகின்றனள். அன்றியும் யுத்தததில், பாபிஷ்டர்களாகிய உங்களது ரக்தத்தை நான் பருகப்போகிறேன்' என்றனன். துர்ப்புத்தியாகிய விராதன் இங்ஙனம் தைர்யத்துடன் மொழிந்த கர்விஷ்டமான இவ்வார்த்தையைக் கேட்டு ஜனகராஜன்குமாரத்தியாகிய ஸீதை மிகவும் தழுதழுத்துப் பெருங்காற்றில் அகப்பட்ட வாழைமரம்போல் பயத்தால் நடுக்கமுற்றனள். ராமன் விராதனது மடியில் அகப்பட்டுக்கொண்ட மங்கலஸ்வபாவையாகிய ஸீதையைப் பார்த்து முகம் வாடப்பெற்று லக்ஷ்மணனை நோக்கி 'அழகிய ஸ்பாவமுடையவனே! ஜனக மஹாராஜன் வயிற்றில் பிறந்து சிறந்த ஆசாரமுடையவளும் மிகவும் ஸுகமாக வளர்ந்தவளும் பாதிவ்ரத்யத்தில் பெரும்புகழ்பெற்றவளும் என் பத்னியுமாகிய இந்த ஸீதை விராதனது மடியில் அகப்பட்டிருக்கின்றனள், பார். [1] லக்ஷ்மணா! கைகேயி நம் விஷயத்தில் எந்த அபிப்ராயங்கொண்டிருந்தனளோ, மேலும், வரமென்

1. கைகேயி தன் பிள்ளைக்கு ராஜ்யத்தைமாத்ரமே விரும்பியிருப்பாளாயின், என் வனவாஸத்தை வேண்டியிருக்க மாட்டாள். என் வனவாஸத்தை வேண்டினபடியால் எனக்குத் தோற்றுவதென்

னும் வ்யாஜத்தினால் எதை விருப்பத்துடன் வேண்டிக் கொண்டனளோ, அதுவெல்லாம் இப்பொழுதே அவள் ஈடேறப்பெற்றனள். எவள் வெகுதூரம் செல்லவல்ல நினைவுடையவளாகித் தன் பிள்ளைக்கு ராஜ்யம் வருவது மாத்ரத்தினால் த்ருப்தி யடையவில்லையோ, அங்ஙனம் திருப்தியடையாமல் ஸர்வ பூதங்களுக்கும் ஹிதனாகிய என்னை அரண்யத்திற்குத் துரத்தினளோ, அப்படிப் பட்ட என் நடுத்தாயான [1] கைகேயுயின் கருத்தெல்லாம்

---

னவெனில்—அவள் தூரத்ருஷ்டியுடையவளாகித் தன் பிள்ளைக்கு ராஜ்யம் கிடைத்தபோதிலும் நானிருக்கும் வரையில் அது நிஷ்கண்டகமாயிராதென்று நினைத்து அதற்காக என்னை அரண்யத்திற்கனுப்பும்படி வரங்கேட்டனள். நான் அரண்யம் போகையில் ஸீதை என்னை விடாமல் பின்றொடர்வாளென்றும் ஸீதையை ராக்ஷஸாதிகள் அபஹரிக்கையில் நான் மிகவும் வ்யஸனத்தில் ஆழ்ந்து கெட்டுப்போவே னென்றும் பின்பு தன் பிள்ளைக்கு ராஜ்யம் நானில்லாமையால் நிஷ்கண்டகமாயிருக்குமென்றும் முன்பாகவே ஆலோசித்து இங்ஙனம் என்னை அரண்யம் போகச்செய்தனள். அவளபிப்ராயத்தின்படி ஸீதையும் அபஹரிக்கப்பட்டாள்' என்று ராமன் கருத்து.

1 பரதனும் கைகேயியும் அரண்யத்திற்கு வந்து ராமனிடம் தமது அபராதத்தைப் பொறுக்கும்படி வேண்டிக்கொண்டார்களாகையால் இதற்கு முன்பு அவர்கள் செய்தது அஜ்ஞானத்தாலென்று தமக்குத் தெரிந்திருக்கையில் மீளவும் ராமலக்ஷ்மணர்கள் அவர்களை ராஜ்யம் அபஹரித்ததாகச் சொல்லக்கூடுமோ? என்றால்—பிறகு கைகேயி அங்ஙனம் மன்னிப்பு வேண்டிக்கொண்டபோதிலும் முதலில் அபஹரித்ததே சிந்தையில் தோற்றுகையாலும் இப்படிப்பட்ட துக்ககாலத்தில் ராமலக்ஷ்மணர்கள் தமது ராஜ்யத்தை அபஹரித்ததாகவே நினைத்தார்களாகையாலும் அது தோஷமாகாது. மேலும் 'வ்யஸனகாலத்திலாயினும் பெரியோர்கள் பிறர் தோஷத்தை எடுத்துரையார்கள். ராமனது ஸ்வபாவத்திற்கும் அங்ஙனஞ் சொல்லுவது சேராது. கோபஸமயங்களிலேயே உட்கருத்துவெளியாகுமாகையால்

இன்றையதினம் இப்பொழுதே பலித்துவிட்டது. லக்ஷ்மணா! எனக்கு ஸீதையைப் பரபுருஷன் தொடுவதாலுண்டாகும் துக்கம், பித்ரு வியோகத்தினாலாவது ராஜ்யங் கைசோர்ந்ததனாலாவது உண்டாகவில்லை' என்றனன். இங்ஙனம் ராமன் மனவருத்தத்துடன் கண்ணீர் தளும்பப் பெற்றுச் சொல்லுகையில், லக்ஷ்மணன் அவனது சோகத்தைக் கண்டு கோபாவேசங்கொண்டு மந்த்ரபலத்தினால் கட்டுண்ட ஸர்ப்பம்போல் பெருமூச்செறிந்து கொண்டு ராமனைப் பார்த்து [1] 'காகுத்ஸ்தனே! நீ ஸமஸ்தலோகங்களுக்கும் நாதனாயிருப்பவன்; தேவேந்த்ரனை நிகர்த்தவன். மேலும், சொன்னகார்யங்களைச் செய்ய நானும் ஸமீபத்திலேயே இருக்கின்றனன். இங்ஙனம் இருக்க, நீ இப்படி அநாதன்போல் பரிதபிப்பதேனோ? இப்பொழுது கோபமுற்றிருக்கிற நான் பாணத்தினால் இந்த விராதனென்னும் ராக்ஷஸனைக்கொன்றுபூமி இவனுடைய ரக்தங்களைப் பருகும்படி செய்கின்றனன். ராஜ்யத்தை விரும்பின பரதன்மேல் எனக்கு உண்டான

---

ராமன் இங்ஙனம் சொல்லுகையால் உள்ளே அவன் தோஷங்களை நினைப்பவனென்றும் வெளிக்கு அப்படிப்பட்டவனல்லவன்போல் நடிப்பானென்றும் சொல்லக்கூடுமல்லவா' என்னவேண்டாம். ஆயினும் வ்யஸனகாலத்தில் உலகத்தார்க்கு இது சொல்லத்தகும் தகாதென்னும் விவேகம் உண்டாகாதென்று தெரிவிக்கும்பொருட்டு, ராமன் இங்ஙனஞ் செய்தானென்று தெரிய வருகின்றது.

1 இதற்கு 'அநாதஇவ ஭ூதாநாம் நாதஸ்த்வம்வாஸவோபம என்று மூலம். (஭ூதாநாந்நாத꞉) ஸர்வப்ராணிகளுக்கும் நாதனாயிருப்பவன். (வாஸவோபம꞉ இந்த்ரனை நிகர்த்தவன், இப்படிப்பட்ட நீ (அநாதஇவ) நாதனல்லாதவன்போல் என் பரிதபிக்கிறாயென்று உட்கருத்து. இதையே 'அஹம்வேத்மி மஹாத்மாநம்' என்று விஶ்வாமித்ரரும், 'த்வயா த்ரைலோக்யநாதேந யதஹம்விமுகீக்ருத꞉' என்று பரசுராமனும் சொல்லினர். ஆகையால் இங்கும் அப்படியே கண்டுகொள்க.

கோபத்தையெல்லாம், இந்த்ரன் பர்வதத்தின் மேல் வஜ்ராயுதத்தை ப்ரயோகிப்பதுபோல் விராதன்மேல் ப்ரயோகிக்கின்றனன். நான் எனது புஜபலத்திற்குத் தகுந்தபடி வேகமாக இழுத்து எய்த மஹாபாணம் இவனது விசாலமான மார்பில் பாய்ந்து இவன் சரீரத்தினின்றும் ப்ராணனைத் தொலைக்கையில், இவன் கிருகிருவென்று சுழன்று தரையில் விழுவானாக' என்றனன்.

இரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

விராதனோடு யுத்தமும், விராதன் ராம லக்ஷ்மணர்களை எடுத்துக்கொண்டு போதலும்.

[1] (ஸ்ரீமானாகிய அந்த லக்ஷ்மணன் இங்ஙனஞ் சொல்லி அந்த ராக்ஷஸனைப் பார்த்துச் சிரிப்பவன்போலவே 'அடா! இவ்வரண்யத்தில் வந்து ஸுகமாகத் திரிகின்றனையே! நீ யாவன்?' என்று வினவினன்.) பிறகு விராதன் வனமெங்கும் ப்ரதித்வனி உண்டாகும்படி பெருங்கோஷத்துடன் 'உங்கள் ஸங்கதியை நான் கேட்டுக்கொண்டிருக்கிறேனே; சொல்லுங்கள். நீங்கள் ஆர்? எங்குப் போகின்றீர்கள்?' என்றனன். அனந்தரம் மிகவும் மஹாதேஜஸ்வியாகிய ராமன், இயற்கையாகவே தகதகவென்று ஜ்வலிக்கின்ற முகமுடைய அந்த ராக்ஷஸன் தன்னை அங்ஙனம் வினவுவதைக் கேட்டு 'நாங்கள் இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்த க்ஷத்ரியர்கள்; தசரதகுமாரர்கள்; ஸதாசாரமுடையவர்கள். தந்தையின் ஆஜ்ஞையினால் வனத்தில் திரிகின்றோமென்று அறிவாயாக. உன் ஸங்கதியைக்கேட்க விரும்புகின்றனம். நீ யாவன்? இத்தண்ட

---

1. இக்கு 'இத்யுக்த்வா லக்ஷ்மணஶ்ஶ்ரீமாந் ராக்ஷஸம் ப்ரஹஸந்நிவ। கோஹவாந் வநமஜீ யேத்ய சரிஷ்யஸியதாஸுகம்' என்று மூலம். இந்த ஶ்லோகத்திற்குக் குண்டலஞ்செய்து கணக்கும்போடவில்லை. இதற்கு கோவிந்தராஜர் வியாக்கியானம் செய்யவில்லை. மஹேஶ்வர தீர்த்த வியாக்யானத்தில் வியாக்கியான பங்க்திக்கும் குண்டலஞ் செய்திருக்கிறது.

காரண்யத்தில் திரிகின்றனையே?' என்றனன். விராதனும் ஸத்யபராக்ரமனுன ராமனைப்பார்த்து 'ராஜனே! ராமா! என் ஸங்கதியைச் சொல்லுகிறேன், தெரிந்து கொள்வாயாக. நான் ஜயனென்பவனுடைய பிள்ளை. என்தாய் சதஹ்ரதையென்னும் பேருடையவள். என்னைப் பூமியிலுள்ள ராக்ஷஸர்களெல்லோரும் [1] விராதனென்று அழைப்பார்கள். மேலும், நான் தவஞ்செய்து ப்ரஹ்மாவினிடத்தில் அனுக்ரஹம் பெற்றிருக்கின்றனன். அதனுல் என்னை ஆயுதங்களால் கொல்லமுடியாது; அன்றியே, என்னை வெட்டவும் முடியாது. பிளக்கவும் முடியாது. நீங்கள் இந்தப் பெண்ணாசையைத் துறந்து இவளைக் கைவிட்டு வந்தவழியே வேகமாக ஓடிச்செல்வீர்களாக. இப்படி செல்வீர்களாயின், நல்ல பெண்பிள்ளை கைபுகுவதுபற்றி உங்கள் ப்ராணன்களைக் கொள்ளாமல் விட்டுவிடுகிறேன்' என்றனன். அதுகேட்டு ராமன் கோபத்தினுல் கண்கள் சிவக்கப்பெற்று விகாரமான உருவமுடையவனும் பாவக்கருத்துடையவனுமாகிய அந்த விராதனென்னும் ராக்ஷஸனைப் பார்த்து, 'அடா! அற்பனே! சீ! மிகவும் அற்பமான கார்யத்திற்குத் தலைப்பட்டனையே. நீ உன் மரணத்தைத் தேடுகின்றனை; இது நிச்சயம். அப்படியே யுத்தத்தில் உன் கருத்து கைகூடும். நிற்பாயாக. என்னிடம் அகப்பட்டபின்பு ப்ராணனேடு தப்பிப் போக நேராது' என்றனன். பிறகு ராமன் வில்லில்நாணையேற்றி மிகவும் கூரான பாணங்களை அதிவேகமாகத்தொடுத்து ராக்ஷஸனை அடித்தனன். ராமன் அங்ஙனம் நாணேறிடப்பெற்ற வில்லைக்கொண்டு கருடன்போலவும் வாயுவைப்போலவும் மிகுந்த வேகத்துடன் பறக்கின்ற பொற்பிடியுள்ள ஏழு பாணங்களை

---

1 (விகதோ ராயঃ ஆராதநம் யஸ்ய ஸঃ விராயঃ) ராதமென்றுல் ஆராதனம், அதில்லாதவன், இவனுக்கு த்ருப்திசெய்விக்க எவனுலும் முடியாதென்றபடி. இந்தப்பேர் அவனுடைய தாய் தந்தைகள் இட்டதல்ல. அவனுக்கு ஸஜாதீயர்களாகிய ராக்ஷஸர்கள் இப்பேர் இட்டார்களென்று தெரிகின்றது.

ப்ரயோகித்தனன். மயிலின் இறகுகள் கட்டப்பெற்று நெருப்புப்போல் விளங்குகின்ற அந்தப் பாணங்கள் விராதனது சரீரத்தைப் பிளந்துகொண்டு ரக்தம் புறப்படுவதற்கு முன்னமே வெளிவந்தமையால் சிறிதாகவே ரக்தம் படப்பெற்றுத் தரையில் வீழ்ந்தன. அப்பொழுது அந்த ராக்ஷஸன் அங்ஙனம் பாணங்களால் அடியுண்டு மிகவும் சினந்து ஸீதையைக் கீழே வைத்துவிட்டுச் சூலத்தை எடுத்துக்கொண்டு ராம லக்ஷ்மணர்கள்மேல் எதிர்த்தோடி வந்தனன். அப்பொழுது அவன் பெருங் கோஷத்துடன் கூச்சலிட்டு இந்த்ரத்வஜம்போன்ற சூலத்தை ஏந்தி, வாயைத்திறந்துகொண்டிருக்கிற யமன் போல் ப்ரகாசித்தனன். பிறகு அவ்வண்ணன் தம்பிகளிருவரும் அவ்விராதன் ஸீதையை விட்டு வருவதனுல் அவன்மேல் இஷ்டப்படி பாணங்களை ப்ரயோகிக்க நேரப்பெற்று முன்னெய்தவைகளைக்காட்டிலும் மேலாக விளங்குகின்ற பாணங்களை [1] ப்ரளயகாலத்தில் ப்ராணிஸம்ஹாரஞ் செய்கிற யமன் போலிருக்கிற அந்த விராத ராக்ஷஸன்மேல் மழையாகப் பெய்தனர். மிகவும் பயங்கரனுகிய அவ்வரக்கன் 'இவர்கள் எனக்கு எவ்வளவர்' என்று சிரித்துச் சோம்பல் முறித்துச் சரீரத்தை வணக்கினன். அங்ஙனம் வணக்குகையில் மிகுந்த வேகமுடையவையாயினும் அவன் சரீரத்தில் கொஞ்சம் தைத்துக்கொண்டிருந்த பாணங்கள் அவனது சரீரத்தினின்று கீழே விழுந்தன. அந்தராக்ஷஸன் தனக்குள்ள வரமஹிமையால் ப்ராணவாயுக்களை ஹ்ருதயத்தில் ஒன்ருகச் சேர்த்தடக்கிச் சூலத்தையெடுத்துக்கொண்டு ராமலக்ஷ்மணர்களை எதிர்த்தோடினன்.

---

1. இதற்கு 'காலாந்தகயமோபமே' என்று மூலம். 'காலன் அந்தகன் யமன்' என்ற மரணுதிகாரிகள் மூவர். அவர்களில் காலன் ஜீவிதச்சேதத்தையும் அந்தகன் ப்ராணுபஹாரத்தையும் யமன் புண்யாபுண்யவிவேகத்தையும் செய்யும் அதிகாரமுடையவர்களென்று பேதந்தெரிகின்றது என்று மஹேஶ்வர தீர்த்தர்.

ராமன் ஆயுதம் பிடித்தவர்களில் முதல்வனாகையால் ஆகாயத்தில் அக்னிபோல் விளங்குவதும் வஜ்ராயுதம் போல் வருவதுமாகிய அந்தச் சூலத்தை இரண்டு பாணங்களால் கண்டித்தனன். அந்தச் சூலம் ராமனது பாணங்களால் துண்டிக்கப்பட்டு வஜ்ராயுதத்தால் அறுக்கப்பட்ட மேருபர்வதத்தின் பெருங்கல்லுபோல் விராதனது ஹஸ்தத்தினின்று கீழே விழுந்தது. விராதன் வேகமாக எதிர்த்தோடிவருவதைக் கண்டு, அந்த ராமலக்ஷ்மணர்கள் க்ருஷ்ணஸர்ப்பம்போன்ற தமது மேலான கத்திகளைத் தூக்கி அவனை வேகமாக அடித்தனர். பயங்கரனாகிய அந்த ராக்ஷஸன் அங்ஙனம் மேன்மேலும் சாக அடிபட்டும் விடாதவனாகிப் புருஷஶ்ரேஷ்டர்களாகையால் அசைக்கவும் முடியாத அந்த ராமலக்ஷ்மணர்களைப் பிடித்துக் கைகளால் அணைத்து எடுத்துக்கொண்டுபோக விருப்பமுற்றனன். அவன் மற்றொருவனத்திற்குத் தங்களைக் கொண்டுபோக நினைத்திருக்கிற அபிப்ராயத்தை ராமன் அறிந்து லக்ஷ்மணனைப் பார்த்து 'வெறுமனே இருப்பாயாக. இவ்வரக்கன் நாம் போகவேண்டிய இவ்வழியாகவே நம்மை எடுத்துக்கொண்டுபோவானாக. அல்லது, லக்ஷ்மணா! இவன் விரும்பின வழியே எடுத்துக்கொண்டு போவானாக. ஏனென்றால், நாம் அரண்யத்தினிடையில் போக விரும்புகின்றனம். வழியோ நமக்குத் தெரியாது. இவ்வரக்கன் போகும் வழியே நமக்கும் போகவேண்டிய வழி' என்றனன். அனந்தரம் அந்த ராக்ஷஸன் தனது பலவீர்யங்களால் மஹாபலர்களாகிய அவ்விருவரையும் அவர்கள் ஒப்புக்கொண்டிருப்பது பற்றிக் குழந்தைகளைப்போல எடுத்துத் தன்தோள்மேல் வைத்துக்கொண்டனன். ராக்ஷஸனாகிய அவ்விராதன் ராமலக்ஷ்மணர்களிருவரையும் தோள்மேல் வைத்துப் பயங்கரமாகக் கூச்சலிட்டுக்

கொண்டு தான் உத்தேசித்த அரண்யத்தைக் குறித்துப் போயினன். அவ்வரக்கன், மஹாமேகம்போல் நாற்புறமும் வட்டமாகப் படர்ந்து பலவகைப் பெரிய வ்ருக்ஷங்களோடுகூடி நானாவிதமான பறவைக் கூட்டங்களால் வியப்புறச் செய்யவல்லதும் நரி பெரும்புலி முதலிய க்ரூரம்ருகங்கள் நிறைந்ததுமாகிய மஹாரண்யத்திற்குள் ப்ரவேசித்தனன். மூன்றுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஸீதை ரோதனஞ் செய்யக்கண்டு ராம லக்ஷ்மணர்கள் வேகமாக விராதனது புஜங்களைத் துண்டித்தலும், விராதனது பூர்வ ஜன்ம வ்ருத்தாந்தமும், அவன் சரபங் காஶ்ரமத்தின் வழியைத் தெரிவித்து ஸ்வர்க்கமேறப் போதலும்.

ஸீதை அந்த ராக்ஷஸன் ராமலக்ஷ்மணர்களைக் கொண்டுபோகக் கண்டு மிகவும் துயரம் அடைந்து அழகான கைகளையுடைய அவள் அத்தகைய தன்கைகளை உயரத்தூக்கிக்கொண்டு உரக்கக் கதறினள்:— தசரத குமாரனாகிய இந்த ஸ்ரீராமன் ஸத்யந்தவறாதிருப்பவன்; ஸதாசாரத்தினின்று என்றும் நழுவாதவன்; நேரான மதியுடையவன். இப்படிப்பட்ட மஹானுபாவனை லக்ஷ்மணனோடுகூடப் பயங்கரமான உருவமுடைய ராக்ஷஸன் கொண்டுபோகின்றானே! ஓ ராக்ஷஸர்தலைவனே! என்னைச் செந்நாய்களும் பெரும்புலிகளும் சிறுத்தைகளும் பக்ஷிக்கப்போகின்றன. இதோ உனக்கு நமஸ்காரஞ் செய்கிறேன். ராமலக்ஷ்மணர்களை விட்டு என்னைக் கொண்டு போவாயாக' என்று புலம்பினள். வீரர்களாகிய ராமலக்ஷ்மணர்கள் ஸீதை அங்ஙனம் புலம்பிச் சொல்லுவதைக் கேட்டு அத்தப் பாபிஷ்டனைக் கொல்ல

விரைந்தனர். [1] பயங்கரனுகிய அந்த விராதனுடைய இடக்கையை லக்ஷ்மணன் கண்டித்தனன். ராமன் அந்த ராக்ஷஸனுடைய வலக்கையைப் பலத்தினுல் துண்டித்தனன். மேகம்போல் கறுத்திருக்கின்ற அவ்வரக்கன் கைகள் முரியப்பெற்றுப் பயந்து வஜ்ராயுதத்தினுல் கண்டிக்கப்பட்ட மலைபோல் திடீலென்று கீழே விழுந்தனன். அனந்தரம் அவ்விருவரும் அவனைக் கீழே விழத்தள்ளி முஷ்டிகளையும் முழந்தாள்களையும் அடிக்கால்களையும் உயரத்தூக்கித் தாக்கி அவனைப் பலவாறு குத்தியும் இடித்தும் உதைத்தும் துவைத்தும் பிண்டமாகச் செய்தனர். அந்த ராக்ஷஸன் பல பாணங்களால் அடிக்கப்பட்டும் கத்திகளால் வெட்டுண்டும் பூமியில் விழத்தள்ளிப் பலவாறு துவைக்கப்பட்டும் மரணம் அடையவில்லை. ராமன் எப்படிப்பட்ட பயம் வந்தபோதிலும் அவைகளைப்போக்கி அபயங்கொடுப்பவனுகையால் அந்தச்செல்வராகவன் பர்வதம்போன்ற விராதனை ஆயுதம் முதலியவற்ருல் எவ்விதத்திலும் கொல்லமுடியாதென்று நன்ருகத் தெரிந்துகொண்டு லக்ஷ்மணனைப் பார்த்து,'புருஷஶ்ரேஷ்டனே! இந்த ராக்ஷஸன் தவஞ்செய்திருப்பவன்; ஆகையால் இவனையுத்தத்தில் ஆயுதங்களால் அடிக்கமுடியாது. ஆனதுபற்றி இவனைத்தரையில் பள்ளம்வெட்டிப் புதைத்துவிடுவோம்' என்றனன்.

---

1. விராதன் பிடித்துக்கொண்டபொழுதும் கபந்தன் பிடித்துக்கொண்டபொழுதும் லக்ஷ்மணன் இடக்கையையும் ராமன் வலக்கையையும் கண்டிப்பது ஒரேவிதமாகப் புலப்படுகின்றது. இதற்குக் காரணமென்னவென்ருல் - லக்ஷ்மணன் எப்பொழுதும் ராமனது வலப் பக்கத்திலேயே இருப்பான். ஆகையால் விராதாதிகள் வலக்கையால் ராமனையும் இடக்கையால் லக்ஷ்மணனையும் பிடித்துக் கொள்கையில் அவ்விருவரும் தத்தம் பக்கத்துக் கைகளைக் கண்டித்ததாகத் தெரிகின்றது.



1238. ராமலக்ஷ்மணர்கள் விராதனை வதித்தல்.

விராதன், ராமன் சொன்னதைக் கேட்டுப் புருஷோத்த மனாகிய அந்தக்காகுத்தனைப் பார்த்து வணக்கத்துடன் 'புருஷஸிம்ஹனே! இந்த்ரனைப்போன்ற மேலான பல முள்ள நீ என்னைக் கொன்றுவிட்டனை. நான், இதற்கு முன்பு அஜ்ஞானத்தினால் நீ ஸாக்ஷாத்புருஷோத்தம னென்றறியாமற்போயினன். தந்தையே! கௌஸல்யா தேவியின் வயிற்றில் அழகாகப் பிறந்த ராமனே! நான் இப்பொழுது உன்னைத் தெரிந்துகொண்டேன். [1] மஹா பாக்யவதியாகிய ஸீதாதேவியின்ஸ்வரூபமும் மஹாயமஸ் வியாகிய லக்ஷ்மணனுடைய உண்மையும் தெரியவந்தன. நான் இதுவரையில் இதை அறியாதிருந்ததற்குக் கார ணங்கேள். நான் தும்புருவென்னும் கந்தர்வன்; குபேர னது சாபத்தினால் இப்படிப்பட்ட பயங்கரமான ராக்ஷஸ தேஹத்தைப் பெற்றனன். பாபமற்றவனே! நான் முன்பு அரம்பையைத் தழுவி, வேண்டிய ஸமயத்தில் குபேர னுக்குப் பணிவிடை செய்யாதிருக்கையில் எமது ஸ்வாமி யாகிய அந்தக் குபேரன் மிகவும் கோபித்து 'ராக்ஷஸ னாவாய்' என்று மொழிந்தனன். பிறகு நான் அவனை அருள் புரியச்செய்கையில் அம்மஹாயமஸ்வி, என்னைப் பார்த்து, 'தசரதகுமாரனாகிய ராமன் உன்னை எப்பொ ழுது யுத்தத்தில் வதிப்பானோ, அப்பொழுது நீ உன் இயற்கையான உருவத்தைப்பெற்று ஸ்வர்க்கம்பெறு வாய்' என்றனன். பரந்தபனே! உனது அனுக்ரஹத்தி னால் நான் மிகவும் பயங்கரமான இந்தச் சாபத்தினின்

1. நீ ஸாக்ஷாத்புருஷோத்தமனென்றும் கௌஸல்யையின்வயிற் றில் ராமனாய் அவதரித்தனையென்றும், மஹாபாக்யவதியாகிய லக்ஷ் மியே ஸீதையென்றும், இந்த லக்ஷ்மணன் உனது அம்சமாகி உன்னை அனுவர்த்திக்கையால் மிகவும் புகழ்பெற்றவனென்றும் அறிந்தே னென்று கருத்து.

றும் விடுபட்டனன். நான் என்னுடைய லோகத்திற்குப் போகிறேன். உங்களுக்குச் சுபம் உண்டாகுமாக. அப்பனே! இவ்விடத்திற்கு ஒன்றரை யோஜனை தூரத்தில் தர்மஸ்வபாவரும் பெருந்தவமுடையவரும் ஸூர்யனைப் போன்ற ஒளியுடையவருமாகிய சரபங்கரென்னும் மாமுனிவர் வஸிக்கின்றனர். நீ சீக்ரம் அவரிடம் போவாயாக. [1] அவர் உனக்கு நன்மையைச் செய்வார். ராமா! என்னைப் பள்ளம்வெட்டிப் புதைத்தபின்பு க்ஷேமமாகச் செல்வாய். ப்ராணன்களை விட்ட ராக்ஷஸர்களுக்கு இங்ஙனம் பள்ளத்தில் புதைப்பது அனாதியாக வழங்கி வருந்தர்மம். எவரது சரீரம் பள்ளத்தில் புதைக்கப் படுமோ அந்த ராக்ஷஸர்கள் ஶாஶ்வதமான லோகங்களைப் பெறுவார்' என்றனன். மஹாபலனாகிய விராதன் பாணங்களால் பீடிக்கப்பட்டு ராமனைப் பார்த்து இங்ஙனஞ்சொல்லி தேஹத்தை விட்டு ஸ்வர்க்கமடைந்தவனாயினன். ராமன் விராதனுடைய வார்த்தையைக் கேட்டு லக்ஷ்மணனைப்பார்த்து 'லக்ஷ்மணா! பெரிய யானையைப்போல் பயங்கரனாகிய இந்த ராக்ஷஸனுக்கு இவ்வனத்தில் மிகவும் பெரிதான ஒரு பள்ளம் வெட்டுவாயாக' என்றனன். இங்ஙனம் அவ்வீரன் பெரிய பள்ளம் வெட்டும்படி லக்ஷ்மணனுக்குச் சொல்லி விராதனை அசையவொட்டாமல் கழுத்தில் காலால் மிதித்துக் கொண்டு நின்றிருந்தனன். பிறகு லக்ஷ்மணனும் மேலான ஒரு மண் வெட்டியைக்கொண்டு பெருஞ் சரீரமுடையவனாகிய விராதனது பார்ஶ்வத்தில் அவன் தேஹத்திற்குப் பேர்தும்படி பெரிய பள்ளத்தைத்

---

1. இதற்கு 'ஸதே ஶ்ரேயோ விதாஸ்யதி' என்று மூலம். (ஸ:) அவர், (தே-த்வத்த:) உன்னிடத்தினின்றும், (ஶ்ரேய:) ப்ரஹ்ம லோக ப்ராப்தியென்னும் ஶ்ரேயஸ்ஸை, (விதாஸ்யதி) போஷிப்பார்-பெறுவார்-என்று மற்றொரு பொருள். கோவிந்தராஜர்.

தோண்டினன். பிறகு ராமன் அவன் கழுத்தில் வைத்துக்கொண்டிருந்த காலை வாங்கிக்கொள்கையில் பயங்கரமான கோஷத்துடன் கூச்சலிடுகின்றவனும் மூட்டுப் போன்ற காதுகளுடையவனுமாகிய விராதனை அந்தப் பள்ளத்தில் விழத்தள்ளினர். அதிவேக பராக்ரமர்களும் யுத்தத்தில் பின்வாங்காதவர்களுமாகிய ராமலக்ஷ்மணர்களிருவரும் ஸந்தோஷத்துடன் பயங்கரனாகிய அந்த ராக்ஷஸனை யுத்தத்தில் ஜயித்து உரக்கக் கூச்சலிட்டுக்கொண்டிருக்கின்ற அவனை எடுத்துப் பள்ளத்தில் விழத்தள்ளினர். அந்த ராமலக்ஷ்மணர்கள் கார்யங்களில் மிகுந்த ஸாமர்த்யமுள்ள புருஷஶ்ரேஷ்டர்களாகையால் அவ்விராதன் கேவலனாகாமல் மஹாஸ்த்ரனும் எப்படிப்பட்ட கூரான ஆயுதத்தாலும் கொல்லமுடியாதவனுமாயிருப்பதைக் கண்டு இதுவே அவனைக் கொல்ல உபாயமென்று நிச்சயித்து, அவனைப் பள்ளத்தில் விழத்தள்ளிக் கொன்றுவிட்டனர். வனத்தில் திரிகின்றவனாகிய ராமன் பலாத்காரமாகத் தன்னைக் கொல்ல விரும்பிப் பள்ளத்தில் தள்ளுகையாகிற தன் வதோபாயத்தைச் செய்ய முயலுகையில் அது கண்ட விராதன் தானே தனக்கு ஆயுதங்களால் சாவு நேராதென்பதையும் தன்னைப் பள்ளம் வெட்டிப் புதைக்க வேண்டுமென்பதையும் ராமனுக்குத் தெரிவித்தனன். ராமனும் அங்ஙனம் விராதன் சொன்ன வார்த்தையைக் கேட்டு அவனைப் பலாத்காரமாகப் புதைக்க நினைத்தனன். ராமன் பலாத்காரஞ்செய்து அந்த ராக்ஷஸனைப் பள்ளத்தில் புதைக்கும்பொழுது அவன் அரண்யம் முழுவதும் சப்திக்கும்படி பெருங்கோஷமிட்டனன். ராம லக்ஷ்மணர்கள் இங்ஙனம் விராதனைப் பூமியில் பள்ளம்வெட்டிப் புதைத்துக் கொன்றுவிட்டு

மயிர்க்கூச்சலுண்டாகப்பெற்று அம்மஹாவனத்தில் சிறி தும் பயமின்றி ஆநந்த முற்றிருந்து அந்த ராக்ஷஸனது சரீரத்தைக் கற்களையிட்டு மறைத்துவிட்டனர். அனந் தரம் பொன்னால் அலங்காரஞ் செய்யப்பட்டு விளங்கு கின்ற விற்களைக் கையில் பிடித்து அவ்விருவரும் ராக்ஷ ஸனைக்கொன்று ஸீதையை அழைத்துக்கொண்டு மிக வும் ஸந்தோஷம் அடைந்து அம்மஹாவனத்தில் ஆகா யத்தில் சந்த்ரஸூர்யர்கள்போல் விளையாடிக்கொண்டி ருந்தனர். நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஶரபங்காஶ்ரமத்திற்குப்போதலும், சர பங்கர் ஸ்ரீராமனைப் பூஜித்து ஸுதீ க்ஷ்ணாஶ்ரமத்திற்கு மார்க்கத்தைக் சொல்லி ராம ஸந்நிதியில் அக்னி ப்ரவேசஞ் செய்து ப்ரஹ்ம லோகம் போதலும்.

ஸ்ரீராமன் பராக்ரமசாலியாகையால் பயங்கரமான பலமுடைய விராதனைக் கொன்று அனந்தரம் ஸீதை யை ஆலிங்கனஞ்செய்து நல்வார்த்தைகளால் ஸமா தானப்படுத்தி, ஒளியுடன் விளங்குகின்ற தம்பியான லக்ஷ்மணனைப் பார்த்து, 'இவ்வரண்யம் மிகவும் புகக் கூடாதது, மேலும், இளைப்பாறுவதற்குத் தகாதது. நாம் அரண்யத்திலிருந்து வழக்கப்பட்டவர்களல்லோம். ஆகையால் இதில் நில்லாமல் சீக்ரமாகச் சரபங்கமஹர் ஷியினிடஞ் செல்வோம்' என்றனன். பிறகு ராகவன் தேவதைகளுக்குச் சமானமான மஹிமையுடையவரும் தவப்பெருக்கினால் பரப்ரஹ்ம ஸாக்ஷாத்காரஞ் செய்த வருமாகிய சரபங்க மஹர்ஷியின் ஸமீபத்தில் மிகவும் ப்ரகாசிக்கின்ற தேஹத்துடன் ஸூர்யன்போலவும் அக்னிபோலவும் விளக்கமுற்று மிகவும் ஆச்சர்யத்தை விளைவிக்கின்ற ஒரு பெரிய வஸ்துவைக் கண்டனன்.

அனந்தரம் ராமன், ரதத்தினின்று கீழே இறங்கி பூமியில் கால் பாவாமல் தேவதைகள் சூழ்ந்துவரப்பெற்றுச் சரபங்கமஹர்ஷியின் ஸமீபத்தில் நிற்கின்ற தேவேந்த்ரனைக் கண்டனன். அவ்விந்த்ரன் மிகவும் தேஜஸ்ஸுடன் விளங்குகின்ற ஆபரணங்களைத் தரித்துப் பளபளவென்று ப்ரகாசித்துக்கொண்டு அழுக்கின்றி நிர்மலமான வஸ்த்ரங்களை உடுத்திருந்தனன். அவனைப் போன்ற மஹானுபாவர்கள் பலரும் அவனைப் பூஜித்துக்கொண்டிருந்தனர். அவ்வாஸ்ரமத்தின் ஸமீபத்தில் ஆகாயத்தில் பச்சைக் குதிரைகள் பூட்டப்பெற்றதும் முதிர்ந்த ஸூர்யன்போல் ப்ரகாசிப்பதுமாகிய இந்த்ரனுடைய ரதத்தைக் கண்டனன். வெளுத்தமேகம் போல் மிகவும் ஒளிவிளங்கப்பெற்றுச் சந்த்ரமண்டலம் போல் வட்டமாகி மனக்களிப்பை விளைவிப்பதும் நாற்புறத்திலும் அற்புதமான பூமாலைகள் கட்டப்பெற்று ப்ரகாசிப்பதுமாகிய இந்த்ரனது வெண்கொற்றக் குடையைக் கண்டனன். பொற்பிடிகளிடப்பெற்றவைகளும்பெருவிலையுடையவைகளும் மிக்க மேலானவைகளுமாகிய விசிறிபோன்ற சாமரங்களை உத்தமவனிதைகள் தரித்து அவ்விந்த்ரனது சிரஸின்மேல் வீசிக்கொண்டிருந்தனர். கந்தர்வர்களும் தேவதைகளும் ஸித்தர்களும் பரமரிஷிகளும் ஆகாயத்திலிருக்கின்ற தேவேந்த்ரனைப்பெருமையுள்ள வேதவாக்யங்களைக்கொண்டு ஸ்தோத்ரஞ் செய்தனர். அனந்தரம் அவ்வானவரதிபதி சரபங்கமாமுனியுடன் பேசிக்கொண்டிருக்கையில், ராமன் இந்த்ரனைப் பார்த்து லக்ஷ்மணனுக்கு அவ்விந்த்ரனுடையரதத்தைக் கையால் சுட்டிக்காட்டி 'லக்ஷ்மணா! பிடிப்பில்லாத ஆகாயத்தில் மிகுந்த ஒளியுடையதும் மிக்க அழகு நிறைந்ததும் முதிர்ந்த ஸூர்யன்போல் ப

பளவென்று ப்ரகாசிப்பதும் வியப்பை விளைவிப்பது மாகிய ரதத்தைக் காண்பாயாக. யாகஞ்செய்பவர் இந்த்ரனது குதிரைகளைக் கூப்பிடுகையில் முன்பு நாம் அவைகளைக் கேட்டிருக்கிறோமல்லவா. அவ்வுயர்ந்த குதிரைகளே இதோ ஆகாயத்தில் வந்திருக்கின்றன; நிச்சயம். குண்டலங்களை அணிந்து யௌவனப்பருவம் நிரம்பப்பெற்று மிக விசாலமான வக்ஷஸ்தலங்களும் இரும்புத்தடிகள்போல் நீண்டழகிய பாஹுதண்டங்களும் அமைந்து சிவந்த வஸ்த்ரந்தரித்துப் பெரும்புலிகள் போல் அணுகமுடியாதவர்களாகி விளங்குகின்ற புருஷஸ்ரேஷ்டர்கள் இதோ ரதத்தைச்சுற்றி ஒவ்வொரு பக்கத்திலும் நூறுநூருக நிற்கின்றூர்களே! இவர்களெல்லோரும் தேவதைகள். இவர்களெல்லோர்க்கும் வக்ஷஸ்தலத்தின்மேல் அக்னிபோல் தகதகவென்றஹாரங்கள் விளங்குகின்றன; பார். லக்ஷ்மணு! இவர்களெல்லோரும் இருபத்தைந்து வயதுள்ளவர்களாயிருக்கின்றனர். தேவதைகளுக்கு என்றும் இவ்விருபத்தைந்து வயதே உள்ளது. இந்தப் புருஷஸ்ரேஷ்டர்கள் ஆடையாபரணம் முதலியவற்ருலும் இப்படிப்பட்ட வயதினுலும் இனிய காட்சியுடைவர்களாகப் புலப்படுவதுபோலவே தேவதைகளெல்லோரும் புலப்படுவார்கள். லக்ஷ்மணு! நீ இங்கேயே ஸீதையோடுகூடக் கொஞ்சநேரம் இருப்பாயாக. நான்போய் மஹாதேஜஸ்வியாகிய இவன் யாரென்பதை ஸ்பஷ்டமாகத் தெரிந்துகொண்டு வருகிறேன்' என்றுரைத்துத் தன்னை விட்டிருக்கப் பொருமல் பின்றொடர்ந்து வருகின்ற லக்ஷ்மணனைப் பார்த்து மீளவும் இங்கேயே இருப்பாயென்றுரைத்துத் தான் சரபங்க முனிவரது ஆஸ்ரமத்தைக்குறித்துச் சென்றனன். பிறகு தேவேந்த்ரன் ராமன்வருவதைக்கண்டு சரபங்கமாமுனியின் அருகில்சென்று அவருடன் ஏகாந்தத்தில் 'இதோ

ராமன் வருகின்றனன். இவன் என்னேடு பேசாமலே யிருந்து தான் பிடித்த நியமத்தை எந்த விதத்திலாயினும் நடத்திக் கார்யத்தை ஸாதிக்கவேண்டும். 'வார்த்தை சொல்லாமற்போயினும் உன்னை அவன் பார்க்கவுங் கூடாதோ?' என்பீராயின், அவன் ப்ரதிஜ்ஞையை நிறைவேற்றினபின்பே என்னைப் பார்க்கலாம். [1]இவன் சத்ருவை ஜயித்துத் தேவதைகளின் கார்யத்தை ஸாதித்த பின்பு சீக்கிரத்திலேயே பார்க்கப்போகின்றேன். இவன் பிறர்க்கு எள்ளளவும் செய்யமுடியாத பெரிதான ஒரு கார்யத்தைச் செய்யவேண்டியிருக்கிறதல்லவா? அதை நிறைவேற்றி அனந்தரம் என்னைப் பார்ப்பது நலம்' என்றனன். இங்ஙனம் சத்ருக்களை அடக்கவல்லவனாகிய அவ்விந்த்ரன் முனிவேஷந் தரித்திருக்கின்ற ஸ்ரீராமனை வெகுமானித்துச் சரபங்கரையும் பூஜித்து விடைபெற்றுக்கொண்டு குதிரைகள் கட்டப்பெற்ற தேரின்மேல் ஏறி ஸ்வர்க்கலோகம் போயினன். தேவேந்த்ரன் போனவுடனே ராமன் தனது பரிவாரமாகிய ஸீதையோடும் லக்ஷ்மணனேடும் கூடவே சரபங்க மஹர்ஷியினிடம் சென்றனன். அப்பொழுது அம்முனிவர் அக்னிப்ரவேசஞ் செய்வதற்காக அக்னியை உபாஸித்துக் கொண்டிருந்தனர். ராமனும் ஸீதாலக்ஷ்மணர்களும் அந்தமா முனியின் பாதங்களைப் பிடித்துக்கொண்டு நமஸ்கரித்து, அவர் உட்காரும்படி அனுமதிகொடுத்து ஆஸனமிட்டு ஸத்கரிக்கையில் அவர்கள் உட்கார்ந்தனர். பின்பு ரா

1. தேவேந்த்ரன் 'தன்னேடு ராமன் பேசுவதாலும் அவனைத் தான் பார்ப்பதாலும் அவனுடைய தேவத்வம் வெளியாகும்; அவன் மனுஷ்ய வேஷத்தினுலேயே பெரிய காரியம் செய்யவேண்டியிருக்கின்றது. அவனுடைய தேவத்வம் வெளியாகும்படி நான் பேசமாட்டேன்; பார்க்கவுங்கூடாது' என்றனன்.

மன் அம்முனியைப்பார்த்து, தேவேந்த்ரன் வந்துபோன விஷயத்தை வினவினன். சரபங்கரும் அவ்விஷயத்தையெல்லாம் ராமனுக்குச் சொல்லினர்:— 'ராமா! வரங்களைக் கொடுக்க வல்லமையுள்ள இந்த வானவர் தலைவன், நான்செய்த கடுந்தவத்தினால் வெல்லப்பட்டு எனக்கு ப்ராப்தமாயிருப்பதும் ஆத்மஜ்ஞானிகளல்லாதவர்க்குப் பெற அரிதுமாகிய ப்ரஹ்ம லோகத்திற்கு என்னை அழைத்துக்கொண்டுபோக விரும்புகின்றனன். புருஷஶ்ரேஷ்டனே! நீ இங்கு ஸமீபத்திலேயே வந்திருக்கின்றாயென்றறிந்து ப்ரிய அதிதியாகிய உன்னைப் பாராமல் போகலாகாதென்று [1] ப்ரஹ்மலோகத்திற்குப் போகாதிருக்கின்றனன். புருஷஸிம்ஹனே! நீ தர்மங்களையுணர்ந்து உணர்ந்தபடியே நடத்தவும் வல்லவன்; ஸத்யஸங்கல்பன். இப்படிப்பட்ட உன்னைப் பார்த்து, அதற்குப்பின்பு தேவர்கள் வஸிக்கும் ப்ரஹ்மலோகத்

---

1. இங்கு 'ஷிரஹ்மலோகங் ந ஓச்ஷாமி' 'ஓமிஷ்யாமி த்ரிஷிவம் ஷேவஸேவிதம்' என்று உனது தர்ஶனத்தைப்பற்றி ப்ரஹ்மலோகத்தை விரும்பேன், (த்ரிஷிவம்) த்ரிபாத்விபூதியெனப்படும் பரமபதத்தையே. (த்வயா ஸமாஓம்ய) உன்னுடன் ஸமாகமத்தினால் உன்னுடைய கடாக்ஷத்திற்குப் பாத்ரனாகிப் பெறுவேன்' என்று கருத்துத் தோற்றுகின்றது. இங்ஙனம் கோவிந்தராஜர், 'ஷிந்யஷிரஜஸ்ய ஷிர்மலாநந்தஸ்வரூபனும் பக்தஜனபாரிஜாதனுமாகிய உன்னைத் தர்ஶனஞ்செய்யு மாநந்தத்தை விடுவேனாயின் அதைக்காட்டிலும் போக்யமான வஸ்து ப்ரஹ்மலோகத்தில் எனக்கு எதுவும் இல்லை. பூர்வம் தேஹாந்தரங்களால் ப்ரஹ்மலோகத்தை அனுபவித்திருக்கின்றனன், அங்ஙனம் அது அனுபவிக்கப்பட்டதேயாயினும், அதில் உன்னைப் பார்க்கு மாநந்தத்தைக்காட்டிலும் போக்யமானது எதுவும் இல்லையாயினும் எனது ப்ராரப்தகர்மவசத்தினால் அவ்விடம் போகின்றனன். என் செய்வேன்' என்று மஹேஶ்வரதீர்த்தர்.

திற்குப் போகலாமென்றிருக்கின்றனன். [1] புருஷதிலக னே! நான் ப்ரஹ்மலோகத்தையும் ஸ்வர்க்கலோகத்தை யும் அழிவில்லாத மேலான போகப்ரதேசங்களையும் ஸம்பாதித்திருக்கின்றனன். அவை யெல்லாவற்றையும்

---

1. முனிவர் 'உன் கடாக்ஷத்தினல் ப்ரஹ்மலோகத்தை விட்டு த்ரிதிவத்தை அதாவது பரமபதத்தைப் பெறுகிறேன்' என்ன, ராமன் 'க்ரமமாகப் பரமபதம் போவீர். இப்பொழுது ஸம்பாதித்த புண்ய கர்மங்களுக்குப் பலனாகிய ஸ்வர்க்காதிலோகங்களை அனுபவிப்பீராக' என்றானென்று தெரிகின்றது. கர்மங்களைப் பகவானிடத்தில் அர்ப்பணஞ் செய்கையாவது-கர்மபலன்களில் பற்றைத் துறந்து அவைகளுக்குத் தான் கர்த்தாவென்னும் புத்தியையும் விட்டுப் பகவானுக்குக் கைங்கர்யமாத்ரமாக அவைகளை அனுஷ்டிக்கையே யாகுமென்று தெரிகின்றது. இங்கு ப்ரஹ்மலோகத்தையும் ஸ்வர்க்கலோகத்தையும் மற்றுமுள்ள போகப்ரதேசங்களையும் ஸர்வேஶ்வரனாகிய பகவானிடத்தில் அர்ப்பணஞ்செய்தல் தோற்றுகின்றது. அவைகளை அந்த ஸர்வேஶ்வரன் 'அஹமேவாஹரிஷ்யாமி' (நானே பெற்றுக்கொள்கிறேன்) என்கையால் அங்கீகரிக்கையும் தோற்றுகின்றது. இது உட்பொருள். மேலுக்குத் தோற்றும்பொருள் என்னவெனில்— ராமன் அதிதியாகி வருகையால் முனிவர் தான் ஸம்பாதித்த லோகங்களை அங்கீகரிக்கவேண்டுமென்று அதிதிஸத்காரஞ் செய்தாரென்று தெரிகின்றது. இங்ஙனம் கோவிந்தராஜர் முனிவர் ஸ்ரீராமனுக்கு லோகங்களைக் கொடுக்கையால் அதிதிஸத்காரஞ் செய்தாரென்றும், ராமன் 'ராஜாக்களுக்கு ப்ரதிக்ரஹம் கூடாதாகையால் நீர் கொடுப்பதை நான் வாங்கிக்கொள்ளலாகாது. 'அஹமேவாஹரிஷ்யாமி' 'நானே அவைகளை, ஸாதித்துக்கொள்கிறேன். நீர் எனக்கு வாஸயோக்யமான ஓர் இடத்தைக் காட்டவிரும்புகிறேன்' என்று சொன்னானென்று தெரிகின்றது. இங்ஙனம் மஹேஶ்வரதீர்த்தர். 'அஹமேவாஹரிஷ்யாமி' என்பதற்கு (நானே உமக்கு ஸம்பாதித்துக் கொடுக்கிறேன். அதாவது 'லஹதேச ததஃ காமாந் மயைவ விஹிதாந்ஹிதாந்' என்ற கீதையின்படி பகவான் தானாகக் கொடுக்கும் அபீஷ்டங்களையே பக்தர் பெறுவார்களாகையால் அந்த உலகங்களை நானே உமக்குக் கொடுக்கிறேனென்று ராமன் சொல்லினன். தனிஶ்லோகி.

உனக்கு அர்ப்பணஞ் செய்கிறேன்; அங்கீகரிக்க வேண்டும்' என்றனர். சாஸ்த்ரங்களையெல்லா முணர்ந்தவனும் புருஷஶ்ரேஷ்டனுமாகிய ராமன் சரபங்கமுனிவர் அங்ஙனம் சொன்ன வார்த்தையைக் கேட்டு, அவருடன் 'மாமுனியே! நீர் எனக்கு அர்ப்பணஞ்செய்த லோகங்களையெல்லாம் நான் தப்பாமல் அங்கீகரிக்கின்றனன். நான் இவ்வரண்யத்தில் வஸிக்கும்படி ஓர் இடம் காட்டிக்கொடுக்க விரும்புகின்றேன்' என்றனன். மஹாப்ராஜ்ஞராகிய சரபங்கர் இங்ஙனம் இந்த்ரனோடொத்த பலமுடைய ஸ்ரீராமன் மொழிந்த வார்த்தையைக்கேட்டு, அவனுடன் 'ராமா! இவ்வனத்தில் ஸமீபத்திலேயே தர்மத்தின்படி நடப்பவரும் தர்மபுத்தியரும் மிகுந்த ப்ரபாவமுடையவருமாகிய ஸுதீக்ஷ்ணரென்னும் மாமுனிவர் இருக்கின்றனர். அவர் உனக்கு நன்மையைச் செய்வார். நீ பரிசுத்தமான இடத்தில் தவஞ்செய்துகொண்டிருக்கிற அந்த ஸுதீக்ஷ்ணமுனிவரிடம் போவாயாக. அவர் உனக்கு இவ்வரண்யத்தில் அழகியதும் பரிசுத்தமுமாகிய ப்ரதேசத்தை வாஸஸ்தானமாக ஏற்படுத்திக் கொடுப்பார். இதோ! [1] மந்தாகினீநதி; கிழக்குமுகமாகப் பெருகுகின்ற இந்நதிக்கு எதிரில் மேற்குமுகமாகப் போகும் வழியைப் பிடித்துச் செல்வாயாக. அம்மார்க்கத்தில் சில இடங்களில் நதிக்கு ஸமீபமாகவும் சில இடங்களில் நதிக்குத் தூரமாகவும போவாய். இந்நதியில் புஷ்பங்கள் தெப்பம்போல் மிதந்து வருகின்றன. ஆகையால் இதன் கரையோரமாகப் போவாயாயின் உனக்கு வழிநடக்கிற வருத்தமே தெரியாது. அப்பனே! ஆண்சிங்கமே! இதுவே வழி. கொஞ்சம்நின்று என்னைப் பார்த்துக்கொண்டிருப்பாயாக. ஸர்ப்பம் தோலை உரிப்பதுபோல் நான் இந்த ஜீர்ணதேஹத்தை விடுகின்றேன்'

---

1. மந்தாகினீ நதியென்றால் கங்காநதிபோல் பரிசுத்தமாகிய ஒரு நதி. இதனால் ரிஷிகள் புண்ய நதிகளையெல்லாம் கங்காநதியென்று பேசுவதாகத் தெரியவருகின்றது.



1249. சரபங்கமாமுனிவர் ஸ்வர்க்கமேறுதல்.

என்றனர். அப்பால், மஹாதேஜஸ்வியாகிய அம்முனிவர் ப்ரஹ்மமேதமந்த்ரங்களை உணர்ந்தவராகையால் அக்னியைப் பரிஸ்தரணம் முதலியவற்ருல் நன்கு அலங்கரித்து ப்ரஹ்மமேதமந்த்ரங்களை ஜபித்துக்கொண்டே நெய்யை ஹோமஞ்செய்து அவ்வக்னியில் ப்ரவேசித்தனர். பிறகு அவ்வக்னியானது மஹானுபாவராகிய அம்முனிவரது உடம்புமயிர்களையும் தலைமயிர்களையும் கிழத்தனத்தினுல் தளர்ந்த சரீரத்தின்தோலையும் எலும்புகளையும் ரக்தத்தையும் மாம்ஸத்தையும் கொளுத்திவிட்டது. அதைப் பார்த்து மஹாதீரனுகிய ராமன், பார்யையான ஸீதையோடும் ப்ராதாவான லக்ஷ்மணனோடும் மிகுந்த ஆஶ்சர்யம் அடைந்தனன். அனந்தரம் அந்தச் சரபங்கமஹர்ஷி அக்னிபோல் ப்ரகாசிக்கின்ற முப்பதுவயதுள்ள குமாரனுய் அவ்வக்னியினின்றும் எழுந்திருந்து மிகவும் ப்ரகாசித்தனர். [1] அம்மஹாமுனிவர் ஆஹிதாக்னிகள் பெறுகிற லோகங்களையும் மஹானுபாவர்களான ரிஷிகள் பெறுகிற லோகங்களையும் தேவதைகளின் லோகங்களையும் அதிக்ரமித்து ப்ரஹ்மலோகத்திற்குப் போயினர். புண்யகர்மமுடையவரும் ப்ராஹ்மணஶ்ரேஷ்டருமாகிய அம்முனிவர் அந்த ப்ரஹ்மலோகத்தில் பரிவாரங்களோடுகூடிய ப்ரஹ்மதேவனைக் கண்டனர். ப்ரஹ்மதேவனும் அம்முனிவரைப் பார்த்து ஸந்தோஷித்து [2] ஸ்வாகதம் விசாரித்தனன். ஐந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

1 இங்குத் தேவமார்க்கத்தினுல் ப்ரஹ்மலோகஞ் செல்வதாகத் தெரிகின்றது.

2. ஸ்வாகதம் விசாரிக்கையாவது. நல்வரவாவென்று விசாரிக்கை.

சரபங்காஸ்ரமத்திலுள்ள முனிஜனங்கள் ராமனைச் சரணமடைந்து ராக்ஷஸோபத்ரவத்தைச் சொல்லுதலும், ராமன் அவர்களுக்கு ராக்ஷஸர்களை வதஞ்செய்வதாக ப்ரதிஜ்ஞை செய்தலும்.

சரபங்கமஹர்ஷி ஸ்வர்க்கஞ்சென்ற பின்பு அங்குள்ள முனிவர்கள் அனைவரும் கூட்டங் கூட்டமாய் ஒன்றுகூடி மஹாதேஜஸ்ஸுடன் விளங்குகின்ற ஸ்ரீராமனிடம் வந்தனர். ப்ரஹ்மாவின் நகத்தில் பிறந்த வைகானஸர்களும் ப்ரஹ்மாவின் ரோமங்களினின்று பிறந்த வாலகில்யர்களும் சரீரத்தின் உள்பாகங்களையெல்லாம் ஜலத்தால் சுத்திசெய்பவர்களும் சந்த்ரஸூர்யர்களின் கிரணங்களைப் பானஞ்செய்பவர்களும் சரீரம் முழுவதையும் கற்களால் குத்திக்கொள்பவர்கள்பலரும் இலைகளைத் தின்பவர்களும் நெல்லு முதலான தான்யங்களைக் குத்துவதற்குப் பதிலாகப் பற்களாலேயே கொரித்து உமிகளை உமிழ்ந்து உள்ளிருக்கிற அரிசிகளைமாத்திரம் தின்பவர்களும் கழுத்தளவு ஜலத்திலிருந்து தவஞ்செய்பவர்களும் தேஹத்திலேயே மார்பின் மேலாவது புஜத்தின்மேலாவது தலையை வைத்துக்கொண்டு நித்ரை செய்பவர்களும் தூங்காமலிருப்பவர்களும் மழை முதலிய வற்றிலும் வெளியில் இருந்து தவஞ்செய்பவர்களும் ஜலத்தை மாத்ரம் ஆஹாரமாகக் கொள்பவர்களும் காற்றையே ஆஹாரமாகக் கொள்பவர்களும் பிடிப்பில்லாமல் ஆகாயத்திலிருப்பவர்களும் வெறுந்தரையில் படுப்பவர்களும் வ்ரதத்தின்பொருட்டு நித்யோபவாஸமிருந்து ஸமஸ்த ஆஹாரங்களையும் இழந்திருப்பவர்களும் ஜிதேந்த்ரியர்களும் எப்பொழுதும் ஈரத்துணியை உடுத்திருப்பவர்களும் பலவகை மந்த்ரங்களை ஜபிப்பவர்களும் வேதாத்யயனமாகிற தவத்தில் ஊற்றமுடையவர்களும் வெயிற்காலத்தில் பஞ்சாக்னிமத்யத்திலிருந்து தவஞ் செய்பவர்களும் எல்லோரும் தர்மத்தின்படி நடப்பவர்களும் மிகுந்த ப்ரஹ்

மதேஜஸ்ஸுடையவர்களும் யோகத்தில் பரிபாகமடைந்தவர்களும் ஊக்கந்தவருத மனமுடையவர்களுமாகிய முனிவர்கள் அனைவரும் சரபங்கரது ஆஶ்ரமத்திற்கு வந்து ராமனைச் சரணம் அடைந்தனர். 1 தர்மங்களையுணர்ந்த அம்மஹர்ஷிகள் தர்மங்களை நன்கறிந்தவனும் தர்மங்களை அனுஷ்டித்துப் பிறரையும் அனுஷ்டிக்கச் செய்து அதை வளர்ப்பவர்களில் சிறந்தவனுமாகிய ராமனிடம்போய் மிகுந்த மனவூக்கத்துடன் அவனைப் பார்த்து மொழிந்தனர்:—'மஹாரதனே! இந்த்ரன் தேவதைகளுக்கு ப்ரதானனுயிருப்பதுபோல நீ இக்ஷ்வாகு வம்சத்ரசர்களில் தலைவனுயிருப்பவன்; மேலும் பூமண்டலத்திற்கெல்லாம் நாதன். நீ சரபங்கரை அனுக்ரஹித்த கீர்த்தியினுலும் விராதனைக் கொன்ற பராக்ரமத்தினுலும் மூன்று லோகங்களிலும் ப்ரஸித்தி பெற்றிருக்கின்றனை. தந்தையே மீளவும் ராஜ்யத்

---

1 முனிவர்கள் ராக்ஷஸர்களால் பீடிக்கப்பட்டுத் தமக்கு மற்றொரு கதியைக் காணுமல் ஜகத்ரக்ஷணத்தின்பொருட்டு அவதரித்த ராமனை ஸர்வலோகஶரண்யனுக நிச்சயித்துத் தம்மை ரக்ஷிக்கும்பொருட்டு மன இரக்கத்தை விளைவிக்கும்படியான இவ்வாக்யங்களை அவனிடம் விண்ணப்பஞ் செய்கின்றனர். இதற்கு 'த்வமிக்ஷ்வாகுகுலஸ்யாஸ்ய ப்ருதிவ்யாஶ்ச மஹாரத| ப்ரதாநஶ்சாஸி நாதஶ்ச தேவாநாம் மகவாநிவ| பித்ருஹக்திஶ்ச ஸத்யஞ்ச த்வயி தர்மஶ்ச புஷ்கல:' என்று மூலம். தேவதைகளுக்கு தேவேந்த்ரன்போல் நீ இக்ஷ்வாகு வம்சத்திற்கு மாத்ரம் ப்ரதானனே? இந்தப் பூமிமாத்ரத்திற்கு நாதனே? அன்று. நீ லோகங்களையெல்லாம் தரிப்பதற்கும் போஷிப்பதற்கும் ஸமர்த்தனுகையால் அளவில்லாத கீர்த்தியாலும் பராக்ரமத்தினுலும் மூன்று லோகங்களிலும் அதாவது ஸர்வலோகங்களிலும் ப்ரஸித்தனுயிருப்பவன்; ஸகலலோகங்களுக்கும் ஈஶ்வரன். அப்படிப்பட்ட நீ க்ஷத்ரியரூபத்தோடு அவதரித்தாயாகையால் உலகங்களுக்கு அந்தந்த தர்மங்களைக் காப்பாற்றுவதற்காகப் பித்ருவசனபரிபாலனமும் ஸத்யஸந்தனுயிருத்தலும் மிக்க மேலாக உன்னிடத்தில் புலப்படுகின்றன' என்று கருத்து. மஹேஶ்வரதீர்த்தர்.

தைக் கைப்பற்ற வேண்டுமென்றாலும் அதைத் துறந்து விட்டாயாகையால் உன்னிடத்தில் பித்ருபக்தி மிகவும் நிறைந்திருக்கின்றது. பரதனே ராஜ்யத்தை அங்கீகரிக்கவேண்டுமென்று ப்ரார்த்தித்த போதிலும் ப்ரதிஜ்ஞையைத் தவருதிருந்தனே; ஆகையால் உன்னிடத்தில் ஸத்யம் மிகுந்திருக்கின்றது. மேலும், ஆஶ்ரித ரக்ஷணமென்னும் தர்மத்தைத் தவருமல் சரபங்கரை அனுக்ரஹித்தனே; ஆகையால் உன்னிடத்தில் தர்மமும் பரிபூர்ணமாயிருக்கின்றது. நாதனே! நீ மஹானுபாவன்; சரணுகதரக்ஷண தர்மம் தெரிந்தவன்; தெரிவது மாத்ரமேயன்றி அந்தத் தர்மத்தை அனுஷ்டிப்பதிலும் மிகுந்த மனவிருப்பமுடையவன். இங்ஙனம் ஶரண்யனுகிய உன்னைக் கிட்டி இறப்பாளர்களாக ஒன்று விண்ணப்பஞ் செயகின்றனம். [1] உன்னிடம் வந்து சரணமடைகையே கார்யஸித்திக்குப் போதுமாகையால் விசேஷித்து உன்னை வேண்டிக்கொள்ளவேண்டிய அவஶ்யமில்லை; ஆயினும் வருத்தம் மிகுந்திருக்கையால் பொறுத்திருக்கமுடியாமல் ஒன்று விண்ணப்பஞ் செய்கிறோமன்றிவேறில்லை. ஆகையால் அதை க்ஷமித்தருளவேணும். தந்தையே! எந்த மன்னவன் ஆறிலொன்று

1 இதனுல் 'சேதனன் பகவானை உபாயமாக நிச்சயிக்கவேண்டுமேயன்றி ப்ரார்த்தனை செய்யலாகாது; ஒருகால் கலங்கி அங்ஙனஞ்செய்தாலும் க்ஷமிக்கும்படி செய்துகொள்ளவேண்டும்' என்று தெரிகின்றது.

2 இதில் ராமன் தம்மை ரக்ஷிப்பது ஸ்வபாவஸித்தமென்று தெரிவிக்கமுயன்று முதலில் ஔபாதிகமான ராஜதர்மத்தைச் சொல்லுகிறார்கள். இங்ஙனம் கோவிந்தராஜர். ராமன் ஜகத்துக்களையெல்லாம் ரக்ஷிப்பதற்காகவே அவதரித்தவனுகையால் நம்மையும் ரக்ஷிப்பானென்று தெரிந்தும் துக்கத்தின் மிகுதியால் உலகரீதியை அனுஸரித்து ராஜதர்மங்களை விண்ணப்பஞ் செய்து அந்த தர்மத்தைப்பற்றித் தம்மை ரக்ஷிக்கவேண்டுமென்று வேண்டுகின்றனர். இங்ஙனம் மஹேஶ்வரதீர்த்தர்.

கப்பம் வாங்கிக்கொண்டு ப்ரஜைகளைத் தன் புதல்வர்களைப்போல் காக்காதிருப்பானே, அவனுக்கு மிகவும் பெரிதான அதர்மம் ஸம்பவிக்கும். எந்த அரசன் மிகுந்த யத்னத்துடன் எப்பொழுதும் ஊக்கமுற்றுத் தன் தேசத்திலுள்ள ப்ரஜைகளையெல்லாம் தன் ப்ராணனைப்போலவும் ப்ராணனைக்காட்டிலும் ப்ரியர்களான தன் புத்ரர்களைப்போலவும் எப்போதும் பாதுகாத்து வருவானோ, அவன் வெகுகாலம் இடைவீடின்றி வளர்ந்து வருகின்ற கீர்த்தியைப் பெறுவான்; கடைசியில் ப்ரஹ்மலோகஞ்சேர்ந்து அங்கும் ப்ரஹ்மாவால் பூஜிக்கப்பட்டு ப்ரகாசித்துக் கொண்டிருப்பான். 'ஆனால் கப்பங்கொடுக்கிற ப்ரஜைகளையே அரசன் ரக்ஷிக்க வேண்டுமென்றிக் கப்பங் கொடுக்காத ரிஷிகளை ரக்ஷிக்க வேண்டுவதென்' என்கிறாயோ? ரிஷி காய் கிழங்குகளை ஆஹாரமாகக் கொண்டு ஆசரிக்கிற மஹாதர்மத்திலுங்கூட, தர்மந்தவறாமல் ப்ரஜைகளைப் பரிபாலித்து வருகிற அரசனுக்கு [1] நான்கில் ஒருபாகம் உண்டு. ஆகையால் அம்முனிவர்களையும் ரக்ஷிக்கவேண்டும்.

---

1. சிலவிடங்களில் ப்ரஜைகள்செய்யுந் தர்மத்தில் ஆறிலொரு பாகம் அரசனுக்கு உண்டென்று சொல்லப்படுகிறது. இங்கு நான்கிலொரு பாகமென்று சொல்லப்படுகிறது. மற்றோரிடத்தில் இரண்டிலொரு பாகமென்று கூறப்படுகிறது. இது எப்படி கூடுமென்றால், உபவாஸமிருந்து பிச்சையெடுத்து ஜீவிக்கிற ஜனங்கள் செய்யுந் தர்மங்களில் ஆறிலொருபாகமும், அரசனால் பரிபாலிக்கப்பட்டு அவன் தேசத்தில் விளையும் பலன்களைப் புசித்து ஜீவிக்கிற ஜனங்கள் செய்யுந் தர்மத்தில் நான்கிலொரு பாகமும், அவ்வரசனது அன்னபானங்களால் சரீரம் வளரப்பெற்றவர் செய்யுந் தர்மத்தில் இரண்டிலொரு பாகமும் அரசனைச் சேருமென்று தெரிகின்றது. 'யஸ்யாந்நபாநபுஷ்டாங்கஃ குருதே யர்மஸஞ்சயம்। அந்நப்ரதாதுஸ்தஸ்யார்யங் கர்த்துஸ் சார்யங் நஸம்ஶயஃ' என்று அவ்வரசனது அன்னத்தினால் வளர்ந்தவர் செய்யுந் தர்மத்தில் பாதி அரசனைச் சேருமென்று ப்ரமாணம் கூறுகின்றது.

[1]ராமா! இந்த வானப்ரஸ்தர்கள் பெருங்கூட்டங்கூடி வந்திருக்கின்றனர்; பார். இவர்களில் அனேகமாக எல்லோரும் ப்ராஹ்மணர்களே. இவர்களுக்கு நீ நாதனாகி இருந்தும் அநாதர்போல் ராக்ஷஸர்களால் மிகவும் பாதிக்கப்

---

1. இதற்கு 'ஸோऽயம் ப்ராஹ்மணபூயிஷ்டோ வாநப்ரஸ்தகணோ மஹாந்। த்வந்நாதோऽநாதவத்ராம ராக்ஷஸைர்வத்யதே ப்ருஶம்' என்று மூலம். தர்மத்தின்பொருட்டு ப்ரஜாரக்ஷணஞ்செய்கிற அரசர்களுக்கு உண்டாகும் பலன்களைச் சொல்லி இப்பொழுது தர்மத்தின்பொருட்டு அங்ஙனம் ராமன் ரக்ஷிப்பதில்லையாகையால் சரணாகதியே அவன் ரக்ஷிப்பதற்கு உபாயமென்று சொல்லுகின்றனர். (சரணாகதியாவது நீயே எனக்கு ரக்ஷகனென்று நிச்சயபுத்தியோடு ஒருவன் காலில் விழுதல்.) (ஸோயம்ப்ராஹ்மணபூயிஷ்டோ வாநப்ரஸ்தகணோ மஹாந்) க்ஷத்ரியவைஶ்யர்களுக்குங்கூடவானப்ரஸ்தாஶ்ரமம் உண்டாகையாலே இதில் அப்படிப்பட்டவர் ஒருவர் இருவரேயன்றி மற்றவரெல்லோரும் கேவலம் ப்ராஹ்மணர்களேயென்று பொருள். அன்றியே-ப்ராஹ்மணஶப்தத்திற்கு ப்ரஹ்மவித்தென்று அர்த்தமுண்டாகையால் ப்ராஹ்மணத்வம் முதலிய பரமைகாந்திதர்மத்தில் நிலைநின்றிருப்பதென்றும் பொருள் கொள்க. ஆனது பற்றியே (த்வந்நாத:) உன்னொருவனையே நாதனாக உடையது. இதனால் அனன்யசேஷத்வஞ் சொல்லப்பட்டது. (நாத்யத இதிநாத:-கர்மண்-யாச்ஞாயாம்) ஆகையாலே உன்னையே உபாயமாகவும் உபேயமாகவும் ப்ரார்த்தித்துக் கொண்டிருப்பவரென்றபடி. இதனால் அனன்யோபாயத்வமும் அனன்யபோக்யத்வமும் சொல்லப்பட்டன. ஆனது பற்றியே (மஹாந்) தேவதாந்தரங்களைக் கால்கட்டுவதும் ப்ரயோஜனாந்தரத்திற்காக ஈஶ்வரனை உபாஸிப்பதுமின்றி அவனையே உபாயோபேயமாகப் பற்றியிருக்கையால் மிகுந்த மஹிமையுடையது இக்கூட்டமென்றபடி. இப்படியிருந்தும் நாதனற்றதுபோல் இது சொல்லப்படுகின்றதே. உன்னையே உபாயோபேயமாகப்பற்றின எங்களுக்கு நேரும் பரிபவம் உனக்கு அனுரூபமன்றென்றபடி. 'பராபவோ நாதநதேऽநுரூப:' என்று சொல்லப்பட்டது. கோவிந்தராஜர் பாடம். 'வாத்யதே' என்று. தனிஶ்லோகியின் பாடம் 'வத்யதே' என்று. மஹேஶ்வரதீர்த்தர் பாடமும் அதுவேயென்று தெரிகிறது.

படுகிறார்களே! இப்படி வருவாயாக; ஆத்மத்யான நிஷ்டர்களான முனிவர்கள் பலர் அரண்யத்தில் பயங்கரமான அரக்கர்களால் பலவாறு ஹிம்ஸிக்கப்படுகையில் அவர்களுடைய தேஹங்கள் அடிபட்டிருப்பதைக் காண்பாயாக. அவ்வரக்கர்கள் பம்பாதீரவாஸிகளும் மந்தாகினீதீர்த்தத்திலிருப்பவர்களும் சித்ரகூடத்தில் வாஸஞ் செய்பவர்களுமாகிய ரிஷிகளெல்லோரையும் மிகவும் ஹிம்ஸிக்கின்றனர். அங்ஙனம் அரண்யத்தில் அரக்கர்கள் அதிபயங்கரமான கார்யங்களைச் செய்து தாபஸர்களைக் கோரமாக ஹிம்ஸித்துத் துரத்திக்கொண்டிருப்பது எங்களுக்குப் பொறுக்கமுடியாதிருக்கின்றது. ராமா! [1] அந்தக்காரணத்தைப்பற்றி நாங்கள் ரக்ஷணத்தின் பொருட்டு ஸர்வரக்ஷகனாகிய உன்னைச் சரணமடைந்தனம். ராக்கதர்களால் ஹிம்ஸிக்கப்படுகின்ற எங்களைப் பாதுகாப்பாயாக. [2]வீரனே! ராஜகுமாரா! உன்னை

---

1. 'ததஸ்த்வாம்ஶரணார்த்தஞ்ச ஶரண்யம்ஸமுபஸ்திதாஃ। பரிபாலய நோ ராம வத்யமானாந் நிஶாசரைஃ' என்று மூலம். (ஶரண்யம்) இன்னாருக்கென்று சொல்லாமையால் ஸர்வலோகசரண்யனென்று தெரிகிறது. அதனால் ரக்ஷணத்திற்கு வேண்டிய ஸ்வாமித்வாதிகுணங்கள் பூர்வகண்டத்தில் நாராயணபதத்தில் சொல்லப்பட்டவை இங்கு நினைவு மூட்டப்பட்டன. (ஶரணார்த்தம்) உபாயாந்தரங்களை விட்டு அந்த ஸ்தானத்தில் உன்னையே ஏற்படுத்திக் கொள்ளும்பொருட்டு (ஸமுபஸ்திதாஃ) விஶ்வாஸம் முதலான எல்லா அங்கங்களோடு ரக்ஷாபரஸமர்ப்பணஞ் செய்தோம். விஶ்வாஸாதிகளையுடைய எம்மை ரக்ஷிக்கும் பாரத்தை உன்னிடம் ஒப்புவித்தோமென்றபடி. (நஃ பரிபாலய) ரக்ஷணவரணஞ் சொல்லப்பட்டது. உத்தரார்த்தத்தினால் அனிஷ்டநிவ்ருத்தி யென்னும் பலத்தின் ப்ரார்த்தனை ஏற்படுகின்றது.

2 'பராத்வத்தோ கதிர்வீர ப்ருதிவ்யாம் நோபபத்யதே। பரிபாலய நஸ்ஸர்வாந் ராக்ஷஸேப்யோ ந்ருபாத்மஜ'. இதில் உத்தரகண்டத்தினர்த்தம் விவரிக்கப்படுகின்றது. (ப்ருதிவ்யாம்) பூமியில். இது எல்லா லோகங்களுக்கும் உபலக்ஷணம். எல்லாலோகங்களிலு

விட வேறுகதி எங்களுக்கு இந்தப் பூமண்டலத்தில் எங்கும் கிடைக்காது. அந்த இராக்கதர்விடத்தினின்று எங்களெல்லோரையும் ரக்ஷிப்பாயாக' என்றனர். காகுத்தகுலாலங்காரனுகிய அந்தத் தார்மிகனும் மிகத்தவமுடைய அந்த ரிஷிகள்சொன்ன வார்த்தையைக்கேட்டு மன இரக்கத்திற்கிடமான அவர்களெல்லோரையும்பார்த்து [1]'நீங்கள் என் விஷயமாக இங்ஙனஞ் சொல்லத்தகாது. என்னை நீங்கள் ஆஜ்ஞாபிக்கவேண்டுமேயன்றி இங்ஙனம் வேண்டலாகாது. உங்களை ராக்ஷஸர்களிடத்தி

---

மென்றபடி. (த்வத்தஃ பராஂகதிஃ ந உபபத்யதே) ஸித்தோபாயமான உன்னைக்காட்டிலும் வேறு கதி இல்லை. 'நாந்யஃ பந்தா அயநாய வித்யதே' என்ற ஸ்ருதியை உட்கொண்டு இங்ஙனஞ் சொல்லப்பட்டது. உபாயாந்தரங்கள் பரிமிதபலத்வாதி பஹுதோஷதுஷ்டங்களாகையாலே அவை எமக்கு உபபன்னமாகா. ஸித்தனும் பரமசேதனனும் ஸர்வசக்தனுகிய நீயே எமக்குத் தகுந்த உபாயமென்றபடி. (நஸ்ஸர்வாந்) என்று தம்மையும் தம்மோடு சேர்ந்தவர்களையும் கூட்டிக்கொண்டு சொல்லுகிறுர்கள். (ராக்ஷஸேப்யஃ) என்றதை உபலக்ஷணமாக்கி எல்லா அனிஷ்டங்களினின்றும் காக்க வேண்டுமென்று கருத்துக்கொள்க.

1 'நைவமர்ஹத மாஂவக்து மாஜ்ஞாப்யோஹந்தபஸ்விநாம்| கேவலேநாத்மகார்யேண ப்ரவேஷ்டவ்யம் மயா வநம்.' (ஆஜ்ஞாப்யோஹம்) நான் உங்களது ஆஜ்ஞையைச் செய்யத்தகுந்த விதேயனேயாகையால் இங்ஙனம் என்னை வேண்டிக்கொள்வது ஏனே வென்கையால் ஸௌலப்யம் தோற்றுவிக்கப்பட்டது. (கேவலேந ஆத்மகார்யேண) கேவலம் என்னுடைய ஸொந்த கார்யத்திற்காகவே. ராக்ஷஸர்கள் உங்களுக்குச் செய்கிற உபத்ரவத்தை நிராகரிக்கும்பொருட்டே யென்றபடி. சேஷபூதர்களை ரக்ஷிக்கை சேஷியினுடைய ப்ரயோஜனமே யாகையால் அந்த முனிவர்களை ரக்ஷிப்பது தன் ஸொந்தப்ரயோஜனமே யாகுமென்று சொல்லிக்கொண்டனன். ராக்ஷஸர்களிடத்தினின்றும் உங்களைக் காப்பது என் சொந்த ப்ரயோஜனமாயிருக்க,என்னை இங்ஙனம் வேண்டிக்கொள்வது ஏனே வென்று கருத்து. (வநம் ப்ரவேஷ்டவ்யம்) வனத்திற்கு வரவேண்

னின்றும் காப்பாற்றுவது என் ஸொந்த ப்ரயோஜனமே. ஆகையால் கேவலம் என் ஸொந்த ப்ரயோஜனத்தைப் பற்றியே அரண்யத்தில் ப்ரவேசிக்க வேண்டியதாய் வந்தது. அதற்காகவே நான் இவ்விடம் வந்து சேர்ந்தனன். 'பித்ருவாக்ய பரிபாலனத்திற்காக வந்தாய்' என்கிறீர்களோ? நான் தெய்வாதீனமாகப் பித்ருவசன பரிபாலனத்தின் பொருட்டு வர, அந்த வ்யாஜத்தினுல் உங்கள் கார்யத்தை நிறைவேற்றும் பொருட்டு என்னிஷ்டப்படி வனத்திற்கு வந்தவனுயினன். நான உங்கள் கார்யத்தை நிறைவேற்றும்பொருட்டே விருப்பங்கொண்டு இவ்விடம் வந்தனன். ஆனதுபற்றியே இவ்வனவாஸம் எனக்குப் பெரும்பயனை விளைக்கப் போகின்றது. நான் தபஸ்விகளுக்குப் பகைவராகிய இராக்கதர்களெல்லோரையும் யுத்தத்தில் வதஞ்செய்ய விரும்புகின்றனன். தவத்தையே தனமாகவுடைய ரிஷிகளெல்லோரும் என்வீர்யத்தையும் என தம்பியின் பராக்ரமத்தையும் காண்பார்

---

டியதா யிருந்தது. பித்ருவசனபரிபாலனம் கேவலவ்யாஜமேயன்றி வால்தவம் உங்கள் கார்யத்தைத் தீர்க்கையே யாகையால் கர்மவசத்தினுல் வந்தவனல்லேனென்று கருத்து. கோவிந்தராஜர். 'பித்ருவசனபரிபாலனம் பண்ணவேண்டிய என் ஸொந்த ப்ரயோஜனத்திற்காகவே அரண்யத்திற்கு வரவேண்டியதா யிருந்தது. வந்த இடத்தில் தெய்வாதீனமாக ராக்ஷஸர்களிடத்தினின்றும் உங்களைக் காக்கும்படியான இந்தப் பெரும்பயனும் எனக்குக் கைகூடிற்று. இது மேலுக்குத் தோற்றும்பொருள். உட்கருத்தென்னென்றல்—நான் பக்தபராதீனனுகையால் தபஸ்விகளின் ஆஜ்ஞைக்கு உட்பட்டவன். நான் என் ஸொந்த கார்யத்திற்காகவே அரண்யம் வந்தேனே? அன்று. ராக்ஷஸர்கள் உங்களுக்குச் செய்யும் உபத்ரவத்தை நிராகரிக்கும் பொருட்டுத் தான் வந்தேன்; வேறு கார்யத்திற்கு வந்ததாகச் சங்கிக்கவேண்டாம்; அது வ்யாஜமாத்ரமே யாகும்; நான் உங்கள் கார்யத்தை நிறைவேற்றும் பொருட்டே என்னிஷ்டப்படி வந்தேனன்றிக் கர்மவசத்தினுல் வரவில்லை' என்று மஹேஸ்வரதீர்த்தர்.

களாக' என்றனன். ராமன் மிகுந்த பராக்ரமமுடைய வனும் தர்மத்தில் நிலைநின்ற மனமுடையவனும் தபோ தனர்களும் பூஜிக்கத்தகுந்த ஆசாரமுடையவனுமாகை யால் இங்ஙனம் ரிஷிகளெல்லோர்க்கும் அபயங்கொடுத்து லக்ஷ்மணனோடுகூட ஸுதீக்ஷ்ணரைப் பார்க்கப்போயி னன். ஆறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராமன் ஸுதீக்ஷ்ணாஸ்ரமத்திற்குப் போய் அவரைக் காணுதலும, ஸுதீக்ஷ்ணர் மிரு கோபத்ரவத்தைச் சொல்லுதலும், ராமன் அன்றிரவு ஆஸ்ரமத்தில் வஸித்திருத்தலும்.

சத்ருக்களை அழிக்க வல்லனாகிய ராமன் ஸீதை யோடும் லக்ஷ்மணனோடும் கூடி அந்த வைகானஸாதி ப்ராஹ்மணர்களும் பின்றொடர்ந்து வரப்பெற்று ஸுதீ க்ஷ்ணமஹர்ஷியின் ஆஸ்ரமத்திற்குப்போயினன். ராமன் அங்ஙனம் வெகுதூரம்சென்று மிக்கஜலம் நிறைந்த பல நதிகளைத் தாண்டி மஹாமேகம்போல் மிகவும் உயர்ந்த ஒரு பர்வதத்தையும் அதைச்சேர்ந்திருப்பதும் நீருண்ட மேகம்போல் கறுத்திருப்பதுமாகிய ஒரு அரண்யத்தை யுங் கண்டனன். அனந்தரம் இக்ஷ்வாகுகுலதிலகர்களா கிய அந்த ராமலக்ஷ்மணர்கள் ஸீதையுடன் பலவகை வ்ருக்ஷங்கள் நிறைந்த அவ்வாரண்யத்தில் ப்ரவேசித்த னர். ராமன் அங்ஙனம் மிகுந்த புஷ்பங்களும் காய்களும் அமைந்த பல வ்ருக்ஷங்களுடையதும் பயங்கரமாயிருப் பதுமான அவ்வடவியுள் புகுந்து அங்கு ஏகாந்த மான ஓரிடத்தில் மரவுரிகள் வரிசையாக ஆறப்பரிமாறப் பெற்று அழகாய் விளங்குகிற ஓராஸ்ரமத்தைக் கண்ட னன். அங்கு ராமன் மிகத்தவம்பொருந்திய ஸுதீக்ஷ்ண

மாமுனிவர் ஸுகமாயுட்கார்ந்திருக்கக் கண்டனன். அவர் என்றும் ஓயாமல் தவஞ்செய்துகொண்டு ஸ்னநாதி ஸம்ஸ்காரங்களையும் இழந்திருப்பதனால் அழுக்கும் தூசியும் சரீரத்தில் படியப்பெற்று ஜடைகள் தரித்திருந்தனர். அவர் பெருங்கிழவராகையால் கண் தெரியாதிருப்பதுபற்றி ராமன் க்ரமப்படி அவரது அருகிற்சென்று 'மஹானுபாவரே! நான் ராமனென்பவன். தர்மங்களையுணர்ந்தவரே! உம்மைப் பார்க்க வந்தனன். மஹர்ஷியே! அமோகமான தவமஹிமையுடையவரே! இதோ நமஸ்காரஞ் செய்கிறேன்; அடியேனை ஆசீர்வதிப்பீராக' என்றனன். அனந்தரம் அம்மஹர்ஷி, வீரனும் தார்மிக சிரோமணியுமாகிய அந்த ராமனைப்பார்த்துக் கைகளால் வாரி அணைத்துக்கொண்டு 'வீரர்களில் தலைவனே! தர்மத்தை யனுஷ்டிப்பவர்களில் மேன்மையுள்ளவனே! ராமா! உனக்கு நல்வரவா? நீ வந்ததனால் இவ்வாஶ்ரமம் இப்பொழுது நாதனையுடையதாகி விளங்குகின்றது. [1]பெரும் புகழுடையவனே! மஹாவீர! 'நீவரப்போகிறாய், உன்னைப் பார்க்கவேண்டும்' என்று உன் வர

1. 'ப்ரதீக்ஷமாணஸ்த்வாமேவ நாரோஹே஽ஹம் மஹாயஶ:। தேவலோகமிதோ வீர தேஹம் த்யக்த்வா மஹீதலே'. 'ஸ்வர்க்கம் மோக்ஷத்திற்கு விக்னமாகையால் அங்குப்போகாமல் உன் வரவை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறேன்' என்று கோவிந்தராஜர். ஸ்வர்க்கம் பரமபுருஷார்த்தமான மோக்ஷத்திற்கு விக்னமாகையால் அங்குப் போகாதிருக்கிறேனென்று கருத்து. இங்கு வாஸ்தவார்த்தமெப்படி யென்றால்—ராவணவதத்திற்காக ரகுகுலத்தில் அவதரித்தனை. உனக்கு ராஜ்யப்ரம்ஶம் நேரிட்டதென்று நீ சித்ரகூடம் வந்தது முதல் கேட்டனன். ஆகையால் ராவணவதத்தின்பொருட்டு இந்த வழியாக வருவாயென்று உன்னை எதிர்பார்த்துக்கொண்டு பரமபுருஷார்த்தமான உன் தர்சனத்திற்கு ஸ்வர்க்கம் விக்னமாகையால் தேஹத்தைவிட்டு அங்குப் போகாதிருக்கின்றேன்' என்று கருத்து. மஹேஶ்வர தீர்த்தர்.

வையே எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறேனுகையால் பூமியில் தேஹத்தை விட்டு ஸ்வர்க்கம் போகாதிருக்கின்றனன். 'நான் வருவது எப்படி தெரியும்' என்கிருயோ? நீ சித்ரகூடத்திற்கு வந்தது முதலாக உனக்கு ராஜ்யப்ரம்ஶம் உண்டாயிற்றென்று கேள்விப்பட்டிருக்கின்றனன். நான் ஸ்வர்க்கம்போவதற்கு ப்ரஸக்தி சொல்லுகிறேன் கேள். சரபங்கமுனிவர்க்காக வந்த மஹாதேவனும் தேவர்கள் தலைவனுமாகிய மஹேந்த்ரன் என்னைப்பார்க்க இவ்விடம் வந்து நான் எனது புண்யகர்மத்தினுல் ஸமஸ்த லோகங்களையும் ஜயித்ததாகச்சொல்லிப் போயினன். தேவர்ஷிகள் மகிழ்ந்துலாவப்பெற்றவைகளும் என்னுல் தவஞ்செய்து ஸம்பாதிக்கப்பட்டவைகளுமாகிய அந்த லோகங்களில் நீ எனது அனுக்ரஹத்தினுல் ஸீதையோடும் லக்ஷ்மணனேடும்கூடி ஸுகமாக விளையாடிக் கொண்டிருப்பாயாக' என்றனர். மஹானுபாவனுகிய ராமன், காஶ்யபர் ப்ரஹ்மதேவனிடம் சொல்லுவதுபோல், பெருந்தவமுடையவரும் ஸத்யவாதியுமாகிய அம்மஹர்ஷியைப் பார்த்து 'மாமுனியே! நான் ஸ்வயமாகவே லோகங்களை ஸம்பாதித்துக்கொள்கின்றனன். ஆனுல் இவ்வரண்யத்தில் நாங்கள் வஸிக்கும்படி ஒரு வாஸஸ்தானத்தை மாத்ரம் தேவரீர் ஏற்படுத்திக்கொடுக்க விரும்புகின்றனன். மஹானுபாவரும் கௌதம வம்சத்தில் பிறந்தவருமாகிய சரபங்கமஹர்ஷி, நீர் மஹானுபாவரென்றும் ஸமஸ்த ப்ராணிகளுக்கும் ஹிதஞ்செய்வதில் விருப்பமுடையவரென்றும் மொழிந்தார்' என்றனன். உலகமெங்கும் ப்ரஸித்தராகிய அம்மஹர்ஷி, ராமன் இங்ஙனஞ் சொல்லக்கேட்டு மிகுந்த ஸந்தோஷத்தில் மூழ்கி இங்ஙனம் மதுரமான வாக்யத்தை மொழிந்தனர்:—'ராமா! இவ்வாஶ்ரமத்தில் ரிஷிகள் பலரும் விளங்குவார்கள். மேலும், இதில்

காய் கிழங்குகள் எப்பொழுதும் ஸம்ருத்தமாயிருக்கின்றன. ஆகையால் இவ்வாஶ்ரமம் மிகுந்த குணமுடையது. இங்கேயே வேடிக்கையாக வாஸஞ்செய்திருப்பாயாக. பெரும்புகழனே! சில மிருகங்கள் எவ்விதத்திலும் பயமின்றி இவ்வாஶ்ரமத்திற்கு வந்து நாற்புறத்திலும் திரிந்து மிகவும் அற்புதங்களான தமது உருவம் ஒளி நடை சேஷ்டை முதலியவற்ருல் எமக்கு ஆசையை விளைத்து எமது ஸமாதியைக் கெடுத்து விட்டுப் போகின்றன. இங்கு இந்த மிருகங்களால் வரும் பாதை ஒன்ருெழிய வேருெரு தோஷமும் இல்லையென்றறிவாய்' என்றனர். தீரனுகிய அந்த ராகவன் அம்முனிவர் சொன்ன வார்த்தையைக் கேட்டு தனுஸ்ஸில் பாணத்தைத் தொடுத்து இழுத்துக்கொண்டே மொழிந்தனன்:—'மஹாபாகரே! நான் இங்கிருப்பேனுயின், மிருகங்கள் வருமாயின், நான் பார்க்கும் பொழுது அவைகளெல்லாவற்றையும் இடிபோல் கோஷிக்கின்ற கூரான நுனியுடைய என்பாணத்தை ப்ரயோகித்துக் கொன்றுவிடுவேன். அங்ஙனம் உமதாஶ்ரமத்திலுள்ள மிருகங்களைக் கொல்லுகையில் உமக்கு மனவருத்தம் உண்டாகும். நான் உமக்கு அபராதஞ்செய்தவனுவேன்; அதைக்காட்டிலும் எனக்குக் கஷ்டமென்னிருக்கின்றது? ஆகையால் இவ்வாஶ்ரமத்தில் வெகுகாலம் (அந்த மிருகங்கள் கண்ணிற்படும் வரையில்) இருப்பது எனக்கிஷ்டமாயில்லை' என்றனன். ராமன் இங்ஙனம் அம்முனிவர்க்குச் சொல்லி அவர் அனுமதிகொடுக்கப்பெற்று ஸந்த்யாவந்தனத்திற்காக ஜலக்கரைக்குச் சென்று ஸந்த்யை தீரும்வரையில் அங்கு ஜபஞ் செய்துகொண்டிருந்து பிறகு அழகாயிருக்கின்ற அந்த ஸுதீக்ஷ்ணமாமுனியின் ஆஶ்ரமத்தில் அன்றிரவெல்லாம் ஸீதையோடும் லக்ஷ்மணனேடும்கூட வாஸஞ் செய்தனன். அனந்

தரம் ஸந்த்யை கடந்துபோகையில் ராத்ரியாகக் கண்டு மஹானுபாவராகிய ஸுதீக்ஷ்ணமாமுனிவர் புருஷஶ்ரேஷ்டர்களாகிய ராம லக்ஷ்மணர்களை மிகவும் ஸத்கரித்துத் தாபஸர்கள் புஜிக்கும்படியான மேலான காய் கிழங்கு முதலிய ஆஹாரங்களை அன்றிரவுக்குப் போதுமானவளவு தானே கொண்டுவந்து கொடுத்தனர். ஏழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஸுதீக்ஷ்ணரிடம் அனுமதிபெற்றுக் கொண்டு ராமன் மற்றை ஆஶ்ரமக் குவியலைப் பார்க்க ப்ரயாணமாய்ப் போதல்.

ராமனும் லக்ஷ்மணனும் ஸுதீக்ஷ்ணரால் பூஜிக்கப்பட்டு அவ்வாஶ்ரமத்தில் அந்த ராத்ரிமுழுவதுங் கடத்திப் பொழுது விடிந்தவுடன் விழித்துக்கொண்டனர். ராமன் தகுந்த காலத்தில் எழுந்து ஸீதையும் தானுமாகக் கருநெய்தல் மலர்ந்திருக்கப் பெற்று மணங்கமழ்கின்ற அழகிய தண்ணீரில் ஸ்னானஞ்செய்தனன். அனந்தரம் தபஸ்விகளுக்கு வாஸஸ்தானமாகிய அவ்வரண்யத்தில் பாபமற்றவர்களாகிய ஸீதாராமலக்ஷ்மணர்கள் விடியற்காலத்தில் செய்யவேண்டிய அக்னிகார்யத்தைவிதிப்படி நடத்தி, ஸமஸ்தபரிவாரங்களோடுங் கூடிய தேவதேவனாகிய நாராயணனை உபாஸித்து [1] ஸூர்யன் உதயமாகக்கண்டு ஸுதீக்ஷ்ணமாமுனிவரிடஞ்சென்று இனிய மொழிமொழிந்தனர்:— 'மஹானுபாவரே! யாவரும் பூஜிக்கும்படியான உம்மால் நாங்கள் நன்கு பூஜிக்கப்பட்டு

---

1. இங்கு ஸூர்யன் உதயமாய்க் கொண்டிருப்பதைச் சொல்லுகையால் ஹோமத்திற்குப் பின்பு ஸூர்யோபஸ்தானம் ஏற்படுகிறது. இதனால் உதயத்திற்கு முன்பு ஹோமஞ் செய்யவேண்டுமென்னும் பக்ஷம் ஸூசிப்பிக்கப்பட்டதாகையால் காத்யாயன ஸூத்ரக்ரமமாக ரகுவம்சத்து ராஜாக்களின் அனுஷ்டானமென்று தெரிகின்றது.

ராத்ரிமுழுவதும் ஸுகமாக வஸித்திருந்தனம். உம்மிடம் சொல்லி விடைபெற்றுக்கொண்டு போக வந்தனம். நாங்கள் புறப்பட்டுப்போகிறோம். எம்மைப் பின்றொடர்ந்து வந்தமுனிவர் எங்களை த்வரைப்படுத்துகின்றனர். இத்தண்டகாரண்யத்தில் வாஸஞ்செய்கிற புண்யசீலர்களாகிய ரிஷிகளின் ஆஸ்ரமங்களையெல்லாம் பார்க்க மிகவும் விரும்புகின்றனம். பரமதார்மிகர்களும் மஹாதபஸ்ஸம்பன்னர்களும் ஜிதேந்த்ரியர்களும் ஜ்வாலையில்லாத அக்னிகள்போல் மஹிமை மறைந்திருக்கப்பெற்றவருமாகிய இம்முனிஸ்ரேஷ்டர்களும் நாங்களும் உமது அனுமதியை எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றனம். துஷ்குலத்தில் பிறந்து ஸாதுக்களின் ஸஹவாஸமில்லாத ப்ரபு அந்யாயமாக ஐஸ்வர்யத்தை ஸம்பாதித்துக்கர்வப்படுவது போல், ஸூர்யன் வெகுதூரம் வளர்ந்து வந்து பொறுக்கமுடியாத வெய்யிலைக் காய்ந்துகொண்டு மேன்மேலென எரியப்போகின்றனன். அதற்கு முன்னமே புறப்பட்டுப்போக விரும்புகின்றோம்' என்று ராமனும் ஸீதையும் லக்ஷ்மணனும் அம்முனிவரது பாதாரவிந்தங்களில் நமஸ்காரஞ் செய்தனர். அம்முனிவரும் தம் அடிகளில் வீழ்ந்து வணங்குகின்ற அந்த ராமலக்ஷ்மணர்களை எழுந்திருக்க எடுத்து ஸ்னேஹம் மிகப்பெற்று வாரியணைத்துக்கொண்டு 'ராமா! லக்ஷ்மணனோடும் உடல்நிழல்போல் பின்றொடர்ந்து வருகின்ற ஸீதையோடும்கூடிப் போவாயாக. உனக்கு வழி உபத்ரவமின்றி ஸுகமாயிருக்குமாக. வீரர்களில் தலைவனே! தவத்தினால் ஆத்மத்யானத்தில் மனம் ஆழங்கால்படப் பெற்றுத் தண்டகாரண்யத்தில் வஸிக்கின்ற இம்மஹர்ஷிகளது ரமணீயமான ஆஸ்ரமங்களைக் காண்பாயாக. அங்குள்ள வனங்கள் காய்கிழங்குகள் மிகவும் ஸம்ருத்தமாயிருக்கப் பெற்றுப் புஷ்பித்திருக்கும். அவைகளில் மிகவும் புகழ்த்

தக்கவைகளான மிருகங்கள் பலவும் குவியல் குவியலாயி ருக்கும். பறவைக்கூட்டங்களும் ஒன்றுக்கொன்று விரோ தமின்றிச்சாந்தமாயிருக்கும். மேலும், அதிலுள்ள மடுக் களும் குளங்களும் தாமரையோடைகளும் புஷ்பித்து அழகாயிருக்கும், ஜலங்களும் அழுக்கின்றி லேசாயிருக் கும். அவைகளில் நீர்க்கோழிகள் நிரம்பியிருக்கும். பார்க்க மனோஹரங்களான மலையருவிகளும் மயில்கள் கேகா என்று கூவப்பெற்ற அழகிய பற்பல அரண்யங் களும் அங்கிருக்கின்றன. இவை யெல்லாவற்றையும் நீ பார்க்கலாம். குழந்தாய்! லக்ஷ்மணா! நீ புறப்பட்டுப் போவாயாக. ராமா! நீயும் போகலாம். என்னப்பனே! மறுபடியும் ஒருதடவை எனது ஆஸ்ரமத்திற்குத் தப்பா மல் வரவேண்டும்' என்றனர். முனிவர் இங்ஙனம் மொழி கையில் ராமன் அப்படியே ஆகட்டுமென்று லக்ஷ்மண னோடுகூட அம்முனிவரை ப்ரதக்ஷிணஞ் செய்து ப்ரயா ணமாகத் தொடங்கினன். [1] அனந்தரம் அகன்றழகிய கண்களையுடைய ஸீதாதேவியும் அவ்வண்ணன் தம்பி களிருவர்க்கும் மிக மேலான அம்பறாத் தூணிகளையும் தனுஸ்ஸுக்களையும் தளதளவென்று ப்ரகாசிக்கின்ற பிடிகளையுடைய கூரான கத்திகளையும் எடுத்துக் கொ டுத்தனள். ராமலக்ஷ்மணர்களிருவரும் அம்பறாத் தூணிகளைத் தோளில் கட்டி, விளங்குகின்ற விற்களைக் கையில் பிடித்து, ஆஸ்ரமத்தினின்றும் ப்ரயாண

1. இதனால் தோற்றுகிற அர்த்தமென்னவென்றால் ஆஸ்ரமத் தில் ப்ரவேசிக்கும்பொழுது நமக்கு ஆயுதங்களால் கார்யமென் னென்று நினைத்து ஸீதை அவைகளை ஒரிடத்தில் வைத்திருந்தனள். ஆனால் ராமன் 'அந்யாயமார்க்கத்தினால்' என்று சொன்ன வார்த்தை யையும் ரிஷி 'மார்க்கம் நிருபத்ரவமாயிருக்குமாக' என்ற வார்த்தை யையும் கேட்டு அவர்களது அபிப்ராயத்தை அறிந்து தானே அவை களைக் கொண்டுவந்து மீளவுங் கொடுத்தாளென்று தெரிகின்றது.

மாய்ப் புறப்பட்டனர். லக்ஷ்மீவிலாஸம் பொருந்தி, மிகுந்த ஸௌந்தர்யமும் அமைந்து, தமது தேஹகாந்தியால் விளங்கும் வில்லாளிகளாகிய அந்த ராமலக்ஷ்மணர்களிருவரும் ஸீதையோடுகூட ப்ரயாணமாய்ப் போயினர். எட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராமன் முனி ஜனங்களின் முன்னிலையில் ஸமஸ்த ராக்ஷஸர்களையும் வதிக்கிறேனென்று ப்ரதிஜ்ஞை செய்தல்.

[1] ஸுதீக்ஷ்ணமாமுனிவரிடம் அனுஜ்ஞை பெற்றுப் புறப்பட்ட தன் பர்த்தாவாகிய ராமனைப்பார்த்து ஸீதை மனத்துக்கினிதாக [2] ஸ்னேஹம் பொழிகின்ற வார்த்தையுடன் இங்ஙனம் மொழிந்தனள்:—'நீ அனுஷ்டிக்

---

1. ஸீதை ஆயுதங்களைத் தரித்து ஸந்நாஹத்துடனிருக்கின்ற பர்த்தாவைப்பார்த்து 'நீ ஆயுதங்களைத் தரித்து ராக்ஷஸர்கள் மிகுந்திருக்கும் தேசத்தில் போனால் அவர்களோடு உனக்கு விரோதம் நேர்ந்து அவர்களோடு யுத்தஞ்செய்யப்போக, நமக்கு வியோகம்உண்டாகும். அதனால் உனக்கு மிகவும் வருத்தம் உண்டாகும். ஆகையால் ஆயுதங்களை இங்கேயே வைத்துவிட்டு நாம் வெறுமனே வனத்திற்குப்போகத்தகும்' என்று இந்த ஸர்க்கத்தில் சொல்லுவதாகத் தெரிகின்றது. கோவிந்தராஜர், 'கேவலம் பித்ருவசனபரிபாலனஞ்செய்ய வேண்டிய என் ஸொந்த கார்யத்திற்காகவே அரண்யத்திற்கு வர வேண்டியதாயிருக்கிறது. வந்த இடத்தில் ராக்ஷஸர்களால் உங்களுக்கு நேரும் உபத்ரவத்தை நீக்குவதும் கைகூடிற்று' என்று முனிவர்களுக்கு ராக்ஷஸவதத்தை ப்ரதிஜ்ஞை செய்கின்ற பர்த்தாவைப் பார்த்து ஸீதை அஹிம்ஸையே பரமதர்மமென்னும் ந்யாயத்தின்படி, தன் பர்த்தா ஹிம்ஸையை விடும்படி செய்வதற்கு லோகத்ருஷ்டாந்தத்தை முன்னிட்டுச் சொல்லுகிறாள்' என்று மஹேச்வரதீர்த்தர்.

2. 'ஹ்ருத்யயா ஸ்நிக்தயா வாசா' (ஸ்நிக்தயா) ஸ்னேஹம் நிறைந்த - ஸ்னேஹத்தின் மிகுதியாலுண்டான - (வாசா) வார்த்தையால், இதனால் ஸீதை சொல்லப்போகிறதெல்லாம் ராமனிடத்திலுள்ள ஸ்னேஹத்தைப்பற்றியேயென்று தெரிகின்றது. ராமன்

கிற இம்முனிதர்மம் மிகவும் பெரிதாயிருப்பது. தர்மத்தில் விருப்பமுடையவர் மிகவும் ஸூக்ஷ்மமான மார்க்கத்தில் சென்று விசாரித்து இதைச் சம்பாதிக்கின்றனர். அந்த மார்க்கந்தானும் மற்றென்றுமன்று. தத்தமது இஷ்டப்படி செல்லுந் தன்மையாகிய காமத்தினலுண்டாகும் வ்யஸனங்களைத் தொலைக்கையேயாம். அந்த வ்யஸனங்களைத் துறந்தவனுக்கு இதைச் சம்பாதிப்பது ஸாத்யமாகும். காமத்தின் மிகுதியாலுண்டாகிற அந்தவ்யஸனங்கள் இவ்வுலகத்தில் மூன்றே உள்ளன. அவையாவையெனில், எல்லாவ்யஸனங்களைக்காட்டிலும் பொய்யுரைப்பது பெரும் வ்யஸனம். பரதாரகமனம், பகையின்றி ஹிம்ஸைசெய்தல் ஆகிய இவ்விரண்டும் அதைக்காட்டிலும் பெரியனவாயிருப்பவை. ரகுகுலாலங்காரனே! நீ இதுவரையில் என்றும் பொய்யுரைத்தவனல்லை. இனிமேலும் பொய்யுரைக்கமாட்டாய். அதர்மத்தை விளைப்பதாகிய பரதாராபிலாஷம் (பிறர் மனைவியை விரும்புதல்) உனக்கு ஏது? புருஷஶ்ரேஷ்டனே! பிறர் மனைவியை விரும்புதல் மாத்ரம் உனக்கு இப்பொழுதும் இல்லை; இதற்கு முன்பு எப்பொழுதும் உனக்கு உண்டாகவில்லை, ராமா! இனிமேலும் மனத்திலுங்கூட உனக்கு அது எந்த ஸ்த்ரீயினிடத்திலும் ஒருகாலும் உண்டாகாது. அவர்களிடத்தில் விருப்பமே இல்லாமலிருக்க, அவர்களிடஞ் செல்வதென்பது ஏது? இதற்கு உன்னிடத்தில் காரணங்கள்பலவும்உண்டு. ராஜ

---

ரிஷிகளுக்கு ப்ரதிஜ்ஞை செய்திருப்பதும், ராமன் ப்ரதிஜ்ஞையை விடுத்த முடியாதென்பதும் ஸீதை பல தடவை கண்டுகொண்டவளாயினும் ராக்ஷஸர்களோடு விரோதம் நேரும்பொழுது பர்த்தா தன்னை விட்டுப் பிரிவதனல் பெரிய வருத்தம் நேருமென்று ப்ரீதியின் மிகுதியால் ஒன்றும் தோற்றுமல் சொன்னளென்று தெரிகின்றது.

குமாரனே! நீ எப்பொழுதும் ஸ்வபார்யையிடத்தி லேயே மிகுந்தகாதலுடையவன்; பரமதார்மிகன்; ஸத்ய ஸந்தன். ஆனதுபற்றியே தந்தையின் ஆஜ்ஞையைச் சிறிதும் தவருமல் நிறைவேற்றினே. உண்மையான ப்ரதிஜ்ஞையுடையவனே! மஹாதர்மஸ்வபாவனே! செல் வம் நிறைந்தவனே! லக்ஷ்மணனுக்குத் தமையனே! நீ வைராக்யத்தில் லக்ஷ்மணனைக் காட்டிலும் மேலாயிருப் பவன். உன்னிடத்தில் ஸத்யம் நிலைநின்றிருக்கின்றது. தர்மமும் குடிகொண்டிருக்கின்றது. ஆயிரஞ்சொல்வி யென்? ஐஸ்வர்ய வைராக்யாதியான எல்லாக்குணங்களும் உன்னிடத்தில் நிலைபெற்றிருக்கின்றன. நீண்ட புஜ தண்டங்களையுடையவனே! அப்படிப்பட்ட பரமதார் மிகத்வம் ஸத்யஸந்தத்வம் முதலிய குணங்களெல்லாம் ஜிதேந்த்ரியரிடம் இருக்குமேயன்றி மற்றையெவரிடத் திலும் கிடையாவென்று நான் அறிவேன், நீ ஜிதேந்த்ரிய னென்பதும் எனக்குத் தெரியும். இதற்கு அழகியதான உன் உருவமே ப்ரமாணம். பகையில்லாமல் பிறாது ப்ராணன்களை ஹிம்ஸிக்கையே ரௌத்ரமென்னும் மஹா வ்யஸனம். இந்த வ்யஸனத்தைப் பாமரர்கள் தான் அஜ்ஞானத்தால் ஆதரிப்பார்கள். அது இப்பொழுது உனக்குச் செய்ய நேர்ந்திருக்கின்றது. அதெப்படியென் ருல், சொல்லுகிறேன், கேட்பாயாக. வீரர்களில் தலை வனே! நீ தண்டகாரண்யத்தில் வஸிக்கின்ற ரிஷிகளை ரக்ஷிக்கும்பொருட்டு இராக்கதர்களெல்லோரையும் யுத் தத்தில் வதிப்பதாக ப்ரதிஜ்ஞை செய்திருக்கின்றனே. ரிஷிகளின் ப்ரார்த்தனையைப்பற்றியேயன்றி நீ தனக் குத்தானுகவே இதன்பொருட்டுத் தம்பியோடுகூட வில் லையும் பாணங்களையும் தரித்துத் தண்டகமென்னும் இவ் வரண்யத்திற்கு ப்ரயாணமாய் வந்தனே. அனந்தரம் நீ அங்ஙனம் ப்ரயாணமாய் வருவது கண்டும், ப்ரதிஜ்ஞை

தவருதிருத்தல் ஏகபத்னீவ்ரதம் முதலிய உனது நடவடிக்கைகளைக் கண்டும் உனக்கு இந்த ஸங்கடங்கள் தொலைந்து ஸௌக்யம் எப்படி உண்டாகுமென்றும், அதற்கு ஸாதனங்கள் எவையென்றும் ஆலோசித்துக் கொண்டிருக்கையில், என்மனம் மிகவும் சிந்தையில் ஆழ்ந்து வருந்துகின்றது. மஹாவீரனே! தண்டகாரண்யத்திற்குப் போகும் விஷயத்தில் எனக்கு இஷ்டமில்லை. அதற்குக் காரணம் சொல்லுகிறேன்: அங்ஙனம் சொல்லுகிற என் வார்த்தையைக் கேட்பாயாக. வில்லையும் பாணங்களையும் தரித்துத் தம்பியோடு கூட வனத்திற்கு வந்த நீ, வனத்தில் திரிகின்ற இராக்கதர்களைக் காணும் பொழுது அவர்களெல்லோரையுங் குறித்து பாணங்களைத் தொடுத்து விடுவாயல்லவா? அக்னியினருகில் காஷ்டங்களிருக்குமாயின், அதன் தேஜஸ்ஸின் வலிவு மேன்மேலும் வளர்ந்து வரும். க்ஷத்ரியர்களின் ஸமீபத்தில் தனுஸ்ஸிருக்குமாயின், அவர்களுடைய தேஜோபலம் மிகவும் வ்ருத்தியாகும். இதற்கு ஒரு கதை கேட்பாயாக. மஹாபாஹுவே! முன்பு ம்ருகங்களும் பக்ஷிகளும் மிகவும் களிப்புற்று ஸஞ்சரிக்கப்பெற்ற ஒரு புண்ய வனத்தில் ஸத்யவாதியும் பரிசுத்தருமாகிய ஒரு முனிவர் தவஞ்செலுத்திக்கொண்டிருந்தனராம். பிறகு சசிபதியாகிய இந்த்ரன் அம்முனிவரது தவத்தைக் கெடுப்பதற்கே முயன்று ஒரு போர்வீரன்போல் வேஷந்தரித்துக் கத்தியைக் கையில் பிடித்து அவரது ஆஸ்ரமத்திற்கு வந்தனன். அங்ஙனம் வந்து, அவ்வாஸ்ரமத்தில் பரிசுத்தமாகத் தவஞ்செய்து கொண்டிருக்கிற அம்மஹர்ஷியிடம் மிகவுங் கூருடைய அம்மேலான கத்தியைக் காப்பாற்றி வைத்திருக்கும்படி சொல்லிக் கொடுத்துவிட்டுப் போயினன். அம்முனிமன்னவர் தன்னிடம் அடைக்கலமாக வைத்த அதைக்காப்பாற்றுவதில் மிக்க மனவூக்கமுடையவராகித் தன்னிடத்

தில் நம்பிக்கையுடன்கொடுத்த அந்தக்கத்தியைப் பத்ர மாகப்பாதுகாத்துக்கொண்டே அரண்யத்தில் திரிந்து கொண்டிருந்தனர். அவர் தன்னிடத்தில் வைத்த வஸ்து வைக் காப்பாற்றிக்கொடுப்பதில் மனவூக்கமுடையவரா கிக்காய்கிழங்குகளைக்கொண்டுவர எங்குப்போனபோதி லும் அந்தக்கத்தியை விட்டுப்போகிறதில்லை. அம் மஹர்ஷி இங்ஙனம் எப்பொழுதும் ஆயுதத்தைத் தரித்து வருகையில் அவர் நாளுக்கு நாள் க்ரமமாகத் தவத் தில் நிச்சயத்தைத்துறந்து ஆயுதத்தைப் பிடித்துத் திரியுந்தன்மையர்க்குண்டாகக்கூடிய ஹிம்ஸாரூபமான ரௌத்ரபுத்தியைத் தன்னிடம் ஏற்றுக்கொண்டனர். அனந்தரம் அம்முனிவர் அவ்வாயுதத்தோடுள்ள ஸம்பந் தத்தினல் ஹிம்ஸாவியாபாரங்களில் ஆழங்கால்பட்டு மதிமயக்கமுற்று அதர்மத்தால் பீடிக்கப்பட்டுக் கடைசி யில் நரகத்தை அடைந்தனர். ஆயுதத்தைப் பிடிப்பத ஞல் முன்பு இப்படிப்பட்ட வ்ருத்தாந்தம் நடந்ததென் பர்கள். அக்னிஸம்பந்தம் எப்படியோ அப்படியே ஆயுத ஸம்பந்தமும் விகாரத்திற்குக் காரணமென்று பெரி யோர் சொல்லுவார்கள். எனக்கு உன்னிடத்திலுள்ள ஸ்னேஹத்தினுலும் உனக்கு என்னிடத்திலுள்ள கௌ ரவத்தினுலும் உனக்குத் தெரிந்த விஷயத்தையே ஜ்ஞாபகப்படுத்தினேனன்றி உனக்குத் தெரியாததைத் தெரியச் சொல்லவில்லை. நீ தண்டகாரண்யத்திலுள்ள ராக்ஷஸர்களைப் பகையின்றி வில்லைப் பிடித்துக் கொல் லும் புத்தியை எவ்விதத்திலும் கொள்ளலாகாது. வீரர் களில் தலைவனே! அபராதமின்றி வீணுக ப்ராணிகளை அழிப்பதை நான் விரும்பமாட்டேன். 'அப்படியாயின் க்ஷத்ரியனுக்கு வில்லைத் தரிக்க வேண்டிய அவஸ்யமில் லாமற்போகும்' என்கிருயோ? அரண்யத்தில் வஸிக்கிற

முனிவர் முதலானவர்கள் பீடிக்கப்படுவார்களாயின், அவர்களுக்குப் பீடை செய்பவர்களை அதட்டி அப்புறம் போகத்துரத்தி அவர்களைக் காப்பாற்றுவதே வீரர்களான க்ஷத்ரியர்களுக்கு வில்லைக்கொண்டு செய்ய வேண்டுங் கார்யமேயன்றிப் பாதை செய்யாதவர்களையெல்லாம் பிடித்து ஹிம்ஸிப்பது கார்யமன்று. 'அப்படி காப்பாற்றுவதற்காயினும் வில்லு வேண்டாமா' என்கிருயோ? அது ராஜ்யத்தை ஆளும்பொழுதன்றோ தகுந்தது. ஆயுதமெங்கே? அரண்யமெங்கே? க்ஷத்ரியதர்மமெங்கே? தவமெங்கே? இவையெல்லாம் ஒன்றுக்கொன்று பொருந்தாதிருப்பவை, ஆகையால் நாம் தேசத்திற்குத் தகுந்த தர்மத்தையே பாராட்டவேண்டும். இவ்வரண்யத்திற்குத் தவமே தகுந்தது. ஆகையால் அதையே செய்யவேண்டுமன்றி ஆயுதமாவது க்ஷத்ர தர்மமாவது இங்குத் தகாது. பெரியோனே! யாவரும் பூஜிக்கத்தகுந்தவனே! ஆயுதம் பிடிப்பதனல் புத்திக்குக் கெடுதி உண்டாகும். ஆகையால் அதை விட்டுத் தவம் செய்வாயாக. வேண்டுமானல் மீளவும் அயோத்யைக்குப் போன பின்பு அங்கு க்ஷத்ரியதர்மத்தை ஆசரிக்கத்தகும். இங்குத் தவஞ்செய்வதனல் மற்றெரு பலனும் உண்டாகும். நீ இனி எப்பொழுதும் ராஜ்யமே வேண்டாமென்று கைவிட்டு என்றும் முனிவனுகவே யிருப்பாயாயின், மாமியாரான கைகேயிக்கும் மாமனுரான தசரதருக்கும் அழிவில்லாத ஸந்தோஷம் உண்டாகும். உன்புத்தியும் கலக்கமில்லாமலேயிருக்கும். தர்மத்தினுல் அர்த்தம் உண்டாகும்; தர்மத்தினுல் ஸுகம் விளையும்; ஆயிரஞ்சொல்லியென்? தர்மத்தினுலேயே எல்லா நன்மைகளையும் பெறலாம். ஆகையால் இந்த ப்ரபஞ்சத்திற்கெல்லாம் தர்மமே முக்யம். தர்மத்தைச்

சம்பாதிக்கும் விதம் இது. நிபுணராயிருப்பவர் பல வகை ப்ரயத்னங்களும்பட்டுச் சாந்த்ராயணம் முதலிய அந்தந்த விரதங்களால் தேஹத்தை இளைக்கச்செய்து தர்மத்தைப் பெறுகின்றனர். என்றும் ஸுகத்தினல் ஸுகம் கிடைக்காது. அழகிய ஸ்வபாவமுடையவனே! ஆகையால் நித்யமும் தபோவனத்திலிருந்து மதி நிர்மலமாயிருக்கப் பெற்றுத் தர்மத்தை ஆசரிப்பாயாக. மூன்றுலோகங்களிலுமுள்ளவை யனைத்தும் உனக்கு உள்ளபடி தெரிந்திருக்கின்றன. உனக்குத் தெரியாதது ஒன்றுமே யில்லை. பெண்பிள்ளைக்குள்ள சாபலத்தினல் நான் அதை உனக்குச் சொல்லிக்காட்டினேனன்றி எல்லாந் தெரிந்த உனக்குத் தர்மம் உபதேசிக்க வல்லவன் எவன்? நீ உன் புத்தியையேகொண்டு லக்ஷ்மணனுடன் கலந்து நன்காலோசித்து எது இஷ்டமோ அதைச் செய்வாயாக. தாமதஞ் செய்யவேண்டாம்' என்றனள். ஒன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராமன் ஸீதாலக்ஷ்மணர்களோடு அகஸ்த்யாஸ்ரமஞ்சேருதலும், முன்பு தன் வரவைத் தெரிவிக்கும்பொருட்டு ரிஷியிடம் லக்ஷ்மணனை அனுப்புதலும்.

ஸீதை பர்த்தாவிடத்திலுள்ள ப்ரேமத்தினல் இங்ஙனஞ் சொன்னவார்த்தையைக் கேட்டும், ராமன் தர்மத்தை எள்ளளவும் தவருதவனுகையால் அவளைப் பார்த்து மொழிந்தனன்:— தேவீ! நீ தர்மங்களையறிந்தவள். மேலும் ஜனகராஜன் புதல்வி. உனக்கு என்னிடத்திலுள்ள ஸ்னேஹத்திற்குத் தகுந்தபடி ஹிதமான வார்த்தையைச் சொல்லினை. அந்த வார்த்தைகளாலேயே உன் பெருங்குலத்தை வெளியாக்கினை, 'நான் சொன்னது ஹிதமென்று ஒப்புக்கொள்வாயாயின் அப்படியே செய்யலாம்' என்கிருயோ? தேவீ! அதற்கு நான்

சொல்லுகிறேன். ஜனங்கள் வருந்தி ஐயோவென்று முறையிடலாகாதென்று க்ஷத்ரியர்கள் வில்லைத் தரித்திருப்பார்களென்ற இவ்வசனத்தை நீயே மொழிந்தாயல்லவா? ஸீதே! கொடிய நியமங்களைச் செய்பவர்களும் தண்டகாரண்யவாஸிகளுமாகிய மஹர்ஷிகள் தவமஹிமையால் எல்லோரையும் காக்கவல்லவராயிருந்தும் க்ரூரர்களாகிய இராக்கதருக்குப் பயந்து தாமே என்னிடம் வந்து என்னைச் சரணம் புகுந்தனர். அவர்கள் வருத்தமுற்றவரல்லரோ ? அவர்களை நான் ரக்ஷிக்கவேண்டுமல்லவா? அம்முனிவர்கள் தர்மத்தில் நிலைநின்று அரண்யத்திலுள்ள காய்கிழங்குகளை ஆஹாரமாகக் கொண்டிருக்கின்றனர். அங்ஙனமிருந்தும் கொடுஞ்செயலுற்ற இராக்கதருக்குப் பயந்து ஸுகப்படாதிருக்கின்றனர். மனுஷ்ய மாம்ஸத்தைத் தின்று வலிவுற்றவர்களாகிய இராக்கதர்கள், அரண்யத்தில் எப்பொழுதும் பலவகை விரதங்களைச் செய்துகொண்டு காலங்கழிக்கின்ற முனிவர்களைப் பிடித்துப் பக்ஷிக்கின்றனர். தண்டகாரண்யத்தில் வஸிக்கிற ப்ராஹ்மணோத்தமர்களாகிய அந்த முனிவர்கள், அங்ஙனம் இராக்கதர் பக்ஷிக்கையில் அதைப் பொறுக்கமுடியாமல் என்னிடம் வந்து 'எங்களை அனுக்ரஹிக்கவேண்டும்' என்று வேண்டிக்கொண்டனர். நான் அவர்கள் சொன்ன வார்த்தையைக் கேட்டு அவரது பாதங்களுக்கு வந்தனஞ்செய்து 'நீங்கள் என்னைப் பொறுத்தருளவேணும். நானே உங்களிடம் வந்து பணி செய்யவேண்டியவன். இங்ஙனம் மஹனீயர்களாகிய நீங்களே என்னிடம் வந்து வேண்டுகிறீர்களென்பது எனக்கு மிகவும் லஜ்ஜையை விளைக்கின்றது. நான் என்ன செய்யவேண்டும்; சொல்வீர்களாக' என்று அந்த ப்ராஹ்மணர்களது முன்னிலையிலேயே இவ்வார்த்தை மொழிந்தனன். அனந்தரம் அவர்கள் அனைவரும் ஒன்றுசேர்ந்து என்னைப் பார்த்து 'ராமா! தண்ட

காரண்யத்தில் காமரூபிகளான இராக்கதர்கள் பலர் வந்து எங்களைப் பீடிக்கின்றனர். அந்தப் பாதை இல்லாதிருக்கும்படி எங்களை ரக்ஷிக்கவேண்டும். தோஷமற்றவனே! அவ்விராக்கதர்கள் எத்தகையர்க்கும் எவ்விதத்திலும் எதிர்க்க முடியாத மஹாசூரர்கள். அப்படிப்பட்டவர்களை யெதிர்ப்பது எள்ளளவும் எங்களுக்குத் தரமன்று. அவர்கள் மாம்ஸத்தை ஆஹாரமாகக் கொள்பவர். மேலும். ஹோமஸமயத்திலும் தர்ஶபூர்ணமாஸாதி காலங்களிலும் நாங்களிருக்குமிடம் தேடிவந்து எங்களை ஹிம்ஸிக்கின்றனர். இராக்கதர்களால் பலவகையிலும் பீடிக்கப்பட்டுச் சோகிக்கத் தகுந்திருக்கின்ற ரிஷிகளெல்லோரும் தம்மைக் காக்குங்கதியைத் தேடுகின்றனர். அப்படிப்பட்ட எங்களுக்கு நீயே மேலான கதியாயிருக்கின்றனே. ஆமாம். நாங்கள் எமது தவமஹிமையாலேயே இராக்கதர்களைக் கொல்ல வல்லவரே. ஆயினும் வெகுகாலம் கஷ்டப்பட்டு ஸம்பாதித்த தவமெல்லாம் பாழாய்விடுகின்றதே. ஆகையால் அங்ஙனம் செய்ய விரும்பாதிருக்கின்றனம். ராகவனே! தவஞ்செய்வது மிகவும் கஷ்டம். அதற்கு நித்யமும் விக்னங்கள்பலவும் உண்டு. ஆகையால் இவ்வளவுகஷ்டப்பட்டு நடத்தின தவத்தை அழிக்கப் பொருமல் இராக்கதர் பிடித்துப் பக்ஷித்தபோதிலும் அவர்களைச் சபியாதிருக்கின்றனம். ஆகையால் நீயும் லக்ஷ்மணனும் தண்டகாரண்யவாஸிகளான இராக்கதர்களால் பீடிக்கப்படுகின்ற எங்களைக் காப்பாற்றவேண்டும். வனத்தில் வஸிக்கிற நாங்கள் உன்னையே நாதனாக உடையவர்களல்லவா? வனமும் உன்னுடைய இராச்சியத்தில் அடங்கினதாகையால் அவ்வனத்தில் வஸிக்கிற நாங்களும் உனக்குக்காக்க வேண்டியவர்களே' என்றனர். ஜானகி! நான் அந்த ரிஷிகள்சொன்னதைக்கேட்டுத் தண்டகாரண்யத்தில் அவர்களெல்லோரையும் எல்லாவிதத்திலும் குறைவின்றி

ரக்ஷிக்கிறேனென்று ப்ரதிஜ்ஞை செய்தனன். நான் ப்ரதிஜ்ஞை செய்தபின்பு என்சரீரத்தில் ப்ராணன்கள் உள்ளவரையில் செய்த ப்ரதிஜ்ஞையைத் தவறமாட்டேன். அதிலும் முனிவர்களுக்குச் செய்த ப்ரதிஜ்ஞையைத் திருப்பவல்லனல்லேன். எனக்கு ஸத்யம் ஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும் ப்ரியமாயிருக்குமென்பது உனக்குத் தெரியுமல்லவா? [1] ஸீதே! நான் என் ப்ராணன்களையாயினும் விட்டுவிடுவேன்; இவ்வளவென்ன? உன்னையும் லக்ஷ்மணனையுங்கூடத் துறந்து விடுவேன். ஆனால் எவர்க்காயினும் ப்ரதிஜ்ஞை செய்வேனாயின், அதைமாத்ரம் தவறமாட்டேன். அதிலும் விசேஷித்து ப்ராஹ்மணர்களுக்குச் செய்த ப்ரதிஜ்ஞையென்றால் எள்ளளவும் கைவிடேன். ஸீதே! ஆகையால் ரிஷிகள் என்னுடன் சொல்லிக்கொள்ளாமற் போயினும் நான்

---

1. 'அப்யஹஞ் ஜீவிதஞ் ஜஹ்யாந் த்வாஂவா ஸீதே ஸலக்ஷ்மணாம்। நது ப்ரதிஞ்ஞாஂ ஸஂஶ்ருத்ய ப்ராஹ்மணேப்யோ விஶேஷத:.' (ஜீவிதம்) 'ஆத்மாநஂஸர்வதா ரக்ஷேத் தாரைரபி தநைரபி' என்று தனத்தைக்காட்டிலும் பத்னியைக்காட்டிலும் மேலாகச் சொல்லப்பட்ட ப்ராணனையாயினும் (ஜஹ்யாம்) விடுவேன். (ஸலக்ஷ்மணாந் த்வாம்) லக்ஷ்மணனோடுகூட உன்னையும், அதாவது 'ஶரீராதா ஸ்வாமூர்த்திராத்மந:' என்று தன் சரீரமாகவே சொல்லப்பட்ட உடன் பிறந்தவனாகிய லக்ஷ்மணனையும் 'அர்தோவா ஏஷ ஆத்மநோ யத்பத்நீ' என்று தன்னுடைய பாதி சரீரமாகச் சொல்லப்பட்ட பத்னியாகிய உன்னையும் விடுவேன்; அன்றி ஒருவர்க்குச்செய்த ப்ரதிஜ்ஞையை எவ்வளவும் விடமாட்டேன். (ப்ராஹ்மணேப்ய:) ப்ரஹ்மவித்தாயிருப்பவர்களுக்குச் செய்த ப்ரதிஜ்ஞையையோ வென்றால் விசேஷித்துத் தவறமாட்டேன். இங்ஙனம் கோவிந்தராஜர். (அப்யஹஞ் ஜீவிதஞ் ஜஹ்யாம்) ப்ராணனையாயினும் விடுவேன். (த்வாஂவா) 'நஜீவேயங் க்ஷணமபி விநா தாமஸிதேக்ஷணாம்' 'ப்ராணேப்யோऽபி ப்ரியஸி' என்றும் என் பிழைப்புக்கு ஹேதுவாகவும் என் ப்ராணனைக்காட்டிலும் மேலாகவும் சொல்லப்பட்ட உன்னையும், [ஸலக்ஷ்மணாம்] லக்ஷ்மணனோடுகூட 'அஹமேவாஹங் ப்ரமிஷ்யாமி லக்ஷ்மணேந கதாங்கதிம்' என்று எவனைவிட்டுப் பிழைத்திருக்கப் போறேனோ அப்படிப்பட்ட லக்ஷ்மணனையும் விடுவேன். அன்றி ப்ரதிஜ்ஞையைமாத்ரம் விடமாட்டேன்,

அவஶ்யம் அவர்களைப் பரிபாலனஞ் செய்யவேண்டும். அங்ஙனமிருக்க, அவர்கள் என்னை ப்ரார்த்தித்திருக்கையில், நானும் ரக்ஷிக்கிறேனென்று ப்ரதிஜ்ஞையும் செய்திருக்கையில், இனிச் சொல்லவேண்டுமோ? குற்றமற்ற ஸ்வபாவமுடையவளே! எனக்கு உன்னிடத்திலுள்ள ஸ்னேஹத்தினாலும் உனக்கு என்னிடத்திலுள்ள நன்மனத்தினாலும் நீ இந்த வார்த்தை மொழிந்தனை. எனக்கு மிகவும் ஸந்தோஷமாயிற்று. எவராயினும் ப்ரியராயிருப்பவர்க்கே ஹிதம் உபதேசிப்பார்களன்றி ப்ரியரல்லாதவருக்கு உபதேசிக்கமாட்டார்களல்லவா? நீ சொன்னவார்த்தை உனது நன்மனத்திற்குத் தகுந்திருக்கின்றது. உன் குலத்திற்கும் அநுரூபமாயிருக்கின்றது. நீ என் ப்ராணன்களைக்காட்டிலும் மேலாயிருப்பவள். ஆயினும் நான் எந்தத்தர்மத்தைச் செய்ய மனத்தில் நினைப்பேனோ அதையே நீயும் ஸங்கல்பிக்கவேண்டும். மற்றது கூடாது' என்றனன். மஹானுபாவனாகிய ராமன் ஜனகராஜன் புதல்வியும் தனதன்பிற்கிடமுமாகிய ஸீதைக்கு இங்ஙனஞ் சொல்லி வில்லைப் பிடித்து நிற்கின்ற லக்ஷ்மணனோடு கூட அழகான தபோவனங்களுக்குப் போகத் தொடங்கினன். பத்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராமன் ஸீதைக்கு, வருந்தினவர்களை ரக்ஷிக்கும்பொருட்டு ராக்ஷஸவதம் அவஶ்யஞ் செய்யவேண்டுமென்றுரைத்தல்.

[1] ராமன் முன்னே நடந்து சென்றனன்; அழகிய இடையுடைய ஸீதை நடுவே நடந்தனள்; அவ்விருவர்க்

---

1 'அக்ரதः ப்ரயயௌ ராமः ஸீதா மத்யே ஸுமத்யமா। ப்ருஷ்ட2 தஸ்து தநுஷ்பாணிர் லக்ஷ்மணோऽநுஜகாம ஹ.' இதில் ப்ரணவார்த்தம் தெளிவாகக் கூறப்பட்டதென்று ஸம்ப்ரதாயம். எப்படியென்றால்—(அக்ரதः) என்ற இதில் (அ) வர்ணம் முதலாயிருக்கை

கும் பின்பு லக்ஷ்மணன் வில்லைப் பிடித்துப் பின்சென்ற னன். அந்த ராமலக்ஷ்மணர்கள் பலவகை மலைச்சாரல்க ளையும் வனங்களையும் அனேகவிதங்களான அழகிய நதி களையும் அந்நதிகளின் மணற்குன்றுகளில் திரிகின்ற ஸா ரஸப்பறவைகளையும் சக்ரவாகங்களையும், ஜலபக்ஷிகள் பலவும் நிறைந்து தாமரை மலரப்பெற்று விளங்குகின்ற குளங்களையும் கூட்டங்கூட்டமாகத் திரிகின்ற புள்ளி மான்களையும் மதித்து மெய்ம்மறந் திருப்பவைகளும் கூரான கொம்புடையவைகளுமாகிய எருமைக்கடாக்க ளையும் பன்றிகளையும் மரங்களைப் பார்த்த உடனேமுறித் துவிளையாடுகின்ற யானைகளையும் பார்த்துக்கொண்டே ஸீதையோடு கூடப் போயினர். அவர்களெல்லோருங் கூடி வெகுதூரம் போய் ஸூர்யன் அஸ்தமிக்கும் ஸம யத்தில் அழகாயிருப்பதும் காற்புறத்திலும் யோஜனை

---

தெரிவிக்கப்பட்டது. (அநீரதஃ ப்ரயயௌ) என்கையால் அர்த்தத் தின் முதன்மை தோற்றுவிக்கப்பட்டது. (ராமஃ) 'ஸத்தாஸம்பாதந ரக்ஷணாதிநா ரமத இதி ராமஃ' (ஸத்தையை உண்டுபண்ணுதல் ரக்ஷித் தல் முதலானவற்றால் ஸந்தோஷிக்கின்றனன்) என்னும் வ்யுத்பத் தியால் காரணத்வமும் ரக்ஷகத்வமும் கூறப்பட்டன. மேலும் 'ரமா ஸம்வஸ்யீ ராமஃ' என்னும் வ்யுத்பத்தியால் ஸ்ரீயஃபதித்வமும் சொல் லப்பட்டது. (ஸுமயீயமா) என்கையால் (ஸ்-உ) என்று ப்ரணவத் தின் இரண்டாவதக்ஷரமான (உ) வர்ணம் தெரிவிக்கப்பட்டது. (மயீயே) என்கையால் (உ)வர்ணம் இரண்டுவர்ணங்களுக்கும் நடுவே யிருக்குமென்று தெரிவிக்கப்பட்டது. (வீதாமயீயே) என்கையால் லக்ஷ்மீ புருஷகாரம் தோற்றுவிக்கப்பட்டது. (லக்ஷ்மணஃ) 'மந ஜ்ஞா நே' 'மநு-அவபோயநே' என்று மகாரத்திற் சொல்லப்பட்ட அஸா தாரணதர்மங்கள் அமைந்திருக்கையும் (யநுஷ்பாணிஃ) என்கையால் லுப்தசதுர்த்தியால் நிரூபிக்கப்பட்ட கைங்கர்யமும் (அநுஜஃாம) என்கையால் அஹங்காரமமகாரங்களை விட்டு அனுசரித்தலும் தோற்று விக்கப்பட்டன. (அநுஜஃாம) என்னும் இந்தப் பதத்தின் கடைசியி லுள்ள மகாரத்தினால் ப்ரணவத்தின் மூன்றாவது வர்ணம் தெரிவிக்கப் பட்டது. இங்ஙனம்தனிஸ்லோகி.

தூரம் விஸ்தாரமுடையதுமாகிய ஒரு தடாகத்தைக் கண்டனர். அதில் தாமரைகளும் நீர்நாகங்களும் நிறைந்திருந்தன. யானைகள் குவியல்குவியலாக நாற்புறத்திலும் அழகாய்த் திரிந்துகொண்டிருந்தன. ஜலத்தில் திரிகிற ஸாரஸப்பறவைகளும் ராஜஹம்ஸங்களும் கலஹம்ஸங்களும் எங்கும் நிறைந்திருந்தன. நிர்மலமான ஜலமுடைய அவ்வழகிய குளத்தினின்றும் கீதவாத்யங்களின் த்வனி செவிக்குப் புலப்பட்டது. ஆனால் அங்கு ஒருத்தனும் புலப்படவில்லை. அனந்தரம் ராமனும் பலசாலியாகிய லக்ஷ்மணனும் குதூஹலமுற்று அந்தத் தாடகத்தைப்பற்றித் தம்முடன்கூட வந்த தர்மப்ருதரென்னும் முனிவரை வினவத்தொடங்கி 'மா முனியே! மிகவும் அற்புதமான இந்த த்வனியைக் கேட்டவுடன் எங்களெல்லோர்க்கும் இதைத் தெரிந்துகொள்ளவேண்டுமென்று மிகவும் குதூஹலமாயிருக்கின்றது. இது வென்? இதை நன்றாகச் சொல்லவேண்டும். ப்ராஹ்மண ஸ்ரேஷ்டரே! நீர் சொல்லவல்லவர். இதைச்சொல்லக்கூடுமாயின், சொல்லக்கூடாத பரமரஹஸ்யமல்லாதிருக்குமாயின், சொல்லுவீராக' என்று வினவினர். தர்மஸ்வபாவராகிய தர்மப்ருதர், ஸ்ரீராமன் சொன்னவார்த்தையைக் கேட்டு அந்தப்பொய்கை உண்டானவிதத்தையும் கீதவாத்யங்களின் த்வனி செவிப்படுவது முதலான மற்றையெல்லாவற்றையும் சொல்லத் தொடங்கினர்:—'ராமா! இந்த ஸரஸ்ஸுக்குப் பஞ்சாப்ஸரமென்று பேர். இது எப்பொழுதும் இப்படியே கீதவாத்யத்வனியோடு விளங்கிக்கொண்டிருக்கும். இதை மாண்டகர்ணியென்னும் மாமுனிவர் தவமஹிமையால் நிருமித்தனர். மாமுனிவராகிய அம்மாண்டகர்ணி தான் படைத்த இந்தத் தடாகஜலத்தில் பதினாயிரமாண்டுகள் வாயு

பக்ஷணஞ்செய்து கொண்டிருந்து மிகவும் தீவ்ரமாகத் தவஞ்செய்தனர். பிறகு அக்னிதேவன் முதலிய ஸமஸ்த தேவதைகளும் மிகவும் வருத்தமுற்று ஒருவர்க்கொருவர் ஒன்றுகூடி 'இம்முனிவர் நமக்குள் ஒருவனுடைய ஸ்தானத்தைப்பெற விரும்புகின்றனர்' என்று தமக்குள் பேசிக்கொண்டு எல்லோரும் மனத்தில் மிகுந்த பயமுற்றனர். அப்பொழுது அத்தேவதைகளெல்லோரும் அசைகின்ற மின்னற்கொடிகள் போல் தளதளவென்ற தேஹகாந்தியுடன் விளங்குகின்ற ஐந்து அப்ஸர மடந்தையர்களை அம்முனிவரது தவத்திற்கு விக்னஞ்செய்யும்பொருட்டுப் போகவிட்டனர். அனந்தரம் அந்த அப்ஸரஸ்த்ரீகள் தேவகார்யஸித்தியின் பொருட்டு அம்முனிவர் ஜீவபரமாத்மஸ்வரூபங்களை யறிந்தவராயினும் அவரைத் திருப்பி மன்மதனுக்கு வசப்படும்படி செய்துவிட்டனர். அவ்வப்ஸரமடந்தையர் ஐவரும் அம்முனிவர்க்குப் பார்யைகளாயினர். இந்தத் தடாகத்தினுள்ளே அவ்வப்ஸரஸ்த்ரீகளுக்கு க்ருஹம் மறைவாக நிருமிக்கப்பட்டிருக்கின்றது. அவ்வண்ணம் அவ்வப்ஸரஸ்த்ரீகளைவரும் இந்த ஸரஸ்ஸிலுள்ள மாளிகையில் ஸுகமாக வஸித்திருந்து தபோபலத்தினால் யௌவனப்பருவத்துடன் ப்ரகாசிக்கின்ற அம்முனிவர்க்கு மனக்களிப்பை விளைத்துக்கொண்டிருக்கின்றனர். அவ்வப்ஸரஸ்த்ரீகள் க்ரீடித்துக்கொண்டிருக்கையில் அவரது பூஷணங்களின் ஒலியோடு கலந்து கீதவாத்யங்களின் த்வனி செவிப்படுகின்றது' என்றனர். ஆத்மவித்தாகிய அந்த தர்மப்ருதர் சொன்ன வார்த்தையைக் கேட்டு மஹாயஶஸ்வியாகிய ராமனும் லக்ஷ்மணனும் 'இது மிகவும் அற்புதமாயிருக்கின்றது' என்று ஒப்புக்கொண்டனர். இங்ஙனம் முனிவர் சொல்லிக்கொண்டிருக்கையில் ராமன் தர்ப்பங்களும் மரவுரிகளும் எங்கும் நிரம்பவும் ப்ரஹ்மதேஜஸ்ஸுடைய பொழிய

வும் பெற்று ஜ்வலிக்கின்ற ஆஶ்ரமஸமூஹத்தைக் கண்டனன். பெரும்புகழுகுகிய ராமன் ஸீதையோடும் லக்ஷ்மணனோடுங்கூடி அவ்வாஶ்ரமங்களில் ப்ரவேசித்து ஸமஸ்த முனிவர்களாலும் அர்க்யம் முதலியன கொடுத்துப் பூஜிக்கப்பட்டு ஸுகமாயிருந்தனன். மஹாஸ்த்ரங்களை யறிந்த ராகவன் அழகுநிறைந்த அவ்வாஶ்ரம மண்டலத்தில் மஹர்ஷிகள் பூஜித்துக்கொண்டிருக்கையில் ஸுகமாயிருந்து அவரவரது ஆஶ்ரமங்களில் முதலில் ஒருதரம் வஸித்திருந்து மீளவும் இரண்டாந்தரம், கீழ் வஸித்திருந்த ஆஶ்ரமங்களுக்கே ராக்ஷஸோபத்ரவத்தைத் தொலைக்கும் பொருட்டுச் சென்று வாஸஞ்செய்தனன். ராமன் ஓராஶ்ரமத்தில் பதின்மூன்றுமாஸங்களும், மற்றோராஶ்ரமத்தில் ஒரு ஸம்வத்ஸரமும், மற்றோராஶ்ரமத்தில் நான்கு மாஸங்களும், மற்றோராஶ்ரமத்தில் ஐந்து மாஸங்களும், மற்றோராஶ்ரமத்தில் ஆறுமாஸங்களும், மற்றோராஶ்ரமத்தில் ஏழுமாஸங்களும், மற்றோராஶ்ரமத்தில் ஒன்றேகால் மாஸமும், மற்றோராஶ்ரமத்தில் முக்கால் மாஸமும், மற்றோராஶ்ரமத்தில் மூன்று மாஸங்களும், மற்றோராஶ்ரமத்தில் எட்டு மாஸங்களும் ஸுகமாக வஸித்திருந்தனன். அங்ஙனம் ராமன் அம்முனிவர்களின் ஆஶ்ரமங்களில் இரண்டு தடவையாக வாஸஞ்செய்து மனக்களிப்புடன் க்ரீடித்துக் கொண்டிருக்கையில்,[1] பத்து ஸம்வத்ஸரங்களாயின. தர்மங்களையுணர்ந்தவனும் ஸ்ரீமானுமாகிய அந்த ஸ்ரீராகவன் ஸீதையும் தானுமாக அவ்வாஶ்ரமங்களையெல்லாஞ்

---

1 சித்ரகூடத்தில் ஐந்து ஸம்வத்ஸரங்களும் இந்த ரிஷிகளின் ஆஶ்ரமங்களில் வரிசையாக எண்ணிப்பார்க்கையில் அறுபதுமாஸங்களும்—அதாவது ஐந்து ஸம்வத்ஸரங்களும் ஆகின்றனவாகையால் மொத்தத்தில் ஆஶ்ரமவாஸம்மாத்ரம் பத்துஸம்வத்ஸரங்கள் ஆகின்றன. இதற்கு முன்பின் காலம் மேற்காண்டத்தில் வெளியாகும்.

சுற்றித் திரிந்து மீளவும் ஸுதீக்ஷ்ணமாமுனியின் ஆஶ்ரமத்திற்கு வந்தனன். சத்ருக்களையடக்க வல்லவனாகிய அந்த ராகவன் அம்முனிவரது ஆஶ்ரமத்திற்கு வந்து சேர்ந்து முனிவர்களால் பூஜிக்கப்பட்டு அவ்விடத்திலும் சிலகாலம் வஸித்திருந்தனன். பிறகு அவ்வாஶ்ரமத்தில் வஸித்திருக்கின்ற ராகவன் ஒருகாலத்தில் விநயத்துடன் அந்த ஸுதீக்ஷ்ணமாமுனியைப்பார்த்து, இவ்வரண்யத்திலேயே பகவானாகிய அகஸ்த்யமாமுனிவர் வாஸஞ்செய்கிறாரென்று நித்யமும் அவரவர் சொல்லிக்கொள்ளும் வார்த்தையால் கேள்விப்பட்டிருக்கின்றனன். இந்த வனம் மிகவும் பெரியது. ஆகையால் அம்முனிவரிருக்கும் ப்ரதேசம் எதுவோ எனக்குத் தெரியாது. புத்தியிற் சிறந்த அம்மஹர்ஷியின் புண்யாஶ்ரமம் எங்கிருக்கின்றது? நீர் அனுக்ரஹஞ்செய்து அவ்விடத்தைச் சொல்வீராயின், நான் ஸீதையோடும் லக்ஷ்மணனோடுங்கூடி அவ்வகஸ்த்யமாமுனிக்கு வந்தனஞ் செய்ய அவ்விடம் போகின்றனன். அம்முனிதிலகர்க்குச் சுஶ்ரூஷை செய்வேனாயின் நலமென்று என்மனத்தில் பெரிய விருப்பமுண்டு' என்றனன். இங்ஙனம் தர்மஸ்வபாவனாகிய ராமன் சொன்ன வார்த்தையைக் கேட்டு ஸுதீக்ஷ்ண மாமுனிவர் ஸந்தோஷமடைந்து அவனைப் பார்த்து 'ராமா! ஸீதையோடுகூட அகஸ்த்யமுனிவரிடம் போவாய்' என்று நானே உனக்கும் லக்ஷ்மணனுக்கும் சொல்லவேண்டுமென்று நினைத்துக்கொண்டிருந்தனன். தெய்வாதீனமாக நீயே இப்பொழுது இவ்விஷயத்தை என்னைக் கேட்டனை. என்னப்பனே! அகஸ்த்யமாமுனிவர் வஸிக்கும்ப்ரதேசத்தை உனக்குச்சொல்லுகிறேன், கேள். இவ்வாஶ்ரமத்தினின்றும் தென்திசையாக நான்குயோஜனை தூரம்போனபின்பு அங்கு அகஸ்த்யருடைய ப்ராதா

வாகிய ஸுதர்ஸனமுனியின் ஆஸ்ரமம் இருக்கின்றது. அவ்வாஸ்ரமம், மிகப்பெரியதும் அழகியதுமாயிருக்கும். மற்றும் அது மிகவும் கட்டாந்தரையாகிப் புஷ்பங்களும் காய்களும் வெகுவாயிருக்கவும் பலவகைப் பறவைகள் குலாவவும்பெற்று, மிகவும் அழகாகித் திப்பிலிக் காடுகள் நிறைந்து விளங்குகின்ற ஒரு வனப்ரதேசத்தில் இருக்கின்றது. அதில் தாமரையோடைகள் பலவும் தெளிந்தழகிய ஜலம் நிரம்பப்பெற்று விளங்கும். அவ்வோடைகள் ஹம்ஸங்களும் நீர்க்கோழிகளும் சக்ரவாகங்களும் விளங்கப்பெற்றிருக்கும். ராமா! அவ்வாஸ்ரமத்தில் ஓரிரவு வஸித்திருந்து உதயமானவுடன் எழுந்து போவாயாக. அங்கிருந்து தென்திசையாகவே வனஸமூஹத்தின் பக்கத்துவழியாக ஒருயோஜனைதூரம் போகையில் அங்கு அகஸ்த்யாஸ்ரமம் இருக்கின்றது. அங்குப் பலவ்ருக்ஷங்கள் நிறைந்து அழகாய்விளங்குகிற வனப்ரதேசத்தில் நீயும் ஸீதையும் லக்ஷமணனும் க்ரீடித்துக்கொண்டிருப்பீர்கள். அவ்வனப்ரதேசம் பலவ்ருக்ஷங்கள் நிறைந்திருக்குமாகையால் மிகவும் அழகாயிருக்கும். அப்பனே! பெரும்புகழனே! உனக்கு அவ்வகஸ்த்யமாமுனியைப் பார்க்க வேண்டுமென்னும் விருப்பம் உளதாயின் இப்பொழுதே அவ்விடம் போக எண்ணங்கொள்வாயாக' என்றனர். இங்ஙனம் அம்முனிவர் மொழிந்ததைக் கேட்டு ராமன் லக்ஷமணனோடுகூட அம்மஹர்ஷிக்கு நமஸ்காரஞ்செய்து பிறகு தம்பியோடும் ஸீதையோடும் அகஸ்த்யாஸ்ரமத்தைக் குறித்து ப்ரயாணமாய்ப் போயினன். ராமன் மார்க்கத்திலுள்ள அழகான வனங்களையும் மேகம்போன்ற பர்வதங்களையும் குளங்களையும் மார்க்கவசத்தினால் தொடர்ந்து வருகிற நதிகளையும் பார்த்துக்கொண்டு ஸுதீக்ஷ்ணமுனிவர் சொன்ன வழியின்படி ஸுகமாகப்போய் மிகுந்த ஸந்தோஷத்துடன் லக்ஷமணனைப் பார்த்து இவ்வாக்யத்தை மொழிந்தனன்:—'மஹானுபாவரும் புண்ய கர்மங்களை அனுஷ்டிக்குந் தன்மையரும் அகஸ்த்ய முனியின்

ப்ராதாவுமாகிய ஸுதர்சனமுனியின் ஆஸ்ரமம் இது வே. இது நிச்சயம். ஸுதீக்ஷ்ணமுனிவர் எனக்கு அடையாளஞ் சொன்னபடியே வழியில் பற்பல வ்ருக்ஷங்கள் புஷ்பங்களுடையவும் பழங்களுடையவும் பாரங்களால் வணங்கித் தோற்றுகின்றன. மேலும், இவ்வனத்தினின்று நன்றாகப் பழுத்திருக்கிற திப்பிலிப்பழங்களின் காரமான வாஸனை காற்றினால் வீசப்பட்டு இதோ வருகின்றது. ஆங்காங்கு ரிஷிகள் ஸித்தப்படுத்தி வைத்திருக்கிற கட்டைகள் ராசிராசியாகப் புலப்படுகின்றன. வழியில் ரிஷிகளால் அறுத்து உலர்த்தப்பட்டு வைடூர்ய மணிகளின் வர்ணம்போன்ற வர்ணமுடைய தர்ப்பங்களும் காணப்படுகின்றன. இவ்வனத்தினிடையில் இதோ கறுத்த மேகத்தின் நுனிபோல் ஆஸ்ரமத்திலுள்ள அக்னிகளினின்றும் கிளம்பின புகையின் நுனி நன்றாகத் தெரிகின்றது. ப்ராஹ்மணர்கள் பரிசுத்தமான அந்தந்த தீர்த்தங்களில் ஸ்நானஞ்செய்து தாமே புஷ்பங்களைப் பறித்துக்கொண்டு வந்து புஷ்பபலி கொடுக்கின்றனர். அழகிய ஸ்வபாவமுடையவனே! ஸுதீக்ஷ்ணர் சொன்ன வார்த்தைகளின்படியே அகஸ்த்யமாமுனிவரது தம்பியின் ஆஸ்ரமம் இதுவே. நிச்சயம். அம்முனிவரது உடன் பிறந்தவரும் புண்யகர்மாவுமாகிய அகஸ்த்யர் உலகங்களின் ஹிதத்தை விரும்பித் தபோமஹிமையால், தனக்கு இல்வல வாதாபிகளால் நேரிட்ட மரணத்தையுங்கூடத் தடுத்து இல்வல வாதாபிகளை உருமாய்த்து இந்தத் தென்திசையை வாஸயோக்யமாகச் செய்தனர். இங்கு முன்னம் ஒரு காலத்தில் இல்வலனென்றும் வாதாபியென்றும் அண்ணன் தம்பிகளான இரண்டு மஹாஸுரர்கள் ப்ராஹ்மணர்களை ஹிம்ஸித்துக்கொண்டிருந்தனர். இல்வலன் தயையின்றி ப்ராஹ்

மணரூபந்தரித்து ஸம்ஸ்க்ருதபாஷை பேசிக்கொண்டு ஶ்ராத்தமென்று சொல்லி ப்ராஹ்மணர்களை அழைப்பான். அனந்தரம் அந்த இல்வலன் ஆட்டு உருவந்தரித்த தன் ப்ராதாவான வாதாபியைச் சமைத்து ஶ்ராத்தஞ் செய்கிற விதிப்படி அந்தப்ராஹ்மணர்களைப் போஜனஞ் செய்விப்பான். பிறகு அந்தப்ராஹ்மணர்களெல்லோரும் புஜித்தாகையில் இல்வலன் 'வாதாபீ! வெளிப்புறப்பட்டு வருவாய்' என்று பெருங்குரலுடன் அழைப்பான். அனந்தரம் வாதாபி இல்வலன் வார்த்தையைக் கேட்டவுடன் ஆடுபோல் கூச்சலிட்டுக்கொண்டு ப்ராஹ்மணர்களின் வயிற்றைக் கிழித்து வெளியே புறப்படுவான். காமரூபர்களும் மாம்ஸாஹாரர்களுமாகிய அவ்விருவரும் இங்ஙனம் ஒன்று சேர்ந்து ப்ரதிதினமும் ஆயிரமாயிரமாக ப்ராஹ்மணர்களை நாசஞ் செய்தனர். அனந்தரம் தேவதைகள் அகஸ்த்யரை ப்ரார்த்திக்கையில், அம்மஹர்ஷி இல்வலனுடைடய [1] நிமந்த்ரணுதிகளுக்கு உட்பட்டு அப்பொழுது ஶ்ராத்தத்தில் மஹாஸுரனுகிய வாதாபியைப் பக்ஷித்துவிட்டனர். பிறகு ஶ்ராத்தம் முடிந்த பின்பு இல்வலன் 'த்ருப்தி ஆயிற்ரு' என்று அகஸ்த்யரைக் கேட்க 'ஆயிற்று' என்று அம்மஹர்ஷி சொல்லுகையில் அவருக்கு உத்தராபோசனங் கொடுத்து ப்ராதாவாகிய வாதாபியை வெளியே புறப்பட்டு வாவென்று க்ரமப்படி கூப்பிட்டனன். முனிவர்களில் தலைவராகிய அந்த அகஸ்த்யர் மிகுந்தமதியுடையவராகையால் அங்ஙனம் ப்ராதாவை அழைக்கின்ற ப்ராஹ்மணகாதுகனுகிய அந்த இல்வலனைப் பார்த்துப் பெருஞ்சிரிப்புடன் 'உன்ப்ராதா ஆட்டின் உருவந்தரித்தவன் என்வயிற்றில் ஜீர்ணித்து யமனதுவீட்டிற்குப்போய்ச்சேர்ந்தனனே! இனி அவன் எப்படி வெளியே புறப்படுவான்? அவனுக்கு வெளிப்படச் சக்தி ஏது?' என்றனர். அனந்தரம் அவ்வில்வலன், ப்ரா

1 நிமந்த்ரணம் - ச்ராத்தத்தில் பித்ராதி ஸ்தானங்களில் இருந்து புஜிக்கும்படி வேண்டுதல்.

தா செத்தானென்று முனிவர் சொன்னவார்த்தையைக் கேட்டுக்கோபித்து அம்முனிவரை ஹிம்ஸிக்கத் தொடங்கினன். அவன் முனிவர்மேல் எதிர்த்து வருகையில் அம்முனிவர் தேஜஸ்ஸு ப்ரகாசிக்க நெருப்புப்போல் தீக்ஷ்ணமான கண்ணுடன் பார்க்கையில் அவன் அவரது நேத்ராக்னியால் நீருகி மரணமடைந்தனன். மடுக்களும் அரண்யங்களும் விளங்கப்பெற்ற இவ்விடம், ப்ராஹ்மணர்களின்மீது தயை கொண்டு இப்படிப்பட்ட துஷ்கரமான கார்யத்தைச் செய்த அகஸ்த்ய மஹர்ஷியின் ப்ராதாவினுடைய ஆஶ்ரமம்' என்றனன். ராமன் இங்ஙனம் லக்ஷ்மணனோடு வார்த்தை சொல்லிக் கொண்டிருக்கையிற்றானே ஸூர்யன் அஸ்தமித்தனன். ஸந்த்யாகாலம் வந்தது. ராமன் லக்ஷ்மணனேடுகூட ஸாயங்கால ஸந்த்யையை விதிப்படி உபாஸித்து அவ்வாஶ்ரமத்தில் ப்ரவேசித்து அம்மஹர்ஷிக்கு நமஸ்காரஞ் செய்தனன். ராமன் அம்மஹர்ஷியால் நன்கு பூஜிக்கப்பட்டு அவர் கொடுத்த காய்கிழங்குகளைப் புசித்து அந்த ராத்ரி முழுவதும் அங்கேயே வஸித்திருந்தனன். பிறகு பொழுது விடிந்து ஸூர்யன் நிர்மலமாக ப்ரகாசித்துக்கொண்டிருக்கையில் ராமன் அகஸ்த்யமுனியின் ப்ராதாவினிடத்தில் 'போய்வருகிறேன்' என்று விடைப்பெற்றுக்கொள்ள முயன்று 'மஹானுபாவரே! உமக்கு நமஸ்காரம். ராத்ரியெல்லாம் இங்கு ஸுகமாயிருந்தனம். உமக்குக் குருவும் அண்ணனுமாகிய அகஸ்த்ய மஹர்ஷியைப் பார்க்கப் போய் வருகிறேன். அனுமதி அளிக்க வேண்டும்' என்றனன். அம்முனிவரும் போய் வருவாயென்று அனுமதிகொடுக்கையில், அந்த ராகவன் அவ்வாரண்யத்தைப் பார்த்துக்கொண்டே ஸுதீக்ஷ்ண முனிவர் சொன்ன மார்க்கத்தின்படி நடந்தனன். ராமன் அவ்வாரண்யத்தில் அனேகமாயிரம் நீவாரமரங்களும் பலாமரங்

களும் பனைமரங்களும் திமிசமரங்களும் மகிழமரங்களும் தவவ்ருக்ஷங்களும் கொன்றைமரங்களும் இலுப்பைமரங்களும் பில்வமரங்களும் திந்துகமரங்களும் ஆகிய அரண்யவ்ருக்ஷங்கள் பலவும் ஒன்று தப்பாமல் நிரம்பவும் புஷ்பித்து நுனியெல்லாம் பூத்த பூங்கொடிகளால் சுற்றப்பட்டு அழகாய் விளங்கக் கண்டனன். அவை யானைத் துதிக்கைகளால் முறிக்கப்பட்டிருந்தன; குரங்குகளால் ப்ரகாசித்துக்கொண்டிருந்தன; மேலும், அவை மதித்த பக்ஷிக்கூட்டங்கள் பலவும் கலகலவென்று குலாவப்பெற்றுச் சப்தித்துக்கொண்டிருந்தன. அனந்தரம் தாமரையிதழ்போன்ற கண்களையுடைய ராமன் வீரனும் தமையனுக்குப் பணிவிடை செய்கையாகிற பெருஞ் செல்வத்தை வளர்த்திக்கொள்பவனும் தன்னைப் பின்றொடர்ந்து வருகின்றவனுமாகிய லக்ஷ்மணனைப் பார்த்து 'வ்ருக்ஷங்களெல்லாம் பச்சென்று விளங்குகிற இலைகள் அமைந்திருப்பதையும் மிருகங்களும் பக்ஷிகளும் சாந்தமாயிருப்பதையுங் காணவே பரமாத்மஜ்ஞானியாகிய அகஸ்த்ய மஹர்ஷியின் ஆஶ்ரமம் ஸமீபத்திலேயே இருப்பதாகத் தோற்றுகின்றது. எவர் விந்த்யபர்வதத்தை ஸ்தம்பிக்கச் செய்யும்படியான தமது கார்யத்தைப்பற்றியே 'அகஸ்த்யர் அகஸ்த்யர்' என்று உலகமெங்கும் ப்ரஸித்தி பெற்றனரோ; அம்மஹாமுனியின் ஆஶ்ரமம் இதோ புலப்படுகின்றது. இது இளைப்புற்றவர்களின் இளைப்பையெல்லாம் போக்கவல்லதாயிருக்கின்றது. இங்குள்ள வனத்தில் அபரிமிதமான ஹோமாக்னியின் புகையே முழுவதும் நிரம்ப வ்யாபித்திருக்கின்றது. மேலும் இது மரவுரிகள் வரிசையாக ஆறப்பரிமாறப்பெற்று அழகாய் விளங்குகின்றது. இங்குள்ள மிருகஸமூஹங்களெல்லாம் மிகவும் சாந்தகுணம் நிரம்பப்பெற்றிருக்கின்றன. பல வகைப் பறவைகளும் கலகலவென்று சப்தித்துக்கொண்டிருக்கின்றன. எந்த மாமுனியின் ப்ரபாவத்தினால் ரா

க்ஷஸர்கள் இந்தத் தென்திசையைப் பயத்துடன் பார்ப்பார்களேயன்றி முன்போல் அனுபவிக்கமாட்டார்களோ, அப்படிப்பட்ட அகஸ்த்யருடைய ஆஶ்ரமம் இது. புண்யகர்மாவாகிய இந்த மாமுனிவர் இந்தத் தென்திசையைக் கைப்பற்றினது முதலாக ராக்ஷஸர்கள் ரிஷிகளின்மேல் வைரத்தைவிட்டு மிகவும் சாந்திகுணமுடையராயினர். இந்தத் தென்திசை பகவானுகிய அகஸ்த்யருடைய பேரால் அகஸ்த்யதிக்கென்னும் பேர்பெற்று மிகவும் க்ரூரகர்மாக்களாகிய ராக்ஷஸர்களுக்குப் புகக்கூடாததாகி மூன்று லோகங்களிலும் ப்ரஸித்திபெற்றது. பர்வதங்களில் சிறந்த விந்த்யபர்வதம் ஸூர்யனுடைய மார்க்கத்தைத் தடுக்க முயன்று எவருடைய ஆஜ்ஞைக்கு உட்பட்டு வளர்ந்து போகாமல் இன்னும் அப்படியே இருக்கின்றதோ, எவருடைய வ்யாபாரங்கள் உலகமெங்கும் ப்ரஸித்தங்களாயிருக்கின்றனவோ, ஸ்ரீமானும் தீர்க்காயுஷ்யமுடையவருமாகிய அப்படிப்பட்ட அகஸ்த்ய மஹர்ஷியுடையது அழகாயிருப்பதும் ஜனங்கள் வணக்கத்துடனிருக்கப்பெற்றதுமாகிய இவ்வாஶ்ரமம். இந்த அகஸ்த்யர் ஸமஸ்தலோகங்களாலும் புகழப்பட்டவர்; ஸத்புருஷர்; எப்போதும் ஸாதுஜனங்களுக்கு ஹிதஞ்செய்வதில் விருப்பமுடையவர். நாம் அவரிடம் போனல் நமக்கு நன்மையை விளைவிப்பார். நல்ல ஸ்வபாவமுடையவனே! வல்லவனே! ஆகையால் இவ்வாஶ்ரமத்திலேயே இவ்வகஸ்த்யமாமுனியை ஆராதித்துக்கொண்டு இங்கேயே வனவாஸத்தின் மிகுந்த காலம் முழுவதும் இருக்கப்போகிறேன். இங்குத் தேவதைகளும் கந்தர்வர்களும் ஸித்தர்களும் மஹர்ஷிகளும் ஆஹாரநியதியுடன் தவஞ்செய்கின்ற அகஸ்த்யரை எப்பொழுதும் உபாஸித்துக்கொண்டிருக்கிருர்கள். பொய் சொல்பவனுவது க்ரூரனுவது வஞ்சகனுவது காதுகனு

வது சாஸ்த்ரநியதியைத் தவறி இஷ்டப்படி நடப் பவனுவது இவ்வாஶ்ரமத்தில் ஜீவித்திருக்கமாட்டான். இவ்வகஸ்த்யரது மஹிமை இப்படிப்பட்டது. தேவதை களும் யக்ஷர்களும் நாகர்களும் பக்ஷிகளும் ஆஹார நியதியுடன் தர்மத்தை ஆராதிப்பவராகி இங்கு வாஸஞ் செய்கின்றனர். மஹானுபாவர்களான பலரிஷிகள் இங் குத் தவஞ்செய்து ஸித்தி அடைந்து மானுஷதேஹத் தை விட்டுப் புதிய திவ்ய தேஹங்களைப் பெற்று ஸூர் யன்போல் விளங்குகின்ற விமானங்களில் ஏறி ஸ்வர்க் கஞ் சென்றனர். இவ்வாஶ்ரமத்தில் புண்யகர்மங்களைச் செய்து தம்மை ஆராதிப்பவர்களுக்குத் தேவதைகள் யக்ஷலோகத்தையும் தேவலோகத்தையும் நானுவித ராஜ்யாதிபத்யங்களையும் கொடுக்கின்றனர். லக்ஷ்மணு! அகஸ்த்யாஶ்ரமத்திற்கு வந்தனம். நீ முன்புபோய் இங்கு ஸீதையோடுகூட நான் வந்திருக்கிறேனென் பதை அம்மஹர்ஷிக்குத் தெரிவிப்பாயாக' என்றனன்

பதினென்ருவது ஸர்க்கம் முற்றிற்று.

---

அகஸ்த்யர் சிஷ்யர்களை அனுப்பி ராமனை வரவழைத்து வைஷ்ணவ தனுஸ்ஸையும் அம்பறுத்தூணிகளையும் அவனுக்குக் கொடுத்தல்.

ஸ்ரீராமனுக்கு இளையோனுகிய லக்ஷ்மணன், அகஸ் த்யாஶ்ரமத்தில் ப்ரவேசித்து அம்முனிவரது சிஷ்ய ரிடஞ்சென்று 'தசரதரென்னும் ஒரு அரசன் உண்டு. அவரது ஜ்யேஷ்டகுமாரன் ராமனென்பவன். அவன் மிகுந்த பலமுடையவன். அவன் அகஸ்த்யமாமுனியைப் பார்க்கும்பொருட்டுத் தன் பார்யையான ஸீதையோடு கூட வந்தனன். நான் லக்ஷ்மணனென்னும்பேருடைய வன். நான் அவனுக்குத் தம்பியும் ஹிதனும் மேலும்

அவனிடத்தில் மிகுந்த ப்ரீதியுடையவனுமாயிருப்பவன். ஆகையால் அவனுக்கு ப்ரியத்தைச் செய்துகொண்டிருப்பவன். எங்களை நீர் கேட்டிருக்கலாம். நாங்கள் மூவரும் எம் தந்தையினுஜ்ஞையின்படி மிகவும் பயங்கரமான வனத்திற்கு வந்தனம். நாங்களெல்லோரும் பகவானுகிய மஹர்ஷியைப் பார்க்க விரும்புகின்றனம். ஆகையால் அம்முனிவர்க்குத் தெரிவிப்பீராக' என்றனன். அந்த லக்ஷ்மணன் சொன்ன வார்த்தையைக் கேட்டு அந்தத் தாபஸர் 'அப்படியே ஆகட்டும்' என்றுரைத்து அகஸ்த்யருக்கு அதை விண்ணப்பஞ்செய்யும் பொருட்டு அக்னிஹோத்ரக்ருஹத்திற்குள்ளே போயினர். அகஸ்த்ய மஹர்ஷியின் மனத்திற்கு மிகவும் இனியராகிய அந்தச் சிஷ்யர் அங்ஙனஞ்சென்று தவமஹிமையால் யாவராலும் அவமதிக்கக்கூடாத அகஸ்த்யமாமுனியைச் சீக்ரமாகப் பார்த்து, லக்ஷ்மணன் சொன்னபடி ராமனது வரவைக் குறித்து 'தசரதராஜ குமாரர்களாகிய ராமலக்ஷ்மணர்களிருவரும் ராமனது பார்யையாகிய ஸீதையோடுகூடி நமது ஆஶ்ரமத்திற்கு வந்திருக்கின்றனர். பகைவரை அடக்கும் பராக்ரமசாலிகளாகிய அவ்விருவரும் உம்மைத் தர்சித்து ஸேவை செய்யவேண்டுமென்று வந்திருக்கின்றனர். இவ்விஷயத்தில் என்னசெய்யவேண்டுமோ, அதை உள்ளபடி எமக்கு ஆஜ்ஞைசெய்யவேண்டும்' என்றனர். அனந்தரம் அம்மஹர்ஷி சிஷ்யர் மூலமாய் ராமலக்ஷ்மணர்களும் மஹாபாக்யவதியாகிய ஸீதாதேவியும் வந்தார்களென்று செவியுற்று அந்தச் சிஷ்யரைப் பார்த்து 'எனது பாக்யவசத்தினுல் வெகு காலங்கழித்து ராமன் என்னைப் பார்க்க இவ்விடம் வந்தனன். நானும், ராமன் இங்கு வரவேண்டுமென்று வெகுகாலமாக மனத்தில் விரும்பிக்கொண்டிருந்தனன். ராமலக்ஷ்மணர்களும் ஸீதையும் பூஜிக்கத் தகுந்தவர்கள். அவர்களை என்னிடம் வரச்

செய்வீர்களாக. இதற்கு முன்னமே அவர்களை உள்ளே விடுவதற்கு ஏன் தாமதித்தீர்கள்?" என்று மொழிந்தனர். மஹானுபாவரும் தர்மங்களை உணர்ந்தவருமாகிய அம் முனிவர் இங்ஙனஞ்சொல்லுகையில் சிஷ்யர் தாமதஞ் செய்ததற்குப் பரிஹாரமாக நமஸ்கரித்துக் கையைக்கூப் பிக்கொண்டு 'திருவுள்ளம்' என்று மொழிந்து உடனே பரபரப்புடன் வெளிப்புறப்பட்டு வந்து லக்ஷ்மணனைப் பார்த்து 'ராமன் எங்கே? மஹர்ஷியைப் பார்க்க வருவானாக. தானே உட்புகுவானாக' என்றனர். பிறகு லக்ஷ்மணன் சிஷ்யரோடுகூட ஆஸ்ரமத்தின் வாசற்படியில் வந்து, ககுத்ஸ்தகுலாலங்காரனாகிய ராமனையும் ஜனக ராஜன் குமாரத்தியாகிய ஸீதையையும் அவருக்குக் காண்பித்தனன். சிஷ்யர் விநயத்துடன் அகஸ்த்யர் மொழிந்ததைச் சொல்லிப் பூஜிக்கத்தகுந்த ராமனை விதியின்படி நன்கு ஸத்கரித்து ஆஸ்ரமத்திற்குள்ளே அழைத்துக்கொண்டு போயினர். அனந்தரம் ராமன் ஸீதையோடும் லக்ஷ்மணனோடும் அவ்வாஸ்ரமத்தில் மிகவும் சாந்தமான ம்ருகங்கள் இங்கும் அங்கும் திரிந்து கொண்டிருக்கப் பார்த்துக்கொண்டே சென்றனன். [1] அந்த அகஸ்த்யாஸ்ரமத்தில் ப்ரஹ்மதேவன் அக்னி விஷ்ணு தேவேந்த்ரன் ஸூர்யன் சந்த்ரன் பகதேவன் குபேரன் தாதா விதாதா வாயு நாகராஜன் மஹானுபாவனாகிய அனந்தன் காயத்ரீ வஸுதேவதைகள் மஹானுபாவனும் பாசஹஸ்தனுமாகிய வருணன் ஸுப்ரஹ்மண்யன் தர்மதேவதை ஆகிய இவர்களின் ஸ்தானங்கள் ஏற்படுத்தப்பட்டிருக்கப் பார்த்துக்கொண்டே சென்

---

1 இதில் அந்தந்த தேவதைகளுக்கு ஸ்தானம் சொல்லுமிடத்தில் ருத்ரனுக்கு ஸ்தானஞ்சொல்லாமையால் அந்தத் தேவன் பூஜிக்கத் தகுந்த ஸாத்த்விக தேவதையல்லனென்பது தெரிவிக்கப்பட்டது. கோவிந்தராஜர்.

றனன். பிறகு அகஸ்த்ய மஹர்ஷியும் சிஷ்யர்களோடு கூட ராமனை எதிர்கொண்டு வந்தனர். ராமன் மஹா தேஜஸ்விகளாகிய முனிவர்களால் பின்றொடரப்பட்டு முன்னே வருகின்ற அகஸ்த்யமாமுனியைப் பார்த்து, அவ்வீரன்கைங்கர்ய லக்ஷ்மியை வளர்த்துக்கொள்பவனாகிய லக்ஷ்மணனைப் பார்த்து 'லக்ஷ்மணா! இதோ பகவானாகிய அகஸ்த்யர் வருகின்றனர். அளவின்றி விளங்குகின்ற இவரது தேஜோவிசேஷமாகிற மேன்மையால் இவர் மேலான தவங்களுக்கெல்லாம் இருப்பிடமென்று தெரிகின்றது' என்றனன். பரந்தபனும் மஹாபாஹுவுமாகிய அந்த ராமன் இங்ஙனம் ஸூர்யன்போல் தேஜஸ்ஸுடன் விளங்குகின்ற அகஸ்த்யரைக் குறித்துச் சொல்லி மிகுந்த ப்ரீதியுடன் அம்முனிவரிடம் சென்று அவரது பாதங்களைப் பிடித்துக்கொண்டு நமஸ்காரஞ் செய்தனன். அப்பொழுது தர்மஸ்வபாவனாகிய ராமன் ஸீதையோடும் லக்ஷ்மணனோடும் அம்முனிவரை நமஸ்கரித்துக் கையைக்கூப்பிக்கொண்டு நின்றிருந்தனன். முனிவரும் ராமனை அதிதியாக அங்கீகரித்து ஆஸனங் கொடுத்து அர்க்ய பாத்யங்களால் பூஜித்துக் குசலம் விசாரித்து 'உட்காருவாய்' என்றனர். அம்முனிவர் வைஶ்வதேவத்தை நடத்தி அந்த அதிதிகளை அர்க்யாதிகளால் பூஜித்து அவர்களுக்கு வானப்ரஸ்த தர்மத்தின்படி காய்கிழங்கு முதலான ஆஹாரங்களைக் கொடுத்தனர். அனந்தரம் அம்முனிமன்னவர் தர்மங்களை அறிந்தவராகையால் முதலில் தான் உட்கார்ந்து பிறகு கைகூப்பிக்கொண்டு உட்கார்ந்திருக்கிற தர்மஜ்ஞனாகிய ராமனைப்பார்த்து 'வைஶ்வதேவஞ்செய்து அர்க்யங் கொடுத்து அதிதியைப் பூஜிக்கவேண்டும். காகுத்தனே! ரிஷியாயிருப்பவன் இங்ஙனம் செய்யாமல் வேறொரு வித

மாக அதிதிபூஜை செய்வானுயின் தப்புஸாக்ஷியஞ் சொன்னவன்போல் பரலோகத்தில் தன்மாம்ஸத்தைத் தானே புசிப்பான். நீ ஸமஸ்த லோகங்களுக்கும் ராஜா வாயிருப்பவன்; தர்மங்களே உணர்ந்தவன்; மஹாரதன்; யாவராலும் பூஜிக்கத்தகுந்தவன்; அனைவரும் நெஞ்சிற் கொண்டு மனனஞ்செய்யத்தகுந்த மஹானுபாவன். இப்படிப்பட்ட ப்ரிய அதிதியாகிய நீ எனக்கு ப்ராப்தனுயினே' என்றனர். அம்முனிவர் இங்ஙனஞ் சொல்லிக் காய்கிழங்குகளேயும் புஷ்பங்களேயும் மற்றுமுள்ள காட்டு வஸ்துக்களேயும் வேண்டியவளவு கொடுத்துப் பூஜித்து மீளவும் அவனேப் பார்த்துப் 'புருஷஸிம்ஹனே! ஸ்வர்ணமயமாகி ரத்னங்களிழைக்கப் பெற்று திவ்யமான இம்மஹாதனுஸ்ஸு விஷ்ணுதேவனுடையது. இது விஸ்வகர்மாவால் நிருமிக்கப்பட்டது. ஸூர்யன்போல் விளங்குகிற இம்மேலான பாணம் அமோகமாயிருப்பது; ப்ரஹ்மாவால் கொடுக்கப்பட்டது. எரிகிறநெருப்புப் போல் ஜ்வலிக்கின்ற பாணங்கள் நிறையப்பெற்று என்றும் பாணங்கள் ஓயாதிருக்கப்பெற்றவைகளுமாகிய இந்த அம்பறாத்தூணிகள் இரண்டும் எனக்குத் தேவேந்த்ரனுல் கொடுக்கப்பட்டவை. ஸ்வர்ணமயமான உறையுடையதும் ஸ்வர்ணரேகைகளால் அலங்காரஞ் செய்யப்பெற்றதுமாகி விளங்குகிற இந்தக் கத்தியை எனக்குத் தேவேந்த்ரன் கொடுத்தனன். ராமா! முன்பு விஷ்ணுதேவன் இந்த வில்லேக் கொண்டே யுத்தத்தில் மேலான அஸுரர்களேக் கொன்று தேவர்களுக்கு ப்ரகாசிக்கின்ற ராஜ்யலக்ஷ்மியை மீட்டுக்கொடுத்தனன். சத்ருக்களது கர்வத்தை அழிப்பவனே! நண்பர்களுக்கு வெகுமதியைக் கொடுப்பவனே! அந்தத் தனுஸ்ஸையும் அந்த அம்பறாத்தூணிகளேயும் அந்தக்

கத்தியையும் அந்தப் பாணத்தையும், தேவேந்த்ரன் வஜ்ராயுதத்தை வாங்கிக் கொள்வதுபோல் நீ சத்ருக்களை வெல்லும்பொருட்டு வாங்கிக்கொள்வாயாக' என்றனர். மஹாதேஜஸ்வியும் மிகுந்த மஹிமைகளெல்லாம் அமைந்தவருமாகிய அந்த அகஸ்த்யர் இங்ஙனஞ் சொல்லி ராமனுக்கு அந்த உத்தம ஆயுதங்களைக் கொடுத்து மீளவும் அவனைப் பார்த்து இங்ஙனஞ் சொல்லினர்.

[1] பன்னிரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராமன் கராதிகளை வதஞ்செய்தற்காக அகஸ்த்யரிடம் அனுஜ்ஞைபெற்றுப் பஞ்சவடிக்கு ப்ரயாணமாய்ப் போதல்.

'ராமா! லக்ஷ்மணா! நீங்கள் ஸீதையோடுகூட, எனக்கு நமஸ்காரஞ் செய்வதற்காக இவ்விடம் வந்தீர்கள். இதனால் எனக்கு மிகவும் ஸந்தோஷம் ஆயிற்று. உனக்கு மங்களம் உண்டாகுக. வழிநடந்து வந்ததனாலுண்டான இளைப்பானது மேன்மேலும் ஆயாஸத்தை விளைத்து உங்களை நிரம்பவும் பாதிக்கின்றது. ஜனகராஜன் புதல்வியாகப் பிறந்த ஸுகுமாரியாகிய ஸீதை மிகவும் ஆயாஸம் அடைந்து இளைப்பாற விருப்புகிறாளென்று ஸ்பஷ்டமாகத் தெரிகின்றது. இவள் மிகவும் ம்ருதுவான சரீரமுடையவள். துக்கங்களால் என்றும் வருந்தினவளல்லள். பர்த்தாவாகிய உன்னிடத்திலுள்ள ஸ்னேஹத்தினால் ஏவப்பட்டுப் பலதோஷங்களுக்கு இடமான அரண்யத்திற்குள் தானும் புகுந்தனள். ராமா! அப்படிப்பட்ட இந்த ஸீதை இவ்வாஶ்ரமத்தில்

---

1. இங்குக் கதை முடியாதிருக்கையால் ஸர்க்கப்பிரிவு இல்லையெனத் தோற்றுகின்றது. என்று கோவிந்தராஜர்.

எப்படி ஸந்தோஷமாயிருப்பாளோ, அப்படி செய்வாயாக. இவள் உன்னைப் பின்றொடர்ந்து இவ்வரண்யத்திற்கு வந்தனளே! ஆகையால் இவள் மிகவும் செய்ய முடியாத கார்யத்தைச் செய்தனள். இவளது மேனியின் மேன்மைக்கு இவ்வரண்யவாஸம் மிகவும் பொருந்தாதது. இப்படியிருக்க அதைச் சிறிதும் பொருள் செய்யாமல் உன்னைப் பின்றொடர்ந்து வந்தனளே; இது மிகவும் அற்புதம். ராமா! ஸ்த்ரீகள் பர்த்தாவை நல்ல ஸ்திதியிலிருக்கும்பொழுது ஸந்தோஷப்படுத்திக்கொண்டிருப்பார்கள். துர்த்தசையில் ஆழ்ந்திருப்பானாயின் அவனைக் கைவிடுவார்கள். இது ஸ்ருஷ்டி முதற்கொண்டு ஸ்த்ரீகளுக்கு ஸ்வபாவஸித்தமாயிருக்கும். ஸ்த்ரீகளின் மனம் மின்னற்கொடிபோல் அதிசஞ்சலமாயிருக்கும். நெடுநாள் ஸ்னேஹம் உண்டாயிருக்குமாயினும் அதை ஒரு நொடிப்பொழுதில் அறுத்து விடுவார்களாகையால் ஆயுதங்கள்போல் மிகவும் தீக்ஷ்ணமாயிருப்பார்கள். முன் பின் பாராமல் எத்தகைய கார்யத்திற்கும் துணிவார்களாகையால் கருடனையும் வாயுவையும் மீறி மிக்க வேகமுடையராயிருப்பார்கள். உன்பத்னியாகிய ஸீதைக்கோ என்றால் அப்படிப்பட்ட தோஷங்கள் எவையும் உண்டாகா. அவை உண்டாகாமை மாத்ரமேயன்று; இவள் மிகவும் புகழத்தகுந்தவள். மேலும், அருந்ததியைப்போல் பதிவ்ரதைகள் அனைவரிலும் மேலாயிருப்பவள். சத்ருக்களை அடக்கவல்லவனே! ராமா! நீ லக்ஷ்மணனோடும் பதிவ்ரதைகளில் சிறந்த ஸீதாதேவியோடும் வந்து வாஸஞ்செய்கையால் எமது இவ்வாஶ்ரமம் அலங்கரிக்கப்பட்டது' என்று மொழிந்தனர். முனிவர் இங்ஙனம் மொழிந்து நிற்கையில் ராமன் கைகளைக் கூப்பிக்கொண்டு படர்ந்தெரிகிற அக்னிபோல்

விளங்குகிற அம்மஹர்ஷியைப் பார்த்து வணக்கத்துடன் 'இஷ்டவரங்களைக் கொடுப்பவரும் முனிதிலகருமாகிய நீர் என் தம்பியின் குணங்களையும் என் பத்னியின் குணங்களையும் என் குணங்களையும்பற்றி ஸந்தோஷித்திராகையால் நான் தன்யனுயினன்; அனுக்ரஹிக்கப்பட்டனன். இனி என்னவெனில், எங்கு ஆஶ்ரமம் ஏற்படுத்திக்கொண்டு இடைவீடின்றி ஸுகமாயிருக்கக்கூடுமோ, அப்படிப்பட்ட ஓரிடத்தை எனக்குச் சொல்வீராக. அது ஜலஸம்ருத்தியோடும் பல வனங்களோடும் கூடி அழகாயிருக்க வேண்டும்' என்றனன். அனந்தரம் தர்மாத்மாவாகிய அம்முனிவர் மிகுந்த மதியுடையவராகையால் ராமன் சொன்ன அவ்வார்த்தைகளைக் கேட்டு [1] நடக்கவேண்டிய விஷயங்களைக் குறித்துக் கொஞ்சநேரம் தனக்குள் சிந்தித்து நிச்சயித்துக்கொண்டு ராமனைப் பார்த்துத் தன்மதியெல்லாம் நன்கு விளங்கும்படி இங்ஙனம் மொழிந்தனர்:—என்னப்பனே! இவ்விடத்திற்கு இரண்டுயோஜனை தூரத்தில் மிகுந்த காய் கிழங்குகளும் ஜலங்களும் நிரம்பியிருக்கப்பெற்றுப் பல மிருகங்களோடு கூடி அழகாயிருக்கிற பஞ்சவடி யென்னும் ப்ரதேசம் ஒன்றுண்டு. நீ ஸீதையோடும் லக்ஷ்மணனோடும் அவ்விடம் சென்று ஆஶ்ரமம் ஏற்படுத்திக்கொண்டு தந்தையின் ஆஜ்ஞையைச் சொன்னபடி பரிபாலித்து க்ரீடித்துக் கொண்டிருக்கலாம். ராகவனே! உனக்குத் தசரதன் ஏற்படுத்தின ஏற்பாட்டின்படி வனவாஸஞ் செய்யவேண்டிய பதினன்கு ஸம்வத்ஸரகாலம் ஏறக்

---

1 இங்கு 'ய்யாத்வா முஹூர்த்தம் யர்மாத்மா யீரோ யீரதரம் வசঃ' என்று மூலம், (ய்யாத்வா) த்யானித்து. ஆலோசித்தென்றபடி. இங்ஙனம் த்யானிக்கையால் வரப்போகிற ஸீதாவியோகமென்னும் ஸங்கடத்திற்கு மனம் கலங்குமாயினும் ராவணனிவதத்தையும் மீளவும் ஸீதாஸமாகமத்தையும் கண்டு (யீரঃ) தீரராகி-மனக்களிப்புற்றுச் சொன்னரென்று கருத்து.

குறைய அனேகமாய்க் கடந்து சென்றது. காகுத்தனே! நீ ப்ரதிஜ்ஞையைத் தீர்த்துக்கொண்டு ராஜ்யத்தைப் பெற்று ஸுகமாயிருப்பாய். ரகுகுலாலங்காரனே! யயாதி தன்குமாரனுல் தன்ப்ரதிஜ்ஞையைக் கடத்தினதுபோலத் தசரதன் ஜ்யேஷ்டகுமாரனுகிய உன்னுல் தன் ப்ரதிஜ்ஞையைத் தீர்த்துக்கொண்டனன். ஆகையால் உன் தந்தையாகிய அம்மஹாராஜன் தன்யாத்மாவாயினன். நிர்த்தோஷஸ்வபாவனே! எனக்குத் தசரதனிடமுள்ள ஸ்னேஹத்தினுல் என் தபோமஹிமையைக் கொண்டு ஆலோசித்து இப்பொழுது நடந்த இந்த வ்ருத்தாந்தத்தையெல்லாம் தெரிந்துகொண்டே இருக்கின்றனன். [1] நான் என் தவமஹிமையால் உன்மனத்திலுள்ள அபிப்ராயத்தைத் தெரிந்து கொண்டனன். ஆகையால் முதலில் இவ்வாஶ்ரமத்தில் என்னேடுகூட வஸித்திருக்கும்படி நான் அனுமதித்தும் உன் அபிப்பிரயாத்தைக் கண்டறிந்தமைபற்றிப் பிறகு உன்னைப் பஞ்சவடிக்குப் போவாயென்று சொல்லுகின்றனன். ராமா! அந்த வனப்ரதேசம் மிகவும் ரமணீயமாயிருக்கும். ஸீதை அவ்விடத்தில் விளையாடிக்கொண்டிருப்பாள். அந்த ப்ரதேசம் மிகவும் புகழத்தக்கதாயிருப்பதுமாத்ரமேயன்றி இவ்விடத்திற்கு ஸமீபமாகவு மிருக்கின்றது. மேலும், அது கோதாவரீ நதிக்கு அருகேயிருப்பது பற்றி ஸீதை அங்கு அந்நதியின் ஸமீபத்தில் மிகவும் க்ரீடித்துக் கொண்டிருக்கக்கூடும். மஹாபாஹுவே! அந்த ப்ரதேசத்தில் காய்கிழங்குகள் பலவாயிருக்கும்.

---

1 முதலில், 'நீ என்னுஶ்ரமத்தில் என்னேடுகூடவே வஸித்திருப்பதற்கு ஒப்புக்கொண்டனன். பின்பு கராதி ராக்ஷஸவதத்தைச் செய்ய விரும்புகிற உன்னபிப்ராயத்தை அறிந்து பஞ்சவடிக்குப் போகச் சொல்லுகிறேன்' என்று அகஸ்த்யருடைய அபிப்பிராயம்

பலவகைப்பக்ஷி ஸமூஹங்களும் அங்கு விளையாடிக்கொண்டிருக்கும். மேலும், அது ஜனஸங்கமின்றி ஏகாந்தமாயிருக்கும்; மிகவும் பரிசுத்தமாய் ரமணீயமாயிருக்கும். அந்தப் பஞ்சவடி அவ்வளவு ரமணீயமாயிருக்குமாகையால் நீ பார்யையோடு வாஸஞ் செய்யத்தகுந்தது. மேலும், நீ ஆபத்தில் ஆழ்ந்து வருந்தினவர்களைக் காப்பாற்றுவதில் ஸமர்த்தனாகையால் அங்கு வாஸஞ்செய்வாயாயின் தாபஸர்களைக் காப்பாற்ற நேரும். வீரனே! இதோ பெரிய இலுப்பை மரங்களின் தோப்பு தெரிகின்றது, பார். அந்தத் தோப்பின் வடபுறமாகப் போகையில் ஓராலமரத்தினருகிற் போவாய். அந்தமரத்தைத் தாண்டி அவ்வழியாகவே போவாயாயின் செடியில்லாத ஸ்தலமார்க்கம் ஒன்று காணப்படும். அதில் ஏறிப்போவாயாயின் அங்கு ஒரு பர்வதம் புலப்படும். அதனருகில் பஞ்சவடியென்று ப்ரஸித்திபெற்ற அந்த ப்ரதேசம் இருக்கின்றது. அங்கு எப்பொழுதும் வனங்கள் புஷ்பித்திருக்கும்' என்றனர். அகஸ்த்யர் இங்ஙனஞ் சொல்லுகையில் அதைக் கேட்டு ராமன் லக்ஷ்மணனோடு கூட ஸத்யவாதியாகிய அம்மஹர்ஷியைப் பூஜித்துப் 'போய்வருகிறேன்' என்றனன். அந்த ராமலக்ஷ்மணர்களிருவரும் அம்முனிவரது பாதங்களில் நமஸ்கரித்து அவரிடம் அநுஜ்ஞை பெற்றுக்கொண்டு ஸீதையோடு கூட அவ்வாஶ்ரமத்தினின்று புறப்பட்டுப் பஞ்சவடிக்குப் போயினர். யுத்தங்களில் பின்வாங்காத அந்த ராஜகுமாரர்கள் வில்லுகளைத் தரித்து அம்பறாத்தூணிகளைத் தோளில் கட்டிக்கொண்டு மிக்க மனவூக்கத்துடன் மஹர்ஷி சொன்ன மார்க்கத்தின்படி பஞ்சவடிக்குப் போயினர். பதின்மூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராமன் பஞ்சவடிக்குப் போகும் மார்க்கத்தில் ஜடாயுவுடன் கலந்து பஞ்சவடிக்குப் போதல்.

அனந்தரம் அவ்வாறு ராமன் பஞ்சவடிக்குப்போகும்பொழுது நடுவழியில் பெருஞ்சரீரமுடையதும் பயங்கரமான பராக்ரமமுடையதுமாகிய ஒரு கழுகைச் சந்தித்தனன். அது அகஸ்த்யர் சொன்ன ஆலமரத்தின் மேல் இருந்தது. மஹாபாக்யசாலிகளாகிய அந்த ராமலக்ஷ்மணர்களிருவரும் அந்தப்பக்ஷியைப் பார்த்து ராக்ஷஸனாக நினைத்து, 'நீ யார்' என்று வினவினர். அந்தக் கழுகு இனியதும் ஸௌஜன்யத்தை வெளியிடுவதுமான உரையுடன் அவர்களுக்கு ஸந்தோஷத்தை விளைத்துக் கொண்டே, ராமனைப் பார்த்து 'என்னப்பனே! நான் உன் தந்தை தசரத மஹாராஜனுக்கு நண்பனென்று தெரிந்துகொள்வாயாக' என்றது. ராமன் அதைத் தன் தந்தைக்குஸ்னேஹிதனென்றறிந்து பூஜித்துப் பிறகு ப்ரீதியுடன் அதன் குலத்தையும் பேரையும் விசாரித்தனன். ராமன் வினவினதைக் கேட்டு அந்தப் பறவை, முன்பு ஸமஸ்தபூதங்களும் பிறந்தது முதலாகச் சொல்லிக்கொண்டே தன்னையும் தன்குலத்தையும் சொல்லிற்று:— 'மஹாபாஹுவே! ராமா! பூர்வகாலத்தில் எவரெவர் ப்ரஜாபதிகளாயிருந்தார்களோ, அவர்களெல்லோரையும் முதலே பிடித்துச் சொல்லுகிறேன், கேள். ராகவா! அந்த ப்ரஜாபதிகளில் முதல்வர் கர்த்தமர். பிறகு விக்ரீதரும் சேஷரும் பலபுதல்வர்களையுடையவரும் வீர்யசாலியுமாகிய ஸம்ஶ்ரயரும் ஸ்தாணுவும மரீசியும் அத்ரியம் மஹாபலராகிய க்ரதுவும் புலஸ்த்யரும் அங்கிரஸ்ஸும் ப்ரசேதஸ்ஸும் புலஹரும் தக்ஷரும் விவஸ்வானும் வரிசையாக ப்ரஜாபதிகளாயிருந்தனர். பிறகு அரிஷ்டநேமியென்னும் மற்றொருபேருடைய மஹா

தேஜஸ்வியாகிய காஸ்யபர் ப்ரஜாபதியாயினர். பெரும் புகழனே! தக்ஷப்ரஜாபதிக்குப் பெருங்கீர்த்தியுடையரா கிய அறுபது பெண்பிள்ளைகள் பிறந்தார்களென்று எல் லோர்க்கும் தெரிந்த விஷயமே. காஸ்யபர் அவர்களில் அழகிய இடையுடைய அதிதி திதி தனு காலிகை தாம் ரை க்ரோதவசை மனு அனலை என்னும் எட்டுப் பேர் களை மணம்புரிந்தனர். அனந்தரம் அவர் ப்ரீதியுடன் அந்தக்கன்னிகைகளைப் பார்த்து மூன்று லோகங்களை யும் பரிபாலனஞ்செய்யும்படி மஹாவீரர்களாகிய என் னைப்போன்ற புதல்வர்களைப் பெறுவீர்களாக' என்றனர். புருஷர்களிற் சிறந்தவனே! மஹாபாஹுவே! அதற்கு அதிதியும் திதியும் காலிகையும் ஸம்மதித்தனர். மற்ற வர் ஸம்மதிக்கவில்லை. சத்ருக்களை அடக்குந்தன்மைய னே! பரந்தபனே! அதிதியிடத்தில் பன்னிரண்டு ஆதித் யர்களும் எட்டு வஸுக்களும் பதினொரு ருத்ரர்களும் அஸ்விதேவதைகளிருவரும் ஆகிய முப்பத்து மூன்று வகையான தேவதைகள் பிறந்தனர். என்னப்பனே! திதி கீர்த்தியில் மிகுந்த தைத்யர்களைப் பெற்றனள். முன்பு ஸமஸ்த அரண்யங்களோடும் ஸமுத்ரங்களோ டும் கூடின இந்தப் பூமண்டலமெல்லாம் அந்தத் தைத் யர்களுடையதாயிருந்தது. சத்ருக்களை அடக்க வல்லவ னே! தனு என்பவள் ஹயக்ரீவனென்னும் பிள்ளையைப் பெற்றனள். காலிகைக்கு நரகனும் காலகனும் பிறந்த னர். தாம்ரையென்னும் காஸ்யப பார்யை, க்ரௌஞ்சி பாஸி ஸ்யேனி த்ருதராஷ்ட்ரி சுகி என்று லோகப்ரஸித் தமான இந்த ஐந்து கன்னிகைகளைப் பெற்றனள். அந்த ஐவரில் க்ரௌஞ்சி கோட்டான்களைப் பெற்றனள். பாஸி பாஸபக்ஷிகளைப பெற்றனள். ஸ்யேனிக்குச் சிறந்த வீர்ய முடைய பருந்துகளும் கழுகுகளும் பிறந்தன. த்ருத ராஷ்ட்ரிக்கு ஸமஸ்தமான ஹம்ஸங்களும் கலஹம்ஸங்

களும் பிறந்தன. அந்த த்ருதராஷ்ட்ரிக்கே சக்ரவாக பக்ஷிகளுங்கூடப் பிறந்தன. ராமா! உனக்கு க்ஷேமம் உண்டாகுக. தாம்ரையின் பெண்ணாகிய சுகி நதையைப் பெற்றனள். நதைக்கு வினதை பிறந்தனள். ராமா! காஶ்யபரது பார்யையாகிய க்ரோதவசைக்கு மிருகி மிருகமந்தை ஹரி பத்ரமதை மாதங்கி ஶார்த்தூலி ஶ்வேதை ஸுரபி ஸர்வலக்ஷணங்களும் பொருந்திய ஸுரஸை கத்ரு என்னும் பத்துப் பெண்கள் பிறந்தனர். புருஷசிகாமணியே! அந்தப் பதின்மர்களில் மிருகிக்கு ஸமஸ்த மிருகங்களும் பிறந்தன. மிருகமந்தைக்குக் கரடிகளும் சவரி மிருகங்களும் சாமர மிருகங்களும் பிறந்தன. ஹரியென்பவளுக்கு ஸிம்ஹங்களும் வேகமுள்ள வானரங்களும் பிறந்தன. பிறகு பத்ரமதைக்கு இராவதி யென்னும் பெண் பிறந்தது. அந்த இராவதிக்கு உலகத்தில் சிறந்த ஐராவதமென்னும் மஹாகஜம் பிறந்தது. புருஷஶ்ரேஷ்டனே! மாதங்கிக்கு யானைகள் பிறந்தன. சார்த்தூலிக்குக் கொண்டைமுயல்களும் புலிகளும் உண்டாயின. ராமா! ஶ்வேதைக்குத் திக்கஜங்கள் தோன்றின. ராமா! அனந்தரம் ஸுரபியென்பவள் ரோஹிணி யென்றும் பெருங்கீர்த்தியுடைய கந்தர்வி யென்றும் இரண்டு பெண்களைப் பெற்றனள். ராமா! உனக்கு மங்கலம் உண்டாகுக. ரோஹிணிக்குப் பசுக்கள் பிறந்தன. கந்தர்விக்குக் குதிரைகள் ஜன்மித்தன. ராமா! ஸுரஸைக்குப் பல தலைகளையுடைய ஸர்ப்பங்கள் பிறந்தன. கத்ருவுக்கு ஒரு தலைப்பாம்புகள் பிறந்தன. மனிதர்களிற் சிறந்தவனே! மனுவென்னுங் காஶ்யப பார்யை ப்ராஹ்மணர் க்ஷத்ரியர் வைஶ்யர் ஶூத்ரர் என்னும் புகழ்பெற்ற மனுஷ்யர்களைப் பெற்றனள். அனலை யென்னுங் காஶ்யபபார்யை நல்ல பழங்களையுடைய (பிண்டாகாரமான பழங்களையுடைய) வ்ருக்ஷங்களைப்

பெற்றனள். (இனி என்குலம் வந்த விதத்தைக் கேட்பாயாக.) வினதையென்பவள் சுகிக்குப் பெண்வயிற்றுப் பேத்தி. கத்ரு ஸுரஸைக்குத் தங்கை. அவர்களில் கத்ரு ஆயிரந் தலைகளுடன் பூமியைத் தரிக்கின்ற ஆதிசேஷனைப் பெற்றனள். வினதைக்குக் கருடனென்றும் அருணனென்றும் இரண்டு குமாரர்கள் பிறந்தனர். சத்ருக்களை யழிப்பவனே! நான் அந்த அருணனுக்கு [1] ச்யேனியிடத்தில் பிறந்தவன். ஸம்பாதியென்பவன் எனக்குத் தமையன். என்பேர் ஜடாயுவென்றறிவாயாக. நீ இஷ்டப்படுவாயாயின் உனக்கு வனவாஸத்தில் நான் ஸஹாயமாயிருப்பேன். இவ்வரண்யத்தில் கொடிய மிருகங்கள் பல உண்டு. ராக்ஷஸர்களும் திரிந்துகொண்டிருப்பார்கள். ஆகையால் இது பயங்கரமாகிப் புகக்கூடாததாயிருக்கும். ஆனதுபற்றி என்னைப்போன்ற ஸஹாயத்தினால் உனக்குப்ரயோஜனம் உண்டு. என்னப்பனே! நீயும் லக்ஷ்மணனும் எங்காயினும் போகும்பொழுது நான் ஸீதையைப்பாதுகாத்துக் கொண்டிருப்பேன்' என்றது. ராமன் நல்ல ஸ்வபாவமுடையவனாகையால் ஜடாயுவைப் பூஜித்து ஸந்தோஷத்துடன் கட்டிக்கொண்டு, அது அடிக்கடி தசரதனுக்கும் தனக்கும் நடந்த ஸ்னேஹத்தைச் சொல்லும் பொழுதெல்லாம் மிகுந்த ப்ரீதியுடன் செவிகொடுத்துக் கேட்டுத் தந்தை

---

1 ஸ்யேனியும் சுகியும் காஸ்யபரது பார்யையாகிய தாம்ரையின் பெண்களாகையால் இந்த ஸ்யேனி அருணனது பார்யையாவதெப்படி? இதன் பிள்ளை ஜடாயுவாகக் கூடுமோ? என்னில் ஸ்யேனியின் ஸந்தானபரம்பரையிற் சேர்ந்த ஒரு ஸ்யேனியாக இது இருக்கக்கூடும். அல்லது விதிவிஷேதங்களில் அதிகாரம் மனிதர்களுக்கேயன்றி ம்ருகபக்ஷ்யாதிகளுக்கு இல்லையாகையால காஸ்யபரது பெண்களேயாகக் கூடும்.

யிடத்திலுள்ள கௌரவத்தினுல் அந்த ஜடாயுவுக்கு நமஸ்காரஞ் செய்தனன். பிறகு ராமன் ஸீதையைக் காப்பாற்றும்படி ஜடாயுவிடம் ஒப்புவித்து மஹாபல முள்ள அந்தப் பக்ஷியோடும் ஸீதாலக்ஷ்மணர்களோ டும், அக்னி விட்டில்களைக் கொளுத்துவதுபோல் சத் ருக்களைக் கொளுத்த விரும்பிப் பஞ்சவடிக்குப் போய்ச் சேர்ந்தனன். பதினுன்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

பஞ்சவடியில் கோதாவரிக்கரையில் லக்ஷ்மணன் நிருமித்த ஆஸ்ரமத்தில் ராமாதிகள் கொஞ்சகாலம் வாஸஞ்செய்தல்.

பிறகு ஸ்ரீராகவன் பலவகை க்ரூரஜந்துக்களும் மிருகங்களும் நிறைந்திருக்கிற பஞ்சவடியைச் சேர்ந்து, தனக்குச் சுஶ்ரூஷை செய்யப்பெற்றமையால் மிகுந்த ஸந்தோஷம்பெற்று மிக்க ஒளியுடன் ப்ரகாசிக்கின்றவனும் ஸௌமித்ரையின் அருமைக்குமாரனும் தம்பியுமாகிய லக்ஷ்மணனைப் பார்த்து மொழிந்தனன்:—'நல்லியற்கையுடையவனே! மஹர்ஷி சொன்ன பிரகாரம் நாம் இந்த பிரதேசம் வந்து சேர்ந்தனம். புஷ்பித்த அரண்யங்களையுடைய இந்த பிரதேசமே பஞ்சவடி. அரண்யம் முழுவதும் கண்களை நீட்டிப் பார்ப்பாயாக. அரண்யத்தில் தகுந்த ஆஶ்ரம ஸ்தானத்தைக் கண்டுபிடிப்பதில் நீ வல்லவனல்லவா? எந்த பிரதேசத்தில் நம்மெல்லோர்க்கும் ஸம்மதமாகும்படி ஆஶ்ரமம் அமையும்? லக்ஷ்மணா! நீ ஏற்படுத்துமிடம் ஸீதைக்கும் உனக்கும் எனக்கும் இனிப்பை விளைவிப்பதாயிருக்கவேண்டும். அப்படிப்பட்ட இடத்தைப் பார்ப்பாயாக. அங்கு ஸமீபத்தில் ஒரு ஜலாதாரம் இருக்கவேண்டும். அங்குச் சூத புந்நாகாதி வ்ருக்ஷங்களடர்ந்து [1] ரமணீயமான அரண்யங்களும் மேடுபள்ள மில்லாமல் மெத்தென்ற மணற்குன்று

---

1. ரமணீயமான வனங்கள் இருக்கவேண்டுமென்கையால் ஸீதை புஷ்பங்களைப் பறித்துக்கொண்டு வேடிக்கையாக இருப்

களும் அமைந்து இனிப்பைக் கொடுக்கவல்ல தரைகளும் இருக்கவேண்டும். மேலும், அதில் ஸமிதைகளும் புஷ்பங்களும் தர்ப்பங்களும் ஜலங்களும் ஸமீபத்திலிருக்க வேண்டும். அப்படிப்பட்ட பிரதேசத்தை ஆராய்ந்து பார்ப்பாயாக' என்றனன். [1] ராமன் இங்ஙனஞ்சொல்லுகையில் லக்ஷ்மணன் கைகளைக் கூப்பிக்கொண்டு ஸீதாதேவியின் எதிரில் ராமனைப் பார்த்து, 'காகுத்தனே! நீ இந்த வனத்தில் நூறு ஸம்வத்ஸரங்களிருப்பினும் நான் நீ சொன்ன கார்யத்தைச் செய்து கொண்டு

---

பதற்கு அனுகூலமாயிருக்க வேண்டுமென்றும், மேடு பள்ளமில்லாமல் நல்ல தரையாயிருக்கவேண்டு மென்கையால் ஸுகசயனாதிகளை விரும்புகிற தனக்கு அனுகூலமாயிருக்கவேண்டுமென்றும், ஸமிதைகள் புஷ்பங்கள் முதலியவை ஸமீபமாயிருக்கவேண்டுமென்கையால் லக்ஷ்மணனது கைங்கர்யத்துக்கு அனுகூலமாயிருக்க வேண்டுமென்றும் இங்ஙனம் மூவர்க்கும் இனியதாயிருக்கவேண்டுமென்கை தோற்றுவிக்கப்பட்டது.

1. 'ஏவமுக்தஸ்து ராமேண லக்ஷ்மணஸ்ஸம்யதாஞ்ஜலி:। ஸீதாஸமக்ஷங் காகுத்ஸ்தமிதம் வசநமப்ரவீத் ॥ பரவாநஸ்மி காகுத்ஸ்த த்வயி வர்ஷஶதம் ஸ்திதே। ஸ்வயந்து ருசிரே தேசே க்ரியதாமிதி மாம்வத.' சக்ரவர்த்தி திருமகனார் உனக்கும் ஸுகமாயிருக்க வேண்டுமென்றதற்கு இளையபெருமாள் பொறுக்காமல் அவரைப் பார்த்து 'உனக்கும் ஸீதைக்கும் இனிதான பிரதேசத்தையே ஆஜ்ஞாபிக்க வேண்டும். என்னுடைய ஸௌக்யத்தை எதிர்பாக்கவேண்டா' மென்கிறார். (ஸீதாஸமக்ஷம்) ஸீதையின் கண் முன்னிலையில். இதனால் புருஷகாரஸாந்நித்யஞ் சொல்லப்பட்டது. (பரவாந் அஸ்மி) பரதந்த்ரனாயிருக்கின்றனன். என்னுடைய அஸ்மிதை உன்னஸ்மிதைபோல் அன்று. அஸ்மிதை-அஹம்பாவம். என்னஸ்மிதை பாரதந்த்ர்யத்தையே ஸ்வரூபமாகவுடையது. (காகுத்ஸ்த) உன் பரத்வாவஸ்தையில் மாத்ரமே யன்று, இந்த அவதாராவஸ்தையிலுங்கூட உனக்குப் பரதந்த்ரனே யென்றபடி. இந்தப் பாரதந்த்ர்யம் எத்தனை காலமெனில்—சொல்லுகிறார் (த்வயி வர்ஷஶதம்ஸ்திதே) இங்கு

உனக்குப் பரதந்த்ரனுகி இருப்பவனேயன்றி ஸ்வதந்த்ர னன்று. எனக்கிஷ்டமான இடத்திலென்னுமல் உனக்கே

---

ஸதஸப்தம் அனேக மென்னும் அர்த்தத்தைச் சொல்லுகிறதாகை யால் எக்காலத்திலும் என்பாரதந்த்ர்யம் நிலைநின்றிருப்பதென்று பொருள். இங்ஙனம் பாரதந்த்ர்யமே என் ஸ்வரூபமாகையால் அதற்கு அனுகூலமான ஆஜ்ஞையையே அருளிச்செய்யவேண்டு மென்கிருர் (ஸ்வயந்து ருசிரே தேசே) உமக்கு அழகாகத் தோற்றும் பிரதேசத்திலேயே. எனக்கும் அழகான இடத்திலென்று சொல்ல வேண்டாமென்றபடி. (க்ரியதாமிதி மாம்வத) ஆஶ்ரமத்தை ஏற் படுத்திவை யென்று எனக்குச் சொல்லவேண்டும். இங்ஙனம் கோ விந்தராஜர். (ஏவமுக்த:) 'உனக்கும் ஸௌக்யமான இடத்தில் பர்ணசாலை ஏற்படுத்துவாய்' என்று லக்ஷ்மணனிடத்தில் ஸ்வாதந்த்ர் யத்தை ஏறிட்டுச் சொல்லுகை யென்றபடி. (து) இந்த துஶப்தம் வைலக்ஷண்யத்தைச் சொல்லுகிறதாகையால், ராமன் பாரதந்த்ர்யத் தையே ஸ்வரூபமாகவுடைய என்னிடத்தில் ஸ்வாதந்த்ர்யத்தை யேறி ட்டபொழுதே என்னைப் பரித்யாகஞ் செய்வானுயினனென்று ராம னுல் கைவிடப்பட்ட அவஸ்தையை அடைந்தவனுகி, அதாவது 'இது வரையில் எனது அஜ்ஞானத்தினுல் ஸ்வரூபத்திற்கு ஹானி நேரிட் டது. இனி எனக்கு ஸ்வரூபமென்றொரு பதார்த்தமும் உண்டோ' என்னும்படியான அவஸ்தையை அடைந்தனன். (லக்ஷ்மண:) பார தந்த்ர்யத்தையே அடையாள மாகவுடையவன். (ஸம்யதாஞ்ஜலி:) 'இந்த அவஸ்தையில் ஸ்ரீராமனிடத்தில் அஞ்சலி செய்வதே நமக்கு ரக்ஷகம்; அஞ்ஜலி எல்லா அபீஷ்டங்களையும் ஸாதிக்குமாகையால்' என்று நினைத்து அஞ்சலிசெய்து (ஸீதாஸமக்ஷம்) புருஷகாரபூதை யான ஸீதையின் முன்னம். (காகுத்ஸ்தம் இதம் வசநம் அப்ரவீத்) இப்படி சொன்னுனென்று ரிஷி ஸ்தோத்ரம் பண்ணுகிருர். (ஸீதா ஸமக்ஷம்) என்கையால் – கைங்கர்யத்திற்கு ப்ரதிஸம்பந்தியாயிருத் தல் லக்ஷ்மீவிசிஷ்டனுன பகவானுக்கே யென்று த்வயத்தில் உத்தர கண்டத்தில் சொல்லப்பட்ட அர்த்தம் தெரிவிக்கப்பட்டது. (பரவாந் அஸ்மி) உன்னுடைய அஸ்மிதைபோல் அன்று என்னுடைய அஸ் மிதை. இது பாரதந்த்ர்யமே வடிவாயிருக்கும். இந்தப் பாரதந்த்ர்யத்

இஷ்டமான இடத்தைக் காட்டி இங்கு ஆஶ்ரமம் ஏற்படுத்துவாயென்று ஆஜ்ஞை செய்வாயாக' என்றனன். ராமனும் மஹானுபாவனாகிய லக்ஷ்மணன் சொன்ன வார்த்தைக்கு ஸந்தோஷம் அடைந்து நன்காலோசித்து எல்லாக்குணங்களும் அமைந்த ஓரிடத்தைக் கண்டுபிடித்து அந்த அழகான இடத்தை ஆஶ்ரமத்திற்காகக் கைப்பற்ற நினைத்துத் தன்ஹஸ்தத்தினால் லக்ஷ்மணனது அஞ்ஜலியைப் பிடித்துக்கொண்டு 'நல்ல ஸ்வபாவமுடையவனே! இந்த பிரதேசம் மேடுபள்ளமில்லாமல் ஸமமாகி அழகின் பெருக்கோடு விளங்குகின்றது. இங்குப் புஷ்பித்த வ்ருக்ஷங்கள் நாற்புறமும் நிறைந்திருக்கின்றன. இங்கு விதிப்படி ஆஶ்ரமம் ஏற்படுத்துவாயாக. ஸூர்யகிரணம்பட்டு மலர்ந்தவைகளும் ஸூர்யன்போல் பளபளவென்று ப்ரகாசிப்பவைகளும் என்றும் விஷ்ணு ஸந்நிதானஞ்செய்யப் பெற்றவைகளும் அழகிய பரிமளம் அமைந்தவைகளுமாகிய தாமரைப் புஷ்பங்களோடு கூடி ஸ்ரீ மஹாலக்ஷ்மியின் நித்யஸந்நிதானத்தினால் விளங்குவதுமாகிய தாமரை யோடையொன்று இதோ ஸமீபத்தில் புலப்படுகின்றது. ஆத்மஜ்ஞானியாகிய அகஸ்த்யமஹர்ஷி சொன்னபடி இதோ கோதாவரி நதி வ்ருக்ஷங்கள் புஷ்பித்து நாற்புறமும்

---

தை எவனும் ஆசைப்படுகிறதில்லை. ஆனதுபற்றியே நீயும் கொடுக்கிறதில்லை. லோகம் பின்னருசியாகையால் அதை நான் அபேக்ஷிக்கிறேனென்றபடி. (வர்ஷஶதம்) எல்லாக்காலத்திலும் (பரவாந் அஸ்மி) என்று எப்போதும் பாதந்த்ரனாயிருப்பதாகச் சொல்லுகையால் ஸர்வாவஸ்தைகளிலுமென்று தோற்றுவிக்கப்பட்டது. (க்ரியதாமிதிமாம் வத) என்று ஸாமான்யமாகச் சொல்லுகையால் ஸர்வவித கைங்கர்யங்களும் அபேக்ஷிக்கப்பட்டன. இதனால் த்வயத்தில் உத்தரகண்டத்தில் சொல்லப்பட்ட பலத்தின் ப்ரார்த்தனையும் தோற்றுவிக்கப்பட்டது. தனிஶ்லோகி.

விளங்க ஹம்ஸங்களும் நீர்க்காகங்களும் நிரம்பியிருக்கச் சக்ரவாகங்கள் ப்ரகாசிக்க ரமணீயமாகிப் புலப்படுகின்றது, பார். அழகிய ஸ்வபாவமுடையவனே! இவ்விடத்திற்கு ஸமீபமும் தூரமும் ஆகாமல் மிகவும் உயர்வுற்ற பர்வதங்கள் தோற்றுகின்றன; பார். இங்கு மான்கள் கூட்டங்கூடித் திரிகின்றன. மயில்கள் கலகலவென்று கேகாவென்னும் த்வனியைச் செய்கின்றன. இங்கு அழகான குஹைகள் அனேகம் இருக்கின்றன. மேலும் இந்தப் பர்வதங்களில் புஷ்பித்த வ்ருக்ஷங்கள் நாற்புறமும் கமகமவென்று வாஸித்துக்கொண்டிருக்கின்றன. இங்கு அந்தந்த இடங்களில் பொன்போலவும் வெள்ளிபோலவும் புலப்படுகின்ற கைரிகதாதுக்கள் ராசிராசியாக குவிந்திருக்கையால் சாளரங்கள்போன்ற அழகிய ரேகைகள் எழுதி அலங்கரிக்கப்பட்ட யானைகள் போல் இவை ப்ரகாசிக்கின்றன. ஆச்சாமரங்களும் பனைமரங்களும் பச்சிலை மரங்களும் பேரீச்சமரங்களும் பலாமரங்களும் காட்டு மாமரங்களும் நீர்க்கடப்பைமரங்களும் திமிச வ்ருக்ஷங்களும் ஸுரபுன்னைமரங்களும் மாமரங்களும் அசோகமரங்களும் மஞ்சாடிமரங்களும் சண்பகமரங்களும் தாழைமரங்களும் புஷ்பங்கள் நிறைந்த மல்லி முல்லை முதலிய பூங்கொடிப்புதர்களடர்ந்த பலவகை வ்ருக்ஷங்களும் சந்தனமரங்களும் ஸ்பந்தன மரங்களும் நிலக்கடப்பைமரங்களும் பர்ணஸவ்ருக்ஷங்களும் எலுமிச்சைமரங்களும் தவவ்ருக்ஷங்களும் இரும்பிலிமரங்களும் கருங்காலிமரங்களும் வன்னிமரங்களும் பலாச வ்ருக்ஷங்களும் பாதிரிமரங்களும் இந்தப் பர்வதங்களில் நாற்புறங்களிலும் ப்ரகாசிக்கின்றன. லக்ஷ்மணா! இந்த ப்ரதேசம் புண்யத்தை விளைவிக்கவல்லது. இது பரிசுத்தமாயிருப்பது. இங்கு மிருகங்களும் பக்ஷிகளும் வெகுவாயிருக்கின்றன. இங்கு நம்முடன் வந்த இந்தப் பக்ஷியோடு கூட வாஸஞ்செய்யப்போகிறேன்' என்ற

னன். மிகுந்த மஹாபல முடையவனும் வீரர்களாகிய பகைவர்களைப்பறந்தோடச் செய்யவல்ல பராக்ரமசாலியு மாகிய லக்ஷ்மணன் கார்யங்களில் மிகுந்த சுறுசுறுப் புள்ளவனாகையால் அவன் அந்த அரண்யத்தில் மண் ணைத் தோண்டிச் சுவர்களை வைத்து நீண்ட மூங்கில் களைக் கொண்டு தூண்களை நாட்டி அவைகளின்மேல் குறுக்காகத் தூலங்களை யேற்றி அவற்றின்மேல் வன் னிக்கிளைகளைப் பரப்பித் திடமான கயிறுகளால் இறுக் கிக்கட்டித் தர்ப்பம் நாணல் விழல் இவைகளைக்கொண்டு மேற்கூறையிட்டு மேடுபள்ளமில்லாமல் தரையைச் செவ் வைப்படுத்தி ராமனுக்காக மிகவும் விசாலமானதும் நிரம்ப அழகாயிருப்பதும் மனத்திற்கு மிகவும் இனிப் பைக் கொடுப்பதுமாகிய ஒரு பர்ணசாலையை வாஸஸ் தானமாக ஏற்படுத்தினன். அது மிகவும் பார்க்கத் தகுந்ததும் ஒப்பில்லாத அழகு பொருந்தியது மாயிருந் தது. அப்பொழுது ஸ்ரீமானாகிய அந்த லக்ஷ்மணன் உடனே கோதாவரிக்குப் போய் ஸ்னானஞ்செய்து தா மரைப்பூக்களையும் பழங்களையும் பறித்துக்கொண்டு திரும்பி வந்தனன். அனந்தரம் அவன் வாஸ்துகல்பத் தின்படி வாஸ்துபூஜை நடத்திச் சாந்திகர்மத்தையும் நிறைவேற்றி ராமனுக்குத் தான் நிருமித்த ஆஶ்ரமத் தைக் காட்டினன். ராமன் ஸீதையோடுகூட லக்ஷ்மணன் கட்டின ஆஶ்ரமத்தைப் பார்த்து அப்பர்ணசாலையுள் சென்று அதற்கு மிகவும் ஸந்தோஷம் அடைந்தனன். அங்ஙனம் பரமஸந்தோஷம் அடைந்து அவன் அப்பொ ழுது மிகுந்த ஸ்னேஹத்துடன் புஜங்களை நீட்டி லக்ஷ் மணனை அழுந்தக் கட்டி 'வல்லவனே! நீ செய்த இது மிகவும் பெரிய கார்யம். ஆகையால் உன்னிடத்தில் நான் மிகவும் ப்ரீதியுடையவனாயினன். அதற்காக உனக்குக்

கொடுக்கவேண்டிய [1] பாரிதோஷிகத்திற்காக உன்னை ஆலிங்கனஞ் செய்தனன். லக்ஷ்மணா! [2] எனது அபிப்ராயங்களைத் தெரிந்துகொண்டு எனக்குச் செய்யவேண்டிய கார்யங்களைக் குறியுடன் அறிந்து தர்மத்தையும் தெரிந்துகொண்டு பும்மென்கிற நரகத்தினின்றும் காக்கும்படியான புத்ரனாகிய நீ இருக்கின்றமையால் தர்மஸ்வபாவராகிய என் தந்தை மரணம் அடையவில்லை. எனக்குப் பிழைத்திருப்பதுபோலவே யிருக்கின்றது' என்றனன். இங்ஙனம் ஸம்பத்துக்களின் பெருக்கை வளரச்செய்பவனாகிய ராமன் லக்ஷ்மணனுக்குச் சொல்லி,

1. பாரிதோஷிகம் — பரிசு.

2. 'ஹாவஜ்ஞேந க்ருதஜ்ஞேந யர்மஜ்ஞேநச லக்ஷ்மண। த்வயா புத்ரேண யர்மாத்மா ந ஸம்வ்ருத்தஃபிதா மம' (ஹாவஜ்ஞேந) 'ஸீதையோடுகூட ஏகாந்தத்தில் இருக்க எனக்கு ஸ்தலம் ஏற்படுத்தவேண்டும்' என்று ராமன் சொல்லமாட்டான். ஆனால் நெஞ்சில் நினைத்திருப்பானென்று அதையும் அறிந்தானென்று பொருள். (க்ருதஜ்ஞேந) தசரதர் வெகுநாள் பிள்ளையில்லாமலிருந்து வருந்திப்பெற்ற தன்னிடத்தில் சந்த்ரதாராபலாதிகளை ஆலோசித்து எப்படி க்ருஹத்தை நிருமித்தாரோ அந்த க்ரமமாகவே அவன் செய்த பிரகாரத்தை அறிந்தவனென்றபடி. (யர்மஜ்ஞேந) தான் ராஜபுத்ரனாயிருந்தும் தனக்குத் தகுந்த ஸ்தலம் ஒன்று ஏற்படுத்திக்கொள்ளாமல் ராமன் எப்படி ஸந்தோஷிப்பானோ அப்படியே தான் கைங்கர்யத்திற்கு ஸித்தனாயிருக்க வேண்டுமென்னும் தர்மந் தெரிந்தவன். அல்லது—தான் தம்பியாயினும் வேலைக்காரன்போல் இப்படி சுச்ரூஷைசெய்தானென்னும் டம்பத்திற்காகவன்று, அது தனக்கு உஜ்ஜீவனத்தைக் கொடுக்கவல்ல தர்மமே யாகுமென்னும தர்மந் தெரிந்தவனென்றபடி. (த்வயா புத்ரேண) பும்மென்கிற நரகத்தினின்றுங் காப்பாற்றுகிறவன் புத்ரன். தசரதர் என்னுடைய அபீஷ்டத்தை நிறைவேற்றாமையே நரகமென்று நினைத்தனர். நீ என்னபிமதத்தைச் செய்து அவர்க்கு அந்த நரகம் உண்டாகாதபடி அவரைக் கரையேற்றினாயாகையால் அவர்க்குப் புத்ரனாயிருப்பவன். அன்றியே—'நானிருக்கையில் ராமனுக்கு

அனந்தரம் பலவகைப் பழங்கள் நிறைந்த அத்த ப்ரதே சத்தில் விஷயசாபலமின்றி மிகவும் ஸுகமாக வஸித் திருந்தனன். தர்மஸ்வபாவனுகிய ராமன் ஸீதையும் லக்ஷ்மணனும் தனக்குப் பணிவிடை செய்துவருகையில் கொஞ்சகாலம் அவ்வாஶ்ரமத்தில் தேவலோகத்தில் தேவேந்த்ரன்போல் ஸுகமாக வஸித்திருந்தனன். பதி னைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராமன் ஸீதாலக்ஷ்மணர்களோடு கோதாவரி யில் ஸ்னானஞ் செய்தல்.

மஹானுபாவனுகிய ராமன் அங்ஙனம் அவ்வாஶ்ர மத்தில் ஸுகமாக வாஸஞ்செய்துகொண்டிருக்கையில் சரத்காலஞ் சென்று காமினிகளுக்கும் காமுகர்களுக் கும் இனிதாகிய ஹேமந்தருது வந்தது. ஒருநாள் இரவு கழிந்து கிழக்கு வெளுக்கையில் ராமன் ஸ்னானஞ் செய்வ தற்காக ரமணீயமான கோதாவரி நதிக்குப் போயினன்.

---

ரக்ஷணத்தை நடத்துவேன். எனக்குப் பின்பு ராமனைக் காப்பவன் எவன்?' என்று தசரதருக்கு எப்போதும் மனத்தில் தூக்கம் உண்டு. எனக்கு அவர் போனபின்பு ரக்ஷகனுகி அவருடைய தூக்கத்தைப் போக்கினவன் நீயே யென்றபடி. இப்படிப்பட்ட உன்னால் (யர்மாத் மா) அராவது-தான் ஜீவித்திருக்கும் வரையில் என்னிஷ்டங்களைச் செய்து என்னைக் காக்கும்பொருட்டுத் தண்ணீர்ப்பந்தல் வைத்துப் போகிறவன்போல் உன்னை ஏற்படுத்திப்போயினராகையால் தர்மஸ்வ பாவரேயாகிய (மம பிதா) என் தந்தை (நஸம்வ்ருத்த:)நீயே னெக்குத் தந்தையாகையால் என் தந்தை இல்லாமற்போகவில்லை. அதாவது —உன் மூலமாக எனக்குத் தந்தையால் நடக்கவேண்டிய விருப்பங் களெல்லாம் கைகூடினவாகையால் நீயே தந்தையென்றபடி. 'அஹம் ஸர்வங் க்ரிஷ்யாமி' (நானே உனக்கு எல்லாஞ் செய்கிறேன்) என்று லக்ஷ்மணன் தானும் சொன்னனல்லவா? அன்றியே (நஸம்வ்ருத்த:) பரதனுக்குத் தந்தை எப்படியோ அப்படியே நீ எனக்குத் தந்தையா யினையென்று கருத்து.

வீர்யவானுகிய அவனது தம்பி லக்ஷ்மணன் வணக்கத்துடன் கையில் ஜலகலசத்தை எடுத்துக்கொண்டு ஸீதையோடுகூட ராமனைப் பின்சென்று போய்க்கொண்டே அவனைப் பார்த்து இவ்வசனத்தை மொழிந்தனன்:— 'இனிதாகமொழியுந்தன்மையனே! எது உனக்கு மிகவும் ப்ரியமோ, எதனுல் ஸம்வத்ஸரம் முழுவதும் அலங்காரஞ்செய்யப்பெற்றதுபோல் விளங்குமோ, அப்படிப்பட்ட ஹேமந்தருது வந்தது. இப்பொழுது ப்ராணிகளின் சரீரம் பனியால் சொரசொரப்புற்றிருக்கும். பூமி முழுவதும் பயிர்களால் ப்ரகாசித்துக்கொண்டிருக்கும். ஜலங்கள் தீண்டமுடியாதிருக்கின்றன. அக்னி மிகவும் இனியதாயிருக்கின்றது. ஸத்புருஷர்கள் நவதான்யங்களைப் புசிப்பதற்கு முன்பு செய்யவேண்டிய ஆக்ரயண யாகங்களால் பித்ரு தேவதைகளைப் பூஜித்து அங்ஙனம் யுக்தகாலத்தில் ஆக்ரயணத்தை நிறைவேற்றிக் கல்மஷங்களின்றி ப்ரகாசிப்பர். இப்பொழுது நாட்டுப்புறங்களிலிருப்பவர் மிகுந்த காமோத்ரேகம் உண்டாகப்பெற்றும் பசுவின் பால் ஸம்ருத்தமாயிருக்கப் பெற்றும் விளங்குவார்கள். அரசர்கள் யுத்தயாத்ரையில் நிலைநின்று பகைவரை ஜயிக்க விரும்பித் திரிந்துகொண்டிருப்பார்கள். ஸூர்யன் தென்திசையிலிருக்கின்றமையால் வடதிசை முகத்தில் திலகமில்லாத பெண்பிள்ளைபோல் ப்ரகாசியாதிருக்கின்றது. ஹிமவத்பர்வதத்தில் ஸஹஜமாகவே பனி அதிகமாயிருக்கும்; அப்பர்வதம் இப்பொழுது தக்ஷிணுயனத்தில் ஸூர்யன் தூரப்போயிருக்கையால் அந்தப் பனி மிகவும் அதிகமாயிருக்கப் பெற்று 'ஹிமவத்பர்வதம்' என்னும் பேர் யதார்த்தமாயிருக்கப் பெற்றதாகும். இது நிச்சயம். இப்பொழுது இந்த நாட்களில் மத்யாஹ்னங்கள் இனிதாக வெயில் காயப்பெற்றிருக்கையால் மிகவும் ஸுகமா

யிருக்கும். ஆனதுபற்றியே இப்பொழுது வெயிலில் திரிவது மிகவும் ஸுகமாயிருக்கும். மேலும், ஸூர்யன் பார்வைக்கு அதிகதீக்ஷ்ணமாயில்லாமையால் ஸுகமாயிருப்பான். நிழலும் ஜலமும் சிலுசிலென்றிருக்கையால் உபயோகிக்க இனியவையாயிரா. இப்பொழுது பகல்களில் ஸூர்யன் தீக்ஷ்ணமாயிராமல் மெதுவாயிருக்கின்றனன். ஸூர்யனைச் சுற்றிப் பனி மிகவும் பெய்கின்றது. குளிர் அதிகமாயிருக்கின்றது. காற்று மிகுந்து வீசுகின்றது. அடவியிலுள்ளவர் குளிர்பொறுக்காமல் வெளியில் திரிய மாட்டார்களாகையால் அவை சந்தடியற்றிருக்கின்றன. [1] ஜனங்கள் பனியின் உபத்ரவத்தினால் சரீரங்களைக் குறுக்கிக்கொண்டு மனக்களிப்பற்றிருக்கின்றனர். [2] இப்பொழுது ராத்ரிகளில் மேல்போர்வையில்லாமல் வெறும் வெளிகளில் படுக்கமாட்டார்கள், புஷ்ய மாஸம் ஸமீபித்திருக்கின்றது. புஷ்யநக்ஷத்ரத்தோடு கூடின பூர்ணிமை இந்த ராத்ரிகளில் முக்யமானது, மேலும், அந்தப் புஷ்ய நக்ஷத்ரத்தினாலேயே இந்தக் காலத்து ராத்ரிகளின் அளவு தெரிகின்றது. ராத்ரி காலம் பனி பெய்வதால் சாம்பல் படிந்தாற் போலிருக்கும். காற்று சிலுசிலென்று மிகவும் குளிர்ந்து வீசுகின்றது. ராத்ரிகளில் ஜாமங்கள் மிகவும் நீண்டுவளர்ந்து

---

1. இதனால் ராக்ஷஸர்கள் செய்யும் உபத்ரவந்தோற்றுகிறது.

2. 'நிவ்ருத்தாகாஶஶயநா: புஷ்யநீதா ஹிமாருணா:। ஶீதா வ்ருத்ததராயாமாஸ் த்ரியாமா யாந்தி ஸாம்ப்ரதம்.' (நிவ்ருத்தாகாஶஶயநா:) என்கையால் ஸ்வர்க்கலோகோபத்ரவமும் (வ்ருத்ததராயாமாஸ் த்ரியாமா:) என்று ராத்ரியின் வ்ருத்தியைச் சொல்லுகையால் தாமஸர்களான ராக்ஷஸர்களின் மிகுதியும், இதனால் பகலின் குறுக்கம் தோற்றுகையால் ஸஜ்ஜனக்ஷயமும். 'புஷ்யநீதா:' என்கையால் புஷ்யஶப்தம் கலியைச் சொல்லுமாகையால் கலியை அனுஸரித்தலும் தோற்றுவிக்கப்பட்டன.

வருகின்றன. [1] சந்த்ரனுக்குள்ள இனிமையும் அழகும் இப்பொழுது ஸூர்யனிடத்தில் பற்றியிருக்கின்றன. சந்த்ரன் அந்த இனிமையும் அழகும் மாறப்பெற்றுத் தன் பிம்பத்தில் பனி படியப்பெற்று மூச்சுக்காற்றுபட்டு அழுக்கடைந்த கண்ணுடிபோல் ப்ரகாசியாதிருக்கின்றனன். [2] நிலாநிறைந்த ராத்ரி பனியின் மிகுதியால் வர்ணம் மாறிப் பூர்ணிமையினன்றுங்கூட விளக்கமுறாதிருக்கின்றது. ஆகையால் வெயிலில் வாடிவதங்கின நம் ஸீதைபோல் புலப்படுகின்றதேயன்றி ப்ரகாசிக்கவில்லை. [3] மேல்காற்று இயற்கையாகவே குளிர்ந்திருப்பது. அது இப்பொழுது இந்த ருதுவில் பனி பெய்வதனுல் விடியற்காலங்களில் இரட்டித்த குளிர்ச்சியுடன் வீசுகின்றது. [4] ஸூர்யன் உதயமாகையில் அடவிகள் அப்பொழுதுண்டான ஆவிகளால் முழுவதும் மறைக்கப்பட்டு யவதான்யங்களும் கோதுமைகளும் ஸம்ருத்த

---

1. இதனுல்—ராவணன் ஸர்வஸ்வத்தையும் அபஹரிக்கையில் வருந்தின இந்த்ரனது அவஸ்தை தோற்றுகிறது.

2. இங்கு ஸீதைக்கு ராவணனுல் உண்டாகுஞ் சிறை தோற்றுகிறது.

3. இங்கு மேல் காற்றுல் ராமன் தோற்றுகின்றனன். காற்று இயற்கையாகவே குளிர்ந்திருப்பதுபோல் ராமனும் இயற்கையாகவே கருணையால் குளிர்ந்திருப்பவனென்றும், அது பனியோடுகூடி மேலும் குளிர்ந்திருப்பதுபோல் ராமனுக்கு அவதாரகாலத்தில் தேவதைகள் வந்து வேண்டுகையால் மேலும் க்ருபை கரைபுரண்டதென்றும், விடியற்காலத்தில் அந்தக் குளிர்ச்சி இருமடங்காயிருக்கிறதென்கையால், மீளவும் முனிவர்களின் ஆஸ்ரமங்களுக்கு வருகையில் ராமனுக்கு அந்த க்ருபை இரட்டித்ததென்றும், அது இவ்வண்ணம் வீசுமாறு ராமன் அப்படிப்பட்ட க்ருபையோடு வ்யாபாரஞ் செய்வானென்றும் தோற்றுகிறது.

4. இங்கு ஸூர்யன் உதித்தானென்கையால் ராமன் வரவு தெரிகிறது. ஆவியால் ராமனது க்ருபையும், யவம்முதலிய தான்யங்

மாயிருக்கப்பெற்று க்ரௌஞ்சபக்ஷிகளும் ஸாரஸப்பற வைகளும் கலகல வென்று குலாவப்பெற்று மிகவும் அழ காயிருக்கின்றன. [1] சம்பாப்பயிர்கள் நுனிகளில் நிரம்ப நன்கு பழுத்துப் பேரீச்சங்கதிர்கள்போன்ற கதிர்கள் அமைந்திருக்கையால் பொன்வர்ணமுண்டாகப்பெற்று அந்தக் கதிர்களின் பாரத்தினுல் கொஞ்சம் வணங்கி விளங்குகின்றன. [2] ஸூர்யன் உதயமாகி ஆகாயத் தில் வெகு தூரம் வந்த பின்னும் சிலுசிலென்ற பனி யுடன் கூடியிருக்கையால் கிரணங்கள் குளிர்ந்து வீசப்பெற்றுச் சந்த்ரன்போல் குளிர்ந்தவனுகவே புலப் படுகின்றனன். [3] வெயில் * பூர்வாஹ்ணத்தில் உஷ்ணம் தோற்றுமல் நிலவுபோலிருந்து மத்யாஹ்ஸத்தில் சரீ ரத்திற்கு ஸுகமாகக் காய்ந்து கொஞ்சம் சிவப்பாக வும் கொஞ்சம் வெளுப்பாகவும் பூமியின்மேல் ப்ரகா

---

களின் ஸம்ருத்தியால் தவத்தின் மிகுதியும், க்ரௌஞ்சப்பறவை களின் சப்தத்தால் வேதகொஷமும் தோற்றுகின்றன. ராமன் வரு கையில் ஆஸ்ரமங்கள் தவங்கள் மிகுந்து வேதகோஷங்களும் விளங் கப்பெற்றிருந்தன வென்று கருத்து.

1. இங்கு விளைந்த சம்பாப்பயிர்களால் கிழவர்களும் பொன்வர் ணமான அவற்றின் கதிர்களால் ஜடைகள் தரித்த அவரது சிரஸுக் களும் தோற்றுகின்றன. வ்ருத்தர்களும் தலைவணங்கப்பெற்று உன் னை வணங்குகிறுர்களென்று கருத்து.

2. இதனுல்—'நீ, வந்து வெகுகாலமாயும் ராக்ஷஸர்களின் ப்ர பையால் ஒளிமழுங்கப்பெற்று மெதுவாயிருப்பவன்போல் ஏன் இருக்கின்றனை' என்னும் பொருள் தோற்றுகிறது.

3. இங்கும் 'பனிபெய்கையில் உஷ்ணமின்றி வெயில் காய்வது போல், ராக்ஷஸர்கள் வந்து மேல் விழும்பொழுதும் பராக்ரமஞ் செய் யாதிருத்தல் ராமா ! உனக்குத் தகாது' என்று கீழ்ச்சொன்ன கருத் தே தோற்றுகிறது.

* பூர்வாஹ்ணம்-பகலின் முதல்பாகம்.

சிக்கின்றது. [1] அரண்யங்களின் பூமி, மழை பெய்து நனைந்த புல்சிலங்களையுடையதும் மேல்முதிர்ந்தவெயில் காயப் பெற்றதுமாகி ப்ரகாசிக்கின்றது. [2] காட்டு யானை மிகவும் தண்ணீர் தாஹமுண்டாகப்பெற்று நிரம்பவும் குளிர்ந்து தெளிவான ஜலத்தைச் சிறிது தொட்டுப்பார்த்து ஜலம் பட்டவுடனே அந்தக் குளிர்ச்சியைப் பொறுக்க முடியாமல் துதிக்கையை இழுத்துக்கொள்கின்றது [3] தைர்யமில்லாதவர்கள் யுத்தத்தில் புகாதிருப்பதுபோல் ஜலத்தில் திரியுந்தன்மையுடைய இந்தப் பக்ஷிகள் ஜல ஸமீபத்தில் உட்கார்ந்திருந்தும் குளிருக்குப் பயந்து ஜலத்தில் இழியாதிருக்கின்றன. [4] வனஸமூஹங்கள் இருட்டுப்போல் கனமாகப் பனிஜலம் படுதலால் கட்டுண்டவைபோல் மூடிக்கொள்கையில் புஷ்பங்களுமின்றி மூடுபனியாகிற இருட்டினுல் நாற்புறத்திலும் மூடப்பட்டிருக்கையால் அசையாமல் துப்பட்டிபோர்த்துக் கண்களைமூடி நித்ரை செய்பவைபோல் புலப்படுகின்றன. [5] இப்பொழுது நதிகளில் ஜலம் ஆவியால் மூடப்பட்டிருக்கின்றது. பனிமூட்டத்தினுல் அவற்றிலுள்ள ஸாரஸப்பறவைகள் கண்ணுக்குப் புலப்படாமல் கூவுதலைப்பற்றியே அறியத்தக்கவைகளாயிருக்கின்றன. அவைகளின் கரைகளிலுள்ள மணற்குன்றுகள் பனி

---

1. இங்கு—ராக்ஷஸர்களால் அவமதிக்கப்பட்ட ரிஷிகள் செய்யும் ரோதனமும், அவர்கள் மீது ராமனது க்ருபை பரவுதலும் தோற்றுகிறது.

2. இதனுல்—இந்திரன் ராஜ்யபோகத்தை விரும்பி அதை அனுபவிக்கப் பயப்படுதல் தோற்றுகிறது.

3. இங்கு—ரிஷிகள் ஆஸ்ரமத்திலிருந்தும் ஸமாதியை நடத்த முடியாதிருக்கின்றனரென்று அவர்களது ஸமாதிபங்கம் தோற்றுகிறது.

4. இதனுல் வனவாஸிகளின் தைன்யம் தோற்றுகிறது.

5. இங்கு—ரிஷிகள் ராக்ஷஸபயத்தினுல் வருந்தி மறைந்திருத்தல் தோற்றுகிறது.

யால் நனைந்திருக்கின்றன. [1] பனி விழுதலாலும் ஸூர்யன் நன்றாக வெயில் காயாமையாலும் மிகவும் குளிர்ந்திருக்கையால் மலைகளின்மேல் [2] நிர்மல சிலாதலங்களிலுள்ள ஜலமுங்கூட விஷம்போல் பானஞ் செய்யக்கூடாததாயிருக்கின்றது. தாமரைப் புஷ்பங்கள் பூத்து வெகுகாலமாகையால் கட்டுக் குலைந்து தாதுகளும் காய்களும் சிதறிப் பனி படுவதால் பாழாகிக் காம்புகள் மாத்ரமே மிகுந்திருக்கையால் தாமரைக்குளங்கள் ப்ரகாசியாதிருக்கின்றன. இப்படிப்பட்ட காலத்தில் தர்மாத்மாவும் புருஷஸ்ரேஷ்டனுமாகிய பரதனேவென்றால் உன்னைப் பிரிந்திருக்கையால் துக்கித்து உன்னிடத்திலுள்ள பக்தியுடன் அயோத்யையில் தவஞ்செய்கின்றனன். அந்தப் பரதன் ராஜத்தனத்தையும் தான் ராஜனென்னும் அபிமானத்தையும் விடமுடியாத நானாவிதமான பற்பல போகங்களையும் விட்டுத்துறந்து முனிவேஷத்திற்குரிய ஜடைகளையும் மரவுரிகளையும் தரித்துக் காய்கிழங்குகளைத் தவிர மற்றொன்றையும் புசிக்காமையாகிற ஆஹார நியமமுடையவனாகிப் படுக்கையொன்றுமில்லாமல் குளிர்ந்த வெறுந்தரையில் படுத்துக்கொள்கின்றனன். அவன் இந்த வேளையில் ஸ்நானஞ் செய்யும்பொருட்டுப் பட்டணத்து ஜனங்களெல்லோரும் சூழ்ந்து வரப்பெற்று ஸரயூநதிக்குப்போவான். [3] அவன் மிகவும் ஸுகமாக வளர்ந்தவன்; மிக்க மெதுவான சரீர

1. இங்கு ராக்ஷஸபாதையும், ராக்ஷஸர் விஷயத்தில் ராமன் ப்ரயத்னஞ் செய்யாதிருத்தலும், அதனால் ரிஷிகள் துக்கித்திருத்தலும் தோற்றுகின்றன.

2. அழுக்கின்றிய கல் ப்ரதேசங்கள்.

3. 'அத்யந்தஸுகஸம்வ்ருத்தஸ் ஸுகுமாரஸ்ஸுகோசித:। கத²ந்ந்வபரராத்ரேஷு ஸரயூமவகா³ஹதே.' (அத்யந்தஸுகஸம்வ்ருத்த:) ராஜன் மிகவும் சீராட்டிக்கொண்டு போருகையில் ஸுகமாக வளர்ந்தவன். நீயும் பாராட்டிக்கொண்டு வந்தமையால் விரம்பவும் ஸுகமாக வளர்ந்தவன். (ஸுகுமார:) உன்கண்பார்வை படவும்

முடையவன்; ஸுகங்களையே அனுபவிக்கத் தகுந்தவன். இப்படிப்பட்டவன் ராத்ரியின் பின்வேளைகளில் எழுந்து எப்படி ஸரயூநதியில் ஸ்னானஞ்செய்வான்? அவன் தாமரையிதழ்போன்ற கண்களையுடையவன்; வீரன்; கறுத்த தேஹகாந்தியுடையவன். அவனது இடை நுண்ணியதாயிருக்கும். அவன் மிகவும் பூஜிக்கத்தகுந்தவன்; தர்மங்களை யறிந்தவன்; ஸத்யத்தையே பேசுந்தன்மையன்;

---

பொருத ஸௌகுமார்யமுடையவன். (ஸுகோசிதஃ)உன்னோடுகூட ஸுகமாயிருப்பதற்குத் தகுந்தவனேயன்றி உன்னைப் பிரிந்திருக்கத் தகாதவன். இப்படிப்பட்ட பரதன், (கயந்து) எப்படி? இங்கு லக்ஷ்மணன் தன் ஸ்திதியைப்போலவே பரதனது நிலையுமென்று நினைத்துச் சொல்லுகின்றனன். தனக்கு ராமவிரஹமில்லாமையால் அந்த ருதுவின் குளிர்ச்சியைத் தான் அனுபவிக்கின்றனன். பரதனுக்கோ ராமவிரஹத்தால் மனத்தில் குதிர்ப்பாடில்லை, 'உபதப்தோதகா நத்யஃ' (நதிகளும் ராமவிரஹத்தால் ஜலம் கொதிக்கப் பெற்றிருந்தன) என்கிறபடியே நதிகளும் கொதித்திருக்கையால் விரஹத்தால் பரிதபிக்கின்ற பரதனுக்கு அங்ஙனம் கொதித்துக்கொண்டிருக்கிற ஸரயூநதியில் முழுகுவதால் குளிரின் ப்ரஸக்தியே நேராது. இதை அறியாமல் தன்னைப்போலவே பரதனையும் நினைத்து 'அவன் அந்த நதீஸ்னானத்தில் குளிரின் உபத்ரவத்தை எப்படி அனுபவிக்கிறானோ?' என்று வருந்துகின்றனன். (கயந்து அபராத்ரேஷு) புதிதாகவிதவைகளான ஸ்த்ரீகள் ஜனங்கள் எழுந்து ஸஞ்சரிப்பதற்கு முன்னமே அவரது முகத்தைப் பாராமலே நதிக்கு எப்படி போவார்களோ, அப்படியே தானும் கைகேயியின் வயிற்றில் பிறந்தமையால் 'இவனைப் பற்றியே இவ்வளவு அனர்த்தம் நேரிட்டது' என்று சொல்லிக்கொள்வார்களென்று பயந்து விடிய ஜாமத்திற்கே எழுந்து அவர் கண்களில் படாமல் நதிக்குப் போகின்றானென்றுபொருள். (ஸரயூமவகாஹதே) ராமவிரஹத்தால் வெறுப்புற்று ஸரயு மிக்க வேகத்துடன் பாய்ந்துகொண்டிருக்கும்பொழுதும் பயமில்லாமல் அதில் முழுக்கிடுகின்றனன். (அவகாஹதே) மூழ்கி மறுபடியும் எழுந்திருக்கச் சக்தியில்லாமல் நண்பர்கள் எழுந்திருக்க எடுக்கும் வரையில் ஜலத்திலேயே இருப்பானென்று கருத்து.

அவன் லஜ்ஜையினல் செய்யத் தகாத கார்யங்களினின்று திரும்புந் தன்மையன்; ஜிதேந்த்ரியனும் இனிதாகப் பேசுந்தன்மையனுமாகி மிகவும் அழகாகப் புலப்படுவான்; மேலும், நீண்ட புஜதண்டங்களுடையவனுகிப் பகைவரைப் பறந்தோடச் செய்பவன்; இங்ஙனம் ஸமஸ்த போகங்களையும் அனுபவிக்கத் தகுந்தவனுயினும் நானுவித போகங்களையெல்லாம் விட்டுப் பெரியோனுகிய உன்னையே எல்லாவிதத்திலும் மூன்று கரணங்களாலும் பற்றியிருக்கின்றனன். [1] மஹானுபாவனுகிய உன் தம்பி பரதன், நீ அரண்யத்தில் முனிவேஷம் தரித்திருப்பினும் தானும் உன்னைப்போலவே முனிவேஷம் தரித்து உன்னை அனுஸரிப்பதனுல் ஸ்வர்க்கத்தை வென்றனன். 'மனிதர்கள் தாயின்ஸ்வபாவத்தை அனுஸரிப்பார்களேயன்றித் தந்தையின் ஸ்வபாவத்தை அனுஸரிக்க மாட்டார்கள்' என்றுஒரு பழமொழி உண்டல்லவா? பரதன் தாயின் ஸ்வபாவத்தை அனுஸரியாமல் தந்தையின் ஸ்வபாவத்தையே அனுஸரித்திருப்பதுபற்றி அந்தப் பழமொழியைப் பொய்யாக்கிவிட்டனன். [2] எவனுக்குத் தசரதமஹாராஜன் பர்த்தாவோ, புதல்வன் ஸத்புருஷனுகிய பரதனே, அப்படிப்பட்ட நந்தாயான கைகேயிக்கு

---

1. 'ஜிதஸ் ஸ்வர்ஶஸ்தவ ஹீராத்ரா ஸரதேந மஹாத்மநா। வநஸ்யமபி தாபஸ்யே யஸ்த்வாமநுவிதீயதே' பரதன் 'நீ அரண்யத்திலிருந்தபோதிலும் உன்னைப்போலவே தானும் முனிவேஷம் தரித்து உன்னை அனுஸரித்திருக்கிறுனுகையால் (ஸ்வர்ஶ:) உன்னுடைய ப்ராப்திக்கு விக்னமாகிய ஸ்வர்க்கம் (ஜித:) திரஸ்கரிக்கப் பட்டது. துக்கத்தின் மிகுதியால் தேஹவியோகம் நேரும்படியான அவஸ்தையைப் பெற்று ஸ்வர்க்கம் கிடைக்குமாயினும் அது உன் தர்ஶனத்திற்கு விக்னமாகையால் அதையும் திரஸ்கரித்து உனக்காக ப்ராணன்களை வைத்துக்கொண்டிருக்கிறுனென்று பொருள்.

2. லக்ஷ்மணன், விடியஜாமத்தில் எழுந்திருந்துராமனும்ஸீதையும் குளத்தில் ஸ்நானம் செய்தல் முதலான கஷ்டங்கள் அனுபவிப்பதைக்

இப்படிப்பட்ட க்ரூரஸ்வபாவம் எப்படி உண்டாயிற்று?' என்றனன். இங்ஙனம் தர்மிஷ்டனாகிய லக்ஷ்மணன் ராமனிடத்திலுள்ள ஸ்னேஹத்தினால் சொல்லிக்கொண்டிருக்கையில், ராமன் அங்ஙனம் தாயான கைகேயியை நிந்தித்ததற்குப் பொறுக்கமுடியாமல் லக்ஷ்மணனைப் பார்த்து 'என்னப்பனே! நீ எவ்விதத்திலும் நடுத்தாயை நிந்திக்கலாகாது. இதுவரையில் சொல்லிக்கொண்டு வந்தனையே, அந்த இக்ஷ்வாகுகுலநாதனாகிய பரதனது ஸமாசாரத்தையே சொல்லுவாயாக. திடமான விரதமுடைய நான் வனவாஸஞ் செய்யவேண்டுமென்று நிச்சயித்துக்கொண்டிருந்தபோதிலும் பரதனிடத்திலுள்ள ஸ்னேஹவசத்தினால் பரிதபித்து அவனை நினைக்கும்பொழுதெல்லாம் என்புத்தி மிகவும் சபலப்படுகின்றது. பரதனது வார்த்தைகள் இனியவைகளும் மதுரங்களுமாகி என் மனத்தை விட்டுப்பிரியாதிருக்கின்றன. அவை அம்ருதம்போல் இப்பொழுதும் நினைத்துக் கொள்கையில் என் மனத்தைக் களிக்கச்செய்கின்றன. ரகுகுல குமாரனே! [1] மஹானுபாவனாகிய பரதனோடும் சத்ருக்ன

---

கண்டு மிகவும் வருந்திக் கைகேயியை நிந்திக்கத் தொடங்கி, திடீரென்று நிந்தித்தால் ராமனுக்குக் கோபம் வருமென்று முதலில் ஹேமந்தருதுவின் ஸ்வபாவத்தை ப்ரஸ்தாவித்து அந்த ப்ரஸங்கத்தில் பரதனைத் தொடர்ந்து அவன்மூலமாகக் கைகேயியை நிந்திக்க வந்தானென்று இங்கு ஊஹிக்கவேண்டியதாயிருக்கிறது.

1. 'கதாந்வஹம் ஸமேஷ்யாமி பரதேந மஹாத்மநா। ஶத்ருக்நேந ச வீரேண த்வயா ச புருஷர்ஷப' இங்கு—பரதன் தன்னோடு கூட இராமையால் ஸீதாலக்ஷ்மணர்கள் தன்னோடுகூட இருந்தும் பரதனிடத்திலுள்ள ப்ரீதியின் மிகுதியால் அவரும் தன்னோடுகூட இல்லைபோலவே நினைத்துச்சொல்லுகிறான் ராமன். (த்வயாச) என்ற இடத்திலுள்ள (ச) காரத்தினால் ஸீதையையும் கூட்டிக் கொள்ளவேண்டும். நண்பர்கள் அனைவரும் கூடியிருப்பினும் ஒரு

னோடும் வீரனாகிய உன்னோடும் ஸீதையோடும் உங்க ளெல்லாருடனும் ஒன்றாக எப்பொழுது நான் கூடி வாழப் போகிறேனோ?” என்றனன். இங்ஙனம் பரதனிடத் திலுள்ள ஸ்னேஹத்தினால் பல வாக்யங்களைச் சொல்லிக் கொண்டு ராமன் கோதாவரிக்குச் சென்று ஸீதையோ டும் லக்ஷ்மணனோடும் அங்கு ஸ்நானஞ் செய்தனன். அனந்தரம் அவர்கள் பித்ரு தேவதைகளுக்கும் தேவ தைகளுக்கும் ஜலதர்ப்பணஞ் செய்து உதித்த ஸூர் யனையும் ஸந்த்யை முதலான தேவதைகளையும் மனஊக் கத்துடன் மந்த்ரங்களைச் சொல்லி உபஸ்தானஞ் செய் தனர். ராமன் ஸ்நானத்தை நிறைவேற்றி ஸீதையோ டும் லக்ஷ்மணனோடுங் கூடி, ஸ்நானஞ்செய்து பார்வதி யோடும் நந்தியோடும் கூடின பகவானாகிய ருத்ரன்போல் ப்ரகாசித்தனன். பதினாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

சூர்ப்பணகை ராமனது ஆஸ்ரமத்திற்கு வந்து தன்னைப் பார்யையாக அங்கீ கரிக்கும்படி ராமனை வேண்டுதல்.

[1] ஸ்நானஞ் செய்த பின்பு ராமனும் ஸீதாலக்ஷ்மணர் களும் கோதாவரீதீரத்தினின்றும் புறப்பட்டுத் தமது தபோவனத்திற்குப் போயினர். ராமன் லக்ஷ்மணனோடு கூட இங்ஙனம் தபோவனத்திற்குச் சென்று ப்ரஹ்ம

---

கண்பனைப் பிரிந்திருப்பானாயின் நண்பர்களெல்லோரையும் பிரிந் தாற்போலவே வருத்தம் உண்டாகும். அந்த ஒருவனோடு கலந்தி ருப்பினும் நண்பர்களெல்லாரோடுங் கலந்திருந்தாற்போலவே மனக் களிப்புண்டாகுமென்று கருத்து.

1 இங்ஙனம் ராமனது தபோவிசேஷத்தைத் தெரிவிக்க,முத லில் வந்த ஹேமந்தருதுவை வர்ணித்து, பிறகு மூன்று ஸம்வத் ஸரங்கள் நடக்கையில் ஸமஸ்தராக்ஷஸவதத்திற்கும் மூலமான சூர்ப் பணகை வருகையில் அவளது வ்ருத்தாந்தத்தைத் சொல்லுகிறார்.

யஜ்ஞும் முதலிய பூர்வாஹ்ணகார்யங்களை நிறைவேற்றிப் பர்ணசாலையுள் ப்ரவேசித்தனன். அங்கு ராமன் மஹர்ஷிகளால் பூஜிக்கப்பட்டுத் தம்பியாகிய லக்ஷ்மணனுடன் ஸுகமாக இருந்து பலவகையான கதைகளைச் சொல்லிக் கொண்டிருந்தனன். மஹாபாஹுவாகிய அந்த ராமன் பர்ணசாலையில் ஸீதையுடன் உட்கார்ந்து சித்ரா நக்ஷத்ரத்துடன் கூடின சந்த்ரன்போல் ப்ரகாசித்துக் கொண்டிருந்தனன். அங்ஙனம் ராமன் பலவித கதைகளைச் சொல்லிக்கொண்டு அவற்றில் மனஞ் செல்லப்பெற்றுப் பர்ணசாலையில் உட்கார்ந்திருக்கையில் ராக்ஷஸி ஒருத்தி திடீரென்று அவ்விடம் வந்தனள். அவள் சூர்ப்பணகையென்னும் பேருடையவள்; பத்துத் தலையனாகிய ராவணனென்னும் ராக்ஷஸனுக்கு உடன் பிறந்தவள். அவள் தேவதைபோல் விளங்குகின்ற ஸ்ரீராகவனை அருகே வந்து பார்த்தனள். ஸிம்ஹம் போல் அகன்றழகிய மார்புடையவனும் பருத்த புஜ தண்டங்களையுடையவனும் தாமரையிதழ்போன்ற கண்களையுடையவனும் முழந்தாள் வரையிலும் நீண்ட பாஹு தண்டங்களையுடையவனும் பளபளவென்று விளங்குகின்ற முகமண்டல முடையவனும் பார்க்கப்பதினாயிரங் கண்கள் வேண்டும்படி மிகவும் இனிய காட்சியுடையவனும் யானைபோல் கம்பீரமான நடையிடுக்குடையவனும் ஜடாமண்டலந் தரித்தவனும் மிக்க ஸுகுமாரனாயிருந்தும் மிகுந்த பலமுடையவனும் ராஜலக்ஷணங்களெல்லாம் அமைந்தவனும் கருநெய்தல்போல் கறுத்த மேனியுடையவனும் மன்மதனைப்போல் அழகான தேஹ காந்தியுடையவனுமாகி தேவேந்த்ரன்போல் விளங்குகின்ற ஸ்ரீராமனைப் பார்த்து, அந்த ராக்ஷஸி காமமோஹங்கொண்டனள். ராமன் அழகான முகமுடையவன்

சூர்ப்பணகையோ விகாரமான முகமுடையவள். அவனது இடை வட்டமாகிச் சிறுத்தும், கண்கள் அகன்றும், கேசங்கள் மழமழத்துக் கறுத்து நீண்டு நிகுநிகுத்துமிருக்கும். அவளோ விகாரமான கண்களும் செம்பட்டை மயிர்களுமுடையவள். ராமன் ப்ரீதியை விளைவிக்கும்படியான உருவமும் மேகம்போல் கம்பீரமான கண்டஸ்வரமும் உடையவன். அவளோ விகடமான உருவமும் பயங்கரமான குரலுமுடையவள். ராமன் யௌவனப்பருவமுடையவன்; மேலும் அழகாயிருப்பவன். அவள் பயங்கரமாயிருப்பவள்; பின்னும் மூப்புடையவள். ராமன் அழகாகப் பேசுந்தன்மையன். அவள் க்ரூரமாகப் பேசுந்தன்மையள். ராமன் ஸதாசாரமுடையவன். அவள் மிகவும் கெட்ட நடத்தையுடையவள். ராமன் இனியனாகப் புலப்படுவான். அவள் பார்க்க வழங்காதிருப்பாள். இப்படிப்பட்ட ரூபலாவண்யாதிகளையுடைய ராமனைப் பார்த்து ஸர்வவிகாரதூஷிதையாகிய அந்த ராக்ஷஸி, மன்மதாவேசம் மிகப்பெற்று ஒன்றுந் தோன்றப் பெறுமல் 'ஓய்! நீ தாபஸவேஷத்துடன் ஜடை தரித்திருக்கின்றனே. காமுகன்போல் பார்யையோடு கூடியிருக்கின்றனே. மேலும் க்ஷத்ரியனைப்போல் வில்லையும் பாணங்களையும் பிடித்திருக்கின்றனே. இப்படிப்பட்ட நீ ராக்ஷஸர்கள் திரிகிற இந்த ப்ரதேசத்திற்கு எப்படி வந்தனே? என்ன கார்யத்தைப்பற்றி நீ இவ்விடம் வந்தனே? இதையெல்லாம் எனக்கு உள்ளபடியே சொல்லவேண்டும்' என்றனள். பரந்தபனாகிய ராமன், சூர்ப்பணகை இங்ஙனம் சொல்லக்கேட்டுக் கபட புத்தியில்லாதவனாகையால் தன் வ்ருத்தாந்தத்தையெல்லாம் சொல்லத் தொடங்கினன். ராமனுக்கு எப்பொழுதும் பொய்யுரைப்பது இஷ்டமன்று. விசேஷித்துத் தபோவனத்தில் தாபஸதர்மத்தை அவலம்பித்திருக்கும்பொழுதும்

அதிலும் ஸ்த்ரீகளின் முன்னிலையிலும் அங்ஙனம் பொய்யுரைப்பது எள்ளளவும் இஷ்டமன்று. ராமன் அவளைப்பார்த்து 'பராக்ரமத்தால் தேவதைகளை நிகர்த்த தசரதனென்னும் ஓர் அரசன் இருந்தனன். நான் அவனுக்குப் பெரிய குமாரன். என்னை ராமனென்று ஜனங்கள் அழைப்பார்கள். இவன் என்னுடைய தம்பி. இவன் லக்ஷ்மணனென்னும் பேருடையவன். இவன் என்னை எப்பொழுதும் நியமத்துடன் அனுவர்த்தித்திருப்பான். இவள் என்னுடைய பார்யை; விதேஹராஜனுடைய புதல்வி; ஸீதையென்று பிரஸித்தி பெற்றவள். நான், என் தந்தை மஹாராஜரது ஆஜ்ஞையின்படி தாயான கைகேயி ஏவுகையில் பிதாவின ஆஜ்ஞையைப் பரிபாலனஞ் செய்யவேண்டுமென்னும் தர்மத்தை ஆசரிக்க விரும்பித் தபோரூபமான தர்மத்தைப் பெறுதற்கு வனத்தில் வாஸஞ்செய்ய வந்தனன். உன்னைத் தெரிந்து கொள்ள விரும்புகின்றனன்; சொல்வாயாக. நீ யார்? யாருடையவள்? இவ்வளவு மனோஹரமான உருவத்தை யுடைய நீ எனக்கு ராக்ஷஸியாகத் தோற்றவில்லை. நீ இங்கு எதுக்காக வந்தனை? இவ்விஷயத்தையெல்லாம் எனக்கு யதார்த்தமாகச் சொல்லவேண்டும்' என்று வினவினன். அந்த ராக்ஷஸி, ராமன் சொன்னதைக் கேட்டுக் காமவெறி மீறப்பெற்று அவனைப் பார்த்து 'ராமா! நான் உள்ளபடி என் விஷயத்தையெல்லாம் சொல்லுகிறேன். என் வார்த்தையைக் கேட்பாயாக. நான் சூர்ப்பணகையென்னும் ராக்ஷஸி. நினைத்தபடி வடிவங்கொள்ள வல்லவள். எல்லோரும் என் பேரென்றால் பயப்படுவார்கள். நான் ஒருத்தியாகவே இவ்வரண்

1. சூர்ப்பணகை நினைத்தபடி வடிவங் கொள்ளவல்லளாகையால் ராமனுக்காக அழகிய உருவந் தரித்திருந்தாள். அவளைக் கவி விகாரரூபமாக வர்ணிப்பது அவளது வாஸ்தவமான ரூபத்தைப் பற்றியென்று தெரிகின்றது.

யத்தில் திரிந்துகொண்டிருக்கிறேன். வீரனும் விஸ்ரவஸ்ஸின் குமாரனும் மிகுந்த பலமுடையவனும் ராக்ஷஸர்களுக்கெல்லாம் ராஜனுமாகிய ராவணன் எனக்கு உடன் பிறந்தவன். அவனை நீயுங் கேட்டிருக்கக் கூடும். எப்பொழுதும் மிகுந்த நித்ரையில் ஆழ்ந்திருக்கிற மஹாபலனாகிய கும்பகர்ணனும் எனக்கு உடன் பிறந்தவன். தர்மாத்மாவான விபீஷணனும் எனக்கு உடன் பிறந்தவன். ஆனால் அவனுக்கு ராக்ஷஸ சேஷ்டைகள் இல்லை. யுத்தங்களில் ப்ரஸித்தமான பராக்ரமமுடைய கரதூஷணர்கள் எனக்கு உடன் பிறந்தவர்களென்று பயப்படவேண்டாம். நான் அவர்களெல்லோரையும் மீறி என்னிஷ்டப்படி நடந்துகொள்வேன். ஆகையால் அவர்களெல்லோரையும் விட்டு என்றும் காணப்படாதவனும் புருஷஸ்ரேஷ்டனுமாகிய உன்னை என்மனத்தில் பர்த்தாவாகப் பெற விருப்பமுற்றனன். 'ஸீதை எனக்கு இருக்கின்றாளே' என்னவேண்டாம். நான் மஹாப்ரபாவமுடையவள். என்னிஷ்டப்படி பலத்தைப் பெற வல்லவள். நினைத்தபடி வரவும் போகவும் திறமையுடையவள். ஆகையால் எனக்கு வெகுகாலம் பர்த்தாவாயிருப்பாயாக. இந்த ஸீதையைக்கொண்டு என்ன செய்யப் போகின்றனை? இவள் எதுக்கும் வழங்க மாட்டாள். இந்த ஸீதை விகாரமாயிருக்கின்றனள்; குரூபமுடையவள். இவள் உனக்குத் தகுந்தவளன்று. நானே உனக்குத் தகுந்தவள். என்னைப் பார்யையாக அங்கீகரிப்பாயாக. விரூபையும் துஷ்டாசாரமுடையவளும் பயங்கரமாயிருப்பவளும் தாழ்ந்த வயிறுடையவளுமாகிய இந்த மனுஷ்யஸ்த்ரீயை உன் தம்பியோடுகூடப் பக்ஷித்து விடுகின்றனன். அழகனே! பிறகு நீ என்னுடன் கூடிப் பர்வதசிகரங்களையும் நானாவிதவனங்களையும் பார்த்துக்கொண்டு தண்டகாரண்யத்தில் விளையாடலாம்' என்றனள். பேசுவதில் வல்லனாகி ராமன்



1322. சூர்ப்பணகை ராமனிடம் வந்து தன்னை மணம்புரிய வேண்டுதல்.

அவள் இங்ஙனஞ் சொல்லக்கேட்டு மயக்குகின்ற கண்களையுடைய அவளைப் பார்த்துச் சொல்லத் தொடங்கினன். பதினேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராமனது ஆஜ்ஞையால் லக்ஷ்மணன் சூர்ப்பணகையின் காதுமூக்குகளை அறுத்தலும், அவள் கரனிடம் போதலும்.

பிறகு ராமன் காமபாசத்தால் கட்டுண்டு வருந்துகின்ற சூர்ப்பணகையைப் பார்த்துப் பொருள் தெளிவாயிருக்குமாறு மெதுவான வார்த்தைகளைச் சிரித்தமுகத்துடன் மொழிந்தனன்:—'அம்மே! நான் ஒருத்தியை மணம் புரிந்திருக்கின்றனன். 'அவளை விட்டுத் தொலைக்கலாகாதா?' என்பாயாயின், அவள் எனக்கு ப்ரியமானவள். 'ஆயினும் பல பார்யைகள் இருக்கலாகாதோ?' என்பாயாயின், உன்னைப்போன்ற பெரும்பெண்டிர்களுக்குச் சக்களத்தி இருப்பது மிகவும் துக்கத்திற்கிடமாயிருக்கும். இவன் என் தம்பி. இவன் லக்ஷ்மணனென்னும் பேருடையவன்; ஸதாசாரமுடையவன்; மிக்க அழகாயிருக்கின்றனன். [1] சோபையமைந் திருக்கின்றனன். இவன் பார்யையை அழைத்துக்கொண்டுவரவில்லை. மேலும் இவன் மிகவும் பராக்ரமசாலி. இவன் வெகுநாளாய் பார்யாஸுகத்தை அனுபவிக்கவில்லை. ஆகை

---

1. 'ஶ்ரீமாநக்ருததாரஶ்ச லக்ஷ்மணோ நாம வீர்யவாந்। அபூர்வீ ஹார்யயாசார்த்தீ தருண: ப்ரியதர்ஶந:! அநுரூபஶ்ச தே ஹர்த்தா ரூபஸ்யாஸ்ய ஹவிஷ்யதி'. ராமன் 'அந்ருதம் நோக்தபூர்வம் மே நச வக்ஷ்யே கதாசந' என்கிறபடியே பரிஹாஸத்திலும் பொய்புரையாநுகையால் (அக்ருததார:) என்பதற்கு மணம் புரியாதவனென்று பொருள் கூறுவது யுக்தமன்று. ஆனது பற்றியே (பார்யையைத் தன்னோடுகூட அழைத்துக்கொண்டு வரவில்லை) என்று பொருள் கூறப

யால் இவனுக்குப் பார்யை வேண்டியதாயிருக்கின்றது. மேலும், இவன் யௌவனமுடையவனும் அழகிய உருவமுடையவனுமாகையால் உன் உருவத்திற்குத் தகுந்த கணவனுவான். [1] உனது இடையின்பின்புறம் மிகவும் அழகாயிருக்கின்றது. உன்கண்கள் விசாலமாயிருக்கின்றன. சூர்ப்பணகே! ஆகையால் மேருபர்வதத்தை ஸூர்யகாந்தி அடைவதுபோல் நீ என் தம்பியைக் கணவனுகப்

---

பட்டது. (அபீர்வீ') 'பூர்வீ' என்றால் முன்பு பார்யாஸுகம் அனுபவித்தவன், 'அபூர்வீ' என்றால் வெகுகாலமாய் பார்யாஸுகத்தை அறியாதிருப்பவனென்று பொருள். அதுவும் இங்குப் பொருந்தும் பொருட்டு இங்குத் தன் பார்யையிடத்தில் வெகுநாளாய் ஸுகம் அனுபவியாதிருக்கின்றனனென்று பொருள் கூறப்பட்டது. ஒரு ஸ்த்ரீயிடத்திலும் இவன் ஸுகமறியாதவனென்று சூர்ப்பணகைக்குத் தோற்றும் பொருட்டு இங்ஙனஞ் சொல்லப்பட்டது. (ஹார்யயாசார்யீ) பார்யையை வேண்டுகின்றனன். தன் பார்யையை வேண்டுந்தன்மையனென்று ராமன் கருத்து. எவளேயாயினும் ஒருத்தியைப் பார்யையாக விரும்புகின்றவனென்று மேலுக்குத் தோன்றும் பொருள். (தே அஹர்த்தா) என்றுபதம் பிரித்து உனக்குப் பர்த்தா ஆகமாட்டானென்று உட்கருத்து. (ரூபஸ்யாஸ்ய) உனது அழகான ரூபத்திற்கென்று மேலுக்குத் தோற்றும் பொருள். இந்தக்குரூபத்திற்கென்று உட்கருத்து.

1. 'ஏநம் ஹஜ விஶாலாக்ஷி ஹர்த்தாரம் ஹீ ராதரம்மம| அஸபத்நா வராரோஹே! மேருமர்க்கப்ரஹா யயா.' (விஶாலாக்ஷி) குண்டாயிருக்கையால் விசாலாக்ஷியென்று நிந்தையும் தோற்றுகிறது. (மேருமர்க்கப்ரஹா யயா) ஸூர்யகாந்தி மேருவை அடைந்து திரும்புவது போல் இவனிடம் போய்த் திரும்புவாயென்று உட்கருத்து. ராமன் தயாளுவாகையால் காமமோஹத்தால் தன்னிடம் வந்த ஸ்த்ரீயை உடனே திக்கரித்து துக்கப்படுத்தப் பொருமல் பரிஹாஸ வார்த்தைகளைச் செய்தானென்று தெரிகிறது. கோவிந்தாஜர். இதில்—(ஹர்த்தாரம் ஹஜ) என்றவிடத்தில் நம்மெல்லோர்க்கும்போஷகனுக அறிவாயென்று மஹேஶ்வரதீர்த்தர்.

பெறுவாயாக. உனக்குச் சக்களத்தியில்லாமல் ஸுக மாயிருக்கும்' என்றனன். அந்தச் சூர்ப்பணகை காம மோஹங்கொண்டிருப்பது பற்றி ராமன் சொன்னதைக் கேட்டு உடனே சீக்ரமாக அவனை விட்டு லக்ஷ்மணனைப் பார்த்து 'எனது அங்கம் உஷ்ணகாலத்தில் குளிர்ந்தும் குளிர்காலத்தில் உஷ்ணமாகவும் இருக்கும். மேலும், நான் பர்த்தாவிடத்தில் அனுராகமுடைய உத்தமகாந் தையாயிருப்பேன். நான் உன்னுடைய இவ்வழகுக்குத் தகுந்த பார்யையாயிருக்கின்றனன். நீ என்னுடன் கூடி ஸுகமாக இந்தத் தண்டகாரண்யம் முழுவதும் விளையாடிக்கொண்டிருப்பாயாக' என்றனள். ராக்ஷஸி இங்ஙனஞ் சொல்லுகையில் அது கேட்டு லக்ஷ்மணன் பேசுவதில் வல்லனாகையால் புன்னகை தோற்ற, முறம் போன்ற நகங்களையுடைய அந்த ராக்ஷஸியைப்பார்த்து, யுக்தமாயிருக்கும்படி மொழிந்தனன்:—'தாமரைப்பூவை நிகர்த்த தேஹகாந்தியுடையவளே! நான் தாஸன் (வேலைக்காரன்). தாஸனாகிய எனக்குப் பார்யையானால் நீயும் தாஸியாகவேண்டும். இங்ஙனம் ஆவதற்கு ஏன் விரும்புகின்றனை? 'யார்க்குத் தாஸன்' என்கிறாயோ? என் தமையனே எனக்கு நாதன். ஆகையால் நான் அவனுடைய தாஸன் [1] நீ அகன்ற கண்களுடையவள். இப்படிப்பட்ட நீ ஸர்வார்த்தங்களும் ஸம்ருத்தயா

1. 'ஸம்ருத்தியார்யஸ்ய விஜியார்யா முஷிதாமலவர்ணிநீ। ஆர்யஸ்ய த்வம் விஶாலாக்ஷி ஹார்யா ஹவ யவீயஸீ ।। ஏநாம் விரூபாமஸதீம் கராலாந் ஶீர்ணதோதரீம்। ஹார்யாம் வ்ருஜியாம் பரித்யஜ்ய த்வாமே வைஷ ஹஜிஷ்யதி.' இதற்கு வாஸ்தவார்த்த மெப்படியெனில்-(விஜியார்யா) இங்கு' அர்த்தசப்தம் 'அர்யோஉவியேயரைவஸ்து ப்ரயோ ஜநநிவ்ருத்திஷு' என்ற நிகண்டுவின்படி நிவ்ருத்தியைச் சொல்லு கிறது. நிவ்ருத்தியாவது திரும்பிப்போதல். விதித்தமான நிவ்ருத்தி யையுடையவள். ப்ரயோஜனங்களெல்லாம் கைகூடப்பெற்றவனாகிய ராமனிடத்தினின்றும்உனக்குத் திரும்பிப்போவதுவிதித்தமென்றபடி. (அமுஷிதாமலவர்ணிநீ) என்று பதம் பிரித்துக்கொள்க. திரும்புவதால்

யிருக்கபெற்றவனும் எனக்குப் பெரியோனுமாகிய ராம னைக் கைப்பற்றிக் கருத்தெல்லாமீடேறப்பெற்று ஸந் தோஷம் அடைந்து அந்த ஸந்தோஷத்தினால் நிர்மல மான மேனியின் வர்ணமுடையவளாகி இளைய பார்யை யாயிருப்பாயாக. விகாரமான ரூப முடையவளும் ஆனது பற்றியே புகழத்தகாதவளும் பயங்கரமாகப் புலப்படுகின்றவளும் தாழ்ந்த இடையுடையவளும் வயது சென்றவளுமாகிய இந்த ஸீதையை விட்டு இவன் உன் னையே பார்யையாகப் பெறுவான். [1] சூர்ப்பணகே! நீ உஷ்ணகாலத்தில் ஸுகமான குளிர்ச்சியும் குளிர்காலத் தில் ஸுகமான உஷ்ணமும் அமைந்த அங்கமுடையவ ளும் பர்த்தாவிடத்தில் அனுராகம் விளங்கப் பெற்றவளு மாகிய உத்தம வனிதையாயிருக்கின்றனை. நீ இடுப் பின்புறம் அழகாயிருக்கப்பெற்றவள். தெரிந்தவன் எவன் தான் மிகவும் சிறந்த இந்த உருவத்தை விட்டு

---

ஸந்தோஷமில்லாதவளும் நல்ல வர்ணமில்லாதவளுமாயிருப்பவள். (யவீயஸீ) ஹீனையான (ஹார்யா) பார்யையாயிருப்பவள். பார்யை யாகத் தகாதவளென்றபடி. (விரூபாம் அஸதீம் காரலாம் நிர்ணதோ தரீம்வ்ருத்தியாம் த்வாம்பரித்யஜ்ய ஏநாம் ஹார்யாமேவ ஏஷ ஹஜிஷ்யதி) என்று வாஸ்தவார்த்தத்தில் அன்வயங் கண்டுகொள்வது. 'விரூபத் வம் முதலிய தோஷங்கள் நிறைந்த உன்னை விட்டு, பார்யையாகிய இந்த ஸீதையையே இவன் கைப்பற்றுவான்' என்று கருத்து. கோ விந்தராஜர். அன்றியே (விரூபாம்) இத்யாதிகளுக்கு ஸீதாவிஷயமா கவே வாஸ்தவார்த்தமெப்படியெனில்—(விரூபாம்) விசேஷமான ரூபமுடையவள்; த்ரிலோகஸுந்தரி யென்றபடி. (அஸதீம்) தன் னைக்காட்டிலும் வேறு பதிவ்ரதை இல்லையென்னும்படி யிருப்பவள். (கராலாம்) உயர்ந்திருப்பவள். 'கராலோ தந்துரே துங்கே தாருணே பிச கத்யதே' என்று நிகண்டு. (நிர்ணதோதரீம்) மிகவும் தாழ்ந்த வயிறுடையவள். (வ்ருத்தியாம்)ஜ்ஞானத்திலும் சீலத்திலும் குணங்களி லும் முதிர்ந்திருப்பவள், என்று மஹேஸ்வரதீர்த்தர்.

1. இங்கு விபரீதலக்ஷணையாலே பரிஹாஸோக்தியாக வர்ணித் தல் தெரிகின்றது. கோவிந்தராஜர்.

மனுஷ்ய ஸ்த்ரீயிடத்தில் மனஞ்செல்லப் பெறுவான்?' என்றனன். பயங்கரமான உருவமும் நிரம்பவும் தாழ்ந்த இடையும் பொருந்திய அந்த ராக்ஷஸி இவ்வனம் லக்ஷ் ுமணன் சொன்ன வார்த்தையைக் கேட்டுப் பரிஹாஸ மென்பது எப்படிப்பட்டதோ அதை அறியாதவளாகை யால் அந்த வார்த்தைகளை யெல்லாம் யதார்த்தமாக வே நினைத்தனள். அவள் காமவெறி கொண்டு மெய் மறந்திருப்பதனால் [1] பர்ணசாலையில் ஸீதையோடுகூட எதிரிடவொண்ணாத ஒளிப்பெருக்குடன் உட்கார்ந்திருக் கின்ற பரந்தபனாகிய ராமனைப் பார்த்து 'நீ, விகாரரூப முடையவளும் துராசாரையும் மிகவும் தாழ்ந்த வயிறு டையவளும் வயது சென்றவளுமாகிய இந்த ஸீதையைப் பார்யையாகப் பற்றி அந்தப் பலத்தினால் என்னைச் சரக்கு செய்யாதிருக்கின்றனை. இப்பொழுது நீ பார்த் துக்கொண்டிருக்கும்பொழுதே இம்மனுஷ்யஸ்த்ரீயைப் பிடித்துப் பக்ஷித்துவிடுகின்றனன். அனந்தரம் சக்க ளத்தியின் பற்றில்லாமல் உன்னுடன்கூட ஸுகமாக விளையாடிக்கொண்டிருப்பேன்' என்று உரைத்துக் கொள்ளிக்கட்டைபோல் மிகவும் பயங்கரமான கண் களையுடைய அந்தச் சூர்ப்பணகை மிகுந்த கோபத்து டன், ப்ரளயகாலத்துப் பெருங்கொள்ளி ரோஹிணியின் மேல் எதிர்த்து வருவதுபோல், மான்கண்கள்போன்ற கண்களையுடைய ஸீதையின்மேல் எதிர்த்தோடி வந்த னள். மஹாபலனாகிய ராமன் ம்ருத்யுபாசம்போல் பயங் கரமாக மேல் விழ வருகின்ற அந்த ராக்ஷஸியைப் பாத்ர்துக் கோபாவேசத்துடன் குறுக்கே நின்று தடுத்து, உடனே லக்ஷ்மணனைப் பரர்த்து 'நல்லியற்கை யுடையவனே! லக்ஷ்மணா! க்ரூரத்தன்மையுடைய துஷ்

1. பர்ணசாலையில் ராமனிருந்தானென்கையால் லக்ஷ்மணன் வெளியிலேயே யிருப்பதாகத் தெரிகிறது.

டர்களோடு என்றும் பரிஹாஸம் வைத்துக்கொள்ளலாகாது. ஸீதை சூர்ப்பணகையின் கொடுமையைப் பார்த்த மாத்ரத்தில் மனக்கலக்கமுற்று மிக்க வருத்தத்துடன் ப்ராணன்களோடிருக்கின்றனள்; பார். புருஷ திலகனே! மேலும் விகாரமான ஆகாரத்துடன் துஷ்டஸ்வபாவையாகி மிகவும் மதித்துப் பெருவயிற்றுடன் புலப்படுகின்ற இந்த ராக்ஷஸியை விரூபையாக்குவாயாக' என்றனன். மஹா பலனாகிய லக்ஷ்மணன் ராமன் சொன்னதைக் கேட்டுக் கோபத்துடன் அந்த ராமன் பக்கத்திலிருக்கிற கத்தியை எடுத்துச் சூர்ப்பணகையின் மூக்கையும் காதுகளையும் அறுத்துவிட்டனன். மூக்கையும் காதையும் அறுத்தவுடனே பயங்கர உருவமுடைய அந்தச் சூர்ப்பணகை விகாரமான குரலுடன் கூச்சலிட்டுக்கொண்டு வந்த வழியே அரண்யத்திற்கு ஓடிப்போயினள். மிகவும் பயங்கரமான உருவம் பொருந்திய அந்த ராக்ஷஸி மேலும் விரூபையாகச் செய்யப்பட்டு ரக்தம் பெருகப்பெற்று நனைந்து வர்ஷாகாலத்துமேகம் போல் பலவாறாகக் கூச்சலிட்டனள். அவள் குருதி மிகவும் பெருகிக்கொண்டிருக்கையில் பலவிதத்திலும் பயங்கரமான காட்சியுடையவளாகிக் கைகளை உயர எழுப்பி உரக்கக் கூச்சலிட்டுக்கொண்டு மஹாரண்யத்திற்குள் நுழைந்தனள் அனந்தரம் அங்ஙனம் விரூபஞ்செய்யப்பட்ட சூர்ப்பணகை ஜனஸ்தானத்தில் அனேக ராக்ஷஸர்களால் சூழப்பட்டுப் பார்ப்போர்களுக்குப் பயங்கரமாகப் புலப்படுகின்ற உடன் பிறந்தவனாகிய கரனிடஞ் சென்று ஆகாசத்தினின்று இடி விழுவதுபோல் கபீலென்று அவனெதிரில் தரையில் வீழ்ந்தனள். அனந்தரம் அவள் பயத்தினால் நினைவு தப்பி ரக்தத்தினால் சரீரம் முழுதும் நனைந்து உடன் பிறந்தவனாகிய



1328. லக்ஷ்மணன் சூர்ப்பணகையின் காதுமூக்குகளை யறுத்தல்.

கரனிடம், ராமன் ஸீதையோடுகூட வனத்திற்கு வந்திருப்பது தன்னை விரூபமாக்கினது முதலான வ்ருத்தாந்தங்களையெல்லாம் சொல்லினள். பதினெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

சூர்ப்பணகை கரனுக்கு ராமாதிகளின் வ்ருத்தாந்தத்தைச் சொல்ல, கரன் ராமனை ஜயிக்க ராக்ஷஸர்களை அனுப்புதல்.

கரன், அங்ஙனம் விரூபையாகி ரக்தந்தோய்ந்து நிலத்தில் வீழ்ந்திருக்கிற தன்னுடன் பிறந்தவளாகிய சூர்ப்பணகையைப் பார்த்துக் கோபத்தினால் பரிதபித்து வினவினன்.—'எழுந்திரு. முதலில் உன் ஸங்கதியைச் சொல்வாயாக. நினைவு தப்பியிருத்தலைத் தொலைப்பாயாக. மனத்தில் பயத்தினாலுண்டான பரபரப்பை விடுவாயாக. இங்ஙனம் உன்னை விரூபஞ்செய்தவன் எவன்? ஸ்பஷ்டமாகச் சொல்வாய். பற்களில் விஷமுடையதும் ஓர் அபராதமுமின்றி வெறுமனே அசையாமலிருப்பதுமாகிய க்ருஷ்ணஸர்ப்பத்தை எவன் எதிரே வந்து வேடிக்கைக்காக விரலால் குத்துகின்றனன்? எவன் காலபாசத்தைக் கழுத்தில் போகட்டுக்கொண்டு மோஹத்தினால் 'இது அனர்த்தத்தை விளைக்கும்' என்று தெரிந்துகொள்ளாதிருக்கின்றனன்? எவன் இப்பொழுது உன்னை இங்ஙனம் செய்து, கொடுமையில் சிறந்த விஷத்தைப் பானம் செய்தவனாயினன்? நீயோ பல பராக்ரமங்கள் மிகுந்திருக்கப் பெற்றவள்; இஷ்டப்படி நடக்குந் தன்மையள்; இஷ்டப்படி வடிவங்களைக் கொள்ளவல்லவள்; ம்ருத்யுவைப்போன்றவள். நீ இப்பொழுதே இங்கிருந்து போயினை. இப்படிப்பட்ட உனக்கு இதற்குள் எவன் இந்த துரவஸ்தையைச் செய்தனன்? தேவதைகளிலாவது கந்தர்வர்களிலாவது பூதங்களிலாவது மஹானுபாவர்களான ரிஷிகளிலாவது மஹாபராக்ரமசாலியாகிய எவன் உன்னை இங்ஙனம் விரூபையாகச் செய்தனன்? உலகத்தில் பாகாஸுரனைக் கொன்ற

ஆயிரங்கண்ணுடைய மஹேந்த்ரனொருவனைத் தவிர எனக்கு அப்ரியஞ்செய்பவன் எவனும் எனக்குத்தோற்ற வில்லை. ஸாரஸபக்ஷி நீரில் கலந்த பாலைப் பிரித்துக் குடிப்பதுபோல், இதோ ப்ராணன்களுக்கு முடிவைச் செய்யும்படியான பாணங்களையெய்து அவனது ப்ராணன்களைக் கொள்கின்றனன். எவன் என்னால் அடிக்கப் பட்டு பாணங்களால் மர்மங்கள் அறுப்புண்டு கீழே விழுகையில், அவனது சரீரத்தினின்று நுரையுடன் சிவப்பாகப் பெருகிவருகின்ற ரக்தத்தைப் பூமி விரைவில் பானஞ் செய்யவேண்டும்? எவன் யுத்தத்தில் என்னால் அடிக்கப்பட்டுக் கீழேவிழுகையில் பக்ஷிகள் ஸந்தோஷத்துடன் குவியல்கூடி அவனது தேஹத்தினின்றும் மாம்ஸத்தைக் குத்தித் தின்னவேண்டும்? நான் இதோ யுத்தத்தில் பிடித்திழுக்கையில் தேவதைகளாவது கந்தர்வர்களாவது பிசாசர்களாவது ராக்ஷஸர்களாவது அவனைக் காப்பாற்ற வல்லரல்லர். எந்த துஷ்டன் பராக்ரமித்து வனத்தில் உன்னை இங்ஙனம் பரிபவித்தானோ அவனை, நீ மெதுவாக ப்ரஜ்ஞை தெளியப்பெற்று எனக்குச் சொல்லவேண்டும்' என்றனன். ப்ராதாவாகிய கரன் மிகவும் கோபத்துடன் இங்ஙனம் சொன்ன வார்த்தையைக் கேட்டுப் பின்பு சூர்ப்பணகை கண்ணீர்பெருக்குடன் அவனைப் பார்த்து இங்ஙனம் மொழிந்தனள்:—
[1] 'நல்ல பிராயத்துடன் அழகும் நன்கு விளங்கப்பெற்று

---

1. 'தருணௌ ரூபஸம்பந்நௌ ஸுகுமாரௌ மஹாபலௌ। புண்டரீகவிஸாலாக்ஷௌ சீரக்ருஷ்ணாஜிநாம்பரௌ.' கரன் 'உன்னை எவன் இப்படி செய்தான்? தெளிவாகச் சொல்' என்று வினவினதற்குச் சூர்ப்பணகை 'புத்ரௌ தஸரதஸ்யாஸ்தாம் ப்ராதரௌ ராமலக்ஷ்மணௌ' (தசரதனது குமாரர்களும் அண்ணன் தம்பிகளுமான ராமலக்ஷ்மணர்கள்) என்று பதில் சொல்லவேண்டியதாயிருக்க, அப்

ஸுகுமாரசரீரர்களும் மஹாபலிஷ்டர்களும் செந்தாமரையிதழ்போன்ற விசாலமான கண்களுடையவர்களு

படி சொல்லாமல் 'தருணௌ ரூபஸம்பந்நௌ' என்று ராமாதிகளின் ஸௌந்தர்யாதிகளைச் சொல்லுவது ஏனெனில்—அவளுக்கு விரூபத்வம் நேரினும் ராமாதிகளிடத்தில் விரக்தி பிறவாமையால் காமமோஹத்தின் மிகுதியால் உடன் பிறந்தவரது ஸமக்ஷத்திலும் தன் மனத்திலுள்ளதையே சொல்லினள். ராமனைக் கண்ணாரக் கண்டவர்களுக்கு அவர் அனுகூலராயினும் ப்ரதிகூலராயினும் அவனை இங்ஙனம் வர்ணித்தலே ஸ்வபாவமாயிருக்கின்றது. ஆனதுபற்றியே ஸுந்தரகாண்டத்தில் ஸீதை 'யாநி ராமஸ்ய சிஹ்நாநி' என்று ராமனது அடையாளங்களைக் கேட்கையில், ஹனுமான் 'த்ரிஸ்திரஸ்த்ரிப்ரலம்வஸ்ச' என்று அடையாளங்களைச் சொல்லவேண்டியிருக்க அங்ஙனம் முன்பு சொல்லாமல் 'ராமஃ கமலபத்ராக்ஷஸ்ஸர்வஸத்த்வமநோஹரஃ' என்று அவன் கண்ணழகையும் அவன் ஸர்வர்க்கும் மனத்துக்கினியனாயிருப்பதையும் முதலில் வர்ணித்தனன், அன்றியே 'ஸுப்தப்ரமத்தகுபிதாநாம் பாவஜ்ஞாநம் த்ருஷ்டம் (நித்ரையிலும் ப்ரமாதத்திலும் கோபத்திலும் ஜனங்களின் மனக்கருத்து வெளியாகும்) என்னும் ந்யாயத்தின்படி கொடி மூக்கும் காதிரண்டும் அறுப்புண்டவளாகையால் சூர்ப்பணகை கோபத்தினால் மனத்திலுள்ள கருத்தையே சொல்லுகின்றனள்—(தருணௌ) யௌவனமுடையவர்கள், ஸ்த்ரீகளுக்கு முதலில் மனத்தை இழுப்பது வயதே ஆகையால் அதுவே இங்குச் சொல்லப்படுகிறது. இவளுக்கு முதலில் மனம் பற்றினது ராமனிடத்தில்; விரூபமாக்கினவன் லக்ஷ்மணன். இரண்டு பக்ஷத்திலும் தான் ஆசைப்பட்டவனையாவது தன்னை விரூபமாக்கினவனையாவது ஒருவனையே சொல்லவேண்டியிருக்க (தருணௌ) என்று இருவரையும் ப்ரதானமாகச் சொல்லுவது ஏனெனில்—'அந்யோந்யஸத்ருசௌ வீரௌ' என்கிறபடியே இருவரும் யௌவனம் முதலிய குணங்களில் ஒத்திருக்கையால் இருவரையும் சொல்லினள். முதலில் ராமனை வரிக்கையில் அவன் லக்ஷ்மணனை வர்ணித்து வரிக்கச் சொல்ல லக்ஷ்மணனிடத்தில் மனம்பற்றி அவனிடம் போயினள். லக்ஷ்மணன் ராமனை வர்ணித்து அவனையே வரிக்கச்சொல்ல மீளவும் ராமனிடத்தில் மனஞ்செல்ல அவனிடம் போயினள். பரஸ்பர பரி

மாயிருக்கின்றனர். அவர்கள் மரவுரிகளையும் க்ருஷ்ணா ஜினத்தையும் தரித்துக் காய்கிழங்குகளை ஆஹாரமாகக்

---

ஹாஸமூலமாக அவ்விருவரிடத்திலும் ஸமானமாக அவள் மனம் பற்றியிருக்கையால் இருவரையும் சொல்லினள். மேலும், ராமன் 'விரூபயிதுமர்ஹஸி' என்று அவளை விரூபையாக்குவதற்குக் காரண மாகையாலும் லக்ஷ்மணன் 'உத்யம்ய வஸ் மஞ் சிச்சேத கர்ணநாஸம் மஹாபல:' என்று காதையும் மூக்கையுச் நேரே அறுத்தவனாகை யாலும் 'தாஜியாமுஹாஜியாம்' 'இமாமவஸ்தாஸம்ப்ராப்தா' என்று இருவராலுமே இந்த அவஸ்தை தனக்கு நேரிட்டதென்று மேல் சொல்லுகிறாளாகையாலும் இருவரிடத்திலும் த்வேஷம் ஸமா னமாகையால் இருவரையுஞ் சொன்னாளென்று கண்டுகொள்க. (தரு ணௌ) ஒருத்திக்கு இருவரிடத்தில் ஒரேகாலத்தில் மனம் எப்படி செல்லும்? என்னில்—அவ்விருவரும் அண்ணன் தம்பிகளாயினும் இருவரும் புனர்வஸுபுஷ்ய நக்ஷத்ரங்களில் வரிசையாகப் பிறந்தவ ராகையால் வயதில் அவ்வளவு தாரதம்யம் தெரியாது. ஆகையால் அவ்விருவரிடத்திலும் ஒரே ரீதியாக அவள் மனம் பற்றக்கூடும். பருவம் ஒன்றாயிருப்பினும் ரூபத்தில் ஏற்றக்குறைகள் இருக்கலாமா கையால் அதைப்பற்றியாவது அவளுக்கு அவரிடத்தில் ஒருரீதியாக மனஞ் செல்லக்கூடாதென்னில் (ரூபஸம்பந்நௌ) மன்மதாதிகளுக் கும் யாசித்துப் பெறும்படியான அதிசய ரூபஸம்ருத்தி இருவர்க்கும் உளதென்றபடி. மன்மதன் 'அங்காதங்காத் ஸம்பவஸி' என்கிறபடி யே தந்தையாகிய இவனது அங்கத்தினின்றும் பிறந்தானாகையால் இவ னது அங்கப்ரத்யங்க ஸௌஷ்டவத்தில் சிறிதுடையவனாகியே அவ் வளவு ரூபவானாயினன். (ரூபஸம்பந்நௌ) 'உத்பந்நம் த்ரவ்யம் க்ஷண மகுணம் திஷ்டதி' (பிறந்த வஸ்து தான் பிறக்கும்க்ஷணத்தில் குண மின்றியேயிருக்கும்) என்கிற ந்யாயத்தின்படி எதுக்கும் முதலில் குணம் உண்டாகாது. ஆயினும் 'ரூபதாக்ஷிண்யஸம்பந்ந: ப்ரஸூத:' என்கிறபடியே ரூபாதிகுணஸம்ருத்தி இவர்க்குமாத்ரம் பிறந்தபொ ழுது கூடவே உண்டாயிற்று. ஆகையால் வயதைப்பற்றி அவரது ரூபம் அதிசயித்ததன்றென்று கருத்து. மேலும் 'ராமேதி ராமேதி ஸதைவ புத்த்யா விசிந்த்ய வாசா ப்ருவதீ தமேவ' என்கிறபடியே பெண்ணாகப் பிறந்தவர் மதிமயங்கி ஏகத்யானமாக வாய் வெருவும்படி

கொண்டு ஜிதேந்த்ரியர்களாகித் தாபஸவேஷத்துடன் தர்மத்தை ஆசரித்துக்கொண்டிருக்கின்றனர். தசரத னுடைய பிள்ளைகள்; உடன் பிறந்தவர்கள்; ராமனென் றும் லக்ஷ்மணனென்றும் பெயருடையவர்கள் அவர்கள்

---

யானதன்றோ அவர்களுடைய ரூபம். இப்படிப்பட்டவர்களுடைய ஸௌந்தர்யத்தில் ஆழங்கால் பட்டேனுகையால் அவர்களை ஆலிங்க னம் பண்ணிக்கொண்டேனுகில் ஸௌந்தர்ய மிருப்பினும் அவரது சரீரம் கடினமாயிருக்குமோ வென்னில்-(ஸுகுமாரௌ) ராக்ஷஸர்க ளாகிய உங்களைப்போல் கடினசரீரர்களன்று; புஷ்பத்தை ஆலிங் கனஞ் செய்தாற்போல் அவரது சரீரம் மெதுவாயிருக்கும். ஆனது பற்றியே 'அதஸீபுஷ்ப ஸங்காஶம்' என்று புஷ்பத்தைப் அவனது தேஹத்திற்கு ஸமானமாகச்சொல்லுவார்கள். (ஸுகுமாரௌ) தேவி மார்கள் ஆலிங்கனம் பண்ணுவதற்கு மாத்ரமேயன்றி அடிக்கடி உற் றுப் பார்ப்பதற்கும் அஞ்சும்படியான ஸௌகுமார்யமுடையவர்கள். (ஸுகுமாரௌ) பூமிக்கு நல்ல மன்மதர்களாயிருப்பவர்கள். அதாவது ஸ்வர்க்கத்தில் மன்மதன் ஒருவனே; இவர்களைப் பார்த்தால் பூமி யில் இரண்டு மன்மதர்கள்போல் தோற்றுகின்றனர். (ரூபஸம்பந் நௌ ஸுகுமாரௌ) மன்மதனுக்குச் சரீரமில்லையன்றோ; 'கந்தர் ப்ப இவ மூர்த்திமாந்' என்கிறபடியே இம்மன்மதர்கள் உருவமுடை யவர்களாயிருக்கின்றனர். இங்ஙனம் யௌவனமும் ஸௌகுமார்ய மும் பொருந்தி தூரத்திலிருந்து வசீகரிக்கைமாத்ரமேயாய் அணுகி அனுபவிக்கப் போயின் ஸ்திரமாக வில்லாமல் துர்ப்பலர்களா யிருப்பார்களோவென்னில்-(மஹாபலௌ) பலமாவது அனுபவிக் கும் ஸாமர்த்யம், 'ராமஸ்து ஸீதயா ஸார்த்தம் விஜஹார பஹூந் ருதூந்' என்கிறபடி இடைவீடின்றி எத்தனை ஸ்த்ரீகளை அனுபவிக்க வேண்டிலும் அவரது பலம் சளையாதென்றபடி. இதனால் ராக்ஷஸ ஜாதியில் பிறந்தமையால் கடினப்ரக்ருதியுடைய தன்னைப்போன்றவ ளுக்கும் ஸரியான ரதியைக் கொடுக்கும் ஸாமர்த்யமுடையவர்களே யென்று தோற்றுவிக்கப்பட்டது. இப்படிப்பட்ட ஸமுதாயசோபை யைக்காட்டிலும் அவயவசோபை குறைந்திருக்குமோ வென்னில் (புண்டரீகவிஶாலாக்ஷௌ) இவர்களது கண்ணழகு பார்க்கிறவர்களின் கண்ணுக்கு எவ்வளவு பார்க்கினும் த்ருப்தியைக் கொடாதிருக்கின் றது. த்ருப்தி உண்டானாலன்றோ அவர்களது கண் மற்ற அவயவங் களில் புகக்கூடும். (புண்டரீகவிஶாலாக்ஷௌ) மற்ற அவயவங்களின்

கந்தர்வராஜனுக் கொப்பாகி ராஜலக்ஷணங்களெல்லாம் அமைந்திருக்கின்றனர். அவர்கள் தேவதைகளோ?

---

அழகு ஸமீபத்தில் போனுலொழிய நன்கு தெரியாது, கண்ணழகோ வென்றால் தூரத்திலேயே ஸ்பஷ்டமாக ப்ரகாசிக்கின்றது. (புண்ட ரீகவிஸலாக்ஷௌ) புண்டரீகமென்றால் வெண்டாமரை. அதுபோல் ஸத்வகுணத்தின் மிகுதியால் வெளுத்து நிர்மலமான கண்பார்வை யுடையவர்களென்றபடி. 'ஸ^ரக்தநயநா வோராः' என்கிறபடியே உங் களைப்போல் மிகவும் சிவந்த கண்ணுடையவர்களன்றென்று கரு த்து. த்ருஷ்டிமாத்ரமே வெளுப்பென்கையால் மஹாபுருஷலக்ஷண மான கடைக்கண் சிவப்பும் கருவிழியின் கறுப்பும் தடுக்கப்பட்டவை யல்ல. (புண்டரீகமேவமக்ஷிணீ' என்ற ஶ்ருதியின்படி புண்டரீகம் போன்ற இக்கண்கள் உண்மையான பரத்வத்தைக் கோள்சொல்லி வெளிப்படுத்துகின்றன. விசாலசப்தத்தால் க்ஷீரஸமுத்ரம்போல் இவைகளின் வைசால்யமும் காம்பீர்யமும் எவர்க்கும் நிச்சயிக்கமுடி யாதவை யென்று கருத்து. (புண்டரீகவிசாலாக்ஷௌ) கண்களின் தெளிவைப்பற்றிப் புண்டரீகத்தை ஒப்பாகச் சொல்லிற்றேயன்றி வைசால்யத்தைப் பார்க்கையில் இவைகளுக்கு நிகரேது? (புண்டரீக விஶாலாக்ஷௌ) பத்த முக்த நித்யர்களாகிய த்ரிவித ஜீவகோடிகள் நிறைந்த உபய விபூதிகளையும் ஒரே தடவையில் கடாக்ஷிக்கும்படியான வைசால்யமுடையவையன்றோ இத்திருக்கண்கள். (மஹாபலௌ புண்டரீகவிஶாலாக்ஷௌ) இவர்கள் தமது பலத்தைக் காட்டிப் பிறர் க்கு பயத்தை விளைக்க அவர்கள் பாதங்களில் வீழ்ந்து ஸ்தோத்ரஞ் செய்கையில் அது கேட்டுத் தெளிந்த கண்களையுடையவர்களாயிருக் கையைச் சொல்லுகிறது. (ஸுகுமாரௌ புண்டரீகவிஶாலாக்ஷௌ) பூமிக்கு மன்மதர்களாயிருக்கையில் அவர்க்குப் புஷ்பபாணங்கள் எங் கே யென்னில் அவையே அவர்களது கண்களாகத் தோற்றுகின்றன. தாமரைகள் மன்மத பாணங்களன்றோ. அந்தத் தாமரைகளே இந் தக் கண்களாக மாறிவிட்டன, கண்களே மன்மதபாணங்களென் கையால் சூர்ப்பணகையின் ஹ்ருதயத்தைப் பேதித்தமை தோற்று கிறது. என்னை வசப்படுத்தினது அவயவசோபையால் மாத்ரமே யன்று; (சீரக்ருஷ்ணாஜிநாம்பரௌ) அவர்கள் கேவலமான இந்த வேஷத்தாலுங்கூட என்னை வசப்படுத்திக்கொண்டனர். ஆபரணங்க

மனுஷ்யர்களோ? ஊஹித்துத் தெரிந்துகொள்ள வல்லவளல்லேன். நல்ல யௌவனப்பருவமுடையவளும் மிகுந்த அழகுடையவளும் ஸமஸ்த பூஷணக்களாலும் அலங்கரிக்கப்பட்டவளும் நுண்ணிய இடையுடன் ப்ரகாசிக்கின்றவளுமாகிய ஒருபெண்பிள்ளை அவ்விருவரினிடையில் இருக்கக் கண்டனன். அப்பெண்பிள்ளையின் நிமித்தமாக அவ்விருவரும் ஒன்று சேர்ந்து என்னை அநாதையைப் போலவும் [1] குலடையைப்போலவும் இப்படிப்பட்ட அவஸ்தை அடையச்செய்தனர். கெடு நடத்தையுடைய அந்தப் பெண்பிள்ளையின் உதிரத்தையும் யுத்தத்தின் முடிவில் அடியுண்ட அந்த ராமலக்ஷ்மணர்களுடைய உதிரத்தையும் நுரையோடு கூடப் பானஞ்செய்ய விரும்புகின்றனன். என்னப்பனே! நான் யுத்தத்தில் அவள் அவர்கள் ஆகிய அம்மூவரது ரக்தத்தையும் பருகவேண்டும். இது எனக்குள்ள முதல் விருப்பம். இதை நீ நிறைவேற்றவேண்டும் என்றனள். [2] இங்ஙனம் அவள் சொல்லிக்கொண்டிருக்கையில், கரன் கேட்டுக் கோ

---

ளொன்றுமில்லாமல் வெறும் மரவுரியை உடுத்தின வேஷமாத்ரத்தாலேயே என்னை மயக்கச்செய்து பீடிக்கின்றனர். 'இயமயிகமநோஜ்ஞா வல்கலேநாபி தந்வீ' (இவள் மரவுரி உடுத்திருந்தபோதிலும் அவ்வளவு மாத்ரத்தாலேயே மிகவும் அழகாயிருக்கின்றனள்) என்கிறபடியே மரவுரி மான்தோல்களை உடுத்திருப்பினும் இவர்களுடைய ஸௌந்தர்யம் குறையாதிருக்கின்றது. இம்மரவுரி ராமசரீரஸம்பந்தத்தினால் ஸர்வருடையவும் ஹ்ருதயத்தை வசப்படுத்தி 'ரூபஸம்ஹநநம் லக்ஷ்மீம் ஸௌகுமார்யம் ஸுவேஷதாம்। ததருஶுர்விஸ்மிதாகாரா ராமஸ்ய வநவாஸிந:' என்கிறபடியே ஸ்வரூபத்யானஞ் செய்யும் ரிஷிகளுக்கும் மனஸ்ஸை அபஹரிப்பதாயிற்று.

1. வ்யபிசாரஞ் செய்பவள்.

2. சேஷதர்மத்தில் பீஷ்ம யுதிஷ்டிர ஸம்வாதத்தில் பீஷ்மர் 'யாஜ்ஞவல்க்யஸுதா ராஜம்ஸ்த்ரயோவை லோகவிஶ்ருதா: ।சங்க்ரகாந்த மஹாமேய விஜயா ப்ராஹ்மணோத்தமா: । வரஶிச துஷணஶ்சேதி த்ரிஶிரா ப்ரஹ்மவித்தமா: । ஆஸம்ஸ்தேஷாஞ்ச

பித்து மஹாபலசாலிகளும் அந்தகனைப் போன்றவர்களு மாகிய பதினன்கு ராக்ஷஸர்களைப் பார்த்து 'இரண்டு மனிதர்கள் ஆயுதங்களைப் பிடித்து மரவுரியையும் க்ருஷ்ணஜினத்தையும் உடுத்து ஒரு பெண்பிள்ளையைக் கூட அழைத்துக்கொண்டு கோரமான தண்டகாரண்யத்தில் புகுந்திருக்கின்றனர். அவ்விருவரையும் துராசாரையான (கெடுநடத்தையுடையவளான) அந்தப் பெண் பிள்ளையையும் கொன்று திரும்பி வரவேண்டும். எனது உடன் பிறந்தவளாகிய இந்தச் சூர்ப்பணகை அவர்களது ரக்தத்தைப் பானஞ்செய்வாள். ராக்ஷஸர்களே! இந்த என்னுடன் பிறந்தவளது விருப்பம் எனக்கும் இஷ்டமாயிருக்கின்றது. ஆகையால் நீங்கள் உங்கள் பராக்ரமத்தினுல் அந்த ராமலக்ஷ்மணர்களிருவரையும் அந்தப் பெண்பிள்ளையையும் கொன்று என்னுடன் பிறந்தவளது விருப்பத்தைச் சீக்ரம் நிறைவேற்றுவீர்களாக' என்று ஆஜ்ஞாபித்தனன். இங்ஙனம் கரனுல் கட்டளையிடப்

---

ஶிஷ்யாஶ்ச சதுர்தஶ ஸஹஸ்ரயா' (யாஜ்ஞவல்க்யருக்குச் சந்த்ரகாந்தன் மஹாமேதன் விஜயன் என்று லோகப்ரஸித்தர்களான ப்ராஹ்மணோத்தமர்கள் மூவர் பிள்ளைகள் உளர். ப்ரஹ்மவித்தமர்களாகிய அவர்கள் சிவசாபத்தால் கரதூஷணத்ரிசிரஸ்ஸுக்களாயினர். அவருடைய சிஷ்யர்கள் பதினலாயிரம் பேர்கள் ராக்ஷஸராயினர்) என்று கூறியிருக்கின்றனர். முதல்வனுகிய சந்த்ரகாந்தனே கரன். அவனுக்குச் சிவன் 'தஸ்மாத்ய: க்ரூரரூபேண தேஹேந ஹரதாமரதம்| விஷ்ணோர் தாஶரதேர்ஹஸ்த்வா மோக்ஷயிஷ்யதி ஸுவ்ரத' என்று தாசரதிராமனுல் சாபமோக்ஷம் உண்டாவதாகச் சொல்லியிருக்கிறுன். ஆகையால் அவன் சூர்ப்பணகை மூலமாய் ராமவ்ருத்தாந்தங் கேட்டபின் விஷ்ணுவென்றறிந்து பரிவாரத்துடன் ராமனுல் மாண்டுபோக விரும்பி மேலுக்கு உடன்பிறந்தவளுக்கு ப்ரியஞ்செய்பவன்போல் யுத்தத்தின் பொருட்டு ராக்ஷஸர்களை ஆஜ்ஞாபித்தானென்று தெரிகின்றது. இங்ஙனம் மஹேஶ்வர தீர்த்தர்.

பெற்ற அந்தப் பதினான்கு ராக்ஷஸர்களும் சூர்ப்பணகை வழி காட்டிக்கொண்டுவர, காற்றால் தூண்டப்பட்ட மேகங்கள்போல் மிக்க வேகத்துடன் அவளோடு ராமனிருக்கிற இடத்திற்குப் போயினர். பிறகு அந்த ராக்ஷஸர்கள் கூரான பாணங்களை யுடையவராயினும் தம்மைப் பார்த்து மிகவும் பயங்கரமான ஒளிவிளங்கும்படி எதிர்த்து வருகின்ற ராமனை நோக்கிக் காட்டுயானைகள் மேலெழுந்து எரிகின்ற காட்டுத் தீயைப் பார்த்துப் பயப்படுவதுபோல் பயப்பட்டு உடனே அவனை அடிக்க முடியாமல் வெறுமனே இருந்தனர். பத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

பதினான்கு ராக்ஷஸர்களையும் ராமன் அடித்தலும், சூர்ப்பணகை பயந்து கரனிடம் திரும்பிப் போதலும்.

அனந்தரம் பயங்கரமான ஆகாரத்தையுடைய சூர்ப்பணகை ராமனது ஆச்ரமத்திற்கு வந்து ஸீதையையும் ப்ராதாக்களாகிய ராமலக்ஷ்மணர்களையும் அந்த ராக்ஷஸர்களுக்குக் காட்டினள். அந்த ராக்ஷஸர்கள் பர்ணசாலையில் ஜனகராஜன்புதல்வியாகிய ஸீதையோடும் லக்ஷ்மணனோடும் உட்கார்ந்திருக்கிற மஹாபலனாகிய ராமனைக் கண்டனர் ஸ்ரீமானாகிய ராமன், அந்த ராக்ஷஸர்களும் ராக்ஷஸியாகிய அந்தச் சூர்ப்பணகையும் வருவது கண்டு மஹாதேஜஸ்வியாகிய தம்பி லக்ஷ்மணனைப் பார்த்து ‘லக்ஷ்மணா! நீ கொஞ்சநேரம் ஸீதையின் அருகில் இருந்து இவளைப்பாதுகாத்துக்கொண்டிருப்பாயாக. நான் இப்பொழுது இந்தச்சூர்ப்பணகையின் வழியைத் தொடர்ந்து இவளைக் காக்கும்பொருட்டு வந்த இந்த ராக்ஷஸர்களைக் கொன்றுவிடுகிறேன்’ என்றனன். லக்ஷ்மணன், தன் ஸ்வரூபத்தை அறிந்த ராமன் சொன்ன வார்த்தையைக் கேட்டு அப்படியே ஆகட்டுமென்று உடனே ராமனது ஆஜ்ஞையின்படி பாராட்டி நடந்து

கொண்டனன். தர்மாத்மாவாகிய ராமனும் ஸ்வர்ண ரேகைகளால் அலங்காரஞ் செய்யப்பட்ட வில்லை நாணேற்றி அந்த ராக்ஷஸர்களைப் பார்த்து 'நாங்கள் தசரதமஹாராஜகுமாரர்கள்; அண்ணன் தம்பிகள்; எங்கள் பேர் ராமலக்ஷ்மணர்; இவள்பேர் ஸீதை, இந்தப்பெண்மணியோடு கூட ஸஞ்சரிக்கக்கூடாத தண்டகாரண்யத்திற்கு வந்தனம். நாங்கள் காய்கிழங்குகளைத் தின்று இந்த்ரியங்களைவென்று தவஞ்செய்து தர்மத்தை ஆசரித்துக்கொண்டு தண்டகாரண்யத்தில் வாஸஞ் செய்கின்றனம். இப்படிப்பட்ட எங்களை ஏன் ஹிம்ஸிக்கிறீர்கள். நான் ரிஷிகளின் நியோகத்தின்படி அவர்களை ஹிம்ஸிக்கும் பாபிஷ்டர்களாகிய உங்களை மஹா வனத்தில் வதஞ்செய்வதற்காகவே பாணங்களையும் ஆயுதங்களையும் தரித்து இவ்விடம் வந்திருக்கின்றனன். ராக்ஷஸர்களே! பரம துஷ்டர்களே! அப்படியே இங்கு நிர்ப்பயமாக நிற்பீர்களாக. மேல் விழுந்துவரவேண்டாம். ஓடியும் போக வேண்டாம். உங்களுக்கு ப்ராணன்களில் விருப்பம் உளதாயின், திரும்பி ஓடிப்போவீர்களாக' என்றனன். ப்ராஹ்மணகாதுகர்களாகிய அந்த ராக்ஷஸர்கள் பதினால்வரும் அங்ஙனம் ராமன் சொன்ன அவ்வார்த்தையைக் கேட்டு மிகுந்த கோபாவேசத்துடன் கையில் சூலத்தைப் பிடித்து இங்ஙனஞ் சொல்லினர்:— 'எங்கள் ப்ரபுவாகிய கரன் மிகவும் பெருமையுடையவன். அப்படிப்பட்ட எங்கள் ப்ரபுவுக்குக் கோபத்தை விளைவித்தாயாகையால் நீயே இப்பொழுது எங்களால் யுத்தத்தில் அடிக்கப்பட்டு ப்ராணன்களை விடப்போகின்றனை. நீ ஒருவன்; நாங்கள் பலர். யுத்த பூமியில் எங்களெல்லோர்க்கும் முன்னே நிற்கும்படியான பலம் உனக்கு ஏது? இனி எங்களோடு யுத்தஞ் செய்வது சொல்ல

வேண்டுமோ? யுத்தத்திற்கு வருவாயாக. எங்கள் கைக ளால் ஏவப்பட்ட பரிக பட்டிஸ சூலங்கள் பட்டு பலத்தை இழந்து கையில் பிடித்த வில்லேயும் கைசோர விட்டு ப்ராணன்களேயும் விடப்போகின்றனே.' இங்ஙனம் அந்த ராக்ஷஸர் பதினல்வரும் மிகுந்த கோபத்துடன் சொல்லி, ஜயிக்க முடியாத ராமன்மேல் தமது கைகளிலிருந்த அந்தச் சூலாயுதங்களே எய்தனர். ராமன் அந்தப் பதி னன்கு சூலங்களேயும் ஸ்வர்ணரேகைகளால் அலங்கரிக் கப்பட்ட அத்தனே பாணங்களால் இடையிலேயே கண் டித்தனன். அனந்தரம் மஹாதேஜஸ்வியாகிய ராமன் மிகவும் சினந்து நன்கு சாணபிடிக்கப்பட்டு ஸூர்யன் போல் தகதகவென்று விளங்கிக்கொண்டு கற்களேயே னும் பிளக்கவல்ல கூரையுடைய பதினன்கு நாராசபா ணங்களே யெடுத்து வில்லேக் காதளவும் வளேத்து ராக்ஷ ஸர்களேக் குறிவைத்து இந்த்ரன் வஜ்ராயுதத்தை ப்ரயோகிப்பதுபோல் அவைகளே அவர்மேல்ப்ரயோகித் தனன். பொற்பிடி இடப்பெற்றவைகளும் ஸ்வர்ணரேகை களால் அலங்கரிக்கப்பட்டவைகளும் தளதளவென்று விளக்கமுற்றவைகளுமாகிய அந்தப் பாணங்கள் வேக மாகச் சென்று அந்த ராக்ஷஸர்களின் மார்பைப் பிளந்து ரக்தம்பட்டு நனேந்து, அப்புறஞ் சென்று இடிகள்போல் பேரொலி செய்துகொண்டு கீழே விழுந்து பூமியில் மறைந்தன. அந்த ராக்ஷஸர்கள் பிளக்கப்பட்ட மார்பை யுடையவராகி உடம்பெல்லாம் ரக்தம் பெருகி நனேயப் பெற்று விகாரமான உருவத்துடன் ப்ராணன்களே விட்டு வேரில் வெட்டுண்ட வ்ருக்ஷங்கள்போல் தரையில்வீழ்ந்த னர். அங்ஙனம் அவர்கள் தரையில் விழக்கண்ட ராக்ஷ ஸியான சூர்ப்பணகை கோபத்திற்குட்பட்டும் செய்வ தொன்றுமில்லாமல் பயத்தினல் அங்குப் பயங்கரமாகக்

கூச்சலிட்டனள். அந்தச் சூர்ப்பணகை அங்ஙனம் அடிக்கடி பயங்கரமாகக் கூச்சலிட்டுக்கொண்டு மீளவும் வேகமாகக் கரனிடஞ்சென்று அறுப்புண்ட காது மூக்குகளில் கொஞ்சம் உலர்ந்த ரக்தத்துடனிருக்கையால் பிசினோடு கூடின ஸல்லகிமரம்போல் தரையில் வீழ்ந்தனள். அப்பொழுது அந்தச் சூர்ப்பணகை அங்ஙனம் கரனிடஞ் சென்று பலதடவை பலவாறு கூச்சலிட்டு மனவருத்தத்துடன் ரோதனஞ்செய்துகொண்டு கண்ணீர் பெருக்கினள். அந்தப் பதினான்கு ராக்ஷஸர்களும் யுத்தத்தில் ராமனால் அடியுண்டது கண்டவுடனே கரனது உடன் பிறந்தவளான சூர்ப்பணகை அங்குக் கால்பொருந்தாமல் ஓடிக் கரனிடம் சேர்ந்து அந்த ராக்ஷஸர்களெல்லோரும் அடிபட்டு மாண்டது முதலான நடந்த வ்ருத்தாந்தத்தையெல்லாம் கூறினள். இருபதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

சூர்ப்பணகை கரனுக்குப் பதினான்கு ராக்ஷஸர்களின் வதத்தைக் கூறுதல்.

கரன், அங்ஙனம் வந்து மீளவும் தரையில் வீழ்ந்திருக்கின்ற சூர்ப்பணகையைப் பார்த்துக் கோபித்து ராக்ஷஸவிநாசத்தின்பொருட்டு வந்தவளாகிய அவளை நோக்கித் தெளிவான உரையுடன் இங்ஙனம் மொழிந்தனன்:—'நான், இப்பொழுதே உனக்கு இஷ்டம் செய்ய விரும்பிச் சூரர்களும் ரக்தத்தை ஆஹாரமாக உடையவர்களும் அங்ஙனம்ப்ரஸித்தர்களுமாகிய ராக்ஷஸர்களைப் போகச்சொல்லி அனுப்பினேனே! மீளவும் என் ரோதனம் செய்கின்றனை ? நான் அனுப்பின ராக்ஷஸர்களோ என்னிடத்தில் தேவதர்விஸ்வாஸ முடையவராகையால் எனக்கு மிகவும் ப்ரியமானவர்கள்; என்னிடத்தில் மிகுந்

த ப்ரீதி உடையவரும் எனக்கு எப்பொழுதும் ஹிதத்தைச் செய்பவருமாயிருப்பவர்; எப்படிப்பட்ட சத்துருக்களையும் அடிக்க வல்லவர்கள்; எதிரிகளுக்கு எவ்விதத்திலும் வெல்ல முடியாதவர்கள். அவர்கள் எனது ஆஜ்ஞையைச் செய்வார்களே யன்றிச் செய்யாதிருக்க மாட்டார்கள். அப்படியிருக்க மீளவும் இப்பொழுது வந்து 'ஐயோ! அப்பனே!' என்று உரக்கக் கூச்சலிட்டுக் கொண்டு ஸர்ப்பம்போல் தரையில் வீழ்ந்து புலம்புகின்றனையே! இதற்குக் காரணம் யாது? சொல்வாயாக. கேட்க விரும்புகின்றேன். நாதனாகிய நானிருக்கும்பொழுதே அநாதைபோல் நீ ஏன் புலம்புகின்றனை? எழுந்திரு எழுந்திரு. பயப்படவேண்டாம். இவ்விஷயத்தில் மனக்கவலையைத் துறப்பாயாக' என்றனன். இங்ஙனம் கரன் பலவாறாகச் சொல்லி ஸமாதானப் படுத்துகையில் ஒருவருக்கும் எதிரிடக்கூடாத வல்லமையுடைய அந்தச் சூர்ப்பணகை கண்ணீரைத் துடைத்துக்கொண்டு ப்ராதாவாகிய கரனைப் பார்த்து மொழிந்தனள்:—'கொஞ்ச நேரத்திற்கு முன்னமே நான் மூக்கையும் காதையும் போக்கிக்கொண்டு ரக்தவெள்ளத்தினால் நனைந்து இவ்விடம் வந்தனன். நீயும் என்னை ஸமாதானப்படுத்தினை. வீரனே! நீ கோபித்துக்கொண்டு எனக்கு ப்ரியஞ்செய்ய விரும்பி ராமலக்ஷ்மணர்களைக் கொல்லும்பொருட்டு அந்த ராக்ஷஸர்கள் பதினால்வரையும் அனுப்பினை. அவர்கள் எல்லோரும் கோபத்தினால் சூலங்களையும் பட்டிசங்களையும் கையிற்கொண்டு ராமன்மேல் எதிர்த்துப்போகையில் யுத்தத்தில் ராமன் அவர்களெல்லோரையும் மர்மத்தைப் பிளக்கும்படியான பாணங்களைத் தொடுத்து வதித்தனன். அவர்கள் அனைவரும் மிகுந்த பலமுடையராயினும் ஒரு நொடிப்பொழுதிலேயே அடி

யுண்டு தரையில் வீழ்ந்ததையும், ராமனது பெரிய பராக்ரமகார்யத்தையும் பார்க்கையில் எனக்கு மிக்க பயம் உண்டாயிற்று. ராக்ஷஸர்தலைவனே! நான் மிகவும் பயமுற்று வருந்தியிருக்கின்றனன். எங்குப் பார்த்த போதிலும் ராமனே இருக்கிறுப்போல் எனக்குப் பயமாயிருக்கின்றது. ஆகையால் மீளவும் உன்னையே சரணம் அடைந்தனன். துக்கமென்னும் முதலை உள்ளே இருக்கப்பெற்றதும் பயமென்னும் அலைகள் வரிசைவரிசையாக மேலெழப்பெற்றதும் மிக விசாலமாயிருப்பதுமாகிய சோகமாகிற ஸமுத்ரத்தில் மூழ்கியிருக்கின்றனன். அப்படிப்பட்ட என்னை ஏன் பாதுகாக்காதிருக்கின்றனை? என்னைப் பின்றொடர்ந்து வந்த மாம்ஸாஹாரர்களாகிய அந்த ராக்ஷஸர்களுங்கூட ர்ாமனால் கூரான பாணங்களைக்கொண்டு அடிக்கப்பட்டுத் தரையில் விழுந்தார்களே! ராக்ஷஸஸ்ரேஷ்டனே! என்னிடத்தில் உனக்குத் தயை உளதாயின், அங்ஙனமே ராமனால் அடியுண்டு மாண்ட அவ்வரக்கர்களிடத்திலும் உனக்கு மனஇரக்கம் உளதாயின், உனக்கு ராமனோடு சண்டைசெய்யுந் திறமை இருக்குமாயின், பிறனுடைய வீர்யத்தைப் பொறுக்கமுடியாத சுருசுருப்பாவது இருக்குமாயின் தண்டகாரண்யத்தில் வஸித்துக்கொண்டு ராக்ஷஸர்களுக்குக் [1] கண்டகனாயிருக்கின்ற அவனைக் கொல்வாயாக. நீ எனக்குச் சத்ருவாகிய ராமனை இப்பொழுது கொல்லாயாயின், நான் இங்ஙனம் காது மூக்குகள் போகப்பெற்று மானமில்லாதவளாகி உன்னெதிரிலேயே ப்ராணன்களை விடுகின்றனன். மஹானுபாவனாகிய ராமனுக்கு எதிரில் யுத்தத்தில் நீ உன் பலங்கள் எல்லாவற்றோடு கூடியும் நிற்கமாட்டாயென்று என் புத்திக்குத் தோற்றுகின்றது. ராமலக்ஷ்மணர்கள் கேவல மனுஷ்யர்களே; அப்படிப்பட்டவர்களைக் கொல்ல முடியாதிருக்கின்றனையே! ஆகையால் உன்னைச் சூரனாக நீயே நினைத்துக்கொள்கிறாயேயன்றி நிஜமாக நீ சூரனல்லை; பொய்யாகப் பராக்

1. கண்டகம்-சத்ரு.

ரமத்தை ஏறிட்டுக் கொள்கின்றனே. ராக்ஷஸர் குடியில் பிறந்தும் அதற்கேற்ற பலவீர்யங்களில்லாமையால் வம்சத்தைக் கெடுக்கப்பிறந்தவனே! நீ ராமனைப் போன்ற பலமும் பராக்ரமும் உடையவனுயின், தண்டகாரண்யத்திலிருக்கின்ற அந்த ராமனைக் கொல்வாயாக. உனக்குப் பலமே இல்லை. உன் வீர்யம் அற்பமாயிருப்பது. இப்படிப்பட்ட நீ இங்ஙனம் பயங்கரமான ஜனஸ்தானத்தில் வாஸஞ்செய்வது எப்படி தகும்? ஆகையால் விரைவாகப் பந்துக்களோடுகூட ஜனஸ்தானத்தினின்று தொலைந்து போவாயாக. அல்லது இங்கேயே இருப்பாயாயின், ராமனது தேஜஸ்ஸினுல் கெடுதி உண்டாகப் பெற்றுச் சீக்ரத்திலேயே நசித்துப்போவாய். தசரத மஹாராஜனது குமாரனுகிய ராமன் மிகுந்த தேஜஸ்ஸுடையவன். என்னை விரூபமாகச் செய்த அவனுடைய தம்பி லக்ஷ்மணனும் மிகுந்த பராக்ரமமுடையவன்' என்றனள். பெரிய வயிறுடைய அந்த ராக்ஷஸி இங்ஙனம் பலவிதமாகப் புலம்பி உடனே துக்கம் மீளவும் மேலெழுந்து பெருகப்பெற்றுக் கைகளால் வயிற்றில் புடைத்துக் கொண்டு ரோதனஞ் செய்தனள். இருபத்தொன்றுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

{ கரன் பதினுன்காயிரம் ராக்ஷஸர்களோடு கூடி யுத்தத்திற்கு வருதல். }

கரன், இங்ஙனம் ராக்ஷஸர்களின் இடையில் சூர்ப்பணகை தன்னை அவமானப்படுத்துகையில் சூரனுகையால் கொடிய உருவமுடையவனுகி மிகவும் பயங்கரமான வாக்யத்துடன் அவளைப் பார்த்து மொழிந்தனன்:— 'உனக்குண்டான அவமானத்தால் எனக்கு இப்பொழுது அளவில்லாதகோபம் உண்டாயிற்று; பர்வகாலத்தில் பொங்கின லவண ஸமுத்ரம்போல் பெருகிவருகின்றது. அந்தக் கோபத்தை இப்பொழுது அடக்க முடியாதிருக்கின்றனன். மனுஷ்யனுகி ஆயுள் க்ஷீணித்திருக்கின்ற ராமனது பராக்ரமத்தை நான் வீர்யமுடையவனுகை

யால் எவ்வளவும் பொருள் செய்யமாட்டேன். எவன் இப்பொழுது தான் செய்த துஷ்டகார்யங்களுக்குப் பல ஞக என்னல் அடிக்கப்பட்டு ப்ராணன்களை விடப்போகிருனே, அவனை ஒரு பொருளாக நினைக்கமாட்டேன். இந்தக் கண்ணீரைத் துடைத்துக் கொள்வாயாக. இந்தப் பயத்தையும் துறப்பாயாக. நான் ராமனையும் அவன் தம்பியையும் யமபட்டணத்திற்கு அனுப்பிவிடுகின்றனன். ராக்ஷஸீ! நான் யுத்தத்தில் ராமனைக் கோடாலியால் அடிக்கின்றனன். பிறகு அவன் ப்ராணன்கள் க்ஷீணித்துப் போகையில் அவனது சிவந்த உஷ்ணமான ரக்தத்தைப் பானஞ்செய்வாயாக' என்றனன். அந்தச் சூர்ப்பணகை, கரனது முகத்தினின்று வந்த வார்த்தைகளைக் கேட்டு மிகவும் ஸந்தோஷித்து மனங் குதிரப்பெருத மூர்க்கையாகையால் ராக்ஷஸஶ்ரேஷ்டனும் ப்ராதாவுமாகிய அந்தக் கரனை முன்சொன்னதற்கு விபரீதமாகப் புகழ்ந்தனள். அங்ஙனம் அவள் முதலில் பருஷமாகப் பேசி மீளவும் புகழ்கையில் கரன் அப்பொழுது ஸேனாபதியாகிய தூஷணனைப் பார்த்து 'சொன்னபடி கேட்குந்தன்மையனே! ராக்ஷஸர்கள் பதினாலாயிரம் பேர்களும் என் மனப்படி நடப்பவர்களும் பயங்கரமான வேகமுடையவர்களுமாகி, யுத்தங்களில் பின்வாங்காமல் கறுத்த மேகம்போல் ப்ரகாசிப்பவர்களும் நடுக்கமுறச் செய்பவர்களும் கொடுமையான வ்யாபார முடையவர்களு மாயிருப்பவர். அவர்கள் லோகஹிம்ஸையில் விருப்பமுற்று மிகுந்த பலமுடையவர்களும் உக்ரமான பராக்ரமமுடையவர்களுமாயிருப்பவர். பெரும்புலிபோல் மிக்க மிடுக்குடையவர்களும் விகாரமான பெரிய முகமுடையவர்களும் மிகுந்த பராக்ரம முடையவர்களும் கர்விஷ்டர்களுமாகிய இந்த ராக்ஷஸர்களைக் கொண்டு எல்லாவிதத்திலும் யுத்தத்திற்கு வேண்டிய ப்ரயத்னங்களை யெல்லாம் செய்விப்பாயாக. அன்றியே

நல்லியற்கையுடையவனே! என் ரதத்தையும் தனுஸ்ஸுக்களையும் பலவகைப்பட்ட பாணங்களையும் கத்திகளையும் கூருள்ள நானுவித ஈட்டிகளையும் ஸித்தப்படுத்திக்கொண்டு வருவாயாக. யுத்தத்தில் ஸமர்த்தனுகிய நான் புலஸ்த்ய வம்சத்திற் பிறந்த மஹானுபாவர்களான அனைவர்க்கும் முன்னே, துஷ்டத்தன்மை யமைந்த ராமனைக் கொல்வதற்குப் போகவேண்டுமென்றிருக்கிறேன்' என்றனன். இங்ஙனம் அவன் சொல்லிக்கொண்டிருக்கும் பொழுதே, தூஷணன் சித்ரவிசித்ரமான வர்ணத்தையுடைய உத்தம அஶ்வங்கள் கட்டப்பெற்றதும் ஸூர்யன்போல் தகதகவென்று ப்ரகாசிப்பதுமாகிய பெரிய ரதத்தைக் கொண்டுவந்து 'ஸித்தமாயிருக்கிறது' என்றனன். அந்த ரதம் மிகவும் உயர்ந்து உருக்கின ஸ்வர்ணத்தால் அலங்கரிக்கப்பட்டிருக்கையால் மேரு பர்வதசிகரம்போல் புலப்படுவதும் பொன்னுல் செய்யப்பட்ட சக்ரங்களையுடையதும் வைடூர்யமயமான ஏர்க்காலையுடையதுமாகி நெருக்கமில்லாமல் விசாலமாயிருந்தது. மங்கலத்தை விளைப்பவைகளும் ஸ்வர்ணமயங்களுமான மத்ஸ்யங்களும் புஷ்பங்களும் வ்ருக்ஷங்களும் பர்வதங்களும் சந்த்ரஸூர்யர்களும் பக்ஷி ஸமூஹங்களும் நக்ஷத்ரங்களும் காற்புறமும் அமைக்கப்பெற்று த்வஜங்களோடும் கத்திகளோடுங்கூடிச் சிறு சதங்கைகள் ஒலிக்கப்பெற்றதும் மேலான குதிரைகள் கட்டப்பெற்றதுமாகிய அம்மஹாரதத்தின்மேல் கரன் பெரிய கோபாவேசத்துடன் ஆரோஹித்தனன். கரன் ரதத்தின்மேல் ஏறுவதைக் கண்டவுடனே, அவனையும் மஹாபலிஷ்டனுகிய தூஷணனையும், பயமுறுத்தும்படியான பராக்ரமமுடைய ராக்ஷஸர்கள் சுற்றிக்கொண்டு நின்றனர். கரன் பெரிய வில்லைத் தரித்துப் பயங்கரமான கவசங்களைப் பூண்டு பயங்கரமான ஆயுதங்களை ஏந்திப் பயங்கரமான த்வஜகளைப் பிடித்துக்கொண்டு நிற்கிற அந்த ராக்ஷஸர்

கள் எல்லோரையும் பார்த்து ரதத்திலிருந்துகொண்டே ஸந்தோஷத்துடன் 'புறப்படுவீர்கள்' என்று ஆஜ்ஞாபித்தனன். அனந்தரம் பயங்கரமான கவசங்களையும் ஆயுதங்களையும் த்வஜங்களையும் தரித்துக்கொண்டிருக்கிற அந்த ராக்ஷஸ ஸைன்யம் பேரொலிசெய்துகொண்டு மஹாவேகத்துடன் ஜனஸ்தானத்தினின்றும் புறப்பட்டது. மிகவும் பயங்கரர்களான ராக்ஷஸர்கள் பதினாலாயிரம் பேர்களும் பார்த்தபொழுதே பயத்தை விளைவிக்கும்படியான இரும்புத்தடிகளையும் பட்டயங்களையும் மிகவுங் கூரான சூலங்களையும் அத்தகைய கோடாலிகளையும் பெரியகத்திகளையும் சக்ராயுதங்களையும் கைமேலிருந்துகொண்டு தளதளவென்று ப்ரகாசிக்கின்ற வல்லயங்களையும் ஈட்டிகளையும் பயங்கரமான இரும்பு உழல் தடிகளையும் மிகப்பெரிய விற்களையும் கதை என்னும் ஆயுதங்களையும் சிறிய கத்திகளையும் உலக்கைகளையும் எட்டு நுனிகளையுடைய வஜ்ரமென்கிற விசேஷ ஆயுதங்களையும் கையில் ஏந்திக்கொண்டு கரனது கருத்தின்படி நடப்பவராகி ஜனஸ்தானத்தினின்றும் புறப்பட்டனர். பயங்கரமான பராக்ரமமுடைய அந்த ராக்ஷஸர்கள் யுத்தத்திற்காகப் பரபரப்புடன் புறப்பட்டுப் போவது கண்டு நெருக்கத்தினால் கரனுடைய ரதம் அவர்க்குக் கொஞ்சம் பின்வாங்கிச் சென்றது. அனந்தரம் ஸாரதி கரனுடைய அபிப்ராயத்தை அறிந்து ஸ்வர்ணத்தினால் அலங்காரஞ் செய்யப்பெற்றுச் சித்ர வர்ணங்களோடு கூடின குதிரைகளைச் சீக்ரமாக அதட்டி ஓட்டினன். அப்பொழுது சத்ருக்களை முடிக்குந்தன்மையனாகிய அந்தக் கரனுடைய ரதம் ஸாரதியால் சீக்ரமாக நடத்தப்பட்டுச் சப்தத்தினால் திசைகளையும் திசைகளின் மூலைகளையும் நிறைத்தது. மஹாபலனாகிய கரன் பருஷமாக இரைந்துகொண்டு மேன்மேலும் கோபம் மேலெழப்பெற்றுச் சத்ருவை வதிக்கும்பொ

ருட்டு யமன்போல் விரைந்து பெருங் காற்ருல் ஏவப் பட்டுக் கல்மழை பெய்ய முயன்ற மஹாமேகம் கர்ஜனை செய்துகொண்டு தனக்கு முன்னேயிருக்கின்ற மேகத்தைத் துரத்துவதுபோல் பெருங்கோஷத்துடன் ஸாரதியைப் பார்த்து ரதத்தைத் துரத்தும்படி ஆஜ்ஞாபித்தனன். இருபத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

கரன் யுத்தத்திற்குப் புறப்படுகையில் அவசகுனங்கள் புலப்படுதல்.

ராக்ஷஸஸைன்யம் ஜனஸ்தானத்தினின்று புறப்பட்டுப் போகையில் கழுதைபோல் சாம்பல்வர்ணமுடையதும் பார்க்கவழங்காமல் பயங்கரமுமாயிருக்கிற மஹாமேகம் அந்த ஸேனையின்மேல் அமங்கலகரமான ரக்தவர்ஷத்தைப் பெய்தது. அந்தக் கரனுடைய ரதத்தில் பூட்டியிருந்த குதிரைகள் மிகுந்த வேகமுள்ளவையாயினும், போகும்வழியான ராஜமார்க்கம் புஷ்பங்கள் இறைக்கப்பெற்று மேடுபள்ளமில்லாமல் ஸமமாயிருப்பினும் அவ்வழியில் தெய்வாதீனமாகத் தடுக்கினாற்போல் விழுந்தன. ஸூர்யனைச் சுற்றிக் கறுத்தும் ஓரங்களில் மாத்ரம் ரக்தவர்ணமுடையதும் [1] அலாத சக்ராகாரமாயிருப்பதுமான பரிவேஷம் ஒன்று உண்டாயிற்று. அனந்தரம் பெரிய சரீர முடையதும் பயங்கரமாயிருப்பதுமாகிய ஒரு கழுகு பொன்தடியிடப்பெற்றதும் மிக்க உயரமுடையதுமான த்வஜத்தின்மேல் வந்து உட்கார்ந்தது. மாம்ஸத்தைத் தின்பவைகளும் க்ரூரமாகச் சப்திப்பவைகளுமான ம்ருகபக்ஷிகள் ஜனஸ்தானஸமீபத்தில் வந்து பலவாருன விகார சப்தங்களைச் செய்தன. பயங்கரமாயிருப்பவைகளும் பெருங்கோஷ முடையவைகளுமாகிய நரிகள் ஸூர்யன் ப்ரகாசிக்கின்ற திசையில் சேர்ந்து பயங்கரமான பெருங்கோஷத்துடன் ராக்ஷஸர்

---

1. அலாத சக்ரமாவது. கொள்ளிக்கட்டையைச் சுழற்றினல் தோற்றுகிற வட்டம். அது போன்றிருப்பது.

களுக்கு நேருகிற அமங்கலத்தை மொழிந்தன. இந்த்ரனால் பிளக்கப்பட்டு ரக்தங்களைப் பெருக்குகிற பர்வதங்கள்போல் பயங்கரமாகப் புலப்படுகின்ற செம்மேகங்கள் ரக்தம்போன்ற ஜலத்தைப் பெய்துகொண்டு ஆகாயம் முழுவதும் துளி இடமில்லாமல் வ்யாபித்திருந்தன. இருட்டு பயங்கரமாகி மயிர்க்கூச்சலை விளைத்துக் கொண்டு எங்கும் நிறைந்துநின்றது. திக்குக்களும் விதிக்குக்களும் ப்ரகாசமில்லாதிருந்தன. ஸந்த்யாகாலம் வருவதற்கு முன்னமே ரக்தம்போன்ற சிவப்பையுடைய ஸந்தியும் தோற்றியது. அப்பொழுது பயங்கரமான கொடிய ம்ருகங்களும் பக்ஷிகளும் கரனுக்கெதிரில் கோரமாகக் கூவின. கூளி நரி கழுகு முதலான பறவைகள், மேல் விளையும் பயத்தைச் சொல்வனவாகி ஒலிசெய்தன. தப்பாமல் அசுபத்தை விளைவிப்பவைகளும் வரும் பயத்தை அறிவிப்பவைகளுமாகிய நரிகள் ஸைன்யத்திற்கு எதிரில் வந்து தீயைக் கக்குகின்ற முகங்களுடன் ஊளையிட்டன. இரும்புத்தடிபோல் கறுத்துத் தலையற்ற உடலொன்று ஸூர்யனுக்கருகில் புலப்பட்டது. பர்வமல்லாத காலத்தில் ராஹு மிகுந்த ஆக்ரஹமுடையவனாகி ஸூர்யனை விழுங்கினன். காற்று மிக்க வேகத்துடன் ப்ரதிகூலமாக வீசிற்று. ஸூர்யன் ஒளியற்றவனாயினன். ராத்ரியல்லாத பகலிலும் நக்ஷத்ரங்கள் மின்மினிப்பூச்சிகள்போல் ப்ரகாசிக்கத் தொடங்கின. அந்த ஸமயத்தில் தாமரையோடைகள், மத்ஸ்யங்களும் நீர்ப்பறவைகளும் ஜலத்தில் மறையவும் தாமரை மலர்கள் வாடிவதங்கவும் பெற்று ஒளியற்றிருந்தன. வ்ருக்ஷங்கள் பூவுங் காயுமற்றிருந்தன. அந்த ராக்ஷஸ ஸேனையின்மேல் காற்றில்லாமலே மேகம்போல் புகைவர்ணமுள்ள தூள் கிளம்பிற்று. சாரிகை யென்னும் பறவைகள் வீசி கூசி யென்று க்ரூர

மாகக் கூவிக்கொண்டிருந்தன. குறைக் கொள்ளிகள் பயங்கரமான காட்சியுடையனவாகிப் பெருங்கோஷத் துடன் வீழ்ந்தன. பர்வதங்களோடும் வனங்களோடும் கூடிய பூமி முழுவதும் நடுக்கமுற்றது. மிகுந்த மதி யுடையோனுகிய கரன் ரதத்தின்மேல் ஏறி உட்கார்ந்து கர்ஜித்துக்கொண்டிருக்கையில் அவனுடைய இட புஜம் துடித்தது. அவனது கண்ட த்வனியும் தழதழத் துத் தடைபட்டு நின்றது. கரன் நாற்புறமும் சுற்றிப் பார்க்கையில் காரண மொன்றுமேயின்றி அவன் கண் களினின்று நீர்கள் பெருகின. அவனுக்கு நெற்றியில் ஒரு விதமான பீடை உண்டாயிற்று. ஆயினும் அவன் யுத்தஞ் செய்யவேண்டுமென்னும் மோஹத்தை விட்ட வனல்லன். மதிமயக்கத்தினுல் அந்த அவசகுனங்களைக் கண்டும் திரும்பாமலே போயினன். அப்பொழுது கரன் பயங்கரமான அந்த உத்பாதங்கள் உண்டாவது கண்டு சிரித்துக்கொண்டு ராக்ஷஸர்களெல்லோரையும்பார்த்து மொழிந்தனன்:—இப்பொழுது பயங்கரமாகத் தோற்று கின்ற இந்த மஹோத்பாதங்களை நான் பராக்ரம பலத் தினுல், பலவானுயிருப்பவன் துர்ப்பலனைப் பொருள் செய் யாததுபோல் எவ்வளவும் பொருள் செய்யமாட்டேன். நான் கோபித்துக்கொள்வேனுயின், கூரான பாணங்களை எய்து நக்ஷத்ரங்களையுங்கூட ஆகாயத்தினின்று விழத் தள்ளுவேன்; ம்ருத்யுவுக்குங்கூட மரணத்தை விளைவிப் பேன். நான் கூரான பாணங்களால், பலங்கொண்டு கர்வித்திருக்கின்ற ராமனையும் அவன் தம்பி லக்ஷ்மண னையும் கொல்லாமல் திரும்ப விரும்பமாட்டேன். என் னுடன் பிறந்தவளாகிய சூர்ப்பணகையும் அந்த ராம லக்ஷ்மணர்களின் குருதியைப் பானஞ்செய்து தன் கருத் தை ஈடேற்றிக்கொள்வாளாக. அவளுக்காகவன்றே

இப்பொழுது அந்த ஸீதாராமலக்ஷ்மணர்களுக்கு விபரீதம் உண்டாயிருக்கின்றது. இதுவரையில் எனக்கு யுத்தங்களில் என்றும் எவ்விடத்திலும் பராஜயம் உண்டானதில்லை. இது உங்களுக்கும் நன்ருகத் தெரிந்ததேயன்ரு? நான் பொய் சொல்லவில்லை. நான் கோபங்கொள்வேனுயின், யுத்தத்தில் மதித்த ஐராவதத்தின் மேல் உட்கார்ந்து போகிற வஜ்ராயுதம் பிடித்த தேவேந்த்ரனையும் வதித்துவிடுவேன். இனி இந்த உபயோகமற்ற மனிதர்களாகிய ராமலக்ஷ்மணர்கள் விஷயத்தில் சொல்ல வேண்டுமோ?'' என்றனன். அந்த ஸைன்யத்திலுள்ள ராக்ஷஸர்களெல்லோரும் கரன் கர்ஜித்துச் சொன்ன வார்த்தையைக் கேட்டு யமபாசத்திற்கு வசப்பட்டவராகையால் மிகுந்த ஸந்தோஷம் அடைந்தனர். மஹானுபாவர்களான ரிஷிகளும் தேவதைகளும் கந்தர்வர்களும் ஸித்தர்களும் சாரணர்களும் யுத்தத்தைப் பார்க்க விரும்பி அவ்விடம் வந்தனர். புண்யகர்மமுடையவர்களாகிய அந்தத் தேவர்களும் ரிஷிகளும் கந்தர்வர்களும் சாரணர்களும் அவ்விடத்திற்கு வந்து ஒருவர்க்கொருவர் 'பசுக்களுக்கும் ப்ராஹ்மணர்களுக்கும் லோகங்களுடைய நன்மையை விரும்புகிற மற்ற மஹானுபாவர்களுக்கும் மங்கலம் உண்டாகுமாக. சக்ரபாணியாகிய விஷ்ணுதேவன் அஸுரஶ்ரேஷ்டர்களெல்லோரையும் ஜயிப்பதுபோல், ராமன் யுத்தத்தில் புலஸ்த்ய வம்சத்தில் பிறந்த ராக்ஷஸர்களெல்லோரையும் ஜயிப்பானுக' என்று சொல்லிக் கொண்டனர். அம்மஹர்ஷிகளும் தேவதைகளும் யுத்தத்தைப் பார்க்கவேண்டுமென்னுங் குதூஹலத்தோடு விமானங்களில் ஏறிக்கொண்டு [1] 'கோப்ராஹ்மணர்களுக்கு மங்கலம் உண்டாகுமாக' என்று இது முதலான வார்த்தைகளையும் மற்

---

1 கோ ப்ராஹ்மணர்களுக்கு - கோ என்ருல் பசு. பசுக்களுக்கும் ப்ராஹ்மணர்களுக்குமென்று பொருள்.

றும் பலவற்றையும் சொல்லிக்கொண்டு ஆயுள்தொலைந்த ராக்ஷஸர்களது ஸைன்யத்தைக் கண்டனர். பயங்கரமான ஸேனைகள் சூழப்பெற்ற கரன் ரதத்தின்மேல் ஏறி வேமாகப் புறப்பட்டனன். அவன் புறப்படுவதைக் கண்டு ராக்ஷஸர்கள் அனைவரும் புறப்பட்டனர். [1] ஶ்யேனகாமி ப்ருதுக்ரீவன் யஜ்ஞசத்துரு விஹங்கமன் துர்ஜயன் கரவீரராக்ஷன் பருஷன் காலகார்முகன் மேகமாலி மஹாமாலி ஸர்ப்பாஸ்யன் ருதிராசனன் ஆகிய மஹாபராக்ரமசாலிகளாகிய பன்னிரண்டு ராக்ஷஸர்களும் கரனைச்சுற்றிப் புறப்பட்டனர். மஹாகபாலன் ஸ்தூலாக்ஷன் ப்ரமாதி த்ரிசிரன் என்னும் இந்நான்கு ஸேனாபதிகள் தூஷணனைச் சுற்றிப் புறப்பட்டனர். பயங்கரமான வேகமுடையதும் மஹாபலமுடையதுமான அந்த ராக்ஷஸவீரர்களின் ஸைன்யம் யுத்தத்தில் உத்ஸாஹங்கொண்டு அங்காரகன் முதலிய க்ரஹங்களின் வரிசை சந்த்ரஸூர்யர்களைக் கிட்டுவதுபோல் ராஜபுத்ரர்களாகிய அந்த ராமலக்ஷ்மணர்களைக் கிட்டிற்று. இருபத்து மூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராமன் யுத்தத்திற்கு ஸித்தனாயிருத்தலும், ராக்ஷஸ ஸைன்யம் ராமனைக் கிட்டுதலும்.

பயங்கரமான பராக்ரமமுடைய கரன் ராமனது ஆஶ்ரமத்திற்கு ப்ரயாணமாய் வந்துகொண்டிருக்கையில், ராமனும் லக்ஷ்மணனும் முன்பு நிரூபிக்கப்பட்ட உத்பாதங்களையே கண்டனர். ராமன், மிகவும் பயங்கரமாகி மயிர்க்கூச்சலை விளைப்பவைகளும் ஜனங்களுக்குக் கெடுதியைத் தருபவைகளுமாகிய உத்பாதங்கள் உண்டாவதைக்கண்டு லக்ஷ்மணனை நோக்கி மொழிந்தனன்:—'மஹா பாஹோ! ஸமஸ்த ப்ராணி ஸம்ஹா

1. ஶ்யேனகாமி.

ரத்தை அறிவிக்கும்படியான மஹோத்பாதங்கள் இப்பொழுது ஸமஸ்த ராக்ஷஸர்களையும் ஸம்ஹரிக்கும்பொருட்டு உண்டாயிருக்கின்றன, இவைகளைக் காண்பாயாக. க்ரூரமாயிருப்பவைகளும் கழுதைபோல் அழுக்கடைந்த வர்ணமுடையவைகளுமான இம்மேகங்கள் ரக்ததாரைகளைப் பெய்வதும் பெருங்கோஷம் உண்டாகும்படி கர்ஜிப்பதுமாகி ஆகாயத்தில் திரிகின்றன. லக்ஷ்மணா! என்னுடைய பாணங்களெல்லாம் புகையுடன்கூடி யுத்தத்தை விரும்புகின்றன. பொற்பிடிகளுடைய என் தனுஸ்ஸுக்களும் யுத்தத்திலுள்ள விருப்பத்தினால் பதறி அசைகின்றன. இப்பொழுது வனசாரிகளான பக்ஷிகள் சப்தஞ்செய்வதைப் பார்க்கையில் முன்பு நமக்குப் பயமும் ப்ராணஸம்சயமும் உண்டாகுமென்று தோற்றுகின்றது. மஹாயுத்தம் நடக்கப்போகிறது. இதற்கு ஸந்தேஹம் இல்லை. சூரனே! அடிக்கடி துடிக்கின்ற இந்த என் வல புஜம் இனிச் சீக்ரத்திலேயே நமக்கு ஜயமும் சத்ருக்களுக்குப் பராஜயமும் உண்டாகப்போகிறதென்று நன்கு மொழிகின்றது. உன் முகமும் காந்தி விளங்கப்பெற்று ப்ரஸன்னமாகப் புலப்படுகின்றது. லக்ஷ்மணா! யுத்தம் வந்தபொழுது எவருடைய முகம் காந்தியை இழக்குமோ, அவர்க்கு ப்ராணஹானி உண்டாகும். இதோ ஸிம்ஹநாதஞ்செய்கின்ற ராக்ஷஸர்களின் பெருங்கோஷமும் கொடுஞ்செயலினர்களான அரக்கர்களால் அடிக்கப்பட்ட பேரிவாத்யத்வனிகளின் முழக்கமும் மிகவும் பயங்கரமாக நம் செவிகளுக்குப் புலப்படுகின்றன. பண்டிதனாயிருக்கும் புருஷன் ஆபத்து வருமோ என்னவோ என்று சங்கிப்பானாயின் மங்கலத்தை விரும்பி ஆபத்து வருவதற்கு முன்னமே அதற்கு ப்ரதீகாரஞ் செய்யவேண்டும். ஆகையால் நீ வில்லையும் பாணங்களையும் தரித்து ஸீதையை அழைத்துக்கொண்டு வ்ருக்ஷங்களால் மறைக்கப்பட்டு நுழையக்கூடாதிருக்கின்ற குஹையுள் ப்ரவேசித்துக் காத்துக்கொண்டிருப்

பாயாக. குழந்தாய்! நீ இந்த வார்த்தைக்குக் குறுக்குச் சொல்வாயாயின், அதை நான் ஏற்றுக்கொள்ளமாட்டேன். என் பாதங்களின் மேல் ஆணை. தாமதஞ் செய்யவேண்டாம். சீக்ரம் போவாயாக. நீயும் சூரனே; மிகுந்த பலமுடையவனே; இந்த ராக்ஷஸர்களெல்லோரையும் வதிக்கவல்லவனே. இதற்கு ஸந்தேஹம் இல்லை. ஆனால் நானே இந்த ராக்ஷஸர்களெல்லோரையும் கொல்லும்படி நினைத்திருக்கிறேன்' என்றனன். ராமனால் இங்ஙனம் மொழியப்பட்ட லக்ஷ்மணன் பாணங்களையும் தனுஸ்ஸையும் எடுத்துக்கொண்டு ஸீதையுடன் புகக்கூடாத குஹையுள் நுழைந்தனன். லக்ஷ்மணன் அங்ஙனம் ஸீதையோடுகூட குஹையுள் ப்ரவேசித்தவுடனே ராமன் 'ஆ! நல்ல உபாயம் ஆராய்ந்தோம். லக்ஷ்மணன் நான் சொன்னபடி நன்றாகச் செய்தனன்' என்று சொல்லிக்கொண்டே சரீரத்தில் கவசம் போகட்டுக் கொண்டனன். அக்னிபோல் ப்ரகாசிக்கின்ற கவசத்தினால் அலங்கரிக்கப்பட்ட ராமன் இருட்டில் புகையின்றி எரிகின்ற அக்னிபோல் விளங்கினன். வீர்யசாலியாகிய அந்த ராகவன் தன் பெரியவில்லையும் பாணங்களையும் எடுத்துக்கொண்டு நாண்சப்தத்தினால் திசைகளையெல்லாம் முழங்கச்செய்துகொண்டு அங்கே இருந்தனன். பிறகு மஹானுபாவர்களான தேவதைகளும் கந்தர்வர்களும் ஸித்தர்களும் சாரணர்களும் யுத்தத்தைப் பார்க்கவேண்டுமென்னும் விருப்பத்துடன் அவ்விடம் வந்து கூடினர். மூன்றுலோகங்களிலுள்ள மஹானுபாவர்களும் புண்யச்செயலுடையவர்களும் ப்ரஹ்மரிஷிகளில் தலைமையுள்ளவர்களும் அவ்விடம் வந்து எல்லோரும் ஒன்றுசேர்ந்து ஒருவர்க்கொருவர் 'பசுக்களுக்கும் ப்ராஹ்மணர்களுக்கும் லோகங்களுக்கு எவரெவர் அநுகூலர்களோ அவர்களுக்கும் மங்கலம் உண்டாகுமாக. சக்ராயுதத்தைக் கையிலேந்திய விஷ்ணுதேவன் யுத்

தத்தில் ஸமஸ்த அஸுர வீரர்களையும் ஜயிப்பதுபோல் ராமன் யுத்தத்தில் புலஸ்த்யவம்சத்தில் பிறந்த ராக்ஷஸர்களெல்லோரையும் ஜயிப்பானாக' என்று சொல்லிக் கொண்டனர். அவர்கள் இங்ஙனம் சொல்லி மீளவும் ஒருவரை யொருவர் பார்த்து 'பயங்கரமான கார்யத்தையுடைய ராக்ஷஸர்கள் பதினாலாயிரம்பேர்கள் இருக்கின்றனர். தர்மஸ்வபாவனாகிய ராமன் ஒருவனே. யுத்தம் எப்படி நடக்கப்போகின்றதோ?' என்று சொல்லிக்கொண்டனர். இங்ஙனம் தேவத்வம் பெற்ற ராஜரிஷிகளும் ஸித்தர்களும் ப்ரஹ்மரிஷிகளும் தேவதைகளும் தத்தமது பரிவாரங்களோடு யுத்தத்தைப் பார்க்கவேண்டுமென்னும் குதூஹலத்தினால் விமானங்களின்மேல் ஏறி ஆகாயத்தில் வீற்றிருந்தனர். அப்பொழுது யுத்தத்தின் தலையில் ஸந்நாஹத்துடன் நிற்கின்ற ஸ்ரீராகவன் அளவில்லாத தேஜோவிசேஷம் உண்டாகப் பெற்றிருந்தனன். அப்பொழுது அத்தகையனாகிய அந்த ராமனைப் பார்த்து ஸமஸ்த பூதங்களும் பயந்து வருந்தினின்றன. ஸஹஜமாக எவர்க்கும் வருத்தத்தை விளைக்கும்படியான கார்யங்களைச் செய்யாதவனும் எப்படிப்பட்ட கார்யத்தையும் அனாயாஸமாக நிறைவேற்றுந் தன்மையனுமாகிய ராமனுடைய நிகரில்லாத ஆகாரம் அப்பொழுது பினாகமென்னும் தனுஸ்ஸைப் பிடித்த மஹானுபாவனாகிய ருத்ரன் கோபித்திருக்கும்பொழுதுள்ள அவனது ஆகாரம் போன்று மிகவும் பயங்கரமாயிருந்தது. அப்பால் ராக்ஷஸர்களின் ஸைன்யம் கம்பீரத்வனியுடன் பயங்கரமான கவசங்களையும் ஆயுதங்களையும் த்வஜங்களையும் தரித்து நாற்புறமும் சூழ்ந்துவரப் புலப்பட்டது. அவர்கள் ஸிம்ஹநாதங்களைச் செய்துகொண்டு ஒருவரையொருவர் பார்த்து 'நான் தான் சத்ருவைக் கொல்லப்போகிறேன்' என்று உரத்தகர்ஜனைகளையும் நாண்சப்தங்களையும் மதத்தினால்

கிளம்பிக் குதித்தலையும் [1] குஞ்ஜனத்வனிகளையும் பேரி வாத்ய முழக்கங்களையும் செய்துகொண்டு சூழ்ந்துவருகையில் அவர்களுடைய அந்தத்துமுலத்வனி அவ்வனம் முழுவதும் நிரம்பியது. அடவியில் திரிகின்ற க்ரூரஜந்துக்களும் அந்த சப்தத்திற்கு பயந்து பின்னே திரும்பியும் பாராமல் நிஸ்ஸப்தமாயிருக்கின்ற இடத்திற்கு ஓடிப்போயின. அந்த ஸைன்யம் நானுவித ஆயுதங்களைத் தரித்துப் பிறர்க்குப் புகக்கூடாமல் ஸமுத்ரம் போல் கோஷித்துக்கொண்டு பயங்கரமாகி ராமனைக் கிட்டி வந்தது. ராமன் யுத்தவ்யாபாரத்தில் ஸமர்த்தனகையால் நாற்புறத்திலும் கண்ணைப் பரப்பி யுத்தத்தின் பொருட்டு ஸந்நாஹத்துடன் வந்திருக்கின்ற கரனது ஸைன்யத்தைக் கண்டனன். ராமன் பயங்கரமான வில்லை எடுத்துப் பிடித்து நாணேற்றிப் பின்புறத்தில் இருபுறத்திலும் கட்டப்பட்ட இரண்டு அம்பறாத்தூணிகளினின்றும் பாணங்களை எடுத்து ஸமஸ்தராக்ஷஸர்களையும் கொல்லுவதற்காகப் பெருங்கோபத்தை ஏறிட்டுக்கொண்டனன். அங்ஙனம் ராமன் கோபித்து ப்ரளயகாலாக்னிபோல் கண்ணெடுத்துப்பார்க்கமுடியாமல் ப்ரகாசித்துக்கொண்டிருந்தனன். அங்ஙனம் தேஜோவிசேஷத்துடன் கண்கொண்டு காணமுடியாமல் விளங்குகின்ற ராமனைப் பார்த்து வனதேவதைகள் பயந்து ஓடிப்போயினர். அப்பொழுது ராக்ஷஸவதத்தின்பொருட்டு அப்படி கோபித்துக்கொண்டிருக்கிற ராமனுடைய ஆகாரம் தக்ஷனது யாகத்தை த்வம்ஸஞ்செய்யும் பொருட்டுக் கோபாவேசங்கொண்ட ருத்ரனது ஆகாரம்போல் மிகவும் பயங்கரமாகப் புலப்பட்டது. அங்ஙனம் யுத்தத்தின் தலையில் நின்றுகொண்டு பார்க்கமுடியாத மஹாதேஜஸ்ஸுடன் ப்ரகாசிக்கின்ற ராமனைப் பார்த்து ஸமஸ்த பூதங்களும் பயந்து வருந்தி ஓடிப்போயின. விற்களையும் ஆபரணங்களையும் த்வஜங்களையும் தரித்து அக்னியோடொத்த வர்ணத்துடன்

---

1. அதாவது - வீரர்கள் செய்யும் ஓர்விதத்வனி.

ஜ்வலிக்கின்ற அத்தகைய கவசங்களையும் அணிந்த அந்த ராக்ஷஸர்களின் ஸைன்யம் ஸூர்யோதயகாலத்தில் ஸூர்யகிரணங்களால் உண்டான இந்த்ரதனுஸ்ஸாலும் உத்பாதத்வஜங்களாலும் விளங்குகின்ற நீலமேகஸமூஹம்போல் ப்ரகாசித்துக்கொண்டிருந்தது. இருபத்து நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராமனுக்கு ராக்ஷஸர்களுடன் தமுலயுத்தமும், ராமன் காந்தர்வாஸ்த்ரம் ப்ரயோகித்தலும், ராக்ஷஸர்களைச் சித்ரவதஞ் செய்தலும்.

கரன் தனக்கு முன்னே போகின்ற ராக்ஷஸர்களோடு கூட ராமாஶ்ரமத்திற்கு வந்து அங்கு வில்லைப் பிடித்துக்கொண்டு கோபாவேசத்துடன் ஜ்வலிக்கின்றவனும் பகைவரை முடிக்குந்தன்மையனுமாகிய ராமனைக் கண்டனன். அவன் ராமனைப் பார்த்து வில்லைப் பருஷமாக ஒலிக்கச் செய்து பாணம் தொடுத்து ராமனுக்கு எதிரில் ரதத்தை ஓட்டும்படி ஸாரதிக்கு ஆஜ்ஞாபித்தனன். அந்த ஸாரதியும் கரனது ஆஜ்ஞையின்படி குதிரைகளை, மஹாபாஹுவாகிய ராமன் தானொருவனேயாகி வில்லை அசைப்பித்துக்கொண்டு நிலைநின்றிருக்கிற இடத்திற்கு ஓட்டினன். அந்தக் கரன் அங்ஙனம் ராமன்மேல் எதிர்த்துவருவது கண்டவுடனே அவனது மந்த்ரிகளாகிய ஶ்யேனகாமி முதலிய ராக்ஷஸர்கள் எல்லோரும் பெருந்த்வனி உண்டாகும்படி ஸிம்ஹநாதஞ் செய்துகொண்டு அவனைச்சுற்றிச் சூழ்ந்து கொண்டனர். அந்த ராக்ஷஸர்கள்நடுவில் ரதத்திலிருக்கிற அந்தக் கரன் நக்ஷத்ரங்களினிடையில் உதித்த அங்காரகன்போல் தோன்றினன். அனந்தரம் அந்தக் கரன் யுத்தத்திற்குத் தொடங்கி நிகரில்லாத தேஜஸ்ஸுடன் ப்ரகாசிக்கின்ற ஸ்ரீராமன்மேல்

ஆயிரம் பாணங்களை ப்ரயோகித்து அவனை வருந்தச் செய்து பெருங்கோஷத்துடன் கூச்சலிட்டனன். அனந்தரம் ராக்ஷஸர்களெல்லோரும் கோபித்துப் பயங்கரமான வில்லுடையவனும் வெல்லமுடியாதவனுமாகிய ராமன்மேல் பலவகை ஆயுதங்களைப் பெய்தனர். ராக்ஷஸர்கள் கோபித்து யுத்தத்தில் முன்னின்று இரும்புத்தடிகளாலும் பட்டயங்களாலும் சூலங்களாலும் ஈட்டிகளாலும் கத்திகளாலும் கோடாலிகளாலும் ராமனை அடித்தனர். மஹாபராக்ரமசாலிகளாகிய அந்த ராக்ஷஸர்கள் மேகங்கள்போல் பெருங்கர்ஜனைகள் செய்துகொண்டு யுத்தத்தில் ராமனை வதிக்க விரும்பிச் சிலர் தேரின்மேலும் சிலர் குதிரைகள்மேலும் சிலர் பர்வதசிகரம்போன்ற யானைகள்மேலும் ஏறிக்கொண்டு ராமனை எதிர்த்தோடி வந்தனர். அந்த ராக்ஷஸக்கூட்டங்கள், மழை பெய்ய முயன்ற மேகங்கள் பெரிய பர்வதத்தின்மேல் ஜலதாரைகளை வர்ஷிப்பதுபோல் ராமன்மேல் பாணவர்ஷங்களைப் பெய்தனர். அப்பொழுது பயங்கரமான ராக்ஷஸக் கூட்டங்கள் ராமனைச் சுற்றிக் கவர்ந்துகொண்டன. ஸமுத்ரம் நதீப்ரவாஹங்களைத் தன்ப்ரவாஹங்களால் தடுப்பதுபோல், ராமன், அந்த ராக்ஷஸர்கள் ப்ரயோகித்த ஆயுதங்களையெல்லாம் தன் பாணங்களால் தடுத்தனன். அந்த ராமன் பயங்கரமான அந்த ராக்ஷஸர்களின் பாணங்களால் பிளக்கப்பட்ட சரீரமுடையவனாயினும், இடிகள் ஜ்வலித்துக்கொண்டு பலவாயிரம் விழுந்தபோதிலும் அசையாத மஹாபர்வதம்போல் சிறிதும் வருத்தமுறாதிருந்தனன். அந்த ராமன் அவயவங்கள் முழுவதிலும் பாணங்கள் பொற்றிக் கொள்கையில் ரக்தத்தால் நனைந்து ஸந்த்யாகாலத்து மேகங்களால் சூழப்பட்ட ஸூர்யன்போல் ப்ரகாசித்துக்கொண்டிருந்தனன். அப்

பொழுது தேவதைகளும் கந்தர்வர்களும் ஸித்தர்களும் மஹர்ஷிகளும், ராமனொருவன் பலவாயிரம் அரக்கர்களால் சூழப்பட்டிருப்பதுகண்டு மனவருத்தங்கொண்டனர். அனந்தரம் ராமன் மிகவும் கோபித்து வில்லை மண்டலாகாரமாகச் செய்து நூறுநூறாகவும் ஆயிரமாயிரமாகவும் அர்த்தசந்த்ரபாணங்களை ப்ரயோகித்தனன். ராமன், யுத்தத்தில் தடுக்க முடியாதவைகளும் ஸஹிக்க முடியாதவைகளும் யமதண்டங்கள் போன்றவைகளும் கழுகின் இறகு கட்டப்பெற்றவைகளும் கோணலின்றி நேராகச் சென்று குறிதப்பாதவைகளுமான பல பாணங்களை அவலீலையாக ப்ரயோகித்தனன். அவன் அங்ஙனம் ராக்ஷஸஸைன்யங்கள்மேல் அனாயாஸமாக ப்ரயோகித்த பாணங்கள், யமன் ப்ரயோகித்த பாசாயுதங்கள்போல், யுத்தத்தில் ராக்ஷஸர்களுடைய ப்ராணன்களையெல்லாம் பறித்துக்கொண்டு போயின. அந்தப் பாணங்கள் ராக்ஷஸர்களுடைய; அத்தகைய தேஹங்களைப் பிளந்து ரக்தம் படியப்பெற்று ஆகாயத்தில் கிளம்பி எரிகிற அக்னியோடொத்த ஒளியுடையவைகளாகி ப்ரகாசித்தன. அப்பொழுது மண்டலாகாரமாயிருக்கின்ற ராமதனுஸ்ஸினின்று மிகவும் உக்ரங்களும் எண்ணமுடியாதவைகளும் ராக்ஷஸர்களின் ப்ராணன்களைப் பறிப்பவைகளுமான பாணங்கள் வெளிப்பட்டன. ராமன் அங்ஙனம் தான் தொடுத்துவிட்ட அந்த பாணங்களால் யுத்தத்தில் ராக்ஷஸர்களின் தனுஸ்ஸுக்களையும் த்வஜத்துநுனிகளையும் கவசங்களையும் தலைகளையும் வளைகளோடுகூடின புஜங்களையும் யானைத்துதிக்கைகள்போன்ற துடைகளையும் நூறுநூறாகவும் ஆயிரமாயிரமாகவும் துண்டித்தனன். ராமன் அங்ஙனம் யுத்தத்தில் பொன்மயமான ஆபரணம் முதலியவற்றோடு கூடினவைகளும் ரதங்களில் ஸித்தமாகப் பூட்டப்பட்டவைகளும் தேர்ப்பாகர்களோடு கூடினவைகளுமான

குதிரைகளையும் யானைக்காரர்களோடு கூடின யானைகளையும் குதிரைகளோடுகூடின குதிரைக்காரர்களையும் காலாட்களையும் கொன்று யமபட்டணத்திற்கு அனுப்பினன். அனந்தரம் ராக்ஷஸர்கள் அங்ஙனம் கூரான நுனியுடைய நாலீகபாணங்களாலும் இருப்புப்பாணங்களாலும் கர்ணிபாணங்களாலும் பிளக்கப்பட்டுப் பொறுக்க முடியாமல் பயங்கரமான துக்கஸ்வரத்துடன் கூச்சலிட்டனர். அங்ஙனம் ராமன் மர்மங்களைப் பிளக்குந்தன்மையுள்ள கூரான பாணங்களை ப்ரயோகிக்கையில் அந்த ஸைன்யமானது, உலர்ந்த அரண்யம் நெருப்புப்பட்டு எரிந்து நசிப்பதுபோல் வருந்திப் பாழடைந்ததேயன்றிச் சிறிதாயினும் ஸுகத்தை அடையவில்லை. பயங்கரமான பலமுடையவர்களும் சூரர்களுமான சில ராக்ஷஸர்கள் ராமனுக்கு எதிரில் சென்று சூலங்களையும் கத்திகளையும் கோடாலிகளையும் உத்தமமான மற்றுமுள்ள பல ஆயுதங்களையும் அவன்மேல் எறிந்தனர். மஹாபாஹுவாகிய ராமன் பாணங்களால் அந்த ராக்ஷஸர்கள் ப்ரயோகித்த ஆயுதங்களைத் தடுத்து யுத்தத்தில் அவர்களது கழுத்துக்களை அறுத்து ப்ராணன்களைத் தொலைத்தனன். அந்த ராக்ஷஸர்கள் தலையறுப்புண்டு கவசங்களும் தநுஸுக்களும் துண்டிக்கப்பட்டுக் கருடனது சிறகுக்காற்றால் வ்ருக்ஷங்கள் வேரறுந்து விழுவதுபோல், தரையில் வீழ்ந்தனர். அவர்கள் அங்ஙனம் மரணம் அடைகையில் மிகுந்த ராக்ஷஸர்கள் ராமபாணங்களால் அடிபட்டு வருந்திக் 'காக்க வேண்டும் காக்கவேண்டும்' என்று காப்பை விரும்பிக் கானிடம் ஓடிப்போயினர். தூஷணன் அவர்களெல்லோரையும் திருப்பி அழைத்துக்கொண்டுபோய் ஸமாதானப்படுத்தி யமன் ருத்ரன்மேல் எதிர்ப்பதுபோல் கோபாவேசத்துடன் ராமன்மேல் எதிர்த்துவந்தனன். அந்த ராக்ஷஸர்களெல்லோரும் திரும்பி தூஷணனைப் பற்றிப் பயம் தீர்ந்து ஆயுதங்களெல்லாம் பாழாய்விட்டபடியால் ஸாலவ்ருக்ஷங்களையும் பனைமரங்களையும் கற்

களையும் ஆயுதங்களாகக் கொண்டு ராமன்மேல் எதிர்த்தோடி வந்தனர். மஹாபலிஷ்டர்களான ராக்ஷஸர்கள் சூலங்களையும் இரும்புத்தடிகளையும் கையில் பிடித்தும் விற்களை ஏந்தியும் யுத்தத்தில் ராமன்மேல் பாணவர்ஷங்களையும் ஆயுத வர்ஷங்களையும் பெய்தனர். ஆயுதமில்லாத சிலராக்ஷஸர்கள் வ்ருக்ஷவர்ஷங்களையும் சிலாவர்ஷங்களையும் பெய்துகொண்டிருந்தனர். அப்பொழுது மீளவும் ராமனுக்கும் அந்த ராக்ஷஸர்களுக்கும் நேர்ந்த அந்தத் துமுலயுத்தம் மிகவும் அற்புதமாகவும் மயிர்க்கூச்சலை விளைக்கும்படி அதிபயங்கரமாகவும் இருந்தது. முதலில் ராமனால் அடியுண்டு ஓடிப்போன ராக்ஷஸர்கள் அங்ஙனம் தூஷணனுடைய ஸஹாயத்தினால் மீளவும் திரும்பி வந்து பெருங்கோபாவேசத்துடன் நாற்புறத்திலும் சுற்றிக்கொண்டு ராமன்மேல் எதிர்த்தனர். மஹாபலனான ராமன், அந்த ராக்ஷஸர்கள் ஈட்டிகளைத் தீட்டிப் பாணவர்ஷங்களைப் பெய்துகொண்டு திக்குக்களையும் விதிக்குக்களையும் மறைத்துக்கொண்டு நிற்பது கண்டு அவன் பயங்கரமாக ஸிம்ஹநாதஞ்செய்து மிகவும் ப்ரகாசிக்கின்ற காந்தர்வாஸ்த்ரத்தை ராக்ஷஸர்கள் மேல்ப்ரயோகித்தனன். அனந்தரம் மண்டலாகாரமாயிருக்கின்ற ராமதனுஸ்ஸினின்று ஆயிரமாயிரமாகப் பாணங்கள் புறப்பட்டன. அங்ஙனம் புறப்பட்ட அப்பாணங்களால் பத்துத் திசைகளும் முழுவதும் மூடப்பட்டன. ராமபாணங்களால் பீடிக்கப்பட்ட அந்த ராக்ஷஸர்கள், அவன் பயங்கரமான பாணங்களை எடுப்பதையாவது பாணங்களைத் தொடுத்து விடுவதையாவது வில்லை வளைப்பதையாவது பார்க்கமுடியாதிருந்தனர். தாங்கள் பாணங்களால் அடியுண்டு வருந்துவதை மாத்ரம் ஒரு நிமிஷமும் அறியாதிருக்கவில்லை. பாணங்கள் அவ்வாறு புறப்பட்டு இருள்போல் பரம்பி ஸூர்யனோடு கூட ஆகாயம் முழுமையும் மறைத்துவிட்டன. ராமன் அந்தப் பாணங்களைக் கக்குவதுபோல் புலப்பட்டுக் கொண்டிருந்தனன். ராமன் கணக்கில்லாத பாணங்களை

அங்ஙனம் ஒரே தடவையில் ப்ரயோகஞ் செய்கிற லாக வாதிசயத்தினுலும் வேகத்தின் மிகுதியாலும் ராக்ஷஸர்கள் ஒரே காலத்தில் குவியல்குவியலாக விழுவார்களும், ஒரே தடவையில் குவியல்குவியலாக வதிக்கப்படுவார்களும், ஒன்றுந் தோன்ருமல் கைகால் ஆடாமல் தரையில் வீழ்வார்களுமாயினர். ஆகையால் அவர்களால் அந்த யுத்தபூமி முழுவதும் நிறைந்து ஒன்றுந் தெரியாதிருந்தது. அந்த யுத்தத்தில் ஆங்காங்கு ராக்ஷஸர்கள் சிலர் கேவலம் அடிபட்டவர்களும், மற்றுஞ் சிலர் இடி மேல் விழுந்தாற்போல் பயத்தினுல் தரையில் விழுந்தவர்களும், மற்றுஞ் சிலர் கண்டத்தில் அலைகின்ற குற்றுயிரை யுடையவர்களும், சிலர் இருபிளவாகப் பிளக்கப்பட்டவர்களும், சிலர் துண்டு துண்டாகத் துண்டிக்கப்பட்ட அவயவங்களையுடையவர்களும், சிலர் நாபி முதல் கழுத்து வரையில் கிழிக்கப்பட்டவர்களுமாகி ஆயிரமாயிரமாய் விழுந்து புலப்பட்டனர். ராம பாணங்களால் துண்டிக்கப்பட்ட தலைப்பாகைகளோடு கூடின தலைகளும் தோள்வளைகளால் அலங்கரிக்கப்பட்ட புஜங்களும், பலவகை ஆப்ரணங்களோடுகூடின துடைகளும் அத்தகைய முழந்தாள்களும் பலவாறு பிளக்கப்பட்ட நானுவித குதிரைகளும் மேலான யானைகளும் ரதங்களும் அறுப்புண்ட பலவகைச் சாமரங்களும் விசிறிகளும் குடைகளும் த்வஜங்களும் துண்டிக்கப்பட்ட சித்ர விசித்ரமான சூலங்களும் பட்டயங்களும் கட்கங்களும் ஈட்டிகளும் இங்கும் அங்கும் சிதறிக் கிடக்கிற கோடாலிகளும் பல துளிகளாகச் சூர்ணஞ் செய்யப்பட்ட கற்களும் அறுப்புண்ட சித்ரமான பாணங்களும் அந்தயுத்த பூமியில் அனேகமாக வ்யாபித்திருக்கையில் அது பார்க்கப் பயங்கரமாயிருந்தது. இருபத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

—

தூஷணாதி ராக்ஷஸ வதம்.

மஹாபாஹுவாகிய தூஷணன் தன் ஸைன்யத்தை யெல்லாம் ராமன் ஹதஞ்செய்துகொண்டிருப்பதைக் கண்டு பயங்கரமான வேகமுடையவர்களும் எப்படிப் பட்டவர்களுக்கும் அணுக முடியாதவர்களும் யுத்தங் களில் பின் வாங்காதவர்களுமாகிய ஐயாயிரம் ராக்ஷஸர் களை ராமன்மேல் எதிர்க்கும்படி ஆஜ்ஞாபித்தனன். அவர்கள் நாற்புறத்திலும் சூழ்ந்துகொண்டு சூலங் களையும் பட்டயங்களையும் கட்கங்களையும் சிலாவர்ஷங் களையும் வ்ருக்ஷங்களையும் பாணவர்ஷங்களையும் இடை வெளியில்லாமல் மஹாவீரனாகிய அந்த ராமன்மேல் பொழிந்தனர். ராமன் தர்மம் தவறாமல் யுத்தஞ் செய் பவனாகையால் ப்ராணன்களை ஒழிக்கும்படி எதிரிகள் பெய்த அந்தப் பெரிய வ்ருக்ஷ வர்ஷத்தையும் சிலா வர்ஷத்தையும் கூரான பாணங்களைப் பெய்து தடுத்து விட்டனன். ராமன், எருது கண்ணை மூடிக்கொண்டு எவ்வளவு மழை பெய்த போதிலும் பொருள் செய்யா திருப்பதுபோல, ராக்ஷஸர்கள் பெய்கிற அம்மழைகளைப் பொருள் செய்யாமல் அங்கீகரித்து ஸமஸ்த ராக்ஷஸர் களையும் வதிக்கும்பொருட்டு மிகுந்த கோபாவேசங் கொண்டனன். பிறகு ராமன் கோபம் மேலெழப்பெற்று மிக்க ஒளியுடன் நன்கு ப்ரகாசித்துக் கொண்டிருக்கை யால் எரிகிறவன் போன்று தூஷணனோடு கூடிய அந்த ராக்ஷஸ ஸைன்யத்தின்மேல் முழுவதும் பாணங்களைப் பரப்பினன். அனந்தரம் சத்ருக்களைத் தூஷிக்குந் தன்மையுள்ள ஸேனாபதியான அந்தத் தூஷணன் கோபித்து இடிகள்போன்ற உக்ரமான பாணங்களை ராமன் மேல் பரப்பினன். பின்பு வீரனாகிய ராமனும் யுத்தத்தில் ஒரு பல்ல பாணத்தினால் அந்தத் தூஷண னுடைய பெரிய வில்லைக் கண்டித்து நான்கு பாணங் களால் அவனது குதிரைகள் நான்கையும் அறுத்து விழத்தள்ளினன். ராமன் அங்ஙனம் கூரான பாணங்

களால் குதிரைகளை அடித்து ஓர் அர்த்த சந்த்ர பாணத்தினுல் ஸாரதியின் சிரஸ்ஸை அறுத்து அவ்வளவோடு நில்லாமல் அந்தத்தூஷணனது மார்பில் மூன்று பாணங்களை எய்து வருந்தச் செய்தனன். தூஷணன் அவ்வாறு வில்லு முறிந்து ரதமும் பாழாகிக் குதிரைகளும் ஒழிந்து ஸாரதியும் அடிபட்டுக் கிடக்கையில் பிறகு பர்வதசிகரம்போன்று மயிர்க்கூச்சலை விளைக்கும் படியான பெரிய இரும்புத்தடியைக் கையில் எடுத்துக் கொண்டனன். அந்தத் தடி சுற்றிலும் பொற்பட்டங்கள் இடப்பெற்றதும் முழுவதும் கூரான இரும்பாணிகள் நிரம்பியதும் வஜ்ரமணிகள்போலவும் வஜ்ராயுதம் போலவும் க்ரூரமான ஸ்பர்ஶமுடையதும் பல தேவ ஸைன்யங்களை மர்த்தித்துப் பகைவரது குடல்கள் பட்டு நனைந்ததும் சத்ருபட்டணங்களின் வாசற்படிகளைப் பிளக்கவல்லதுமாகி மிகவும் ப்ரகாசித்துக்கொண்டிருந்தது. கொடுஞ் செயலோனுகிய அந்தத்தூஷணனென்னும் ராக்ஷஸன் மஹா ஸர்ப்பம்போன்ற அந்தப் பரிகத்தைக் கையில் எடுத்துக்கொண்டு ராமனை எதிர்த்தோடி வந்தனன். அந்த ராகவன் அவ்வாறு தூஷணன் பரிகத்தைக் கையில் பிடித்துத் தன்மேல் வருவதுகண்டு இரண்டு பாணங்களை ப்ரயோகித்து ஆபரணங்களால் அலங்காரஞ் செய்யப்பெற்ற அவனது புஜங்களைத் துண்டித்தனன். யுத்தத்தின் தலையில் அவன் கைகளிரண்டும் துண்டிக்கப்படுகையில் மிகவும் பெரிதாயிருக்கின்ற அவனது பரிகம் நழுவி, உத்ஸவத்தின் முடிவில் இந்த்ரத்வஜம் விழுவதுபோல் முதலில் வீழ்ந்தது; அனந்தரம் அவன் இரண்டு கைகளும் அறுப்புண்டு இரண்டு தந்தங்களும் ஒடியப்பெற்ற மஹா கஜம்போல் தரையில் வீழ்ந்தனன். தூஷணன் அங்ஙனம் யுத்தத்தில் அடிபட்டுப் பூமியில் விழுவது கண்டு

ஸமஸ்த பூதங்களும் ‘நல்லது நல்லது’ என்று ககுத்ஸ்த குலாலங்காரனுகிய ராமனைப் புகழ்ந்தனர். இதற்குள் ஸேனைகளின் முன்னே போய் நின்று சண்டை செய்யுந் திறமையுள்ளவராகிய மஹாகபாலன் ஸ்தூலாக்ஷன் மஹாபலனுகிய ப்ரமாதி என்னும் இம்மூன்று ராக்ஷஸர் கள் ம்ருத்யுபாசத்தால் கட்டுண்டவராகி மிகுந்த கோபா வேசத்துடன் ஒன்றுகூடி ராமன்மேல் எதிர்த்தோடி வந்தனர். அவர்களில் மஹாகபாலன் விசாலமான சூலத்தையும், ஸ்தூலாக்ஷன் பட்டயத்தையும், ப்ரமாதி கோடாலியையும் கையில் ஏந்தி ராமன் மேல் ஓடி வந்தனர். ராமன் அம்மூவரும் தன்மேல் எதிர்த்து வருவது கண்டு, அதிதிகள் வந்தால் அர்க்யம் முதலிய உபசாரங்களால் அங்கீகரிப்பதுபோல், சீக்ரமாக அந்த ராக்ஷஸர்களைக் கூரான நுனியுடைய பாணங்களால் அங்கீகரித்தனன்; சிறந்த பாணங்களைப் பெய்து மஹா கபாலனது சிரஸ்ஸைக் கண்டித்தனன்; கணக்கில்லாத பாணங்களைத் தொடுத்து ப்ரமாதியின் சரீரத்தைப் பல துண்டங்களாகச் செய்தனன். அங்ஙனம் துண்டிக்கப் பட்ட அவன் பல கிளைகளோடு கூடிய மஹா வ்ருக்ஷம் போல் தரையில் வீழ்ந்தனன். ராமன் ஸ்தூலாக்ஷனது கண்களிரண்டையும் கூரான பாணங்களைப் பெய்து நிறைத்து விட்டனன். மேலும் ராகவன் கோபாவேச முடையவனுகித் தூஷணனைத் தொடர்ந்து வந்த ஐயா யிரம் ராக்ஷஸர்களையும் ஐயாயிரம் பாணங்களால் ஒரு நொடிப்பொழுதில் யமபுரிக்குப் போக அனுப்பினன். தூஷணனும் அவனைப் பின்றொடர்ந்தவர்களும் அடி பட்டது கண்டு, கரன் கோபித்து மஹா பலிஷ்டர் களாகிய தன் ஸேனுத்யக்ஷர்களைப் பார்த்து, ‘பார்த்தீர் களா! இந்தத் தூஷணனும் இவனைப் பின்றொடர்ந்து போனவர்களும் ராமனுல் அடிக்கப்பட்டனர். ராக்ஷஸர் களே! நீங்களெல்லோரும் பெரிய ஸைன்யத்தோடு கூடப் பலவகைப்பட்ட ஆயுதங்களை எடுத்துக்கொண்டு அற்ப மனுஷ்யனுன ராமனோடு யுத்தஞ்செய்து அவனைப்

பிடித்துக் கொல்வீர்களாக' என்று ஆஜ்ஞாபித்தனன். அவன் இங்ஙனம் ஆஜ்ஞாபித்துத் தானும் கோபாவேசத்துடன் ராமனையே எதிர்த்து வந்தனன். மஹாவீர்ய முடையவர்களாகிய ஶ்யேனகாமி, ப்ருதுக்ரீவன், யஜ்ஞசத்ரு, விஹங்கமன், துர்ஜயன், கரவீராக்ஷன், பருஷன், காலகார்முகன், மேகமாலி, மஹாமாலி, ஸர்ப்பாஸ்யன், ருதிராசனன் என்னும் இந்த ஸேனாத்யக்ஷர்கள் பன்னிருவரும் ஸேனைகளோடுகூட மேலானபாணங்களை எய்துகொண்டு ராமனையே எதிர்த்து வந்தனர். அனந்தரம், ராமன் மஹாதேஜஸ்வியாகையால் பொன்னாலும் வஜ்ரமணிகளாலும் அலங்கரிக்கப்பட்டு அக்னிபோல் விளங்குகின்ற பாணங்களை ப்ரயோகித்து மிகுதியான அந்த ஸைன்யத்தையுங்கூட வதித்தனன். பொற்பிடிகளிடப்பெற்றுப் புகையுடன் கூடி அக்னிபோல் ப்ரகாசிக்கின்ற அந்தப் பாணங்கள் வஜ்ராயுதங்கள் மஹா வ்ருக்ஷங்களை அறுப்பதுபோல், அந்த ராக்ஷஸர்களெல்லோரையும் துண்டித்துவிட்டன. ராமன் யுத்தத்தின் தலையில் நூறு ராக்ஷஸர்களைக் [1]கர்ணாகாரமுடைய நூறுபாணங்களாலும் ஆயிரம் ராக்ஷஸர்களை ஆயிரம் பாணங்களாலும் வதித்தனன். ராக்ஷஸர்கள் அந்தப் பாணங்களால் கவசங்களும் ஆபரணங்களும் பொடிப்பொடியாகப் பிளக்கப்பெற்றும் தனுஸ்ஸுக்கள் துண்டிக்கப்பட்டவைகளும் பிளக்கப்பட்டவைகளுமாகப்பெற்றும் சரீரம் முழுவதும் ரக்தம் தோய்ந்திருக்கப்பெற்றும் பூமியில் வீழ்ந்தனர். அங்ஙனம் தலைமயிர்கள் அவிழ்ந்து விரியவும் சரீரம் ரக்தத்தால் நனையவும் பெற்று வீழ்ந்திருக்கிற ராக்ஷஸர்களால் நிரம்பின அந்த யுத்தபூமி தர்ப்பங்கள் இறைந்து நிரம்பப்பெற்ற பெரிய யாகவேதிகைபோல் ப்ரகாசித்தது. மிகவும் பயங்கரமான அவ்வனம், ராக்ஷஸர்கள் அனைவரும் அடிபட்டிருக்கையில், ஒரு நொடிப்பொழுதில் மாம்ஸங்களும் ரக்தங்களும்

படிந்துசேறுகப்பெற்று மிகவும்பயங்கரமான நரகம்போல் இருந்தது. ராமன் ஒருவன் கேவலமனுஷ்யன்; அதிலும் காலாள். இப்படிப்பட்ட ஒருவன் பயங்கரமான வ்யாபாரங்களையுடைய பதினாலாயிரம் ராக்ஷஸர்களையும் வதித்தனன். அந்த ஸைன்யத்துக்கெல்லாம் மஹாரதனாகிய கரனும் த்ரிசிரஸ்ஸும் சத்ருக்களை அழிக்கவல்ல ராமனும் இம்மூவருமே மிகுந்தனர். மஹாபலிஷ்டர்களும் பயங்கரமான உருவமுடையவர்களும் எதிரிடவொண்ணாதவர்களுமாகிய மற்ற ராக்ஷஸர்கள் அனைவரும் லக்ஷ்மணனுக்குத் தமையனாகிய ராமனால் யுத்தத்தில் அடிக்கப்பட்டனர். அனந்தரம் பலிஷ்டனாகிய ராமனால் மஹாயுத்தத்தில் பயங்கரமான தன் பலமெல்லாம் ஹதமானதைக்கண்டு கரன் அப்பொழுது பெரிய ரதத்தில் ஏறிக்கொண்டு வஜ்ராயுதத்தை ஏந்தின இந்த்ரன்போல் பயங்கரமான உருவமுடையவனாகி ராமனைக் குறித்து வந்தனன். இருபத்தாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## த்ரிசிர வதம்.

கரன் ராமனை எதிர்த்துப்போகையில், ஸேனாபதியாகிய த்ரிசிரன் அவனருகில் சென்று 'பராக்ரமநிதீ! எனக்கு அனுமதி கொடுப்பாயாக. யுத்தத்திற்கு நீ நேரில் புறப்படும்படியான இந்த ஸாஹஸம் ஏதுக்காக? திரும்புவாயாக. இதோ நான் மஹாபாஹுவாகிய ராமனை யுத்தத்தில் கொன்றுவிடுகிறேன் பார். ஸமஸ்த ராக்ஷஸர்களும் ஒன்று சேர்ந்து வதிக்கத் தகுந்தவனாகிய ராமனை நானொருவன் கொன்றுவிடுகிறேன். இவ்வாறு ஆயுதங்களைத்தொட்டு ஸத்யமாக ப்ரதிஜ்ஞை செய்கின்றேன். நானாவது இந்த ராமனை யுத்தத்தில் கொன்றுவிடுகிறேன். அல்லது ராமனாவது என்னை

யுத்தத்தில் வதிப்பானுக. நீ இப்பொழுது யுத்தோத்ஸாஹத்தை விட்டுக் கொஞ்சநேரம் ஸாக்ஷியாயிருப்பாயாக. ராமன் அடிபடுவானுயின், நீ ஸந்தோஷித்து ஜனஸ்தானத்திற்காவது போவாய். அல்லது நான் அடிபடுவேனுயின், ராமனேடு யுத்தஞ் செய்யத் தலைப்படுவாய்' என்றனன். அந்த த்ரிசிரன் இங்ஙனம் வேண்டிக்கொள்கையில் கரன், ம்ருத்யு தனக்கு அப்பொழுது உண்டுபண்ணின யுத்த [1] லோபத்தினின்றும் திருப்பப்பட்டவனுகி 'நீ போய் யுத்தம் நடத்துவாய்' என்று அனுமதி கொடுக்கையில், அந்த த்ரிசிரன் ராமனை எதிர்த்துப் போயினன். த்ரிசிரன் நல்ல குதிரைகள் பூட்டப்பெற்றுப் பளபளவென்று ப்ரகாசிக்கின்ற ரதத்தில் ஏறிக்கொண்டு மூன்று தலைகளுடையவனுகையால் மூன்று சிகரங்களோடு கூடின பர்வதம்போல் யுத்தத்தில் ராமனை எதிர்த்து வந்தனன். அந்த த்ரிசிரன், மஹாமேகம் ஜலதாரைகளைப் பெய்வதுபோல் குவியல் குவியலாகப் பாணதாரைகளைப் பெய்து கொண்டு நீரில் நனைந்த பேரிவாத்யம் முழங்குவதுபோல் ஸிம்ஹநாதஞ் செய்தனன். ராமன், த்ரிசிரன் வருவது கண்டு கூரான பாணங்களை வில்லில் தொடுத்து ப்ரயோகித்து அவனை அங்கீகரித்தனன். மஹாபலசாலிகளாகிய அந்த ராமனுக்கும் த்ரிசிரனுக்கும் நடந்த அந்தத்துமுலயுத்தம் ஸிம்ஹத்திற்கும் யானைக்கும் நேர்ந்த யுத்தம்போல் இருந்தது. பிறகு கோபித்திருக்கிற ஸ்ரீராமன், த்ரிசிரனுல் மூன்று பாணங்களைத் தொடுத்து நெற்றியில் அடிக்கப்பட்டவனுகி மீளவும் கோபித்து பரபரப்புடன் இங்ஙனம் மொழிந்தனன்:—'ஓஹோ! பராக்ரமம் பொருந்திய சூரனுகிய ராக்ஷஸனுடைய பலம் மிகவும் பெரிதாயிருக்கின்றதே! இந்தப் பாணங்கள் எனது

1. லோபம்-பேராசை.

நெற்றியில் பட்டுப் புஷ்பங்கள் போன்றிருக்கின்றனவே! இனி என்வில்லின் நாணினின்று புறப்படுகிற பாணங்களை அனுபவித்துப் பார்ப்பாயாக' என்றனன். அந்த ராமன் இங்ஙனம் சொல்லிச் சினந்து வேகமுடையவைகளும் க்ரூரஸர்ப்பங்கள் போன்றவைகளுமான பதினான்கு பாணங்களை த்ரிசிரனது மார்பில் நாட்டினன். அனந்தரம் மஹாபராக்ரமசாலியாகிய ராமன் நேர்மையான கணுக்களையுடைய நான்கு பாணங்களால் அந்த த்ரிசிரனுடைய குதிரைகள் நான்கையும் அடித்து விழத்தள்ளினன். எட்டுப்பாணங்களைத் தொடுத்து ஸாரதியை ரதத்தினின்று அடித்துத் தள்ளினன். ஒரு பாணத்தால் உயர்ந்திருக்கிற த்வஜத்தையும் அறுத்தனன். அனந்தரம் ராமன், குதிரைகளையிழந்த அந்த ரதத்தினின்று த்ரிசிரன் உயரக்கிளம்பிப் போவதைக் கண்டு அவனது மார்பில் பல பாணங்களைத் தொடுத்து நாட்டுகையில் அவன் மூர்ச்சித்தனன். அளவிடவொண்ணாத பலமுடைய ராமன் கோபமுற்று மிகுந்த வேகமுடைய கூரான மூன்று பாணங்களால் த்ரிசிரனுடைய மூன்று தலைகளையும் விழத்தள்ளினன். அந்த த்ரிசிரன் அங்ஙனம் ராம பாணங்களால் தலை துண்டிக்கப்படுகையில் ரக்தத்தைப் பெருக்கிக்கொண்டு முன்னே விழுகின்ற தலைகளுடன் பூமியில் வீழ்ந்தனன். அனந்தரம் கரனது ஸேனாஜனங்களில் அடிபட்டவர் போக மிகுந்த ராக்ஷஸர்கள் பயந்து பெரும்புலிக்குப் பயந்த மான்கள்போல நிற்காமல் ஓடிப்போயினர். கரன் அங்ஙனம் ஓடுகின்ற ராக்ஷஸர்களைக் கண்டு, கோபாவேசமுற்று அவர்களைத் திருப்பிக்கொண்டு வந்து, ராஹு சந்த்ரன்மேல் எதிர்த்துப்போவதுபோல், ராமன்மேல் எதிர்த்தனன். இருபத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

{ ராமன் கரனுடைய தேர்க்குதிரை முதலிய ஸகல பரிகரத்தையும் நாசஞ் செய்தல் }

ராமன் யுத்தத்தில் தூஷணனையும் த்ரிசிரனையும் வதிக்கையில், அது கண்டு கரனுக்குங்கூட ராம பராக்மத்தைப் பற்றிப் பயம் உண்டாயிற்று. மஹாபலிஷ்டனுகிய அந்தக் கரன், ராமனொருவனுல், ஜயிக்க முடியாத ராக்ஷஸ ஸைன்யம் முழுவதும் த்ரிசிரனும் தூஷணனும் அடிபட்டுப் போனதையும், மிடுக்குடைய ராக்ஷஸர்கள் பெரும்பாலும் நாசம் அடைந்ததையுங் கண்டு மனத்தில் கர்வத்தை விட்டு, நமுசி இந்த்ரன் மேல் எதிர்த்து வருவதுபோல், ராமனை எதிர்க்கத் தொடங்கினன். கரன் பலமுள்ளவளவும் தனுஸ்ஸை இழுத்துக் கோபித்த ஸர்ப்பங்கள் போன்றவைகளும் ரக்தம் படிந்திருக்கையால் ரக்தத்தைப் பானஞ் செய்பவைபோன்றவைகளுமான பாணங்களை ராமன்மேல் ப்ரயோகித்தனன். கரன் ரதத்தில் இருந்துகொண்டு யுத்தத்தில் தனக்குத் தனுர்வேதத்தில் ஏற்பட்ட ஸாமர்த்யமெல்லாம் தோற்ற நாணை இழுத்து ஒலிப்பித்துக்கொண்டு மிகவும் பற்பலவகைப்பட்ட பாணங்களை ப்ரயோகிக்கும் வழிகளை வெளியிட்டுக் காட்டினன். மஹாரதனுகிய அந்த ராமன், கரன் தன்மேல் எதிர்த்து வருவது கண்டு தனது பெரிய தனுஸ்ஸில் பாணங்களை நிறைத்து, ஸமஸ்த திக்குக்களும் விதிக்குக்களும் நிரம்பப் பாணங்களால் நிறைத்தனன். ராமன் பொறிகளைக் கக்குகின்ற அக்னிகள்போல் ஸஹிக்கமுடியாத பாணங்களை ப்ரயோகித்து ஆகாயம் முழுவதும், மேகம் வர்ஷதாரைகளால் மறைப்பதுபோல, அந்தப் பாணவர்ஷங்களால் மறைத்து இடைவெளியில்லாதிருக்கச் செய்தனன். அங்ஙனம் கரனும் ராமனும் ஒருவர்மேல் ஒருவராக ப்ரயோகித்த கூரான பாணங்களால் அவரைச்சுற்றி

யிருக்கும் ஆகாயம் முழுவதும் பாணங்கள் இடைவெளி யின்றி நிறைந்திருக்கையில், சிறிது அவகாசமும் அற்ற தாயிற்று. அப்பொழுது ஒருவரையொருவர் வதிக்க வேண்டுமென்கிற பரபரப்பினல் அவ்விருவரும் ஓயாமல் கடோரமான யுத்தஞ் செய்கையில், ஸூர்யன் அவரது பாணங்களால் மறைக்கப்பட்டு ப்ரகாசியாதிருந்தனன். பிறகு கரன், ம, வெட்டிகளால் மஹாகஜத்தை வருத்துவதுபோல், கூரான நுனியுடைய நாலீகபாணங்களாலும் கர்ணிபாணங்களாலும் ராமனை அடித்தனன். அங்ஙனம் ரதத்தில் ஏறிக்கொண்டு தனுஸ்ஸைக் கையில் பிடித்து யுத்தஸந்நாஹங் கொண்ட கரன், பாசாயுதத்தைக் கையில் பிடித்த யமன்போலப், பயங்கரமான உருவத்துடன் ஸமஸ்த பூதங்களுக்கும் புலப்பட்டனன். ராமன் மஹாபலிஷ்டனும் பராக்ரமத்தில் எவ்வளவோ நிலைநின்றவனுமாயினும், அவ்வளவு மஹா ஸைன்யத்தையெல்லாம் வதித்தவனுகையால் அப்பொழுது இளைப்புற்றிருப்பானென்று கரன் நினைத்திருந்தனன். ராமன் அவ்வாறு ஸிம்ஹம்போல் பராக்ரமத்தை வெளியிட்டுச், சிங்கம்போல் மிடுக்கமைந்த நடையுடன் வருகின்ற கரனைப் பார்த்து, ஸிம்ஹம் க்ஷுத்ரம்ருகங்களைப் பார்த்துச் சலியாதிருப்பதுபோல், தான் எள்ளளவும் சலிக்கவில்லை. பிறகு ஸூர்யன்போல் விளங்குகின்ற பெரிய ரதத்தின்மேல் ஏறிக்கொண்டு கரன் யுத்தத்திற்கு முயன்று விட்டிற்பூச்சி நெருப்பை அணுகுவதுபோல் ராமனைக் கிட்டினன். பிறகு கரன், தனது ஹஸ்தலாகவத்தை அறிவித்துக்கொண்டு பாணந் தொடுத்து மஹானுபாவனுகிய ராமனது வில்லைக் கையிட்டுப் பிடிக்கும் இடத்திற் கருகில் துண்டித்தனன். அவன் கோபாவேசங்கொண்டு மீளவும் இந்த்ர

னது வஜ்ராயுதம்போல் விளங்குகிற வேறு ஏழு பாணங்களை எடுத்து ராமனது கவசத்தின்மேல் நன்கு படும்படி அடித்தனன். ஸூர்யனோடொத்த ஒளியுடைய ராமனது கவசம் கரனால் தொடுக்கப்பட்டவைகளும் நேர்மையான கணுக்களுடையவைகளுமான அந்தப் பாணங்களால் அடிக்கப்பட்டுப் பிளந்து தரையில் வீழ்ந்தது. அங்ஙனம் கவசம் வீழ்ந்தபின்பு ராமன் ஸூர்யன்போல் பளபளவென்று ப்ரகாசித்தனன். பிறகு நிகரில்லாத தேஜஸ்ஸுடன் ப்ரகாசிக்கின்ற ராமனைக் கரன் யுத்தத்தில் ஆயிரம் பாணங்களைத் தொடுத்து வருந்தச் செய்து பெருங்கோஷத்துடன் ஸிம்ஹநாதஞ் செய்தனன். கரன் அங்ஙனம் யுத்தத்தில் ராம சரீரம் முழுவதும் பாணங்களை நாட்டுகையில் அந்த ராமன் கோபித்துப் புகையின்றி எரிகிற அக்னிபோல் ப்ரகாசித்தனன். பிறகு சத்ருக்களை அழிக்கும் திறமுடைய ராமன், அந்தப் பகைவனை முடிப்பதற்காக, மிகவும் கம்பீரமான கோஷத்தையுடைய மற்றொரு பெரிய வில்லை எடுத்து நாணேற்றிட்டனன். மிகவும் பெரிதான அந்தத் தனுஸ்ஸு விஷ்ணுவினுடையது அது அகஸ்த்யமாமுனியால் கொடுக்கப்பட்டது. ராமன் அந்த மேலான தனுஸ்ஸைப் பிடித்துக் கரன்மேல் எதிர்த்தனன். பிறகு ராமன் கோபாவேசமுற்றுப் பொற்பிடியுடையவைகளும் நேர்மையான கணுக்களுடையவைகளுமான பாணங்களைத் தொடுத்து யுத்தத்தில் கரனுடைய த்வஜத்தைக் கண்டித்தனன். மிகவும் பார்க்க இனியதாகி விளங்குகின்ற அந்த ஸ்வர்ண த்வஜம் ஒடிந்து பலவாறு சிதறித் தரையில் வீழ்ந்து தேவதைகளின் சாபத்தினால் பூமியில் வந்த ஸூர்யனோ என்னும்படி புலப்பட்டுக்கொண்டிருந்தது. கரன் அந்தந்த மர்மஸ்தானங்களை அறிந்தவனாகையால் யுத்தத்தில் கோபித்துத தோமரமென்னும்

ஆயுதங்களால் யானையைக் குத்துவதுபோல, ராமனது அவயவங்களில் நான்கு பாணங்களை நாட்டி நோவச்செய்தனன். ராமன் அங்ஙனம் கரனது வில்லினின்றும் புறப்பட்ட பாணங்கள் பலவும் படுகையில் உடம்பெல்லாம் குருதிபெருகப்பெற்று மிகவும் கோபாவேசங்கொண்டனன், வில்லாளிகள் அனைவரிலும் மேலாயிருப்பவனும் பெரிய வில்லைத் தரித்தவனுமாகிய ராமன் அங்ஙனம் யுத்தத்தில் மற்றொரு வில்லைக் கையில் கொண்டு மிகவும் ப்ரஸித்தமான ஆறு பாணங்களை எடுத்துக் கரனது சிரஸ்ஸில் ஒரு பாணத்தையும் இரண்டு புஜங்களில் இரண்டு பாணங்களையும் மார்பில் அர்த்த சந்த்ரனைப் போன்ற உருவத்தையுடைய மூன்று பாணங்களையும் நாட்டி அவனை வருந்தச் செய்தனன். பிறகு அம்மஹா தேஜஸ்வி ராகவன் அந்த ராக்ஷஸனைக்கொல்ல முயன்று கோபத்துடன் ஸூர்யன்போல் தகதகவென்று விளங்குகின்ற பதின்மூன்று பாணங்களை எடுத்தனன். இந்த்ரனைப்போன்றவனும் மஹாபலமுடையவனுமாகிய ராமன் அங்ஙனம் பாணங்களை எடுத்துச் சிரிப்பவன்போலவே அனுயாஸமாக அவைகளில் ஒரு பாணத்தால் தேர் நுகத்தடியைக் கண்டித்து. நான்கு பாணங்களால் குதிரைகளை அறுத்துத் தள்ளி, ஆறாவது பாணத்தினால் அவனுடைய ஸாரதியின் சிரஸ்ஸை அறுத்து, மூன்று பாணங்களால் ஏர்க்காலை முறித்து, இரண்டு பாணங்களால் இருசை ஒடித்துப் பிறகு வஜ்ராயுதம் போன்ற பன்னிரண்டாவது பாணத்தால் அவன் கையிலிருக்கிற பாணத்தோடுகூடிய தனுஸ்ஸைத் துண்டித்துப் பதின்மூன்றாவது பாணத்தால் அந்தக் கரனைப் பிளந்தனன். கரன் அப்பொழுது வில்லு முறிந்து ரதம் பாழாகிக் குதிரைகள் ஒழிந்து ஸாரதியும் அடிபட்டுப் போகையில்

கதையைக் கையில்கொண்டு தேரினின்றும் குதித்துத் தரையில் வந்து நின்றனன். அப்பொழுது அவ்விடம் வந்துகூடி ஆகாயத்தில் விமானங்களின்மேல் உட்கார்ந் திருக்கிற தேவதைகளும் மஹர்ஷிகளும், மஹாரதனு கிய ராமன் கரனைப்படுத்தின பாட்டைக் கண்டு மிக வும் ஸந்துஷ்டர்களாகி அஞ்சலி செய்து எல்லோரும் ஒன்று கூடி ராமனைப் பூஜித்தனர். இருபத்தெட்டா வது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராமன் கரனேடு மெதுவாகத் தோற்றும் பருஷவார்த்தைகளைப் பேசுதலும், கரன் கதையை வீசுதலும், ராமன் அதைக் கண்டித்தலும்.

மஹா தேஜஸ்வியாகிய ராமன், கரன் அங்ஙனம் ரதத்தை இழந்து [1] கதையைக் கையில் பிடித்து நின் றிருப்பதைக் கண்டு, மேலுக்கு மெதுவாகத் தோற்று பவைகளும் மர்மங்களை எடுத்தெறிகையால் பருஷமா யிருப்பவைகளுமான வாக்யங்களை இங்ஙனம் மொழிந் தனன்:—'நீ, யானைகளும் குதிரைகளும் தேர்களும் நெருங்கி நிகரற்ற மஹாஸைன்யத்தின் இடையில் இருந்து ஸமஸ்தலோகங்களும் நிந்திக்கும்படி மிகவும் கொடுமையான கார்யத்தைச் செய்தனையே. ப்ராணி களுக்குத் துக்கத்தை விளைவிக்குங் காதுகனுகிப் பாபங் களைச்செய்துகொண்டிருப்பானுயின், அவன் மூன்றுலோ கங்களுக்கும் நாதனுயினும் பிழைக்கமாட்டான். இனி உன்னைப்போன்றவன் எவ்வளவு? ராக்ஷஸனே! துஷ்ட ஸர்ப்பம் வருமாயின், ஜனங்களெல்லோரும் தயை யுடையவராயினும் அதைப் பிடித்து வதிப்பதுபோல, லோக விருத்தமான கார்யங்களைச் செய்யும் க்ரூரனை

---

1. கதை-இது ஓர் ஆயுதம்; தடியைப்போன்ற உருவமுடையது.

எல்லா ஜனங்களும் சொல்லுவார்கள். கிடைத்த வஸ்து வைக் கொடுக்கப்பொருத லோபத்தாலாவது, கிடைக் காத வஸ்துக்கள் வேண்டுமென்று ஆசைப்படும் காமத் தாலாவது பாபங்களை ஆசரித்துப் பிறகு தெரிந்தும் பச்சாத்தாபமின்றி எவன் இருப்பானே, அவன் ப்ரஷ்ட னுகி, மழையில் விழுகிற ஆலாங்கட்டிக்கல்லைத் தனக்கு மரணந்தருமென்று தெரியாமல் தின்ற செய்யானென் னும் சிறுவிஷப்பூச்சியைப்போல், அதன் பலனைப் பார்ப்பான். 'நான் என்ன பாபம் செய்தேன்' என்கிரு யோ? ராக்ஷஸா! தர்மானுஷ்டானஞ் செய்பவர்களும் மஹா பாக்யமுடையவர்களுமாகித் தண்டகாரண்யத்தில் வஸிக்கின்ற ரிஷிகளை வதித்தனையே! அவர்களைக் கொன்றதனுல் நீ என்ன பயன் பெறப்போகின்றனை? 'ஆயினும் பாபிகள் பலர் பிழைத்தில்லையா' என்கிரு யோ? கேவலம் பாபஞ்செய்பவர் ஜன்மாந்தரத்தில் பாப பலனைப் பெறுவார்கள். ஆனல் கேவலம் பாபிஷ்டர் களே யன்றி க்ரூரர்களுமாகி லோகங்களால் நிந்திக்கப் பட்டவர்களோ என்றுல் சிறிது புண்ய சேஷத்தினுல் ஐஶ்வர்யத்தை அடைந்து பிழைத்திருப்பார்களாயினும் வெகுகாலம் அங்ஙனம் இருக்கமாட்டார்கள். வேரில் அறுப்புண்ட வ்ருக்ஷங்கள்போல் சீக்ரத்திலேயே நாசம் அடைவார்கள். வஸந்தாதி ருதுகாலம் வந்தபொழுது வ்ருக்ஷங்கள் அந்தந்த ருதுவுக்குத் தகுந்த புஷ்பங்க ளைத் தவருமல் புஷ்பிப்பதுபோல், பாபஞ் செய்யும் ப்ராணி எதுவாயினும் காலம் வந்த பொழுது தன் பாபகர்மத்திற்குத் தகுந்தபடி துக்கரூபமாக நேரும் கொடிய பலனைத் தப்பாமல் அடையும். ராக்ஷஸனே! விஷங்கலந்த அன்னத்தைப் புசித்தால், அதன் பல னைச் சீக்ரத்திலேயே அடைவதுபோல், பாபகர்மங் களைச் செய்தவர்கள் அவற்றின் பலனைச் சீக்ரத்திலேயே

அடைவார்கள். இரவில் திரியுந்தன்மையுடையவனே! கோரமான பாபங்களைச் செய்துகொண்டு லோகத்திற்குக் கெடுதியைச்செய்ய விரும்பும் துஷ்டர்களின் ப்ராணன்களை வாங்குவதற்காக, [1] ராஜாவான தசரதருடைய ஆஜ்ஞையின்படி நான் வந்திருக்கின்றனன். இப்பொழுது ஸ்வர்ணரேகைகளால் அலங்கரிக்கப்பட்டு விளங்குகின்ற பாணங்களை நான் ப்ரயோகிக்கையில், அவை உன்னைப் பிளந்து பாம்புகள் புற்றில் நுழைவது போல என் அம்பறுத்தூணியில் நுழையப்போகின்றன. நீ இதுவரையில் தண்டகாரண்யத்தில் தர்மசாரிகளான ரிஷிகள் எத்தனையோபேர்களைப் பக்ஷித்திருக்கிறாயல்லவா! இப்போது நீ யுத்தத்தில் என்னால் அடிக்கப்பட்டு ஸைன்யத்தோடுகூட அவரிடம் போய்ச் சேருவாயாக. முன்பு உன்னால் ஹிம்ஸிக்கப்பட்ட மஹர்ஷிகள் இப்பொழுது விமானங்களில் ஏறி ஆகாயத்திலிருந்து, நீ என் பாணங்களால் அடிக்கப்பட்டு நரகத்தில் துக்கத்தை அனுபவிப்பதைப் பார்க்கப்போகிறார்கள். குலாதமனே! நீ இஷ்டப்படி என்னை அடிப்பாயாக. உன்னால் ஆனமட்டும் பார்ப்பாயாக. இப்பொழுது பனம்பழம்போல் உன் தலையைத் தரையில் விழும்படி அறுத்துத் தள்ளுகின்றேன்' என்றனன். ராமன் இங்ஙனம் சொல்லுகையில், கரன் கோபத்தினால் கண்கள் சிவக்கப்பெற்றுப் பகபகவென்று சிரித்துக்கொண்டு கோபாவேசத்தால் மெய்ம்மறந்து ராமனைப்பார்த்து மொழிந்தனன் :—'தசரதகுமாரனே! நீ யுத்தத்தில் ஸாதாரணமான ராக்ஷஸர்களை அடித்துக் கொன்று அவ்வளவு மாத்ரத்தில் புகழத்தகாத உன்னை நீயே புகழ்ந்து கொள்கின்றனை. மிகுந்த பராக்ரமமுடையவர்களும் பலிஷ்டர்களுமாகிய புருஷஶ்ரேஷ்டர்கள் தமது ப்ரதாபத்தைப்பற்றிக் கர்வித்துத் தம்மைத் தாமே எவ்வள

1. இங்கு 'ராஜ்ஞா' என்று மூலம். ராஜனென்று பரதனையாவது சொல்லலாமென்று மஹேஶ்வரதீர்த்தர்.

வும் புகழ்ந்துகொள்ளார். ராமா! அல்பர்களாகித் தைர்யம் நிலையாயிருக்கப் பெருத க்ஷத்ரியாதமர்கள் நிஷ்ப்ரயோஜனமாகத் தம்மைத் தாம் புகழ்ந்து கொள்வார்கள். வீரனுயிருப்பவன் எவன் யுத்தத்தில் மரண காலம் வந்திருக்கும்பொழுது அவஸரமில்லாத ஸமயத்தில் தனது மஹாகுலப்பிறப்பை ப்ரகடனஞ் செய்து கொண்டு ஆத்மஸ்துதி செய்துகொள்வான்? நீயே உன்னைப் புகழ்ந்துகொள்வதனுல் உன்னுடைய அல்பத்தனம் ஸ்பஷ்டமாகத் தெரியவந்தது. தர்ப்பத்தில் பற்றின அக்னி சீக்ரமாக உருக்கின ஸ்வர்ணம்போல் தகதகவென்று ப்ரகாசித்துக்கொண்டு எரியுமாயினும் உடனே அணைந்து மற்றொரு வஸ்துவைக் கொளுத்த முடியாதிருப்பதுபோல், தன்னைத் தானே நெடுந்தூரம் புகழ்ந்துகொள்பவன் உடனே அதற்குத் தகுந்த ஶௌர்யத்தைக் காட்ட வல்லவனுகமாட்டான். உன்னெதிரில் சத்ருக்களது ரக்தங்களால் நனைந்த கதையைப் பிடித்துக்கொண்டு நிஶ்சலமாக நின்றிருக்கிற என்னை, கைரிகதாதுக்கள் நிரம்பின பர்வதம்போல் அசைக்கமுடியாதவனுக அறியவில்லை. ஆனதுபற்றியே இங்ஙனம் புகழ்ந்து கொண்டனை. பாசாயுதத்தைக் கையில் பிடித்த அந்தகன்போல் நிற்கின்ற நானொருவனே யுத்தத்தில் உன் ப்ராணன்களையும் மூன்று லோகங்களின் ப்ராணன்களையும் பறிக்கப்போதுமானவன். இப்படி ஆத்மஸ்துதி செய்து கொள்ளும் விஷயத்தில் இன்னும் பருஷமாக எவ்வளவோ சொல்லவேண்டியதாயிருக்கின்றது; ஆயினும் இப்பொழுது சொல்லேன். அப்படி சொல்லிக்கொண்டிருப்பேனுயின், ஸூர்யன் அஸ்தமித்துவிடுவான். பிறகு யுத்தத்திற்கு விக்னம் நேரிடும். நீ பதினுலாயிரம் ராக்ஷஸர்களைக் கொன்றனை. நான் இப்போது உன்னைக்கொன்று அவரது

பந்துக்களின் கண்ணீர்களைத் துடைக்கப் போகிறேன்' என்றனன். கரன் இங்ஙனம் சொல்லி மேலான தோள் வளைகள் விளங்க மிகுந்த கோபம் மேலெழ வஜ்ராயுதம் போல் தகதகவென்று ப்ரகாசிக்கின்ற அந்தக் கதையை ராமன்மேல் வீசி யெறிந்தனன். அங்ஙனம் கரன் அம் மஹாகதையை ப்ரயோகிக்கையில், அது மிகவும் ஜ்வலித்து நடுவழியிலிருக்கின்ற வ்ருக்ஷங்களையும் புதர்களையும் பஸ்மஞ்செய்துகொண்டு ராமனது ஸமீபத்திற்கு வந்தது. ராமன், அவ்வாறு ம்ருத்யுபாசம்போல் அம் மஹாகதை ஜ்வலித்துக்கொண்டு வருவதுகண்டு அதை ஆகாயத்திலேயே பலபாணங்களை ப்ரயோகித்துப் பல துண்டுகளாகக் கண்டித்தனன். அங்ஙனம் அந்தக் கதை பாணங்களால் அடிக்கப்பட்டுப் பல துணுக்கைகளாகி, மந்த்ர பலத்தாலும் ஒஷதிபலத்தாலும் தடுக்கப்பட்ட ஸர்ப்பம்போல் தரையில் வீழ்ந்தது. இருபத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

கரவதமும், ஸீதை ஸ்ரீராமனை அணைத்து ஆநந்தப் படுதலும்.

ராமன் அந்தக் கதையைப் பாணங்களால் துணுக்கைகளாகச் செய்து தர்மத்தில் மிக விருப்பமுடையவனாகையால் ஆயுதமில்லாத அந்தக் கரன்மேல் பாணந் தொடுக்காமல் பரபரப்புற்றிருக்கிற அவனைப் பரிஹாஸஞ் செய்யத்தொடங்கி இங்ஙனம் மொழிந்தனன்:— 'ராக்ஷஸாதமனே! இதோ! உன் பலத்தையெல்லாம் காட்டினை. இனி என்ன செய்யப்போகின்றனை? நீ பலத்தில் என்னைக்காட்டிலும் குறைந்தவனாயினும் வீணாகக் கர்ஜித்துத் துள்ளுகின்றனை. நீ வீண் வார்த்தை பேசுவதில் மாத்ரம் நல்ல வல்லவனே! இதுவரையில்

இந்தக் கதை உன் பகைவரையெல்லாம் துண்டித்துக் கொண்டிருந்தது. ஆகையால் இப்பொழுதும் உனக்கு ஜயத்தை விளைவிக்குமென்று நம்பியிருந்தனை. அப்படிப் பட்ட இந்தக் கதை இதோ! என் பாணங்களால் துண் டிக்கப்பட்டுத் தரையில் வீழ்ந்ததே! பார். என்னோடு 'உன்னைக்கொன்று இப்பொழுது உன்னால்கொல்லப்பட்ட ராக்ஷஸர்களது பந்துக்களின் கண்ணீரைத் துடைக் கிறேன்' என்று பிதற்றினையே! அந்த வார்த்தையும் அபத்தமாயிற்று. நீ அற்பன்; ஹீன ஸ்வபாவமுடைய வன்; நல்ல ஆசாரமில்லாத ராக்ஷஸன்; கருடன் அம் ருதத்தைப் பறிப்பதுபோல, உன் ப்ராணன்களை நான் பறிக்கிறேன். இப்பொழுது நீ என் பாணங்களால் வயிறு பிளக்கப்பட்டுக் கழுத்து அறுப்புண்டு நுரைகளும் குமிழிகளும் நிறைந்த ரக்தத்தைப் பெருக்குகையில், பூமி அதைப் பானஞ் செய்யப்போகின்றது. நீ சரீரம் முழுவதும் தூள்படிந்து கைகளிரண்டும் ஸ்வாதீனமில் லாமல் தொங்கிப் பூமியில் விழ வைத்துக்கொண்டு பெறக்கூடாத பெண்பிள்ளையைப்போல் பூமியை ஆலிங் கனஞ் செய்துகொண்டு பெருநித்ரை செய்யப்போகின் றனை. ராக்ஷஸ குலத்தின் பெருமையைப் பாழாக்க வந்த நீ தீர்க்க நித்ரையில் ஆழ்ந்து சயனித்த பின்பு, அகதிகளாயிருக்கின்ற ரிஷிகள் முதலானவர்க்கு இந்தத் தண்டகாரண்யப்ரதேசங்கள் ஸுகமான வாஸஸ்தான மாயிருக்கப்போகின்றன. ராக்ஷஸப்பயலே! உன் ஜனஸ் தானத்திலுள்ள ராக்ஷஸர்களின் ஸ்தானங்களெல்லாம் என் பாணங்களால் ஹதமாகையில் முனிவர்கள் இவ்வ னம் முழுவதிலும் பயமின்றி ஸஞ்சரிக்கப் போகின்றனர். இதுவரையில் பிறர்க்குப் பயத்தை விளைவித்துக்கொண் டிருந்த ராக்ஷஸஸ்த்ரீகள் இப்பொழுது தமது பந்துக்க

ளெல்லோரும் பாழாகையில், முகத்தில் கண்ணீர் வழி யப்பெற்றுத் தீனைகளாகிப் பயப்படுத்துவதை விட்டுத் தாமே பயந்து நாற்புறமும் ஓடப்போகின்றனர். உனக்குச் சரியான கெடுநடத்தை யுடையவராகி, இப்படிப் பட்ட பாபிஷ்டனாகிய உன்னை மணம் புரிந்த ராக்ஷஸ ஸ்த்ரீகள் இதுவரையில் துக்கத்தை அறியாதவர்களா யினும் இப்பொழுது துக்கத்தின் ருசி எப்படிப்பட்டதோ அதை நன்றாக அறிந்து காமபுருஷார்த்தத்தைக் கை விட்டவராகப் போகின்றனர். உன்னுடைய பத்னிகள் உனக்குத் தகுந்த குலமுடையவர்களே; ஆனதுபற்றியே இப்படிப்பட்ட பாபிஷ்டனாகிய உன்னைப் பர்த்தாவாகப் பெற்றனர். அடா! காதுகனே! அற்ப நடத்தை யுடையவனே! அற்பபுத்தியனே! ஸர்வகாலமும் ப்ராஹ்மணர்களுக்குச் சத்ருவாயிருப்பவனே! முனிவர்கள் அக்னியில் ஹவிஸ்ஸை ஹோமஞ்செய்யும்பொழுது உன்னைப் பற்றி என்ன விக்னம் வருமோவென்று சங்கித்துக் கொண்டே ஹவிஸ்ஸை அதில் விடுவார்கள்; இப்படிப் பட்ட பாபிஷ்டனாகிய உன்னைக் கைப்பிடித்ததற்கு உன் பத்னிகள் துக்கம் எப்படிப்பட்டதோ அதைத் தெரிந்து கொள்ளப் போகின்றார்கள்' என்றனன். இங்ஙனம் யுத்தத்தில் பரபரப்புற்று ராமன் சொல்லிக்கொண்டிருக்கையில் கரன் கோபம் மீதூரப்பெற்று, மிகவும் கடோரமான கண்டத்வனியுடன் அந்த ராமனைப் பார்த்து மொழிந்தனன்:—'நீ மிகவும் கர்வமுற்றவனாயிருக்கின்றனை; இது நிஜம். ஆனதுபற்றியே பயகாரணங்கள் ஸமீபித்திருப்பினும் பயமின்றி, ம்ருத்யுவின் கையில் அகப்பட்டுக் கொண்டு சீக்ரத்தில் சாகப்போகிறாயாகையால் 'இதைச் சொல்லலாகாது' என்றுங்கூட அறியாதிருக்கின்றனை. ஆகையால் வாய்க்கு வந்தபடி பிதற்றுகின்றனை. எவர்

ம்ருத்யு பாசத்தால் கட்டப்படுவோர்களோ, அந்தப் புரு ஷர்கள் ஆறு இந்த்ரியங்களும் தொலையப் பெற்று 'இது செய்யத்தகும், இது செய்யத் தகாது' என்று அறியவல்ல ராகமாட்டார்கள்' என்றனன். கரன் இப்படி ராமனு டன் சொல்லிப் புருவநெருப்புடன்கூடி யுத்தத்தின்பொ ருட்டு ஆயுதத்திற்காக நாற்புறமும் கண்ணுற்றுப் பார்த்து, ஸமீபத்தில் ஒரு பெரிய வ்ருக்ஷத்தைக் கண்டு அதுபெயர்க்க முடியாதிருப்பது பற்றி உதட்டைக்கடித் துக்கொண்டு அதைப் பெயர்த்தனன். அது மிகவும் பருத்துப் பெரிதாயிருக்கையால் அம்மஹாபலன் இரண்டு கைகளாலும் பிடித்து எடுத்து ஸிம்ஹநாதஞ் செய்து ராமன்மேல் போகட்டு 'நீ செத்தாய்' என்று மொழிய வும் மொழிந்தனன். பராக்ரமசாலியாகிய ராமன் அங் ஙனம் தன்மேல் வருகின்ற அம்மஹாவ்ருக்ஷத்தைப் பாணங்களால் துண்டித்துக் கரன் யுத்த ஸாமக்ரிக ளெல்லாம் பாழாகியும் அனுகூலப்பட்டு வாராமையைக் கண்டு யுத்தத்தில் அவனைக் கொல்வதற்காகத் தீவ்ர மான ரோஷத்தை ஏறிட்டுக்கொண்டனன். அனந்தரம் ராமன் கோபாவேசத்துடன் உடம்பெல்லாம் வேர்வை உண்டாகவும் கண்களின் நுனி சிவக்கவும் பெற்றுக் கரனை ஆயிரம் பாணங்களால் யுத்தத்தில் பேதித்த னன். கரனது சரீரத்தில் பாணங்கள் நாட்டின இடங் களினின்று நுரையுடன் கூடின புதிய ரக்தமானது, ப்ர ஸ்ரவணபர்வதத்தினின்று ஜலப்ரவாஹம் தாரைதாரை யாகப் பெருகுவதுபோல், அபாரமாகப் பெருகி வந்தது. அந்தக் கரன் யுத்தத்தில் ராமன் ப்ரயோகித்த பாணங் களால் அவயவங்களெல்லாம் விலவிலக்கப்பெற்று மதித் துக் குருதிநாற்றத்துடன்கூடிச் சீக்ரமாக ராமனையே எதிர்த்தோடி வந்தனன். அங்ஙனம் கரன் பரபரப்

புடன், ஆயுதங்களை எடுத்தெறியவும் பாணங்களைத் தொடுத்தடிக்கவும் அவகாசமில்லாதிருக்குமாறு மேல் விழுந்து மிகவும் ஸமீபித்து வந்துகொண்டிருக்கையில், தனுஸ்ஸில் பாணத்தைத் தொடுத்து வைத்துக்கொண்டிருக்கின்ற ராமன் அந்தப் பாணத்தை எய்வதற்கு அவகாசம் ஏற்படுத்திக் கொள்வதற்காகவும், அவனது சரீரத்து ரக்தம் தன்மேல் தெறியாதிருப்பதற்காகவும் வேகத்துடன் அடியிட்டுக்கொண்டு கொஞ்சம் பின்னுக்கு வந்தனன். பிறகு ராமன் கரனைக் கொல்ல முயன்று அக்னிபோல் ப்ரகாசிப்பதும் மற்றொரு ப்ரஹ்ம தண்டம் போன்றதுமாகிய ஒருபாணத்தை எடுத்தனன். அந்தப் பாணத்தை முன்பு தேவேந்த்ரன் புத்திமானாகையால் வரும் ஸங்கதி தெரிந்து அகஸ்த்யமுனிவர் மூலமாக ராமனுக்குக் கொடுத்திருந்தனன். தர்மாத்மாவாகிய ராமன் அந்தப் பாணத்தை வில்லில் தொடுத்துக் கரன் மேல் ப்ரயோகித்தனன். அங்ஙனம் ராமன் காது நுனி வரையில் வில்லை இழுத்து விடுகையில் அந்தப் பாணம் இடிபோல் மிகுந்த கோஷஞ் செய்துகொண்டு கரனது வக்ஷஸ்தலத்தில் பொற்றுக் கொண்டது. அனந்தரம் அந்தக் கரன் ராமனது பாணமாகிற அக்னியால்[1] தக்தனாகி ருத்ரனது பாணாக்னியால் ஸ்வேதாரண்யக்ஷேத்ரத்தில் கொளுத்தப்பட்ட அந்தகாஸுரன்போலத் தரையில் வீழ்ந்தனன். தேவேந்த்ரனால் வஜ்ராயுதங்கொண்டு அடிக்கப்பட்ட வ்ருத்ராஸுரன்போலவும், நுரையால் அடிக்கப்பட்ட நமுசிபோலவும் இந்த்ரனுடைய வஜ்ரத்தால் கொல்லப்பட்ட பலாஸுரன்போலவும் அந்தக் கரன் ராமபாணத்தால் அடிக்கப்பட்டுத் தரையில் வீழ்ந்தனன். அனந்தரம் ராஜ ரிஷிகளும் மஹர்ஷிகளும் வந்துகூடி மிகுந்த ஸந்தோஷம் அடைந்து ராமனைப் பூஜித்து அவனைப் பார்த்து 'மஹாதேஜஸ்வியும் பாகாஸுரனைக் கொன்றவனும் சத்ருபட்டணங்களை அழிப்

1 தக்தனாகி - கொளுத்தப்பட்டவனாகி.

பவனுமாகிய மஹேந்த்ரன், இந்தக் காரதிகளின் வதத்திற்காகவே பாவனமாகிய சரபங்கரது ஆஸ்ரமத்திற்கு வந்திருந்தனன். க்ரூரர்களும் பாபவ்யாபாரமுடையவர்களுமாகிய இந்த ராக்ஷஸர்களைக் கொல்விக்கும்பொருட்டே மஹர்ஷிகள் உபாயஞ்செய்து அந்தந்த ஆஸ்ரமங்களைப் பார்க்கும் வ்யாஜத்தினால் உன்னை இந்த ஸ்தலம் வந்து சேரும்படிக்குச் செய்தனர். தசரத குமாரனே! நீ எங்களுக்குச் செய்யவேண்டிய கார்யம் இதுவே. இதைச் செய்துமுடித்தனை. இனிமேல் மஹர்ஷிகள் தண்டகாரண்யத்தில் ஸுகமாகத் தர்மங்களை ஆசரித்துக்கொண்டிருப்பார்கள்' என்றனர். இதன் நடுவில் தேவதைகளும் சாரணர்களும் கூடி அவ்விடம் வந்து பரமஸந்தோஷத்துடன் மிகவும் ஆஸ்சர்யமுற்றுப் பேரிவாத்யங்களை முழக்கிக்கொண்டு அப்பொழுது ராமன்மேல் புஷ்பவர்ஷங்களைப் பெய்தனர். பிறகு அந்தத் தேவதைகள் ராமன் மஹாயுத்தத்தில் ஒன்றரைமுஹூர்த்தப் பொழுதில் கொடிய பராக்ரமமுடைய காதூஷணாதிகள் பதினாலாயிரம் ராக்ஷஸர்களையும் அடித்து முடித்தனன். என்ன ஆச்சர்யம்! ஆத்மஸ்வரூபமுணர்ந்த ராமன் செய்த கார்யம் மஹத்தானது; ஆ! எவ்வளவு பெரிய கார்யஞ் செய்தனன்! ஆ! இவன் பராக்ரமம் என்ன? இவன் ஸாமர்த்யம் என்ன? எல்லாம் விஷ்ணுதேவனது பராக்ரமஸாமர்த்யங்கள்போல் நினைக்கமுடியாமல் புலப்படுகின்றனவே' என்றனர். இங்ஙனம் அந்தத்தேவதைகள் சொல்லி எல்லோரும் தாந்தாம் வந்தவழியே போயினர். அந்த ஸமயத்தில் வீரனாகிய லக்ஷ்மணன் ராமபராக்ரமத்தைப் பார்த்து ஸந்தோஷமுற்று ஸீதையோடுகூடப் பர்வதகுஹையினின்று புறப்பட்டு ஆஸ்ரமத்தில் நுழைந்தனன். அனந்தரம் வீரனாகிய ராமன் ஜயங்கொண்டு மஹர்ஷிகள் பூஜித்துக்கொண்டிருக்கையில், லக்ஷ்மணன் எதிர்கொண்டு

மேன்மைப்படுத்தத் தனது ஆஶ்ரமம் வந்து சேர்ந்தனன். [1] ஸீதை, இவ்வனம் ஸமஸ்த சத்ருக்களேயும்

1. இதற்கு 'தந்த்ருஷ்ட்வா ஶத்ருஹந்தாரம் மஹர்ஷீணாம் ஸுகாவஹம் | ஶவஷ்வ ஹ்ருஷ்டா வைதேஹீ ஹர்த்தாரம் பரிஷஸ்வஜே' என்று மூலம். பதினாலாயிரம் ராக்ஷஸர்களோடு ராமனொருவனே என்ன சண்டை செய்யப்போகிறானென்று சிந்தித்துக்கொண்டிருந்த ஸீதை, ராமன் ஜயம் பெற்று வருகையில், மஹாகுலத்திற் பிறந்தவளாகையால் வீரர்களின் தாரதம்யங்களை அறியவல்லவளானதுபற்றிப் பர்த்தாவின் வீரத்தன்மைக்கு மகிழ்ந்து கௌரவத்துடன் கட்டி யணைத்தாளென்று சொல்லுகிறார் (தந் த்ருஷ்ட்வா) அந்த ராமனைக் கண்டு. அதற்கு முன்பு மஹாயுத்தத்தில் கண்ணுக்குத் தெரியாதிருந்து அப்பொழுது அருகில் வருகையில் கண்ணுக்குப் புலப்படுகின்ற ராமனைக் கண்டு, (தந் த்ருஷ்ட்வா) 'வீரவ்ரணைர் விமலதீருயிரேண ரோமகூபோல்லஸஜ்ஜிரபி வர்மபயஃகணைள வைஃ | கோதண்டதண்டமவலம்ப்ய விஶ்ய வர்ம கிஞ்சித்பரிஶ்ரமஹ்ருதம் ப்ரியமீக்ஷமாணா' என்கிறபடியே ரக்தம் பெருகுகின்ற வீரவ்ரணங்களோடும் மயிர்க்கால்களில் புலப்படுகின்ற வேர்வையின் துளிகளோடும்கூடி வில் தடியை யூன்றிக் கவசத்தைக் கழற்றிக் கொஞ்சம் இளைப்புற்றிருக்கிற ப்ரியனான ராமனைப் பார்த்தென்றபடி. (தந்த்ருஷ்ட்வா) ஜடைகளை மேலெடுத்துக் கொடிகளால் முடிந்து இடையைக் கெட்டியாகக் கட்டிக்கொண்டு தோள்களில் அம்பறாத்தூணிகள் விளங்க, யுத்தம் முடிகையால் கோபாக்னி அணையப்பெற்றுத் தெளிந்த முகத்தோடுகூடி ஸீதாலக்ஷ்மணர்கள் வரும் வழியைப் பார்த்துக்கொண்டு ராக்ஷஸர்கள் எவரேனும் மீளவும் வருவார்களோ என்னவோ என்று மனவூக்கத்துடனிருக்கின்ற ராமனைப் பார்த்து. (தந்த்ருஷ்ட்வா) முன்பெல்லாம் வீரனென்கிற கேள்வி மாத்ரமேயாயிருந்து இப்பொழுது ப்ரத்யக்ஷமாக வீரச்செயலை நிறைவேற்றிக் காட்டின ராமனைப் பார்த்து. பார்த்த ப்ரகாரத்தைச் சொல்லுகிறார்—(ஶத்ருஹந்தாரம்) சத்ருக்களைக் கொல்பவனாகிய. ராமனிடத்தில் அடிப்பது மாத்ரமே தென்பட்டதன்றி பாணந் தொடுப்பது ப்ரயோகிப்பது முதலிய வ்யாபாரங்கள் எள்ளளவும் தெரியவில்லையென்றபடி. 'சத்ரு' என்னும் பதத்தினால் தேவகந்தர்வாதிகள்,

ஸம்ஹாரஞ் செய்து மஹர்ஷிகளுக்கு ஸுகத்தை

வந்திருப்பினும் சத்ருக்களை மாத்ரமே கொன்றுனென்று துஷ்ட நிக்ரஹஞ் சொல்லப்பட்டது. சிஷ்டபரிபாலனத்தைச் சொல்லு கிறுர்—(மஹர்ஷீணாம்ஸுகாவஹம்) (மஹர்ஷீணாம்) தந்தமது தவங் களின் லேசமாத்ரத்தாலேயே ராக்ஷஸர்களைக் கொல்லும் ஸாமர்த் யம் உண்டாயிருக்கப் பெற்றும் தாமே அங்ஙனம் ரக்ஷித்துக்கொண் டால், அப்பொழுது தம்மை ரக்ஷிக்கவேண்டிய பகவானுடைய ரக்ஷ கஸ்வரூபத்திற்கும் ரக்ஷ்ராயிருக்கும் தம் ஸ்வரூபத்திற்கும் ஹானி உண்டாமென்று நினைத்துக் கேவலம் தமது ரக்ஷகனுடைய ரக்ஷண வ்யாபாரத்தையே எதிர்பார்த்துக்கொண்டு ராமனுடைய ப்ரதிஜ் ஞையை நோக்கிக்கொண்டிருக்கும் மஹர்ஷிகளுக்கு, (ஸுகாவ ஹம்) 'ஏஹி பஶ்ய ஶரீராணி' (இங்கு வந்து பட்டுக்கிடக்கிற முனி வர்கள் சரீரங்களைக் காண்பாய்) என்று ரிஷிகள் முறை யிட்டுக் கொண்ட துக்கத்தைச் சிறிதுமில்லாதபடி போக்கி ஸுகத்தையே விளைவிக்கின்ற ராமனைப் பார்த்து, (வைதேஹீ) ஸீதை, (லுஹேவ) ஹேயாது ஸத்தையைச் சொல்லுகிறதாகையால், ஸத்தையுடையவ ளாயினள். பல சத்ருக்கள் வந்து ஆக்ரமிக்கையாலும் ராமன் தனி யனுயிருக்கையாலும் இதற்கு முன்பு ஸத்தையற்றிருந்த ஸீதை இப்பொழுது ஸத்தை பெற்றுளென்கிறது. ஜகத்திற்கெல்லாம் ராமன் ப்ராணனுயிருப்பவனுகையால் ப்ராணனுக்கு ஸத்தை உண் டாகையில் ப்ராணினியாகிய ஸீதைக்கும் ஸத்தை உண்டாயிற் றென்படி. அன்றியே-'ஆத்மாவை புருஷஸ்ய தாரா:' என்று பத்னி யைப் புருஷனுக்கு ஆத்மாவாகச் சொல்லுகையால் ராமனுக்கு ஸத்தை உண்டாகையால் அவனுக்கு ஆத்மாவாகிய இவளுக்கும் ஸத்தை உண் டாயிற்றென்று கருத்து. அன்றியே—'ஹே-ப்ராப்தௌ' என்று ஹே யாதுவுக்கு ப்ராப்தி அர்த்தமாகையால் பர்த்தா ஜயித்ததைகண்டு ஸந் தோஷித்து வேகமாகக் குகையினின்று வெளிப்பட்டு வந்தாளென்று படி. (ஹ்ருஷ்டா) ஸந்தோஷம் அடைந்தனள். 'ஸதியர்மிணியர்மா:' (தர்மி உண்டானுல் தர்மங்கள் உண்டாம்) என்கிற ந்யாயத்தின்படி ஸீதை,தான் ஸத்தைபெற்றபின்பு ஸந்தோஷமும் பெற்றுளென்ற படி. அன்றியே(ஹ்ருஷ்டா) ஸந்தோஷம் உள்ளடங்காமல் வெளிவந்த தோ என்னும்படி மயிர்க்கூச்சலுண்டாகப் பெற்றுளென்றபடி.இப்படி

விளைத்த அந்த ராமனைப் பார்த்து மிகவும் ஸந்தோ

ராமனது ஸௌர்யத்தைக் கண்டு ஸந்தோஷம் அடைவதற்கு ஹேது வைச் சொல்லுகிறார்—(வைதேஹீ) 'மிதிலாபதிரீஶ்வரः' என்னப்படும் வீரகுலத்திற் பிறந்தவளாகையால் ராமனது வீரத்தன்மையை உள் ளபடி அறிந்து ஸந்தோஷம் அடைந்தாளென்றபடி. (ஹர்த்தாரம் பரிஷஸ்வஜே) அளவில்லாத ப்ரீதியின் மிகுதி உடையவளாகையால் தானே ஆலிங்கனஞ் செய்துகொண்டாளென்கிறபடி. (ஹர்த்தாரம்) லோகபர்த்தாவானவனை, தான் ஸர்வலோகங்களுக்கும் மாதாவாகை யால் தன் பிள்ளைகளான ஸர்வலோகங்களையும் ரக்ஷிப்பது கண்டு, (பரிஷஸ்வஜே) பாணங்கள் பட்டதனாலுண்டான தழும்பெல்லாம் மாறும்படி போதுமான வளவும் தழுவினாள். (பரிஷஸ்வஜே) பரிபூர் ணமாக. முன்னும் பின்னும் பக்கங்களிலும் படும்படி ஸ்தனங்களா லே தழுவினாளென்றபடி. யுத்தத்தில் பின்காட்டி ஓடிப்போகாத வீர னுக்குப் பின்புறத்தில் பாணங்கள் படக்கூடாதேயாயினும் சத்ருக்கள் நாற்புறமும் சுற்றிக்கொண்டு ஆயுதங்களை இடுகையில் பின்புறத் திலுங்கூடப் பாணங்கள்பட்டு வ்ரணம் உண்டாயிற்றென்றபடி. மே லும், பாணங்கள் வேகமாக ப்ரயோகிக்கப்படுமாயின், அவை மார்பில் பாய்ந்து பின் வரக்கூடுமாகையால் பின்புறத்திலும் வ்ரணம் உண் டாகக்கூடும்; ஆனதுபற்றியே ஸுகோஷ்ணமான ஸ்தனஸ்பர்ஶங் களால் பின்புறத்துவ்ரணத்தழும்பகளும் மாறும்படி தழுவினளென் கிறது. (மஹர்ஷீணாம் ஸுகாவஹம்) மஹர்ஷிகளுக்கு ஸுகம் விளைப்பவனை. அதாவது—பிள்ளைகளிடத்திலுள்ள வாத்ஸல்யத்தி னால் அவர்க்கு உபகரித்த பர்த்தாவிடத்தில் ஸந்தோஷிக்கும் பார்யை யைப்போல், ரிஷிகளை ரக்ஷித்ததற்கு ஸந்தோஷித்து ராமனை ஆலிங் கனஞ்செய்து கொண்டனள். இங்கு 'ராமனை விட்டுக் குஹைக்குப் போன ஸீதை அதினின்றும் வெளிவந்து ஸமஸ்த சத்ருக்களையும் நிர ஸனஞ்செய்த ராமனை ஆலிங்கனஞ் செய்தாள்' என்கையால் ஹ்ரு தய குஹையிலிருந்த ஜீவன் பரதந்த்ரனாகி ஆசார்யமுகமாகப் பரம சேஷியைப் பார்த்து அவனால் ஸகலவிரோதிவர்க்கமும் தொலைக் கப்படுகையில் அந்தக்குஹையினின்று வெளிப்புறப்பட்டு நித்யஸூ ரிஸபைநடுவில் உட்கார்ந்திருக்கிற சேஷியைப்பெற்று அவனை அனு பவித்தான்' என்னும் பொருள் தோற்றுகிறது. இங்ஙனம் கோவிந்த

ஷம் அடைந்து பர்த்தாவை அழுந்தக் கட்டிக்கொண்டனள். ஜனகராஜன் திருமகளான ஸீதை ராக்ஷஸர் கூட்டம் ஹதமானதைப்பற்றிப் பரமஸந்தோஷம் பெற்று ராமனும் யுத்தத்தில் யாதும் வருத்தம் அடையாதிருப்பது கண்டு மேன்மேலும் ஸந்தோஷம் அடைந்தனள். அனந்தரம் அப்பொழுது ராக்ஷஸர்களின் கூட்டங்களைக்

---

ராஜர். அன்றியே--(தம்) 'தேது யாவந்த ஏவாஜௌ தாவாம்ஸ்து ஶுஶ்ரமே ஸதைஃ' (அவர்கள் எத்தனை பேர்களோ, தானும் அத்தனை பேர்களாக ராமன் புலப்பட்டான்) என்கிறபடியே அக்காலத்தில் தன்னிச்சையால் பரிக்ரஹித்த பதினாலாயிரம் திவ்யமங்களவிக்ரஹமுடையவனாகையால் ஒவ்வொரு ராக்ஷஸனுக்கும் ஒவ்வொரு ராமனாகப் புலப்படுகின்றவனென்று தச்சப்தத்தின் பொருள். அன்றியே—(தம்) இந்த்ராதிகளெல்லோரும் ஒன்றாகக் கூடியும் எதிரிடக்கூடாத பலிஷ்டர்களான பதினாலாயிரம் ராக்ஷஸர்களையும் ஒன்றரை முஹூர்த்தத்தில் தான் அடிபடாமலே அவலீலையாக ஸம்ஹாரஞ்செய்து தன்முன்பு நிற்கின்றவனை. அன்றியே (தம்) 'ராம ஜாமாதரம் ப்ராப்ய ஸ்த்ரியம் புருஷவிக்ரஹம்' (புருஷவேஷம்பூண்ட கேவலஸ்த்ரீயாகிய உன்னை மணவாளனாகப் பெற்று) என்று அஜ்ஞானத்தினால் தான் முன்பு பரிஹஸித்தவனை. (ஶத்ருஹந்தாரம்) சத்ருக்களை ஹதஞ்செய்த ராமனைப் பார்த்து (ஶத்ருஹந்தாரம் மஹர்ஷீணாம் ஸுகாவஹம்) 'பரித்ராணாய ஸாதூநாம் விநாஶாய ச துஷ்க்ருதாம்' என்கிற தன்ப்ரதிஜ்ஞையைப்பரிபாலனஞ்செய்ய அவதரித்து அஸஜ்ஜனமான ராக்ஷஸர்களைக் கொன்று ஸஜ்ஜனமான ரிஷ்யாதிகளுக்கு ஜகன்மோஹனமான தன் திவ்யமங்கள விக்ரஹத்தை அனுபவிக்கப்பண்ணி மஹாநந்தத்தை விளைத்தவனையென்றபடி. (வைதேஹீ) ஸ்ரீராமன் சத்ருமத்யத்தில் அகப்படுகையால் அஸத்ப்ராயனாயிருப்பது கண்டு தன்னையும் அஸத்ப்ராயமாக நினைத்திருந்தனள். இப்பொழுது தன் ப்ராணேஶ்வரனாகிய ராமனுக்கு ஸத்தை உண்டாயிருக்கையால் தனக்கும் ஸத்தை உண்டானதாக நினைத்தனள். இந்த ஸர்க்கபாராயணத்திற்குப் பலம் 'ஶ்ருத்வா ஸ்ரீராமவிஜயம் பாபஸங்காத்ப்ரமுச்யதே । தஸ்யைவ ஶார்ங்கவலாஸங்காதுக்ரணஸங்காத் ப்ரமுச்யதே । ஶ்ருத்வா புஷ்பவதீ நாரீ தநயம் வம்ஶவர்தநம் । லபதே ராகவேந்த்ரஸ்ய ப்ரஸாதாத்கீர்த்திவர்தநம்' என்று ஸ்காந்தத்தில் சொல்லப்பட்டது. இங்ஙனம் மஹேஶ்வர தீர்த்தர்.

கொன்று, மஹர்ஷிகளால் ஸந்தோஷத்துடன் பூஜிக்கப்பட்டு விளங்குகின்ற ஸ்ரீராமனைப் பார்த்துச் சந்த்ர பிம்பம்போன்ற அழகிய முகமுடைய அந்தப் பெண்மணி அடிக்கடி அழுந்தக்கட்டி யணைத்து மிக்க ஸந்தோஷம் அடைந்தனள். முப்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

{ அகம்பனன் ஜனஸ்தானத்தில் நடந்த ஸமஸ்த ராக்ஷஸ வதத்தையும் ராவணனுக்குப் போய்த் தெரிவித்தலும், ராவணன் மாரீசனிடம் வந்து ஸஹாயஞ் செய்யவேண்டுதலும், மாரீசன் ராமப்ரபாவத்தை அறிவிக்கையில் ராவணன் லங்கைக்குத் திரும்பிப் போதலும். }

[1] அனந்தரம் ராவணனது சாரனாகிய அகம்பனன் ஜனஸ்தானத்தினின்று வேகமாக லங்கைக்குச் சென்று

---

1. இங்ஙனம் சரணாகதிமந்த்ரவிவரணரூபமான ராமாயணத்தில் இதுவரையில் உள்ள க்ரந்தத்தினால் உத்தரகண்டத்தின் அர்த்தம் விவரிக்கப்பட்டது. அனுஷ்டானதசையில் ப்ரதமகண்டத்தினர்த்தம் முக்யம். பலனை அனுஸரித்தே உபாயமிருக்குமாகையால் வ்யுத்பத்தி தசையில் உத்தரகண்டத்தி னர்த்தம் முக்யம். ஆகையால் வ்யுத்பத்தியின்பொருட்டு உத்தரகண்டத்தினர்த்தம் இதுவரையில் விவரிக்கப்பட்டது. அதில் பாலகாண்டத்தில் ப்ரதமபதத்தினர்த்தமாகிய புருஷகாரயோகம் காட்டப்பட்டது. அயோத்யாகாண்டத்தில் த்விதீய பதத்தினர்த்தமாகிய ஸௌலப்யாதிகுண யோகமும் ஆரண்யகாண்டத்தில் சூர்ப்பணகை வருவதற்கு முன்னம் நடந்த வ்ருத்தாந்தத்தால் சதுர்த்தியின் அர்த்தமாகிய கைங்கர்ய வ்ருத்தியும், அது முதலாகக் கரவதம் வரையிலுள்ள வ்ருத்தாந்தத்தால் சரமபதத்தின் அர்த்தமாகிய விரோதிநிவ்ருத்தியும் சொல்லப்பட்டன. இதற்கு மேலுள்ள க்ரந்தத்தால் பூர்வகண்டத்தின் அர்த்தம் சொல்லப்படுகிறது. அதில் ஆரண்யகாண்டத்தின் மற்றபாகத்தால்

ராவணனைப் பார்த்து 'ராஜனே! ஜனஸ்தானத்தி லுள்ள ராக்ஷஸர் பலரும் யுத்தத்தில் அடிபட்டுப்போயி னர். கரன் தூஷணன் த்ரிசிரன் ஆகிய இவர்களும் தொலைந்தனர். நானொருவன்மாத்ரம் எப்படியோ தப்புவித்துக்கொண்டு வந்தேன்' என்றனன். இங்ங னம் சொல்லப்பட்ட ராவணன் கோபமுற்றுக் கண் கள் சிவக்கப்பெற்றுக் கொளுத்தி விடுபவன்போல் பார்த்துக்கொண்டே அந்த அகம்பனனைப் பார்த்து மொழிந்தனன்.—'செத்தவன் எவன் அழகிய எனது ஜனஸ்தானத்தைப் பாழ் செய்தனன்? எனக்கு அப் ரியம் செய்தவன் எவன் தான் ஸமஸ்த லோகங்களிலும் கதியைப் பெறுவான்? எனக்கு அப்ரியத்தைச் செய் வானாயின், தேவேந்த்ரனாயினும் குபேரனாயினும் யமனா யினும் விஷ்ணுதேவனாயினும் எவ்வளவும ஸுகத் தைப்பெற வல்லனல்லன். நான் யமனுக்கும் யமன்; அக்னியையும் தஹித்துவிடுவேன்; ம்ருத்யுவுக்கும் மரணதர்மத்தை ஏற்படுத்துவேன். நான் கோப முறுவேனாயின், என் தேஜஸ்ஸினால் ஸூர்யாக்னிகள்

---

விபீஷணனுக்குப் புருஷகாரஸாங்கித்யமும், கிஷ்கிந்தாகாண்டத் தால் நாராயணபதத்தின் அர்த்தமாகிய வாத்ஸல்யமும் ஸுந்தர காண்டத்தில் 'ராமஃ கமலபத்ராக்ஷஃ' இத்யாதிகளால் சரணசப்தத்தில் சொல்லப்படுகிற திவ்யமங்களவிக்ரஹயோகமும் யுத்தகாண்டத்தில் சரணாகதியும் உத்தரகாண்டத்தில் ப்ரபன்னனுஷ்டானமும் சொல் லப்படுகின்றனவென்றுணர்க. இங்ஙனம் நடுவில் ப்ரஸக்தமான முனிஜனசரணாகதியைத் தேவதைகளின் சரணாகதியைப்பற்றிச் செய்யப்போகிற ராவணவதத்திற்கு அங்கமாகச் சொல்லி அங்கி யாகிய ராவணவதத்திற்கு நிமித்தமான ஸீதாபஹாரமென்னும் பீஜத்தை உபக்ஷேபிக்கிறார். உபக்ஷேபமாவது கொஞ்சமாகச் சொல் லுகை.

இருவரையும் கொளுத்திவிடுவேன். என் வேகத்தால் வாயுவேகத்தையுங்கூட உடனே அடங்கச் செய்ய வல்லேன்' என்றனன். ராவணன், அவ்வாறு கோபித்திருப்பதுகண்டு அகம்பனன் கைகூப்பிக்கொண்டு பயத்தினால் வார்த்தைகள் தழுதழுத்துத் தடைபடப் பெற்று 'அபயம்' என்று ராவணனை வேண்டிக்கொண்டனன். ராக்ஷஸஸ்ரேஷ்டனாகிய ராவணனும் அவனுக்கு அபயங்கொடுத்தனன். அவ்வகம்பன் பிறகு பயத்தை விட்டு நம்பிக்கை உண்டாகப்பெற்று ஸந்தேஹமின்றித் தெளிவாயிருக்குமாறு ராவணனைப் பார்த்து மொழிந்தனன்:- 'தசரதனுடைய குமாரன் ராமனென்பவன் உளன். அவனது உருவம் லோகோத்தரமாயிருப்பது: அவன் நல்ல யௌவனமுடையவன். அவனது தோள்கள் எருதின்முசுப்புபோல் அழகாயிருக்கும். புஜங்கள் திரண்டுருண்டு நீண்டவைகளாயிருக்கும். அவன் நல்ல வீரன். மிகுந்த கீர்த்தியுடையவன்; மிகுந்த சோபை யுடையவன்; நிகரில்லாத பல பராக்ரமங்களையுடையன். அவனால்தான் ஜனஸ்தானத்திலுள்ள ராக்ஷஸர்களும் கரனும் தூஷணனும் அடிக்கப்பட்டார்கள்' என்றனன். ராக்ஷஸாதிபதியாகிய ராவணன் அகம்பனனுடைய வார்த்தையைக் கேட்டு ஸர்ப்பராஜன்போல் பெருமூச்செறிந்து அவனைப்பார்த்து 'அகம்பனா! அந்த ராமன் தேவேந்த்ரனோடும் தேவதைகள் அனைவரோடுங்கூடி ஜனஸ்தானத்திற்கு வந்தானா என்ன? இல்லையாயின், ஒருவன் எப்படி இத்தகைய கார்யத்தைச் செய்யக்கூடும்?' என்றனன். அகம்பனன், மீளவும் ராவணன் சொன்ன அவ்வார்த்தையைக் கேட்டு மஹானுபாவனாகிய ராமனது பலத்தையும் பராக்ரமத்தையும் சொல்லத் தொடங்கி, ராவணனை நோக்கி 'ராமனென்பவன் மஹாதேஜஸ்வி;

ஸமஸ்தமான வில்லாளிகளிலும் முதன்மை பெற்றிருப்பவன்; திவ்ய அஸ்த்ரங்களோடும் திவ்ய கல்யாண குணங்களோடும் கூடினவன்; யுத்தத்தில் தேவேந்த்ரனேடு ஸமானமாயிருப்பவன். அந்த ராமனுக்குத் தகுந்தபடி லக்ஷ்மணனென்று ஒரு தம்பி உளன். அவன் மிகுந்த பலமுடையவன்; அவனது கண்கள் சிவந்து மிகவும் அழகாயிருக்கும். அவன் பேரிவாத்யம் முழுங்குவது போல மிகவும் கம்பீரமான கண்டஸ்வர முடையவன். அவனுடைய முகம் சந்த்ரபிம்பம்போல் பார்க்கப் பதினுயிரங் கண்கள் வேண்டும்படி அழகாயிருக்கும். ஸ்ரீமானும் ராஜஶ்ரேஷ்டனுமாகிய அந்த ராமன் வாயு அக்னியோடு கூடினுற்போல், அந்த லக்ஷ்மணனேடு கூடியிருக்கின்றனன். அந்த ராமனே ஜனஸ்தானத்தையெல்லாம் பாழ் செய்தனன். மஹானுபாவர்களான தேவதைகள் எவரும் அவ்விடம் வந்து ராமனுக்கு ஸஹாயஞ் செய்யவில்லை. இவ்விஷயத்தில் ஸம்சயிக்க வேண்டியதில்லை. பொற்பிடிகளுடையவைகளும் இறகுகள் கட்டப்பெற்றவைகளுமான பாணங்களை ராமன் ப்ரயோகிக்கையில், அவை விரிந்த தலைகளையுடைய ஸர்ப்பங்களாகி ராக்ஷஸர்களைப் பக்ஷித்தன. ராக்ஷஸர்கள் பயந்து வருந்தித் தம்மைக் காப்பாற்றிக்கொள்ளும்பொருட்டு எந்தெந்த வழிகளில் ஓடிப்போகிருர்களோ அந்தந்த வழிகளெல்லாவற்றிலும் ராமனே அவர்கள் கண்ணெதிரில் தோற்றிக்கொண்டிருந்தனன். துக்கமற்றவனே! ராமன் இவ்வாறு ஜனஸ்தானம் முழுவதையும் நாசஞ் செய்துவிட்டான்' என்றனன். அகம்பனன் சொன்னது கேட்டு, ராவணன் 'நான் ராமனையும் லக்ஷ்மணனையும் கொல்லுவதற்காக ஜனஸ்தானத்திற்குப் போகின்றேன்' என்றனன். ராவணன் அவ்வாறு சொல்வது கேட்டு அகம்பனன் இவ்வாறு மொழிந்தனன் :—'ராஜனே! ராமனது

பலத்தையும் பௌருஷத்தையும் நடந்தது நடந்தபடி சொல்லுகிறேன்; கேள். மஹாயசஸ்வியாகிய ராமன் கோபித்துப் பராக்ரமத்திற்கு முயன்றானாயின் அவனைத் தடுக்க எவனுக்கும் தரமன்று. அவன் அங்ஙனம் கோபித்து முயல்வானாயின், பரிபூர்ணமான நதீப்ரவாஹத்தின் வேகத்தையும் பாணங்களால் தடுத்து நிறுத்தி விடுவான்; இருபத்தேழு நக்ஷத்ரங்களோடும் நவக்ரஹங்களோடும் மற்றைத் தாரகைகளோடும் கூடின ஆகாயத்தையெல்லாம் துளிதுளியாகச் சிதிறச் செய்யவல்லவன். ஸ்ரீமானாகிய அந்த ராமன் ஸமுத்ரத்தில் பூமி மூழ்குமாயின், அதையுங்கூட மேலெடுக்குந்திறமையுடையவன். ராமன் ஸமர்த்தனாகையால் ஸமுத்ரத்தினுடைய கரையைப் பிளந்து லோகங்களையெல்லாம் அதன் ஜலத்தில் மூழ்கச் செய்வான். பாணங்களால் ஸமுத்ரவேகத்தையாயினும் வாயுவேகத்தையாயினும் அடக்கி விடுவான். மஹாயஶஸ்வியாகிய அந்தப் புருஷஸிம்ஹன் பராக்ரமத்தில் உலகங்களையெல்லாம் ஸம்ஹரித்து மீளவும் முதலே பிடித்து ப்ரஜைகளைப் படைக்கவுங்கூட வல்லவன். பத்துதலைகள் படைத்தவனே! ஸ்வர்க்கம் பாபிஷ்ட ஜனங்களுக்குப் பெற முடியாதிருப்பதுபோல, உனக்காவது நமது ராக்ஷஸ ஜனங்களுக்காவது யுத்தத்தில் ராமனை ஜயிக்க முடியாது. தேவாஸுரர்கள் அனைவரும் ஒன்று கூடியும் ராமனை வதிக்க முடியாதென்று எனக்குத் தோற்றுகின்றது. ராமனை வதிக்கிற உபாயமோ என்றால் ஒன்றிருக்கின்றது. அதைச் சொல்லுகிறேன்; மனவூக்கத்துடன் கேட்பாயாக. அவனுக்கு ஸீதையென்னும் ஒரு பார்யை இருக்கின்றாள். அவள் உலகத்திற்குள் உத்தமை; நுண்ணியதாகி மிகவும் அழகான இடையுடையவள்; யௌவனப் பருவத்தின் இடையிலிருப்பவள். அவளது அவ

யவங்கள் ஒன்றுக்கொன்று பொருத்திப் பிரிந்து மிக நேர்மையுடையனவாயிருக்கும். அவள் பெண்மணிகள் அனைவரிலும் மேலானவள்; ரத்ன ஆபரணங்களோடு விளங்குகின்றனள். தேவதைகளிலாவது கந்தர்வர்களிலாவது அப்ஸரஸ்த்ரீகளிலாவது தானவர்களிலாவது அந்த ஸீதைக்கு ஒப்பான மாதரசி ஒருத்தியும் இல்லை. இனி மனுஷ்யர்களில் ஏது? அம்மஹாரண்யத்திற்கு நீ சென்று பலாத்காரமாக ராமனது பார்யையைத் திருடிக்கொண்டு வருவாயாக. ராமன் ஸீதையிடத்தில் மிகுந்த காமமுடையவன். ஆகையால் ஸீதையைப் பிரிந்திருக்க முடியாமல் ப்ராணன்களை விட்டுவிடுவான்' என்று மொழிந்தனன். ராக்ஷஸர் தலைவனும் மஹாபாஹுவுமாகிய ராவணன் அகம்பனனுடைய வார்த்தையைக் கேட்டு இஷ்டப்பட்டு அதை நன்கு ஆலோசித்து அவனுடன் 'நல்லது. நானொருவனே நாளை விடியற்காலத்தில் ஸாரதியுடன் சென்று ஸந்தோஷமாக நீ சொன்ன ஸீதையை இம்மஹாபட்டணத்திற்குக் கொண்டுவருகின்றேன்' என்றனன். ராவணன் இவ்வாறு மொழிந்து, பிறகு விடியற்காலத்தில் ஸூர்யன்போல் ப்ரகாசிப்பதும் கழுதைகள் கட்டப் பெற்றதுமாகிய ரதத்தின்மேல் ஏறித் திசைகளை விளங்கச் செய்துகொண்டு ப்ரயாணமாய்ப் புறப்பட்டனன். ராக்ஷஸப்ரபுவாகிய அந்த ராவணனுடைய மஹாரதம் ஆகாசமார்க்கத்தில் திருப்பப்பட்டு மேகமண்டலத்தில் திரியுஞ்சந்த்ரமண்டலம்போல் ப்ரகாசித்துக் கொண்டிருந்தது. அந்த ராவணன் மாரீசாச்ரமஞ் சென்று அங்குத் தேரினின்றும் இழிந்து தாடகையின் புதல்வனாகிய அம்மாரீசனிடம் போயினன். மாரீசன் மனிதர்களுக்குக் கிடைக்கக்கூடாத பக்ஷ்ய போஜ்யங்களால் ராக்ஷஸப்ரபுவான ராவணனைப் பூஜித்தனன். மாரீசன் ராவணனுக்கு ஆஸனங்கொடுத்து அர்க்யம்முதலியவற்றால் பூஜித்து மிகவும் பொருளடங்கிய

வாக்யத்துடன் அவனை நோக்கி, 'ராஜனே! ராக்ஷஸர் தலைவனே! ராக்ஷஸர்கள் அனைவரும் க்ஷேமமா? நீ இவ்வளவு வேகமாக வந்ததனால் ஏதோ ஒரு பெரிய ஆபத்து வந்திருக்குமென்று சங்கிக்கிறேன். ஆனால் அவ்வாபத்து இன்னதென்று எனக்குத் தெரியவில்லை' என்றனன். மஹாதேஜஸ்வியாகிய ராவணன் வார்த்தை சொல்லுவதில் ஸாமர்த்யமுடையவனாகையால் மாரீசன் அங்ஙனம் சொல்லுகையில், உடனே தானும் அவனை நோக்கி இங்ஙனம் மொழிந்தனன்:— 'என்னப்பனே! அனாயாஸமாக வ்யாபாரங்களைச் செய்யுந் தன்மையுள்ள ராமன், என் தலையாளியாகிய கரனைக் கொன்றுவிட்டனன். மேலும் எப்படிப்பட்டவர்களுக்கும் வதஞ்செய்ய முடியாத ஜனஸ்தானம் அனைத்தையும் யுத்தத்தில் முடித்து விட்டனன். இவனது பார்யையை அபஹரிக்கலாமென்று எண்ணுகிறேன். நீ அவ்விஷயத்தில் பந்துக்களை யெல்லாம் அழித்துக்கொண்டு நிற்கிற எனக்கு ஸஹாயஞ் செய்யவேண்டும்' என்றனன். அந்த ராக்ஷஸர் தலைவன் சொன்ன வார்த்தையைக் கேட்டு மாரீசன் அவனை நோக்கி 'ராக்ஷஸதிலகனே! எவன் மித்ரன் போல் மேலுக்குத் தோற்றி உள்வே உனக்குச் சத்ருவாகி உன்னைக் கெடுக்க நினைத்து உனக்கு ஸீதையின் பேரைச் சொல்லினன்? எவன் உன்னால் திரஸ்கரிக்கப்பட்டு உனது ஐஶ்வர்யத்தைப் பொறுக்கமுடியாதிருக்கின்றனன்? ஸீதையை இவ்விடம் கொண்டு வருவாயென்று உனக்குச் சொல்லுகிறவன் எவன்? அவனை எனக்குச் சொல்லவேண்டும். எவன் ராக்ஷஸலோகங்களுக்கெல்லாம் கொடுமுடிபோலும் கொம்புபோலும் ப்ரதானனாயிருக்கிற உன்னைப் பாழாக்க நினைத்தவன்? எவனோ ஒருவன் உன்னை இவ்விஷயத்தில் தூண்டுகின்றான்; அவனே உனக்குச் சத்ரு. ஸந்தேஹமில்லை. எவன் உன்னைக்கொண்டு க்ரூரஸர்ப்பத்தின் முகத்தி

னின்று கோரைப்பல்லைப் பிடுங்க விரும்புகின்றனன்? எவன் அப்படிப்பட்ட கார்யஞ் செய்யச்சொல்லி உனக்குக் கெடுவழியைக் காட்டிக் கொடுத்தனன்? ராஜனே! நீ ஸுகமாகத் தூங்கிக்கொண்டிருக்கையில் உன் தலையில் எவன் அடித்தனன்? ராவணா! பரிசுத்தமான வம்சத்தில் பிறந்தமையே நீண்ட துதிக்கையாக விளங்கவும் ஸஹிக்கக்கூடாத பராக்ரமமே மதஜலமாகத் துலங்கவும் நன்கு நேர்ந்த நீண்ட பாஹுதண்டங்களே தந்தங்களாக ப்ரகாசிக்கவும் பெற்றுத் தனது மதஜலத்தின் வாஸனையை மோந்தமாத்ரத்திலேயே மற்றைக்கஜங்களையெல்லாம் பறந்தோடச்செய்கின்ற ராமனென்னும் மத்தகஜம் இப்பொழுது இந்தத்தேசத்தில் யுத்தத்தில் கண்கொண்டு பார்க்கவும் ஸாத்யப்படாதிருக்கின்றது. இனி யுத்தஞ்செய்வது பற்றிச் சொல்லவேண்டுமோ? யுத்தத்தின் தலையில் நிற்பதே மயிர்கள் நிறைந்து கோபத்தினால் இடையில் பற்றி நிற்கின்ற வாலாகவும் பாணங்களே கூரான நகம் முதலிய அவயவங்களாகவும் கருக்குள்ள கத்தியே கோரைப்பல்லாகவும் பெற்று வல்லவரான ராக்ஷஸர்களென்னும் மிருகங்களைக் கொல்லுவதாகிய ராமனென்னும் ஸிம்ஹம் நித்ரை செய்கின்றது; நீ அதை எழுப்பத் தக்கதன்று. ராக்ஷஸ ராஜனே! வில்லாகிற முதலையோடு கூடிக் கைகளால் பாணங்களைத் தொடுத்து விடும் வேகமாகிற சேறுடையதாகிப் பாணங்களாகிற அலைகள் நிரம்பப்பெற்று மஹா யுத்தமென்னும் ஜலப்ரவாஹத்தைக்கொண்டு மிக்கபயங்கரமாயிருக்கிற ராமனாகிற மஹாபிலத்தின் வாயில் விழுவது உனக்குத் தகுந்ததன்று. லங்கேஶ்வரனே! ஆகையால் மனத்தெளிவு பெறுவாயாக. ராக்ஷஸேந்த்ரனே! ஶீக்ரம் லங்கைக்குப்போய்ச் சேருவாயாக. அங்குப்போய் மீளவும் இத்தகைய கலக்கம் உண்டாகப்பெறாமல் நன்கு மனங்குதிரப் பெற்றிருப்பாயாக. அங்கு உன் பார்யைகளோடு கூடி என்றும் ஸுகமாக க்ரீடித்துக் கொண்

டிருப்பாயாக. ராமன் தன் பத்னியோடு அரண்யங்களில் க்ரீடித்துக் கொண்டிருப்பானுக' என்று மொழிந்தனன். மாரீசன் இவ்வாறு சொல்லுகையில் ராவணன் கேட்டு லங்கைக்குத் திரும்பிப்போய் உத்தமமான தன் க்ருஹத்திற்குள் ப்ரவேசித்தனன். முப்பத்தொன்றுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## சூர்ப்பணகை ராவணனிடம் போதல்.

அனந்தரம் சூர்ப்பணகை, ராமனொருவனே பயங்கரமான பராக்ரமமுடைய பதினாலாயிரம் ராக்ஷஸர்களையும் தூஷணனையும் கரனையும் த்ரிசிரனையும் கொன்றது கண்டு மீளவும் பெருங்கோஷம் உண்டாகும்படி மேகம் போல் கர்ஜித்தனள். ராமன் பிறர்க்குச் செய்ய முடியாதபடி நடத்தின பராக்ரமகார்யத்தைப் பார்த்து மிகவும் பயந்து, ராவணன் நாற்புறமும் கவர்ந்து பாதுகாத்து வருகிற லங்கைக்குப் போயினள். அங்ஙனஞ் சென்று புஷ்பக விமானத்தின் மேல், மந்த்ரிகள் அருகில் சூழ்ந்திருக்கப் பெற்றுத் தேவதைகளோடு கூடத் தேவேந்த்ரன்போல உட்கார்ந்திருக்கின்ற மஹாதேஜஸ்வியாகிய ராவணனைக் கண்டனள், அவன் ஸூர்யன்போல் ப்ரகாசிக்கின்ற ஸ்வர்ணமயமான மேலான ஸிம்ஹாஸனத்தில் உட்கார்ந்து ஸ்வர்ணத்தாலிழைக்கப்பட்ட யாக வேதிகையில் மிகவும் நெய் ஹோமஞ் செய்யப் பெற்று ஜ்வலிக்கின்ற அக்னிபோல் விளங்கினன், அவன் தேவதைகளுக்காவது கந்தர்வர்களுக்காவது பூதங்களுக்காவது மஹானுபாவர்களான ரிஷிகளுக்காவது யுத்தத்தில் ஜயிக்க முடியாதிருப்பவன்; சூரன்; வாய்திறந்த யமன் போன்றவன். அவனது சரீரம் தேவாஸுரயுத்தங்களில்

இந்த்ரனது வஜ்ராயுதத்தில் அடிபட்டுக் காய்காய்த் திருக்கும். மேலும், அவனது வக்ஷஸ்தலம் ஐராவதமென்கிற இந்த்ரனது யானையின் தந்தங்களால் குத்தப்பட்டு மேலான விரணங்களின் அடையாளங்களையுடையதாயிருக்கும். அவனுக்குப் புஜங்கள் இருபது; தலைகள் பத்து. சத்ரம் சாமரம் முதலிய அவனது பரிகரங்கள் பார்க்க அழகாயிருக்கும். மேலும், அவன் அகன்ற மார்புடையவன்; வீரன்; ராஜலக்ஷணங்கள் விளங்கப் பெற்றவன்; ஆபரணங்களில் இழைக்கப்பட்ட வைடூர்ய மணிகள் தளதளவென்று ப்ரகாசிக்கப் பெற்று மிகுந்த விளக்கமுற்றிருப்பான். உருக்கி அழுக்கெடுத்த சிறந்த பொன்னாற் செய்த குண்டலங்கள் அணிந்திருப்பவன்; உருண்டு நீண்டழகிய பாஹுதண்டங்களும் வெளுத்த பற்களும அகன்ற வாயும் விளங்கப்பெற்றவன்; பர்வதம் போன்றிருப்பான்; தேவதைகளோடு நேர்ந்த யுத்தங்களில் பல தடவைகள் விஷ்ணுவின் சக்ராயுதத்தால் அடிக்கப்பட்டவன். அன்றியே மற்றுமுள்ள மஹா யுத்தங்களில் வேறு ஆயுதங்களாலும் அடிக்கப்பட்டுத் தழும்பேறின மஹாவீரன். தேவதைகளுக்குள்ள ஸமஸ்த ஆயுதங்களாலும் அங்ஙனம் அடிக்கப்பட்டும் அவனுடைய அங்கங்களில் எதுவும் பழுதாகாமல் அவ்வடிகளால் காய் காய்த்து உறுதியுற்றிருக்கும். கலக்க முடியாத ஸமுத்ரங்களையும் கலக்கி விடவல்லவன். நினைத்த கார்யத்தை உடனே செய்து தீர்க்குந் தன்மையன். அவன் மேலான பர்வதங்களையும் பிடுங்கிப் போகட வல்லவன். தேவதைகளைப் பிடித்துக் கசக்கிப் பீடிக்குந் திறமையுடையவன்; தர்மங்களை வேரோடு பிடுங்குந் தன்மையன்; பரதாரங்களைப் பிடித்துத் தொந்தரவு செய்பவன்; ஸமஸ்த திவ்யாஸ்த்ரங்களையும் ப்ரயோகிக்க வல்லவன், எப்பொழுதும் பிறருடைய யாகங்களுக்கு விக்னஞ் செய்பவன். மேலும், அவன் போகவதியென்னும்

பட்டணத்திற்குச் சென்று வாஸுகியை வென்று தக்ஷ கனையும் ஜயித்து அவனுடைய ப்ரிய பார்யையை அபஹரித்தனன். கைலாஸ பர்வதத்திற்குச் சென்று குபேரனை வென்று நினைத்தபடியெல்லாம் போகுந்தன் மையுள்ள அவனுடைய புஷ்பக விமானத்தைப் பறித் துக்கொண்டு வந்தனன். அந்த மஹாவீரன் கோபங் கொண்டு குபேரனது உத்யானவனமாகிய சைத்ரரதத் தையும் அவனது [1] புஷ்கரிணியையும், இந்த்ரனுடைய நந்தன வனத்தையும் இதரதேவதைகளின் உத்யான வனங்களையும் நாசஞ்செய்தனன். பர்வத சிகரம்போன்ற அவன் மஹாபாக்யசாலிகளும் பகைவரைத் தபிக்கச் செய்யும் பராக்ரமசாலிகளுமாகிய சந்த்ர ஸூர்யர்கள் உதயமாகும்பொழுது அவர்களை இரண்டு கைகளாலும் தடுத்துவிட்டனன். தைர்யசாலியாகிய அவன் முன்பு மஹாவனத்தில் பதினாயிரம் ஸம்வத்ஸரங்கள் தவஞ் செய்து தன் தலைகளைத் தானே அறுத்துப் பூஜோப கரணமாகக்கொண்டு ப்ரஹ்மதேவனைப் பூஜித்தனன். அவனுக்கு மனுஷ்யன் ஒருவன் தவிர மற்றைத் தேவ கந்தர்வ பிசாச பதக உரகாதிகளால் யுத்தத்தில் மரண பயம் கிடையாது. அம்மஹாபலன் யாகங்களில் ப்ராஹ் மணர்களால் மந்த்ரங்களைச் சொல்லி ஸ்தோத்ரஞ் செய் யப்படுவதும் பரிசுத்தமுமாகிய ஸோமலதையை இடித் துப் பிழியுமிடமாகிய ஸோமாபிஷவசாலையிலுள்ள ஸோமரஸத்தை நாசஞ்செய்வான். அவன் யாகங்களெல் லாம் முடிந்து தக்ஷிணை கொடுக்கும் காலத்தில் அவற் றைக் கெடுப்பான். மேலும் அவன் மிக க்ரூரன், ப்ரஹ் மஹத்யை செய்பவன்; துஷ்ட ஆசாரமுடையவன்; தாக்ஷிண்யமற்றவன். ப்ரஜைகளுக்கு எப்பொழுதும் கெடுதி செய்வதிலேயே அவனுக்கு ப்ரீதி. அவன் ஸமஸ்த ப்ராணிகளையும் அழச்செய்பவன்; ஸமஸ்த லோகங்களுக்கும் பயத்தை விளைவித்துக் கொண்டி ருப்பான். இப்படி சூரனும் மஹாபலிஷ்டனுமாகிய

1. தாமரைக்குளம்.

தன்னுடன் பிறந்த ராவணனைச் சூர்பணகி கண்டனள். அங்ஙனம் திவ்யவஸ்த்ராபரணங்களைத் தரித்து திவ்யமான புஷ்பமாலைகளை அணிந்து திவ்யஸிம்ஹாஸனத்தில் ஸுகமாக உட்கார்ந்து, லோகஸம்ஹாரத்திற்கு முயன்ற ம்ருத்யுவைப்போல் பயங்கரனாகப் புலப்பட்டுக்கொண்டு மந்த்ரிகளால் சூழப்பட்டு விளக்கமுற்றுப் பௌலஸத்யவம்சத்திற்கு மனக்களிப்பை விளைக்கும் மஹாபாகனும் சத்ருக்களை அழியச் செய்பவனுமாகிய ராவணனிடஞ்சென்று ராக்ஷஸியாகிய அந்தச் சூர்ப்பணகை பயத்தினால் அவயவங்கள் முற்றும் விலவிலக்கப் பெற்று இங்ஙனம் கூறலாயினள். ஸமஸ்த புருஷர்களிடத்திலும் ஸமஸ்தலோகங்களிலும் பயமின்றித் திரியுந் தன்மையுடைய அந்தச் சூர்ப்பணகை அங்ஙனம் மஹானுபாவனாகிய லக்ஷ்மணனால் விரூபஞ்செய்யப்பட்டு வந்து எரிகின்ற அகன்ற கண்ணுடைய ராவணனைப் பார்த்து பயத்தாலும் மோஹத்தாலும் மூர்ச்சித்து மிகவும் பயங்கரமான வாக்யத்தை இங்ஙனஞ் சொல்லத் தொடங்கினள். முப்பத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

சூர்ப்பணகை ராவணன் வெறுமனே இருப்பதற்குச் சினந்து அவனை நிந்தித்தல்.

அனந்தரம் சூர்ப்பணகை விரூபஞ் செய்யப்பட்டவளாகையால் வருந்தி, மந்த்ரிகளின நடுவில் உலகங்களை அழச் செய்யுந்தன்மையனாகிய ராவணனைக் கண்டு மிகவும் கோபித்துப் பருஷ வாக்யத்துடன் இங்ஙனம் மொழிந்தனள்:—'நீ மதித்து எதிரில்லாமல் யதேச்சமாக மன்மதபோகங்களில் வீழ்ந்திருக்கின்றனை. இப்பொழுது உனக்கு மஹாபயம் உண்டாயிருக்கின்றதே! முக்யமாக நீயே இதைச்சாரபுருஷர்கள் மூலமாய்த் தெரிந்து

கொள்ளவேண்டியதாயிருந்தும் மதோன்மத்தனுயிருக்கையால் தெரிந்துகொள்ளாதிருக்கின்றனை. எப்பொழுதும் க்ராம்யபோகங்களில்தானே மனம் தாழப் பெற்றவனும் இஷ்டப்படி திரியுந்தன்மையனும் லோபமுடையவனுமாகிய ராஜனை ப்ரஜைகள் ஶ்மஶாநாக்னியைப்போல் பார்ப்பார்களேயன்றி எள்ளளவும் கௌரவிக்கமாட்டார்கள். எந்த அரசன் தகுந்த காலத்தில் தன் கார்யங்களைத்தானே செய்துகொள்ளானோ, அவன் அந்தக் கார்யங்களைப் பாழ் செய்துகொள்வது மாத்ரமேயன்றி ராஜ்யத்தையும் போக்கடித்துக்கொண்டு தானும் நசித்துப்போவான். ஜலப்ரவாஹமில்லாமையால் நீந்திப்போகக் கூடாததும் நடந்தால் அமிழ்த்தக்கூடியதும் அடி தெரியாததுமான ஆற்றின் சேற்றில், இழிவோமாயின் மூழ்கிவிடுவோமென்று பயந்து யானைகள் தூரத்திலேயே விட்டுப்போவதுபோல, ஸ்வராஜ்யபரராஜ்யங்களை அறியச் சாரர்களை அனுப்பாமல் தகுந்த காலங்களில் ப்ரஜைகளுக்குக் கொலுமண்டபத்தில் தர்சனம் கொடாமல் ஸ்த்ரீகளுக்கு உட்பட்டு ஸ்வபுத்தியின்றிப் பிறர்புத்திக்கு வசப்பட்ட ராஜனை ப்ரஜைகள், இப்படிப்பட்டவனோடு கலந்தோமாயின் நாமும் கெட்டுப்போவோமென்று தூரத்தில் விட்டுவிடுவார்கள். ஸ்த்ரீகளுக்குப் பரதந்த்ரர்களாகி நன்கு ராஜ்யரக்ஷணம் செய்யாத ராஜாக்கள் வ்ருத்தி அடைந்து கொண்டிருந்தபோதிலும் ஸமுத்ரத்தில் மூழ்கின பர்வதங்கள் போல் ப்ரகாசிக்கமாட்டார்கள். தேவ கந்தர்வ தானவர்கள் உன்னால் அவமதிக்கப் பட்டவர்களாகையால் உனக்கு ப்ரதீகாரஞ் செய்வதிலேயே ஊக்கமுடையராயிருக்கின்றனர். நீயோ, சாரர்களை அந்தந்த கார்யங்களுக்கு அனுப்பி ஸங்கதிகளைத் தெரிந்துகொள்ளாமல் விஷயாந்தரங்களில் மனம் தாழப் பெற்றிருக்கின்றனை.

இப்படிப்பட்ட நீ அப்படிப்பட்ட தேவாதிகளோடு விரோதத்தை ஏறிட்டுக்கொண்டு துரைத்தனத்தை எப்படி காப்பாற்றிக்கொள்ளப் போகின்றனை? ராக்ஷஸாதம! நீ பாலனைப்போன்ற ஸ்வபாவமுடையவன். ஆகையால் உனக்கு விவேகமில்லை. மேலும் புத்தி போராது. எதை முக்யமாகத் தெரிந்துகொள்ள வேண்டுமோ, அதையுங்கூடத் தெரிந்துகொள்ளாதிருக்கின்றனையே! நீ எப்படி ராஜாவாயிருக்கப்போகின்றனை. நீ ஜயசீலர்களில் மேலானவன்; ஆயினும் அதற்குத் தகுந்தபடி நடக்கவில்லை. எந்த ராஜாக்கள் சாரர்களையும் பொக்கசத்தையும் நீதியையும் தம் வசத்தில் ஏற்படுத்திக்கொள்ளாதிருப்பார்களோ, அவர்கள் ஸாதாரண ஜனங்களைப்போன்றவர்களே. ராஜாக்கள் சாரர்கள் மூலமாய் வெகு தூரத்தில் நடந்த விஷயங்களையெல்லாம் கண்டு கொள்வார்களாகையால் அவர்கள் தீர்க்கத்ருஷ்டிகளெனப்படுவார்கள். ஜனஸ்தானத்திலுள்ள உன்ஜனங்களெல்லாம் அடிப்பட்டதையுங்கூடத் தெரிந்துகொள்ளாதிருக்கின்றனையே! ஆகையால் சாரர்களையே வைத்துக்கொள்ளவில்லையென்றும் கேவலம் ஸாமான்யர்களான மந்த்ரிகளே உன்னைச் சுற்றிக்கொண்டிருக்கிறார்களென்றும் நினைக்கிறேன். கொடுந்தொழிலர்களான பதினாலாயிரம் ராக்ஷஸர்களும் கரதூஷணர்களும் ராமனொருவனாலேயே அடிக்கப்பட்டனர். இவ்வளவே அன்று; அனாயாஸமாகவே கார்யங்களைச் செய்யுந்திறமையுடைய ராமன் ரிஷிகளெல்லோர்க்கும் அபயங்கொடுத்தனன். ஜனஸ்தானம் முழுதையும் பாழாக்கித் தண்டகாரண்யத்தை யெல்லாம க்ஷேமமாகச் செய்தனன். ராவணா! சாராதிகளுக்கு விரும்பினபடி கொடாத லுப்தனாயிருக்கின்றனை; மனஅடக்கமின்றித் திரிகின்றனை; ஸ்த்ரீகளுக்கு அதீனமா




1400. சூர்ப்பணகை ராவணனிடம் சென்று முறையிடுதல்.

யிருக்கின்றனே. ஏனென்றால், உன்தேசத்திலேயே உண்டான பயத்தையுங்கூட நீ தெரிந்துகொள்ளாதிருக்கின்றனேயே! க்ரூரனும் எவ்வளவுகார்யஞ் செய்தபோதிலும் அற்பமாகக்கொடுப்பவனும் மனவூக்கமில்லாதவனும் கர்வமுற்றவனும் தெரியாமல் அப்ரியஞ்செய்பவனுமாகிய அரசனுக்கு ஆபத்து வந்தபொழுது மந்த்ரிப்ருத்யர்கள் முதலான ஸர்வப்ராணிகளும் ரக்ஷிக்க வரமாட்டார்கள். மிகவும் அஹங்காரங்கொண்டு ஸத்புருஷர்களுக்கு அணுகத்தகாதவனும் தன்னைத் தானே மேலாகப் புகழ்ந்துகொள்பவனும் தகாத இடத்தில் சொரசொரவென்று கோபமுறுபவனுமாகிய அரசனுக்கு ஆபத்து வந்தபோது, அவனுடைய ஜனங்களே அவனைக் கொல்வார்கள். எந்த அரசன் கார்யங்களை அந்தந்த காலங்களில் தவறாது செய்யாமல் பயம் வந்தபோதும் பயப்படாமல் ஜாக்ரதையின்றி இருப்பானே, அவன் சீக்ரத்தில் ராஜ்யங் கைசோரப்பெற்று மிடுக்கு தொலைந்து புற்களைப் போலிருப்பான். உலர்ந்த காஷ்டங்களாலும் மண்ணாங் கட்டிகளாலும் கடைசியாகத் தூசிகளாலும் ஏதாவது ஒரு கார்யம் ஆகக்கூடும்; அன்றிப் பதவியினின்று நழுவின ராஜாக்களால் எந்தக் கார்யமும் நடவாது. உடுத்துக் களைந்த வஸ்த்ரமும் சூடிக்களைந்த புஷ்பங்களும் எப்படி கார்யத்திற்கு உபயோகப்படாவோ, அப்படியே ராஜ்யங் கைசோரப்பெற்ற அரசன் எவ்வளவு ஸமர்த்தனாயினும் கார்யத்திற்கு வழங்கமாட்டான். எந்த அரசன் ஏமாறுதலின்றி எல்லாம் அறிந்து இந்த்ரியங்களை வென்று செய்த உபகாரத்தை மறவாமல் தர்மஸ்வபாவனுமாயிருப்பானே, அவன் வெகு காலம் ஸுகமாக ராஜ்யபரிபாலனம் பண்ணிக்கொண்டிருப்பான். எந்த அரசன் மாம்ஸநேத்ரங்

களை மூடி நித்ரை செய்வானாயினும் நீதியென்னும் நேத்ரத்தைத் திறந்து விழித்துக்கொண்டிருப்பானோ, மேலும் எவனுடைய கோபமாவது அனுக்ரஹமாவது மறைவாயிராமல் வெளியாயிருக்குமோ, அவன் ஜனங்களால் பூஜிக்கப்பட்டிருப்பான். ராவணா! நீயோ என்றால், ஜனஸ்தானத்தில் ராக்ஷஸர்களெல்லோரும் அடியோடு வதிக்கப்பட்டதைச் சாரர்களால் இதுவரையிலும் அறியாதிருக்கின்றனை; ஆகையால் துர்ப்புத்தியாகிய உனக்கு இப்பொழுது சொல்லப்பட்ட ராஜயோக்யமான குணங்கள் எவையும் இல்லை. நீ பகைவரை உபேக்ஷித்திருப்பவன்; பிறரை அவமானஞ் செய்பவன்; விஷய போகங்களில் மனஞ்செல்லப் பெற்றவன்; அந்தந்த தேச பேதங்களையும் காலவிசேஷங்களையும் உள்ளபடி அறியாதவன்; குணதோஷங்களை நிச்சயிப்பதற்காகப் புத்தியை உபயோகப்படுத்துபவனல்லன். ஆகையால் நீ சீக்ரமாக ராஜ்யத்தைப் போக்கடித்துக் கொண்டு ஆபத்தில் விழப்போகின்றனை' என்றனள். தனமும் கொழுப்பும் பலமு முடையவனும் ராக்ஷஸர் தலைவனுமாகிய அந்த ராவணன் இங்ஙனம் சூர்ப்பணகை எடுத்து விவரித்துச் சொன்ன தன் தோஷங்களையெல்லாம் தன் புத்தியால் ஆராய்ந்து பார்த்துக்கொண்டு வெகுநேரம் ஆலோசித்தனன். முப்பத்துமூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

சூர்ப்பணகை ராவணனோடு ராமலக்ஷ்மணர்களின் ரூபஸௌந்தர்ய பராக்ரமங்களைச் சொல்லி ஸீதையின் ஸௌந்தர்யாதிசயத்தையும் வர்ணித்து அவளை அபஹரிக்கத் தூண்டுதல்.

பிறகு ராவணன் கராதிகளின் வதத்தைக் கேட்டு மிகவும் கோபித்து, தன்னுடன் கோபத்தோடு பருஷ

மாகச் சொல்லுகின்ற சூர்ப்பணகையைப் பார்த்து மந்த்ரிகளின் இடையில் விரிவாக வினவத் தொடங்கி, 'ராமனென்பவன் எவன்? அவனது வீர்யம் எப்படிப்பட்டது? அவனது உருவம் எத்தகையது? அவனுடைய பராக்ரமம் எவ்வாறிருக்கும்? எவர்க்கும் எவ்விதத்திலும் புகக் கூடாத தண்டகாரண்யத்திற்கு அவன் ஏன் வந்தனன்? மேலும், ராமனுடைய ஆயுதம் யாது? எப்படிப்பட்டது? அவன் யுத்தத்தில் எதை ஆயுதமாகக்கொண்டு ராக்ஷஸர்களையும் அப்படியே கரதூஷண த்ரிசிரர்களையும வதித்தான்?' என்றனன். ராக்ஷஸ ப்ரபுவான ராவணன் இவ்வாறு வினவுகையில் ராக்ஷஸி கோபம் மீதூரப் பெற்று, உடனே ராமனை உள்ளபடி சொல்லத் தொடங்கி, ராவணனைப்பார்த்து, 'தசரத குமாரனாகிய ராமன் நீண்ட புஜதண்டங்களை யுடையவன். அவன் கண்கள் விசாலமாகி மிகவும் அழகாயிருக்கும். அவன் மரவுரியையும் க்ருஷ்ணாஜினத்தையும் உடுத்திருப்பான். அவனது உருவம் மன்மதனைப்போலிருக்கும். அந்த ராமன் பொன்கட்டுகள் கட்டப்பெற்று இந்த்ரதனுஸ்ஸுபோல் விளங்குகின்ற வில்லை இழுத்து மஹா விஷமுடைய ஸர்ப்பங்கள் போன்ற பாணங்களைத் தொடுத்து விடுவான். யுத்தத்தில் ராமன் பயங்கரமான பாணங்களை எடுப்பதாவது தொடுப்பதாவது தொடுத்துவிடுவதாவது வில்லை இழுப்பதாவது ஒன்றும் எனக்குப் புலப்படவில்லை. ஆனல் இந்த்ரன் பெய்கிற கல் மழைகளால் முதிர்ந்த பயிர் அடிபட்டுச் சாய்வதுபோல், ராமனது பாணவர்ஷங்களால் அந்த ஸைன்யம் முழுவதும் வதிக்கப்பட்டுக் கீழ் விழுவது மாத்ரமே எனக்குப் புலப்பட்டுக் கொண்டிருந்தது. காலாளாகிய அந்த ராமனொருவனே ஒன்றரை முஹூர்த்தத்தில் தீக்ஷ்ணபாணங்களால் பயங்கரமான உருவமுடைய பதினாலாயிரம் ராக்ஷஸர்களையும் தூஷணனையும் கரனையுங் கூட வதித்து விட்ட

னன். இவ்வளவு மாத்ரமேயன்று. அவன் ரிஷிகளுக்கு அபயங்கொடுத்தனன்; தண்டகாரண்யத்தை க்ஷேமமாகச் செய்தனன். அம்மஹானுபாவன் ஆத்ம ஸ்வரூபமுணர்ந்தவனாகையால் ஸ்த்ரீவதமாகுமே யென்று சங்கித்து என்னொருத்தியை மாத்ரம் அவமானித்து விடுகையில், நான் எப்படியோ கஷ்டப்பட்டுத் தப்புவித்துக் கொண்டு வந்தனன். அந்த ராமனுக்கு லக்ஷ்மணனென்று ஓர் தம்பி இருக்கின்றனன். அவன் மிக்க தேஜஸ்ஸுடையவன்; குணங்களிலும் பராக்ரமத்திலும் ராமனைப்போன்றவன். அவன் தமையனிடத்தில் மிகுந்த அனுராகமுடையவனாகி அவனை எப்போதும் விட்டுப் பிரியாது அனுவர்த்தித்தே இருப்பான். அவன் மிகுந்த வீர்யமும் அளவில்லாத கோபமும் உடையவன்; பகைவருக்கு வெல்ல முடியாதவன்; எப்படிப்பட்டவனையும் வெல்லுந் திறமையுடையவன்; மஹா பராக்ரமசாலி; மிகுந்த புத்தியும் பலமுமுடையவன்; ராமனுக்கு வலக்கைபோன்றவன்; என்றும் ராமனுக்கு வெளியில் திரியும் ப்ராணன்போலிருப்பவன். ராமனுக்கு ப்ரீதிக்கிடமான தர்மபத்னி ஒருத்தி உண்டு. அவள் அகன்றழகிய கண்ணுடையவள். அவளுடைய முகம் பூர்ணசந்த்ரன் போல் ப்ரகாசித்துக் கொண்டிருக்கும். அவள் எப்போதும் கணவனுக்கு ப்ரியத்தையும் ஹிதத்தையுமே செய்யுந்தன்மையள். அந்தச் சிறுக்கி அழகிய தலைமயிர்களும் அழகான மூக்கும் அழகான துடைகளும் விளங்கப் பெற்றுச் சிறந்த ஸௌந்தர்யம் பொருந்தி மிக்க புகழ் அமைந்து 'இவள் இந்தத் தண்டகாரண்யத்து வனதேவதையோ? இரண்டாவது லக்ஷ்மியோ?' என்னும்படி ப்ரகாசிக்கின்றனள். அந்தப் பெண்மணி உருக்கின பொன் வர்ணம் போன்ற மேனியின் வர்ணமுடையவள்.

அவளது நகங்கள்சிவந்து உயர்ந்திருக்கும். அம்மாதரசி அழகிய பின்புறமும் நுண்ணிடையு முடையவள். அவள் சுபலக்ஷணங்களெல்லாம் அமைந்தவள். அப்பெண்மணி ஸீதையென்னும் பேருடையவள். அவள் விதேஹராஜன் புதல்வி. நான் அவளைப்போன்ற ஸொந்தர்யமுடைய தேவ தாஸ்த்ரீயையாவது கந்தர்வ ஸ்த்ரீயையாவது யக்ஷ ஸ்த்ரீயையாவது கின்னர ஸ்த்ரீயையாவது பார்த்த தில்லை. அன்றியே பூமியிலும் இப்படிப்பட்ட அழகு டைய பெண்மணியை இதுவரையில் நான் பார்த்ததில்லை. அந்த ஸீதை ஆலிங்கனம் பண்ணிக் கொள்ளாமற் போ யினும், எவனுக்கு வெறுமனே பார்யையா யிருப்பாளோ, அவன் ஸமஸ்த லோகங்களையும் விஞ்சின பரமஸுக ஜீவனத்தைப் பெறுவான். பார்யை ஆகாமற்போயினும் எவனை ஒரு தடவையாவது ஆலிங்கனஞ் செய்து கொள் வாளோ, அவன் தேவேந்த்ரனைக் காட்டிலும் மேலாக ஜீவித்து விளங்குவான், அவள் சிறந்த சீல முடையவள். அவளது மேனியை என்னவென்று புகழப் போகிறேன். ஆயிரம் படச்சொல்லியென்? அவளைப்போன்ற அழகி பூலோகத்திலெங்குமே இல்லை. அவள் உனக்குத்தகுந்த பார்யையாயிருப்பாள். அப்படியே நீயும் அவளுக்குத் தகுந்த கணவனாயிருப்பாய். அகன்ற இடையின் முன்புற மும் பருத்த இடையின் பின்புறமும் பருத்தழகிய ஸ்தனங்களும் விளங்கப்பெற்றுச் சிறந்த முகமும் பொ ருந்தின அந்த மாதரசியை உனக்குப் பார்யையாகக் கொண்டு வரலாமென்று அவ்விடம் ப்ரயத்னித்தனன். நீண்ட புஜமுடையவனே! நான் அங்ஙனம் ப்ரயத்னிக் கையில், கொடியனாகிய லக்ஷ்மணன் என்னை இப்படி விரூபமாக்கினன். நீ, பூர்ணசந்த்ரன் போன்ற முக முடைய அந்த ஸீதையை இப்பொழுது பார்ப்பாயாயின்,

தத்க்ஷணமே மன்மதபாணங்களுக்கு வசப்பட்டவனாவாய். உனக்கு அந்த ஸீதை பார்யை ஆகவேண்டுமென்னும் விருப்பம் உளதாயின், இப்பொழுதே சீக்ரமாக ராம லக்ஷ்மணர்களை ஜயிக்கும்பொருட்டு வலக்காலை முன்னெடுத்து வைப்பாயாக. ராக்ஷஸர் தலைவனே![1] காதுகனாகி ஆஶ்ரமங்களைக் காத்துக் கொண்டிருக்கிற ராமனைக் கொன்று, அதனால் அவன் கொன்ற ராக்ஷஸர்கள் அனைவர்க்கும் ப்ரியம் செய்வாயாக. அந்த ராமனையும் மஹாரதனாகிய லக்ஷ்மணனையும் கூரான பாணங்களால் வதிப்பாயாயின், அப்பொழுது ஸீதை நாதன் சாகையில், திக்கற்றுப் போவாளாகையால் அவளை ஸுகமாகக் கைப்பற்றி உள்ளபடி போகங்களை அனுபவிப்பாய். ராக்ஷஸர் தலைவனே! ராவணா! நான் இப்பொழுது சொல்லும் வார்த்தை உனக்கு இஷ்டமாயிருக்குமாயின், நான் சொன்னதைச் சங்கையின்றிச் செய்து நிறைவேற்றுவாயாக. ராக்ஷஸாதிபனே! உனக்குள்ள பலத்தையும் ஆலோசித்து எந்த அவயவத்திலும் சிறிதும் தோஷமில்லாத அழகுடைய அந்த ஸீதையைப் பார்யையாகப் பலாத்காரஞ்செய்து கொண்டு வருவாயாக. ராமன் பாணங்களை நேர்மையாகப் பாயும்படி தொடுத்து விடுத்து ஜனஸ்தானத்திலுள்ள ராக்ஷஸர்களெல்லோரையும் கொன்றது கேட்டும் கரனையும் தூஷணனையும் வதித்தது தெரிந்தும் இனி இவ்விஷயத்தில் செய்ய வேண்டியது இதுவென்று நிச்சயிக்கத் தக்கவனாயிருக்கின்றனை' என்றனள். முப்பத்து நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ராவணன் மீளவும் மாரீசனிடம் போதல்.

அனந்தரம் அந்த ராவணன் சூர்ப்பணகை மயிர்க்கூச்சலுண்டாகும்படி உரைத்த வார்த்தையைக்கேட்டு,

---

1. காதுகன் - ஹிம்ஸிக்குந்தன்மையன்.

மந்த்ரிகள் மூலமாக ராஜகார்யங்களைத் தெரிந்து கொண்டு அவர்களிடம் அனுமதியும் பெற்று மேல் ஸீதையைக் கொண்டு வருகிறதற்குச் செய்ய வேண்டிய கார்யத்தையும் நிச்சயித்துக்கொண்டு அந்தப்புரத்திற் குப் போயினன். ராவணன் ஏகாந்தத்தில் ஸீதையை அபஹரிப்பதைப்பற்றித் தானே ஆலோசித்து இப்படி செய்ய வேண்டுமென்று முதலில் நிச்சயித்து உடனே அதை ரூடமாக்கும்பொருட்டு அதை நிறைவேற்றும் வழிகளில் எதில் தோஷம் இல்லை, எதில் குணம் அதிக மென்று அவற்றின் தோஷகுணங்களின் பலாபலத்தை விமர்ஶித்துக் கடைசியில் இப்படி செய்யவேண்டுமென்று மனத்தில் நிச்சயம் செய்துகொண்டு அந்தப் புத்தியி னின்றும் சலியாமல் அங்கிருந்து அழகியதான அஶ்வ சாலைக்குப் போயினன். அந்த ராக்ஷஸவீரன் தான் செய்யுங் கார்யம் மந்தோதரி மந்த்ரிகள் முதலானவர்க் குத் தெரியுமாயின், அவர்கள் தடுப்பார்களென்று எவர்க்கும் தெரியாதிருக்கும்படி மறைந்துகொண்டே அஶ்வசாலைக்குச் சென்று ஸாரதியைப் பார்த்து 'ரதம் ஸித்தப்படுத்துவாய்' என்று ஆஜ்ஞாபித்தனன். இங்ங னம் சொல்லுகையில், அந்த ஸாரதி சீக்ரமாகச் சென்று ஒரு நொடிப்பொழுதில் ராவணனுக்கு ஸம்மதமான உத்தம ரதத்தைப் பூட்டிக்கொண்டு வந்தனன். குபேர னுடைய தம்பியாகிய அந்த ராக்ஷஸேஸ்வரன் செல்வப் பெருக்குடையவனுகையால் இஷ்டப்படி செல்வதும் ரத்னங்களால் பூஷிக்கப்பட்டதும் ஸ்வர்ணத்தால் அலங் காரஞ் செய்யப்பெற்றதுமாகிப் பிசாசமுகமுடையவை களும் பொன்னுற்செய்த பூஷணங்களை அணிந்தவைகளு மான கழுதைகள் பூட்டப்பெற்றதுமாகிய ரதத்தில் ஏறிக்கொண்டு மேகம்போல் கம்பீரமாக த்வனிசெய் கின்ற அந்த ரதத்தின் வழியாகவே நத நதிகளுக்குப் பதியாகிய ஸமுத்ரத்தின் அருகில் சென்றனன். தேவ தைகளுக்குச் சத்ருவும் முனிமன்னவர்களை வருத்

துபவனும் வெளுத்த வெண்சாமரமும் வெளுத்த கொற்றக்குடையும் விளங்கப் பெற்று நிகுநிகென்ற வைடூர்ய மணியின் ஒளி போன்ற ஒளியுடையவனும் உருக்கி அழுக்கெடுத்துச் சிறந்த பொன்னாற்செய்த குண்டலங்களும் இப்படி அழகான சாமரம் முதலி உபகரணங்களும் இருபது கைகளும் பத்துத் தலைகளு முடையவனும் ராக்ஷஸர் தலைவனுமாகிய அந்த ராவணன் பத்துச்சிகரங்களையுடைய பர்வதராஜம்போல் ப்ரகாசித்துக்கொண்டிருந்தனன். ஸ்வர்ண பூஷணங்களை அணிந்த அந்த ராவணன், அலங்காரஞ் செய்யப்பெற்றதும் நினைத்தபடி செல்லவல்லதுமாகிய ரதத்தில் ஏறிக் கொண்டு, அழியாத மின்வட்டங்களுடையதும் [1] பலாகைகள் சூழப்பெற்றதுமாகிய மேகம்போல் மிகவும் ப்ரகாசித்தனன். அவ்வீரன் பர்வதங்கள் பல நிரம்பியதும் நானாவகைப் புஷ்பங்களும் காய்களும் அமைந்த அனேகமாயிரம் வ்ருக்ஷங்கள் நிறைந்ததுமாகிய ஸமுத்ரதீரத்தைப் பார்த்துக்கொண்டே சென்றனன். அதன் கரையில் நாற்புறமும் குளிர்ந்த நல்ல ஜலமுள்ள தாமரைக்குளங்களும் விசாலமான யாகவேதிகைகளுடன் விளங்குகின்ற ஆஶ்ரமங்களும் அமைந்திருந்தன. மேலும், வாழைமரங்களும் துவரைச்செடிகளும் நிறைந்திருந்தன; தென்னைமரங்கள் பலவும் ப்ரகாசித்தன; ஆச்சாமரங்களும் பனைமரங்களும் பச்சிலைமரங்களும் மற்றும் பல வ்ருக்ஷங்களும் நன்கு புஷ்பித்து விளங்கிக் கொண்டிருந்தன. அனேகமாயிரம் நாகர்களும் கருடர்களும் கந்தர்வர்களும் கின்னரர்களும் அயோனிஜர்களான வைகானஸர்களும் மாஷகேத்ரத்தில் பிறந்தவர்களும் சந்த்ர ஸூர்ய கிரணங்களையே ஆஹாரமாகக் கொள்ளுகிற வாலகில்யர்களும் மிக நியதாஹாரர்களான பரமரிஷிகளும் அங்கு விளக்கமுற்றிருந்தனர். காமத்தை

1. நாரைகள் - கொக்குகளென்றுஞ் சொல்வார்கள்.

வென்ற ஸித்தர்களும் சாரணர்களும் அங்கு அழகாகப் புலப்பட்டனர். திவ்யமான ஆபரணங்களும் புஷ்பமாலைகளும் தரித்து திவ்யமான உருவங்கள் அமைந்து பல வகை விளையாட்டுக்களில் தேர்ந்த அப்ஸரஸ்த்ரீகள் பலவாயிரம்பேர் அந்த ஸமுத்ரக் கரையில் புலப்பட்டனர், செல்வப்பெருக்குடைய தேவபத்னிகளும் அங்கு நடையாடிக் கொண்டிருந்தனர். ஆகையால் அது மிகவும் அழகாயிருந்தது. அங்கு அம்ருதபானஞ் செய்த தேவதைகளும் மற்றுமுள்ள தேவ தானவர்களும் குவியல்கூடியிருந்தனர். மேலும் அங்கு ஹம்ஸங்களும் க்ரௌஞ்சங்களும் நீர்க்கோழிகளும் நிரைந்திருந்தன. ஸாரஸபக்ஷிகள் கலகலவென்று கூவிக்கொண்டிருந்தன. அங்கு வைடூர்ய ரத்னங்கள் பலவும் இனிதாகப் புலப்பட்டுக்கொண்டிருந்தன. மேலும், அது ரமணீயமாகி ஸமுத்ரசோபையால் மேன்மேலும் அழகாகப் புலப்பட்டது. அந்தக் குபேரனுடைய தம்பி, இங்ஙனம் அந்த ஸமுத்ரக்கரையில் இவைகளையெல்லாம் பார்த்துக்கொண்டே சென்று மார்க்கத்தில் வெளுத்தவைகளும் விசாலமாயிருப்பவைகளும் புஷ்பமாலைகளால் அலங்கரிக்கப்பட்டவைகளும் வாத்யத்வனிகளும் கீதத்வனிகளும் முழங்கப்பெற்றவைகளும் இஷ்டப்படி நடக்கும் வல்லமை யமைந்தவைகளும் தவமஹிமையால் திவ்ய லோகங்களை வென்ற புருஷர்கள் ஏறப்பெற்றவைகளுமான விமானங்களைக் கடந்து சென்று க்தர்வர்களையும் அப்ஸரஸ்த்ரீகளையும் கண்டனன். [1] நிர்யாஸங்களைப் பெருக்குகின்ற மூலமென்னும் ஓஷதிகளும் சந்தன வ்ருக்ஷங்களும் அளவற்று நிறைந்து ஸுந்தரமாகி க்ரா

---

1. வ்ருக்ஷங்களில் பெருகும் ஓர்வித நீர். இதைப் பிசினென்றும் கோந்தென்றும் சொல்வார்கள்.

ணேந்த்ரியத்திற்கு த்ருப்தியை விளைக்கின்ற வாஸனை பொருந்திய வனங்களையும் மேலான அகருவ்ருக்ஷங்கள் நிறைந்த வனங்களையும் தக்கோலவனங்களையும் மிகுந்த வாஸனையுடைய ஜாதிக்காய் வனங்களையும் உத்யானவனங்களையும் தமால வ்ருக்ஷங்களின் புஷ்பங்களையும் மிளகுக்கொடிப்புதர்களையும் கரையில் தெறித்து உலருகின்ற முத்துக்குவியல்களையும் நாற்புறமும் நிரம்பிக்கிடக்கிற சங்குக்கூட்டங்களையும் பவழங்களின் ராசிகளையும் ஸ்வர்ணமய பர்வதங்களையும் எங்கும் நிரம்பிய வெள்ளிமலைகளையும் அழகான மலையருவிகளையும் தெளிவான நீர்நிரம்பிய மடுக்களையும் பார்த்துக்கொண்டே சென்றனன். மேலும் தனதான்யங்கள் நிறைந்தவைகளும் உத்தமஸ்த்ரீகளோடு கூடினவைகளும் ரதகஜதுரகங்கள் நிரம்பப் பெற்றவைகளுமான நகரங்களையும் அவன் பார்த்துக்கொண்டே சென்றனன். மேடுபள்ளமின்றி முழுவதும் ரமணீயமாகிக் குளிர்ந்த காற்று வீசப்பெற்று ஸ்வர்க்கம்போல் மிகவும் அழகாயிருக்கின்ற ஸமுத்ரக்கரையைப் பார்த்துக்கொண்டே சென்றனன். அங்கு அவன் மேகம்போல் புலப்படுகின்ற ஓர் ஆலமரத்தைக் கண்டனன். அம்மரத்தில் ரிஷிகள் நாற்புறத்திலும் நிரம்பப் புலப்பட்டனர். அதன் கிளைகள் நாற்புறமும் நூறு யோஜனைதூரம் நீண்டிருந்தன. அவை மிகவும் ப்ரஸித்தமானவை. முன்பு மஹாபலிஷ்டனாகிய கருடன் பெருஞ்சரீரமுடைய ஒரு யானையையும் ஆமையையும் எடுத்துக்கொண்டு அவைகளைத் தின்பதற்காக அம்மரத்தின் கிளைக்கு வந்தனன். மஹாபலனாகிய அந்தப்பக்ஷிராஜன் தன் பாரத்தினால் அம்மரத்தின் கிளையைத் திடீலென முறித்தனன். அந்தக் கிளையின்கீழ் சந்த்ரஸூர்ய கிரணங்களைப் பானஞ் செய்பவரும் புகையைப் பருகுபவர்களும் அயோனிஜர்களு

மாகிய வைகானஸர்களும் வாலகில்யர்களும் மாஷரென்னும் மஹர்ஷிகளும் தவஞ்செலுத்திக்கொண்டிருந்தனர். கருடன் அந்தக்கிளை பூமியில் விழுமாயின் ரிஷிகள் மாண்டுபோவார்களென்று நினைத்து அவர்களிடத்திலுள்ள கௌரவத்தினால் அவர்களைக் காக்கும்பொருட்டு நூறுயோஜனதூரம் நீண்ட அந்தக் கிளையையும் [1] கஜகச்சபங்ககளிரண்டையும் எடுத்துக்கொண்டு வேகமாகப் போயினன். அந்தக் கருடன் தர்மஸ்வரூபனாகையால் ஒருகாலால் பிடித்துக்கொண்டு அந்த ஆஹாரங்களைத்தின்று பிறகு அந்தக்கிளையை வேடச் சேரியின்மேல் போகட்டு அதைப்பாழாக்கி அங்குள்ள வேடர்களையும் பக்ஷித்து அம்மஹாமுனிவர்களை விடுவித்து மிகுந்த ஸந்தோஷம் பெற்றனன். அந்தக் கருடன் மிகுந்த புத்தியுடையவனாகையால் இங்ஙனம் நடத்தி அந்த ஸந்தோஷத்தின் மிகுதியால் பராக்ரமம் இருமடங்காகப் பெருகிவரப்பெற்று அம்ருதங்கொண்டுவர நினைவுற்றனன். அவன் இருப்புவலைகளை முறித்து ரத்னமயமான க்ருஹத்தைப் பேதித்து மஹேந்த்ரபவனத்தில் பத்ரமாக ரக்ஷிக்கப்பட்ட அம்ருதத்தைக் கொண்டு வந்தனன். மஹர்ஷிக்கூட்டங்கள் ஓயாது வாஸஞ்செய்யவும் கருடன் கிளையொடித்த அடையாளம் விளங்கவும் பெற்று ஸுபத்ரமென்னும் பேர்கொண்டு விளங்குகின்ற அந்த ஆலமரத்தைக் குபேரனுக்குத் தம்பியாகிய ராவணன் கண்டனன். அவன் அங்ஙனம் ஸமுத்ரத்தின் அக்கரையைச் சேர்ந்து அங்கு ஏகாந்தத்தில் அதிரமணீயமாகிப் பரிசுத்தமாயிருக்கின்ற அரண்யத்தினிடையில் ஓர் ஆஶ்ரமத்தைக் கண்டனன்; அதில் க்ருஷ்ணாஜினத்தையும் ஜடைகளையும் மரவுரியையும் தரித்து ஆஹாரநியதியுடன் வஸிக்கின்ற மாரீசனென்னும் ராக்ஷஸனைக் கண்டனன். ராக்ஷஸராஜனாகிய அந்த ராவணன் அம்மாரீசனிடம் போகையில், அவனும் விதிப்படி மனிதர்

1. கஜகச்சபங்கள் - யானை ஆமைகள்.

களுக்குக் கிடைக்காத ஸமஸ்த போக்யபதார்த்தங்களால் அந்த ராவணனைப் பூஜித்தனன். அவன் அந்த ராவணனுக்கு அங்ஙனம் அர்க்யங்கொடுத்து ஆஹாரமிட்டு அவனோடு மிக்க பொருளடக்கத்துடன் 'ராஜனே! ராக்ஷஸர் தலைவனே! லங்கையில் எல்லோர்க்கும் ஒருவிதத்திலும் குறையின்றி க்ஷேமமேயன்றோ! நீயே மறுபடியும் எந்த ப்ரயோஜனத்தைக் குறித்து இங்ஙனம் தனியனாகி வேகத்துடன் இவ்விடம் வந்தனை?" என்று வினவினன். மாரீசன் இவ்வாறு வினவுகையில், மிக்க தேஜஸ்ஸுடன் பேசுவதில் தனக்குள்ள வல்லமைதோற்ற ராவணன் அவனைப்பார்த்து உடனே இவ்வாக்யத்தைச் சொல்லத்தொடங்கினன். முப்பத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராவணன் மாரீசனுக்கு ஜனஸ்தான வ்ருத்தாந்தத்தைச் சொல்லி ஸீதையை அபஹரிப்பதற்காக விசித்ர ம்ருக ரூபந் தரித்துத் தனக்கு ஸஹாயமாயிருக்க வேண்டுதல்.

'அப்பா! மாரீசனே! நான் சொல்லுகிற வார்த்தையைப் பாராட்டிக் கேட்பாயாக. நான் மிகவும் வருத்தமுற்றிருக்கின்றனன். அங்ஙனம் வருந்தியிருக்கின்ற எனக்கு நீயே பெருங்கதியாயிருக்கின்றனை. என் தம்பிகானும் மஹாபுஜனாகிய தூஷணனும் என்னுடன் பிறந்தவளாகிய சூர்ப்பணகையும் மஹாதேஜஸ்வியும் மாம்ஸாஹாரனுமாகிய த்ரிசிரனென்னும் ராக்ஷஸனும் மேலும் சூரர்களும் யுத்தத்தில் குறிதவறாதவர்களுமான மற்றுமுள்ள ராக்ஷஸர் பலரும் எனது ஆஜ்ஞையால் [1] மஹாரண்யமாகிய தண்டகாரண்யத்தில் தர்மானுஷ்டானஞ் செய்கின்ற முனிவர்களைப் பீடித்

1. மஹாரண்யம் - பெருங்காடு.

துக்கொண்டு ஜனஸ்தானத்தில் இடைவீடின்றி மனக் களிப்புடன் காத்துக்கொண்டு நித்யவாஸஞ் செய்கிறுர்களென்பது உனக்குத் தெரிந்தேயிருக்கின்றது. பயங்கரமான செயலுடையவர்களும் க்ரூரர்களும் யுத்தத்தில் குறிதவருமல் பதைக்கின்றவர்களும் கரனது மனத்தை அனுவர்த்தித்து அவன் கீழ்ப்படிந்தவர்களுமான ராக்ஷஸர்கள் பதினுலாயிரம்பேர் அங்கு வாஸஞ் செய்கிறுர்களல்லவா? ஜனஸ்தானத்தில் இப்பொழுது வாஸஞ்செய்கின்ற மஹாபலிஷ்டர்களாகிய கரன் முதலான ராக்ஷஸர்கள் நானுவித ஆயுதங்களைக் கொண்டு மிக்கவூக்கத்துடன் ப்ரயத்னித்து ராமனேடு யுத்தத்திற்குப் போயினர். அதற்கு ராமன் கோபாவேசங்கொண்டு சிறிதும் பருஷமாகப் பேசாமல் கம்பீரமாயிருந்து வில்லில் பாணங்களைத் தொடுத்தும் எய்தும் வில்வித்யையெல்லாம் காட்டினன். காலாளாகிய அந்தக் கேவல மனுஷ்யனெருவனே கொடிய ப்ரதாபமுடைய பதினுலாயிரம் ராக்ஷஸர்களையும் கூரான பாணங்களை எய்து வதித்து விட்டனன்; யுத்தத்தில் கரனையும் அடித்தனன். தூஷணனையும் அடித்தனன். த்ரிசிரனையும் அடித்தனன். தண்டகாரண்யம் இப்பொழுது பயமற்றதாகச் செய்யப்பட்டது. தந்தை கோபித்துத் துரத்துகையில் பார்யையை அழைத்துக்கொண்டு அரண்யத்திற்கு வந்த க்ஷத்ரியாதமனுகிய ராமன் ஆயுள் க்ஷீணிக்கப்பெற்று அந்த ஸைன்யத்தை ஹதஞ்செய்தனன். அந்த ராமன் கெடுநடத்தையுடையவன்; கடோரமான ஹ்ருதயமுடையவன்; க்ரூரன்; மூர்க்கன்; லோபமுடையவன்; இந்த்ரியங்களை வெல்லாதவன்; தர்மத்தை விட்டவன்; அதர்மத்தில் மனஞ்செல்லப் பெற்றவன். ப்ராணிகளுக்குக் கெடுதிசெய்வதில் ஆஸக்தியுடையவன். எவன் வைரமின்றித் தர்மத்தையுங்கூட நினையாமல் கேவலம் தன் பலத்தையே அவலம்பித்து

அரண்யத்தில் என்னுடன் பிறந்தவளைக் காதையும் மூக்கையும் அறுத்து விரூபஞ்செய்தானே, அப்படிபட்டவனது பத்னியாகிய தேவகன்னிகைபோன்ற ஸீதையை ஜனஸ்தானத்தினின்றும் பலாத்காரமாகக்கொணடுவரப் போகிறேன். நீ மிகுந்த பலமுடையவன்; ஆகையால் நீயும் என் தம்பிகளும் ஸஹாயமாகி என்பக்கத்திலிருக்கையில் நான் யுத்தத்தில் தேவதைகள் அனைவரும் ஒன்று கூடி வந்தபோதிலும் பொருள் செய்யமாட்டேனல்லவா? ஆகையால், ராக்ஷஸனே! எனக்கு நீ ஸஹாயமாயிருக்க வேண்டும். நீ மிகவும் ஸமர்த்தனன்றே? வீர்யத்திலும் யுத்தத்திலும் செருக்கிலும் உனக்கு ஒப்பானவன் ஒருவனும் இல்லை. உனக்கு எல்லா உபாயங்களுந் தெரியும். நீ மஹாசூரன். நீ ஸமஸ்தமாயைகளிலும் தேர்ந்தவன். மாரீசனே! இதற்காகவே நான் உன்னிடம் வந்தனன். எனக்கு நீ ஸஹாயமாயிருந்து எந்தக் கார்யம் செய்யவேண்டுமோ அதைச் சொல்லுகிறேன்; கேள். நீ வெள்ளிப்புள்ளிகளோடு அற்புதமான வர்ணங்கள் அமைந்த ஓர் பொன்மானுருவந் தரித்து அந்த ராமாஶ்ரமத்திற்குச் சென்று ஸீதையின் முன்னிலையில் திரிய வேண்டும். ஸீதை பொன்மானுருவம் தரித்த உன்னைப் பார்த்தவுடனே 'இதைப் பிடித்துக்கொடுப்பாயாக' என்று தன் பர்த்தாவோடும் லக்ஷ்மணனோடும் தப்பாமல் சொல்லுவாள். அனந்தரம் அவ்விருவரும் புறப்பட்டுப்போகையில் மற்றொருவரும் அங்கில்லாமல் அவ்விடம் சூன்யமாயிருக்கும். அப்பொழுது யாதொரு தடையுமின்றி ஸுகமாக, ராஹு சந்த்ரனது ஒளியைப் பறிப்பதுபோல், ஸீதையைப் பறித்துக்கொண்டுவருகிறேன். அதன்பிறகு ராமன் பார்யையைப் பறிகொடுத்தமையால் வருந்தி இளைத்துப் போகையில், அவன் யுத்தத்

திற்கு வரமாட்டான்; வந்தபோதிலும் பயம் இல்லை. நான் ப்ரயோஜனம் கைகூடப்பெற்று மனக்களிப்புற்று அதனால் பலம் வளரப்பெற்றிருப்பேனாகையால் ஸந்தேஹமில்லாமல் துர்ப்பலனாகிய அவனைக் கொன்றுவிடுவேன்' என்றனன். ராமனைக் குறித்துச் சொன்னதைக் கேட்டவுடனே மஹாபலிஷ்டனாகிய அம்மாரீசன் முகம் வாடி நடுக்கமுற்றனன். அவன் ராமபயத்தினால் உதடுகள் உலரப்பெற்று அவ்வுதடுகளை நாக்கால் நக்கி நனைத்துக் கொண்டு கண்ணிமை கொட்டாமல் செத்தவன்போல் வருந்தி ஒன்றும் சொல்லமுடியாமல் ராவணனைப்பார்த்தனன். அவன் முன்பு தண்டகாரயண்யத்தில் ராமனது பராக்ரமத்தை அறிந்திருப்பவனாகையால் ராமன் வார்த்தையைக் கேட்டவுடனே மனம் தத்தளித்துத் தடுமாறப்பெற்று ராவணனைப் பார்த்து அவனுக்கும் தனக்கும் ஹிதமும் யதார்த்தமுமான வார்த்தையை இவ்வாறு சொல்லத்தொடங்கினன். முப்பத்தாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## மாரீசன், ராவணனுக்கு ஹிதோபதேசஞ் செய்தல்

பேசுவதில் ஸமர்த்தனும் மஹாப்ராஜ்ஞனுமாகிய மாரீசன் ராக்ஷஸர் தலைவனாகிய ராவணன் சொன்னதைக் கேட்டு அவனை நோக்கி இங்ஙனம் மறுமொழி கூறினன்:—'ராஜனே! ஸ்வாமிக்கு ஆபத்து வந்தபோதிலும் அவனது ஹித அஹிதங்களை ஆலோசியாமல் தமது ப்ரயோஜனத்தையே எதிர்பார்த்து எப்பொழுதும் தோற்றினபடி இனிய உரைகளையே உரைப்பவர் பலர் அகப்படுவார்கள். அப்பொழுதைக்கு அப்ரியமாயினும் பின்பு ஹிதத்தை விளைப்பதான உரையை உரைப்பவனும், உரைக்கில் செவிகொடுத்துக் கேட்பவனும் அகப்படான். நீ சாரர்களை அனுப்பிச் சத்ருக்களின் பலாபலங்களைத் தெரிந்துகொள்ளவில்லை; மேலும் சபலமுற்றவன். ஆகையால் ராமன் மஹாபராக்ரமசாலியென்றும் ஸமஸ்தகுண ஸம்பூர்ணனென்றும்

மஹேந்த்ர வருணர்களை நிகர்த்தவனென்றும் நீ தெரிந்து கொள்ளவில்லை. இது நிச்சயம். அப்பா! பூமியில் ராக்ஷஸர்கள் அனைவர்க்கும் மங்கலம் உண்டாகுமா? ராமன் கோபித்து லோகங்களில் ராக்ஷஸர்களே இல்லாதபடி செய்யாதிருப்பானு? ஜனகராஜன் புதல்வியாகிய ஸீதை உன் ப்ராணனை முடிக்கப் பிறந்தவளாகாதிருப்பாளா? ஸீதாநிமித்தமாக எனக்கு வ்யஸனம் உண்டாகாதிருக்குமா? தட்டுத்தடையின்றி மனத்தில் வந்தபடி திரிகின்ற உன்னை ரக்ஷகனுகப்பெற்ற லங்கை உன்னேடும் மற்ற ஸமஸ்த ராக்ஷஸர்களோடும் நாசம் அடையாதிருக்குமா? எவன் உன்னைப்போல் மனக்தோன்றபடி நடந்து கொண்டு துராசாரனுகித் துர்விசாரங்களைச் செய்துகொண்டிருப்பானே, அப்படிப்பட்ட துர்மதியான அரசன் தன்னையும் தன்பந்துக்களையும் தன் ராஜ்யத்தையும் பாழ்செய்து விடுவான். ராமன் தந்தையால் துரத்தப்பட்டானென்று பல சொல்லினை. அவன் தந்தையால் துரத்தப்பட்டவனல்லன். அப்படியாவதற்கு மர்யாதை தப்பினவனன்று; லுப்தனல்லன்; துஷ்டஸ்வபாவனல்லன்; க்ஷத்ரியாதமனல்லன்; தர்மமாவது குணங்களாவது நேரப்பெருதவனல்லன். அவன் கௌஸல்யையின் வயிறு குளிரப் பிறந்து ஆநந்தத்தை விளைப்பவன். அவன் க்ரூரனுமல்லன்; ஸமஸ்த பூதங்களுக்கும் கெடுதிசெய்வதில் விருப்பமுற்றவனுமல்லன். அப்பனே! அவன், தன் தந்தை கைகேயியின் வஞ்சனத்திற்குட்பட்டு ஸத்யபாசத்தால் கட்டுண்டிருக்கையில் அது கண்டு தர்மஸ்வபாவனுகையால் கைகேயியின் விருப்பத்தைத் தீர்த்துத் தந்தையை ஸத்யஸந்தனுகச்செய்வேனென்று ஊரை விட்டுப் புறப்பட்டு வந்தனன். அவன் கைகேயிக்கு ப்ரியமான விருப்பத்தை நிறைவேற்றுவதற்கும் தந்தை தசரதருடைய

இஷ்டஞ்செய்வதற்கும் ராஜ்யத்தையும் போகங்களையும் விட்டுத் தண்டகாரண்யத்திற்குவந்தானன்றி வேறன்று அப்பனே! ராமன் கடின ஸ்வபாவனல்லன்; மூர்க்கனு மல்லன். தப்புவார்த்தைகளைக் கேட்டு நீ இங்ஙனஞ் சொல்லுகின்றனை. அல்லது, சொல்லுகிறவர் நேராகச் சொல்லினும் நீ அதை நேராகக் கேட்டுத் தெரிந்து கொள்ளாமல் ஒன்றை ஒன்றாக ப்ரமித்துச் சொல்லு கின்றனை. ஆகையால் அபத்தவார்த்தைகளையும் தப்புக் கேள்விகளையும் வைத்துக்கொண்டு நீ இங்ஙனம் சொல்ல லாகாது. ராமன் தர்மமே வடிவங் கொண்டாற் போ லிருப்பவன்; ஸத்புருஷன்; ஸத்யமான பராக்ரமமுடைய வன்; தேவதைகள் அனைவர்க்கும் இந்த்ரன்போல் ஸகல ஜனங்களுக்கும் அவன் ப்ரபுவாயிருப்பவன். அவன் பத்னி யாகிய ஸீதை பாதிவ்ரத்யவைபவமாகிற தன் தேஜஸ்ஸி னாலேயே நன்கு ரக்ஷிக்கப்பட்டிருக்கின்றனள். அந்த பதிவ்ரதையைப் பலாத்காரஞ்செய்து நீ எப்படி அப ஹரிக்க விரும்புகின்றனை. ஸூர்யகாந்தியை எவராயி னும் தனியே பிரித்துப்பார்க்க வல்லரோ? பாணங்களும் கத்தி நுனியும் ஜ்வாலையாகவும் தனுஸ்ஸூம் கத்தியும் கட்டைகளாகவும் பெற்று யுத்தத்தில் அணுகமுடியாமல் ஜ்வலிக்கின்ற ராமனென்னும் அக்னியில் விழுவது யுக்த மன்று. காதுவரையிலும் இழுக்கையால் வட்டமாக வளைந்த வில்லே விரிந்து எரிகிற முகமாகவும் பாணங்க ளே அதில் புலப்படும் ஜ்வாலைகளாகவும் பெற்று லோக ஸம்ஹாரத்தின் பொருட்டுச் சினந்து வில்லையும் பாசத் தையும் தரித்து வீரத்தன்மை விளங்கப் பகைவரது ஸைன்யங்களைப் பறிக்கின்ற ராமனென்னும் யமனிடத் திற்கு, அப்பனே! உன் ராஜ்யத்தையும் ஸுகத்தையும் இனிதான ஜீவனத்தையும் விட்டுத் துறந்து இப்பொ ழுது போகவேண்டாம். ஜனகராஜன்புதல்வியாகிய அத்தகைய ஸீதை எவனுடையவளோ, அப்படிப் பட்ட ராமனுடைய தேஜஸ்ஸூ அளவிடக்கூடாதது. இது உறுதியான விஷயம். வனத்தில் ராமனது வில்லில்

சார்ந்திருக்கின்ற அந்த ஜனகராஜன்புதல்வியை நீ பறித்துக்கொண்டு வர வல்லனல்லை. ஸிம்ஹம்போல் விசாலவக்ஷஸ்தலமுடைய அந்த நரஸிம்ஹனுகிய ராமன் அம்மாதரசியைத் தன் ப்ராணன்களைக்காட்டிலும் மேலாக ப்ரீதியோடு பார்த்துக்கொண்டு வருவான். அந்த ஸீதையும் எப்போதும் பர்த்தாவையே அனுவர்த்தித்திருப்பாள். எரிகிற அக்னியின் ஜ்வாலையை அணுகுவது ஸாத்யமல்லாதிருப்பதுபோல், மஹாதேஜஸ்வியாகிய அந்த ராமனது அன்பு நாயகியாகிய நுண்ணிடையுடைய ஸீதையைப் பறித்துக்கொண்டு வருவது எவ்வளவும் ஸாத்யமன்று. ராக்ஷஸர் தலைவனே! ப்ரயோஜனமொன்றுமில்லாத இந்த ப்ரயத்னஞ் செய்வதனுல் உனக்குப் பயன் யாது? யுத்தத்தில் நீ ராமனது கண்களில் படுவாயாயின், அதுவே உன் ப்ராணன்களுக்கு முடிவு. ஜீவிதத்தையும் ஸுகத்தையும் துர்லபமான ராஜ்யத்தையும் வெகுகாலம் அனுபவிக்க விரும்புவாயாயின் ராமனுக்குக் கெடுதியைச் செய்யாதிருப்பாயாக. நீ மிகவும் தர்மிஷ்டர்களான விபீஷணன் முதலான ஸமஸ்த மந்த்ரிகளோடும் கலந்து ஆலோசித்துப் பின்பு உனக்குள் தனியாகவும் நிச்சயித்துக் குணங்களுடையவும் தோஷங்களுடையவும் பலாபலங்களை நன்கு பராமர்ஶித்து உன் பலத்தையும் ராமனது பலத்தைலம் உள்ளபடி தெரிந்துகொண்டு நன்மை தீமைகளை நிச்சயித்து எது யுக்தமோ அதைச் செய்வாயாக. ராக்ஷஸேஶ்வரனே! எனக்கு மாத்ரம் நீ தசரதகுமாரனுகிய ராமனேடு யுத்தஞ்செய்வது யுக்தமன்றென்றே தோற்றுகிறது. நான் மீளவும் இந்த வார்த்தையையே சொல்லுகின்றனன்; யுக்திகள் அமைந்ததும் தேச காலங்களுக்குத் தகுந்ததுமாகிய இந்த என்னுடைய உத்தமவாக்யத்தைக் கேட்பாயாக.' முப்பத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

—

மாரீசன் ராவணனுக்குத் தான் முன்பு பாலனாகிய ராமனால் பட்டபாடுகளையும் ராக்ஷஸ வதத்தையுங் கூறுதல்.

'முன்பு ஒருகாலத்தில் நான் ஆயிரம் யானை பலமுடையவனாகி மலைபோலும் கறுத்த மேகம்போலும் புலப்பட்டுக்கொண்டு, உருக்கின பொன்னாற்செய்த பளபளத்த குண்டலங்களை யணிந்து கிரீடந்தரித்து இரும்புத்தடியைக் கையில் ஏந்தி உலகத்தையெல்லாம் பயமுறுத்திக் கொண்டு பராக்ரமத்தின் மிகுதியால் பூமி முழுவதும் திரிந்து ரிஷிமாம்ஸங்களைப் பக்ஷிக்க வேண்டுமென்று சில காலம் தண்டகாரண்யத்தில் சுற்றிக்கொண்டிருந்தனன். பிறகு தர்மஸ்வபாவராகிய விஸ்வாமித்ரமுனிவர் எனக்குப் பயந்து தானே தசரதமஹாராஜனிடஞ் சென்று அவனைப் பார்த்து 'மன்னவனே! மாரீசனிடத்தினின்று எனக்கு மஹாபயம் நேரிட்டிருக்கின்றது. அவன் என்னை மிகவுங் கோரமாகப் பீடித்துப் பயப்படுத்துகின்றனன். ஆகையால் இப்பொழுது ராமன் வந்து மனவூக்கத்துடனிருந்து பர்வகாலத்தில் என்னைக் காத்துக்கொண்டிருக்கவேண்டும்' என்றனர். முனிவர் இங்ஙனம் சொல்லுகையில், தர்மிஷ்டனாகிய அந்தத் தசரதமஹாராஜன், அப்போது மஹானுபாவரான விஸ்வாமித்ரமஹர்ஷியைப் பார்த்து 'இந்தப்பாலனாகிய ராகவன் பன்னிரண்டு வயதுள்ளவன்; அஸ்த்ரங்களில் கைதேர்ந்தவனல்லன். நீர் வேண்டுமென்றால் எனக்குள்ள ஸைன்யத்தையெல்லாம் பின்னே அழைத்துக்கொண்டு நானே வருகின்றேன். முனிவர் தலைவனே! சதுரங்க பலத்தோடு நானே வந்து ராக்ஷஸர்களையும் மேலும் நீர் மனத்தில் நினைத்த சத்ருக்களையும் வதிக்கிறேன்' என்றனன். அரசன் இவ்வாறு மொழிகையில், முனிவர் அவனை நோக்கி 'உலகத்தில் ராமன் தவிர மற்றை எத்தகைய ஸைன்யமும் அந்த ராக்ஷ

ஸனைக் கொல்ல வல்லதன்று. நீயோ ஸாமான்யனன்று. யுத்தங்களில் தேவதைகளையுங்கூட ரக்ஷிப்பவனே. ராஜனே! நீ செய்த கார்யங்கள் மூன்று லோகங்களிலும் ப்ரஸித்தமாயிருக்கின்றன. பகைவரை அடக்கும் பராக்ரமசாலியே! உன் ஸைன்யம் பெரியதே. ஆயினும் அது அந்த ராக்ஷஸனை அசைக்கவும் வல்லதல்ல. அதெல்லாம் இங்கேயே இருக்குமாக. இந்த ராமன் பாலனாயினும் மிக்க தேஜஸ்ஸுடையவன். இவன் அவ்வரக்கனை அடக்கவல்லவன், பரந்தபனே! ஆகையால் ராமனை நான் அழைத்துக்கொண்டு போகிறேன். உனக்கு நன்மை உண்டாகுமாக' என்றனர். விஸ்வாமித்ரமுனிவர் இங்ஙனஞ் சொல்லி ராஜகுமாரனாகிய ராமனை அழைத்துக்கொண்டு மிகுந்த ஸந்தோஷத்துடன் தனது ஆஸ்ரமத்திற்குப் போயினர். அப்பொழுது ராமன், தண்டகாரண்யத்தில் அம்முனிவர் தமது ஆஸ்ரமத்தில் யாகத்திற்காகத் தீக்ஷை வஹித்திருப்பதுகண்டு விசித்ரமான தனுஸ்ஸை ஒலிப்பித்துக்கொண்டு அம்முனிவரது அருகில் பத்ரமாகக் காத்துக்கொண்டிருந்தனன். அப்பொழுது அந்தச் செல்வக்குமாரனுக்கு மீசை முதலிய யௌவனப் பருவத்தின் அடையாளங்கள் எவையும் உண்டாகவில்லை. அவன் அழியாத லக்ஷ்மீவிலாஸமுடையவனாயிருந்தனன். அவனுடைய கண்கள் தாமரையிதழ்போல் ப்ரகாசித்துக்கொண்டிருந்தன. அந்த ராமன் ப்ரஹ்மசாரியாகையால் ஒரே வஸ்த்ரந் தரித்துச் சிறந்த வில்லைக் கையிற் பிடித்து க்ஷத்ரியர்களுக்கு உரியபடி குடுமியிடப்பெற்றவனும் பொன்னூலணிந்தவனுமாகி மயில் கழுத்துப் போல் மிகுமிகென்று விளங்குகின்ற தன் மேனியின் சோபையால் தண்டகாரண்யத்தை விளங்கச் செய்துகொண்டு புதிதாக உதித்த பாலசந்த்ரன்போல் புலப்பட்டனன். பிறகு நீலமேகம்போல் புலப்பட்டுக்கொண்டு தளதளவென்று விளங்கும்பொற்குண்டலங்கள் அணிந்து

பலம் மிகுந்திருக்கப்பெற்ற நான் வரம் பெற்றிருக்குங் கர்வத்தினுல் செருக்குற்று அம்முனிவரது ஆஶ்ரமத்திற்குப் போயினன். ஆயுதத்தை ஏந்திக்கொண்டிருக்கிற நான் அங்ஙனம் புகுந்த உடனே அந்த ராமனுல் பார்க்கப்பட்டனன். அவன் என்னைப் பார்த்துச் சிறிதுந் தாமதமின்றிக் கிஞ்சித்தும் பயமில்லாமல் வில்வில் நாணேற்றினன். நான் தெரியாமையால் 'இவனொரு பையல்' என்று ராமனை அவமதித்து வேகத்துடன் விஶ்வாமித்ரரது அந்த யாகவேதிகையின்மேல் எதிர்த்தோடினேன். அனந்தரம் அந்த ராமன் பகைவரைப் பாழ் செய்யும்படியான கூருள்ள ஒரு பாணத்தை யெய்தனன். அந்தப் பாணத்தால் அடியுண்ட நான் ஸமுத்ரத்தில் நூறுயோஜனை தூரத்திற்கப்புறத்தில் தள்ளப்பட்டனன். அப்பனே! அப்பொழுது அவ்வீரன் என்னை வதிக்க விரும்பாமையால் என் ப்ராணன்களைக் கொள்ளாமல் காத்தனன். நான் ராமபாணத்து வேகத்தால் தள்ளப்பட்டு ஸமுத்ரத்தில் வீழ்ந்து மூர்ச்சையடைந்தனன். அப்பனே! அப்பொழுது அந்தப் பாணவேகத்தினுல் நான் ஆழமுள்ள ஸமுத்ரஜலத்தில் தள்ளுண்டு மூர்ச்சித்து வெகு நேரங்கழித்து மூர்ச்சை தெளிந்து லங்கைக்குத் திரும்பி வந்தனன். அப்பொழுது ராமன் பாலன்; யுத்தங்களில் தேர்ந்தவனல்லன். அப்படியிருந்தும் அனுயாஸமாகவே கார்யங்களை நிறைவேற்றவல்லவன். அந்தப்பால்யத்திலேயே என்னைப் போன்றவனை அங்ஙனம் தள்ளிவிட்டனன். எனக்கு ஸஹாயமாக வந்தவர்களெல்லோரையும் கொன்று விட்டனன். ராவணு! ராமன் இப்படிப்பட்டவனுகையால் நான் வேண்டாமென்று தடுத்துக்கொண்டிருக்கையில் கேளாமல் நீ ராமனேடு விரோதம் வைத்துக் கொள்வாயாயின் சீக்ரத்தில் பெரிய ஆபத்தைப் பெறுவாய். நீ கெடுவது மாத்ரமே யன்று; நானுவித லீலாபோக ரஸங்களை நடத்துவதில் ஆழ்ந்து ஸபை கூடுவது உத்ஸவங்கள் நடத்துவது முதலியவற்றுல் ஸுகித்துக் கொண்டிருக்

கிற ராக்ஷஸர்களுக்குங்கூட துக்கத்தையும் ஸந்தாபத்தையும் வரவழைப்பாய். மேடைகளும் உப்பரிகைகளும் நிறைந்து பலவகை ரத்னங்களால் அலங்கரிக்கப்பட்ட லங்காபட்டணம் ஸீதாநிமித்தமாக நசிப்பதைப் பார்க்கப் போகின்றனை. ஸர்ப்பம் வஸிக்கிற மடுவில் வாஸஞ் செய்கையால் மத்ஸ்யங்களுங்கூடக் கருடனால் பக்ஷிக்கப்படுவதுபோலப், பாபமேதுஞ் செய்தறியாத பரிசுத்தர்களும் பாபிகளின் ஸஹவாஸம் நேருமாயின் பிறரது பாபதோஷத்தால் தாமும் நசித்துப்போவார். திவ்யமான சந்தனங்களை மேனியிற் பூசித் திவ்யபூஷணங்களை அணிந்து விளங்குகிற ராக்ஷஸர்கள் உன்தோஷத்தைப் பற்றி ராமபாணங்களால் அடிக்கப்பட்டுத் தரையில் வீழ்வதைக் காணப்போகின்றனை. அடிபட்டு மிகுந்த ராக்ஷஸர்கள் தம்மை ரக்ஷிக்குந் திசையைக் காணமல் சிலர் பார்யைகளைக் கைவிட்டும் சிலர் பார்யைகளோடு கூடவும் பலதிசைகளிலும் ஓடிப்போகையில், நீ பார்க்கப் போகின்றனை. லங்காபுரம் முழுவதும் பாணங்களால் சூழப்பட்டு அக்னிஜ்வாலைகள் நாற்புறமும் நிரம்பப் பெற்று வீடுகளெல்லாம் எரிந்து நீருயிருக்கையில் நீ பார்க்கப்போகின்றனை. இவ்விஷயத்தில் ஸந்தேஹமில்லை. ராஜனே! பரதாரகமனத்தைக்காட்டிலும் பெரியபாபம் மற்றென்று கிடையாது. ஆயிரம் ஸ்த்ரீகள் உன்னை மணம் புரிந்தவர் இருக்கின்றனர். பரஸ்த்ரீகளை விரும்பவேண்டாம். ராக்ஷஸர் தலைவனே! பரஸ்த்ரீகளை அணுகுவது மாறி உன்ஸொந்த பார்யைகளிடத்திலேயே விருப்பமுற்றிருப்பாயாக. உன் குலத்தையும் மானத்தையும் ஸம்பத்தையும் ராஜ்யத்தையும் உனக்கு ப்ரியமான ஜீவனத்தையும் ரக்ஷித்துக் கொள்வாயாக. வெகுகாலம் ஸௌந்தர்யவதிகளான

பார்யைகளுடன் மன்மத ஸுகங்களை அனுபவித்துக் கொண்டு நண்பர்கூட்டங்களோடுகூடி ஸுகித்திருக்க விரும்புவாயாயின், ராமனுக்கு எள்ளளவும் அனிஷ்டஞ் செய்யவேண்டாம். உனக்கு நண்பனாகிய நான் உன் மேன்மையை விரும்பிப் பலாத்காரஞ்செய்து வேண்டா மென்று மிகவும் தடுத்துக் கொண்டிருக்கையில், அதைக் கேட்காமல் நீ பலாத்கரித்து ஸீதையை அபஹரிப்பா யாயின், ராமபாணங்களுக்கு நீயும் ப்ராணன்களைக் கொடுத்து உன் ஸைன்யமும் க்ஷீணிக்கப்பெற்றுப் பந் துக்களோடுகூட யமபுரத்திற்குப் போய்ச்சேருவாய்' முப்பத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

மாரீசன் ராம வ்ருத்தாந்தத்தை ராவண னுக்குச் சொல்லுதல்.

'அப்பொழுது பால்யத்தில் நடந்த யுத்தத்தில் ராமன் என் அபராதத்தை மன்னித்து விட்டனன். நான் எவ்வளவோ கஷ்டப்பட்டு விடுபட்டு வந்தனன். அவனுக்கு யௌவனம் வந்த பின்பு இப்பொழுது நடந்த வ்ருத்தாந்தத்தையும் சொல்லுகிறேன்; நடுவில் என் வார்த்தையைத் தடுத்துப் பதில் சொல்லாமல் கேட் பாயாக. ராமனால் அங்ஙனம் அடிபட்டுப் பின்பும் வெறு மனே இருக்காமல் நான் மீளவும் ம்ருகரூபந்தரித்த இரண்டு ராக்ஷஸர்களோடுகூடித் தண்டகாரண்யத்திற் குப் போயினன். நான் நாக்குப் பளபளவென்று விளங் கப்பெற்றுக் கோரைப்பற்களும் கொடியனவாகப் புலப் படப் பெரிய சரீரத்துடன் மஹாபலமுடையதும் மாம் ஸத்தைத் தின்பதுமாகிய பெரிய மிருகத்தின் உருவம் பூண்டு தண்டகாரண்யத்தில் திரிந்துகொண்டிருந்த னன். ராவணா! நான் எல்லோரையும் மிகவும் பயமுறுத் திக்கொண்டு அக்னிஹோத்ரம் நடக்குமிடங்களிலும் புண்ய தீர்த்தங்களிலும் சைத்ய வ்ருக்ஷங்களின் அரு கிலும் ரிஷிகளை அதட்டிக்கொண்டு திரிந்தனன்.

தண்டகாரண்யத்தில் தர்மத்தை ஆசரிக்கின்ற ரிஷி களைப் பிடித்துக்கொன்று அவரது ரக்தங்களைப் பருகி மாம்ஸங்களைத் தின்றுகொண்டிருந்தனன். இங்ஙனம் கொடுந்தன்மையனுகி ரிஷிமாம்ஸங்களை ஆஹாரமாகக் கொண்டு வனத்திலுள்ளவர்களை விரட்டிக்கொண்டு அங்ஙனம் குருதியைப் பானஞ்செய்து மதித்துத் தர்மங் களைக் கெடுத்துக்கொண்டு திரிந்தனன். அப்பொழுது நான், ரிஷிவேஷந் தரித்துத் தர்மங்களை ஆசரித்துக் கொண்டிருக்கிற ராமனையும் மஹாபாக்யமுடைய ஸீதை யையும் மஹாரதனுகிய லக்ஷ்மணனையும் அணுகிச் சென்றனன். நான் கூரான கொம்புடைய மானுருவந் தரித்து அவனடித்த அடியை நினைத்து மிகவும் கோ பித்து முன் வைரத்தை நினைத்துக்கொண்டே புத்தி யில்லாமல் 'இவன் ஒரு தாபஸ வேஷந்தரித்திருப்பவ னுகையால் இப்பொழுது ஒன்றும் செய்யமாட்டான்' என்று நினைத்து அவனைக் கொல்ல முயன்று தாபஸ வேஷனும் ஆஹாரநியதியுடையவனும் ஸமஸ்த பூதங் களுக்கும் ஹிதஞ்செய்ய விரும்பி அரண்யம் வந்திருக் கின்ற மஹாபலிஷ்டனுமாகிய அந்த ராமனை த்ருணீ காரஞ்செய்து இவனை வதிக்கவேண்டுமென்று அவன் மேல் எதிர்த்தோடினன். அந்த ராமன் வில்லைப் பலங் கொண்டவளவும் இழுத்துக் கருடனைப் போலவும் வாயு வைப்போலவும் மஹாவேகத்துடன் பாயுந்தன்மை யுடையவைகளும் கூரானவைகளும் சத்ருக்களை யழிக்க வல்லவைகளுமான மூன்று பாணங்களைத் தொடுத்து விட்டனன். வஜ்ரங்கள்போல் மிகவும் கடோரமானவை களும் ரக்தத்தைப் புசிப்பவைகளும் வளைந்த கணுக்க ளுடையவைகளுமாகிய அந்தப்பாணங்கள் மூன்றும் வில் லைப் பலங்கொண்டவளவும் இழுத்து நன்ருக விடுகை யால் எல்லாம் ஒன்றுசேர்ந்து என்மேல் ஓடிவந்தன.

நான் முன்பு ராமபாணங்கள் பட்டுப் பயந்திருப்பவனுகை யால் ராமனது பராக்ரமத்தை அறிந்து ஓடிப்போயி னன். ராமபாணம் ஓடிப்போனவனைத் தீண்டாதாகை யால் அதினின்றும் தப்புவித்துக்கொண்டனன். அவ் விரண்டு ராக்ஷஸர்களும் ராமபராக்ரமத்தை அறியார் களாகையால் எதிரிட்டு அடிபட்டுப்போயினர். அப்படி ராமபாணத்தில் அகப்பட்டு எப்படியோ தப்புவித்துக் கொண்டு ப்ராணன்கள் மிகுந்திருக்கப்பெற்றுத் துஷ்ட கார்யங்களையெல்லாம் தொலைத்துவிட்டுத் தபோநிஷ்ட ஞகி யோகாப்யாஸஞ் செய்துகொண்டு இங்கே இருக் கின்றனன். செடிகள்தோறும் ராமன் மரவுரியையும் க்ருஷ்ணுஜினத்தையும் தரித்து வில்லைப்பிடித்துப் பாச ஹஸ்தனுகிய யமன்போல் பயங்கரனுகி எனக்குப் புலப்படு கின்றனன். ராமனொருவனே ஒவ்வொரு செடியின் அரு கிலும் வந்து புலப்படுகிறுனல்லன். ராவணு! பயமுற்ற எனக்குப் பலவாயிரம் ர்ரமமூர்த்திகள் தோற்றுகின்ற னர். இவ்வரண்யம் முழுவதும் ராமமயமாகவே எனக் குத் தோற்றுகின்றது. ராக்ஷஸர் தலைவனே! இது ராம னது மாயையாலுண்டானதன்று. ராமனில்லாத இடத் திலும் எனக்கு ராமனே புலப்படுகின்றனன். இது எனக்கு விழித்துக்கொண்டிருக்கும்பொழுது மாத்ரமே அன்று; ஸ்வப்னங்களிலுங்கூட ராமனைப் பார்த்து ப்ர ஜ்ஞை தப்பித் தடுமாறுகின்றனன். ராவணு! நான் ராமனைப்பார்த்துத் திகில்பட்டிருப்பதால் 'ர' என்னும் அக்ஷரத்தை முதலிற்கொண்ட ரத்னம் ரதம் முதலான பேர்களுங்கூட முதலக்ஷரங்கேட்டவுடனே ராமனது பே ரே சொல்லப்படுமோவென்று எனக்குப் பயத்தை விளை விக்கின்றன. அவைகளின் இரண்டாவதக்ஷரத்தைக் கேட்ட பின்பு அது மாறுகின்றது. எனக்கு அந்த

ராமனது ப்ரபாவம் நன்றாகத் தெரியும். ஆகையால் அவனோடு யுத்தஞ் செய்வது உனக்கு யுக்தமன்று. ராமன் பலியையாயினும் நமுசியையாயினும் வதிக்கத் தகுந்த மஹா பராக்ரமசாலி. ராக்ஷஸோத்தமனே! நீ பகையைத் தீர்த்துக்கொள்ள விரும்புவாயாயின் ராமனை எதிர்த்து யுத்தஞ்செய்வாயாக. இல்லையாயின் கராதிகளைக்கொன்றதற்குப் பொறுத்து வெறுமனே இருப்பினும் இருப்பாயாக. நீ என்னை ப்ராணன்களோடிருக்கப்பார்க்க விரும்புவாயாயின், ராமனது ப்ரஸ்தாவத்தையுங்கூட என்னிடஞ் செய்யவேண்டாம். உலகத்தில் யோக்யர்களாகித் தர்மங்களை அநுஷ்டிக்கின்ற ஸத்புருஷர்கள் பலர் தாம் தோஷமற்றவராயினும் பிறருடைய அபராதத்தால் தமது பரிஜனங்களோடுகூட நாசமடைந்திருக்கின்றனர். ராக்ஷஸேந்த்ரனே! அப்படியே ஸாதுவ்ருத்தியில் முயன்றிருக்கிற நானும் உன் அபராதத்தால் நாசம் அடைவேன். உனக்கு எது யுக்தமாகத் தோற்றுகின்றதோ அதைச் செய்வாயாக. எனக்கு அந்தக்கதையே வேண்டாம். நான் எவ்விதத்திலும் உன்னைப் பின்றொடர்ந்து வரமாட்டேன். ராமன் மஹா தேஜஸ்வி; மனோபலமும் தேஹபலமும் அளவற்றிருக்கப்பெற்றவன். இவ்விஷயம் ப்ரஸித்தம். இதில ஸந்தேஹம் வேண்டாம். ராக்ஷஸர்கள் அனைவர்க்கும் அவன் யமனாகவே ஆகாதிருப்பானாக. ராமன் எப்படிப்பட்ட கார்யத்தையும் அநுயாஸமாகச் செய்து முடிக்குந் தன்மையன்; ஆனாலும் ஒருவர்க்கும் துக்கத்தை விளைவிக்கும்படியான கார்யத்தைச் செய்பவனல்லன். 'சூர்ப்பணகையை விரூபஞ்செய்து அதற்காக யுத்தத்திற்கு வந்த கரனைக் கொன்றானே' என்பாயாயின், முன்பு சூர்ப்பணகை ஸீதையைக் கொல்லப்போகையில், ராமன் அவளை அங்ஙனம் செய்தனன். அதற்காகக் கரன் மீறி அவனை அடிக்கப் போகையில், ராமன் தன்னை ரக்ஷித்துக்கொள்வதற்காக அவனைக் கொன்றனன். இதில்

ராமன்மேல் தப்பு யாதிருக்கின்றது? யதார்த்தமாகச் சொல்லு. நான் பந்துவாகிய உனக்கு ஹிதத்தை விரும்புபவனுகையால் நான் பரமார்த்தமாகச் சொல்லுகிற வார்த்தையை அங்கீகரிக்காது போவாயாயின், யுத்தத்தில் நேராகப் பாயுந்தன்மையுள்ள ராமனது கூரான பாணங்களால் அடிக்கப்பட்டுப் பந்துக்களோடுகூட இப்பொழுது ப்ராணன்களை விடப்போகின்றனை' என்றனன். முப்பத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராவணன் மாரீசன் சொன்ன ஹிதோபதேசத்தை நிராகரித்துப் பலாத்காரமாக அவனைத் தனக்கு ஸஹாயமாகும்படி நியமித்தல்.

ராவணன், மாரீசன் யுக்திகள் அமைந்திருப்பதும் தன்னைத் திருப்பக் கூடியதுமாக எவ்வளவு சொன்னபோதிலும், சாகப்போகிறவன் மருந்தை விரும்பாதிருப்பதுபோல், அந்த வார்த்தையைச் சிறிதும் அங்கீகரிக்கவில்லை. அந்த ராக்ஷஸர் தலைவன் காலத்தால் ஏவப்பட்டிருப்பதுபற்றித் தனக்கு அபாயமில்லாததும் ஸுகம் விளைப்பதுமாகிய வார்த்தையை மாரீசன் சொல்லியிருந்தும் அதைக் கேட்காமல், அவனை நோக்கி யுக்திகளின்றிப் பருஷமாகச் சொல்லினன். 'மாரீசனே! என் விஷயமாக அரசர் மனத்திற்குப்பொருந்தாத பொருளடங்கிய அநுசித வார்த்தையைச் சொன்னுயல்லவா! அதெல்லாம் களர்நிலத்தில் விதைத்த விதைபோல் நிஷ்பலமே. ராமன் நிஷ்காரணமாகக் கராதிகளைக் கொன்ற பாபிஷ்டன்; மூர்க்கன்; விசேஷித்தும் ஓர் மனுஷ்யன். அப்படிப்பட்டவனேடு யுத்தஞ் செய்வது எனக்குத் தகுமா? ஆகையால் ஸீதையைப் பறித்துக் கொண்டு வருகையாகிற உபாயத்தினின்று என்னை மீட்டு யுத்தத்தில் மூட்டுவதற்கு உன் வார்த்தைகளால் எவ்வளவும் ஸாத்யமன்று. அவனுக்கு யுத்தத்தினுல்

பதில்செய்வது எனக்கு யுக்தமன்று. ஆகையால் அவனுடைய பார்யையைப் பறிப்பதே தகுந்த அபகாரம். 'அவன் எப்படி மூர்க்கன்?' என்கிறாயோ, கேவலம் ஒரு பெண்பிள்ளையின் உபயோகமற்ற வார்த்தையைக்கேட்டு அந்தக்ஷணமே நண்பர்களையும் ராஜ்யத்தையும் துறந்து தாய்தந்தைகளையும் விட்டுப் பிரிந்து அங்கிருந்து அரண்யம் வந்து சேரும்படியான கேவலனன்றோ அவன். அவஸ்யமாகவே நான் யுத்தத்தில் கரனைக்கொன்ற அந்தக் காதுகனுக்கு ப்ராணன்களைக் காட்டிலும் மிகுந்த அன்பிற்கிடமான பார்யையாகிய ஸீதையை உன் எதிரிலேயே பறிக்க வேண்டுமென்று கங்கணங்கட்டிக் கொண்டனன். மாரீசா! இந்த அபிப்ராயத்தை நான் மனத்தில் கெட்டியாக நிச்சயித்துக்கொண்டிருக்கின்றனன். இந்த நிச்சயத்தைத் தேவேந்த்ரனும் தேவாஸுரர்களும் அனைவரும் ஒன்றுகூடி வந்தார்களேயாயினும் திருப்பவல்லரல்லர். நான் முயன்ற கார்யத்தை நிச்சயிக்கும் விஷயமாக 'தோஷம் எது? குணம் எது?' என்று உன்னைக் கேட்பேனாயின், நீ இங்ஙனம் அபாயத்தையாவது உபாயத்தையாவது சொல்லக்கூடும். பண்டிதனாகிய மந்த்ரி தனக்கு க்ஷேமத்தை விரும்புவானாயின், ராஜன் தன்னைக் கேட்ட பின்பே கையைக் கூப்பிக் கொண்டு தனக்குத் தோற்றினதை மன்னவனுக்குச் சொல்லவேண்டும். அவன் வினவானாயின் சொல்லவே கூடாது. அங்ஙனம் ராஜனுக்கு ஹிதஞ்சொல்வதிலும், ராஜனுக்கு விருத்தமாயிராதபடியும் மெதுவாகவும் உபசாரங்கள் பொருந்தியும் நல்வார்த்தைகளைக் கொண்டு சொல்லவேண்டும். மாரீசா! திரஸ்காரத்துடன் சொல்வானாயின், அது ஹிதமாயிருப்பினும், மர்யாதையற்றிருக்கையால் ஸம்மானிக்கத் தகுந்த மன்னவன் அதை ஏற்றுக்கொள்ளமாட்டான். அளவிறந்த ப்ரதாபமுடையோர்களாகிய அரசர்கள், அக்னி இந்த்ரன் சந்த்ரன்

வருணன் யமன் என்னும் இவ்வைவருடைய ஐந்து உரு வங்களையும் தரித்திருப்பார்கள். ராக்ஷஸனே! அங்ஙனம் மஹானுபாவர்களாகிய அந்த அரசர்கள் அக்னியின் உஷ்ணகுணத்தையும் இந்த்ரனுடைய பராக்ரமத்தையும் சந்த்ரனுடைய இனிப்பையும் யமனுடைய தண்டனையையும் வருணனுடைய தெளிவையும் தரித்திருப்பார்கள். ஆகையால் அரசர்களை எல்லா ஸமயங்களிலும் கௌரவித்துப் பூஜித்துக்கொண்டிருக்கவேண்டும். நீ ராஜதர்மந் தெரியாமல் கேவலம் அஜ்ஞானத்திலாழ்ந்து துஷ்டத்தனம் மிகப்பெற்று உன் வீட்டிற்கு வந்த ராக்ஷஸர் தலைவனாகிய என்னைப் பார்த்துப் பருஷமாகப் பேசவிரும்புகின்றனை. ராக்ஷஸனே! இப்பொழுது இவ்விஷயத்தில் குணதோஷங்களையாவது யுக்தாயுக்தங்களையாவது என் க்ஷேமத்தையாவது நான் உன்னைக் கேட்கவில்லை. நான் இப்பொழுது உனக்கு இவ்வளவு மாத்ரம் கார்யம் சொல்லினன். நீ அளவிறந்த பராக்ரமமுடையவனாகையால் அதைச் செய்தே தீரவேண்டுமென்றிப் பதிலுரைக்கலாகாது. இம்மஹாகார்யத்தில் நீ எனக்கு ஸஹாயஞ் செய்யவேண்டும். எனக்கு ஸஹாயஞ்செய்யும் விஷயத்தில் நீ நான் சொல்லுகிறபடி யாது செய்ய வேண்டுமோ அதைச் சொல்லுகிறேன் கேள். நீ வெள்ளிப்புள்ளிகளால் விசித்ரமாயிருக்கின்ற பொன்மானுருவந்தரித்து அந்த ராமனது ஆச்ரமத்திற்குச் சென்று ஸீதையின் எதிரில் திரிவாயாக. ஸீதைக்கு உன்னிடத்தில் மிக விருப்பம் உண்டாக்கி அனந்தரம உன் மனம் போன வழியே போகலாம். ஸ்வர்ணமயமான மிருகமாயிருக்கின்ற உன்னைப் பார்த்தவுடனே ஸீதை ஆச்சர்யப்பட்டு 'இந்த மானைப் பிடித்துக் கொடுப்பாய்' என்று உடனே ராமனைப் பார்த்து மொழிவாள். ராமன் உன்னைப் பிடிப்பதற்காக ஸீதையையும் லக்ஷ

மணனையும் விட்டுத் தொலைந்து போன பின்பு நீ தூரமாகச் சென்று ராமன் சொன்னாற் போலவே தோற்றும்படி 'ஐயோ! ஸீதே! லக்ஷ்மணா!' என்று முறையிடுவாயாக. அந்த வார்த்தையைக்கேட்டு லக்ஷ்மணன் ராமனிடத்திலுள்ள ஸ்னேஹத்தினால் ஒன்றுந் தோற்றப் பெருமல் ஸீதையாலும் தூண்டப்பட்டு ராமன்போனவழியே பிடித்துப் போவான். அங்ஙனம் ராமனும் லக்ஷ்மணனும் ஸீதையை விட்டுத் தொலைந்து போனவுடனே, இந்த்ரன் சசீதேவியைப்போல், ஸுகமாக நான் ஸீதையைக் கொண்டுவருகின்றேன். ராக்ஷஸா! நல்ல வ்ரதானுஷ்டானமுடையவனே! மாரீசா! நீ இந்தக் கார்யத்தை நான் சொன்னபடியே நிறைவேற்றி உனக்கிஷ்டமான இடத்திற்குப் போவாயாக. உனக்கு என் ராஜ்யத்தில் பாதி கொடுக்கின்றேன். நல்லியற்கையுடையவனே! இந்தக் கார்யம் நிறைவேறும்பொருட்டு அழகான மானுருவந் தரித்து க்ஷேமமான வழியைப்பற்றித் தண்டகாரண்யம் போவாயாக. நானும் ரதத்தின்மேலேறி உன் பின்னேடு வருகின்றனன். இங்ஙனம் ராமனை வஞ்சித்து யுத்தஞ் செய்ய வேண்டுவதில்லாமலே ஸீதையைப் பறித்துக்கொண்டு கார்யங் கைகூடப் பெற்றவனாகி உன்னேடு கூடவே லங்கைக்குத் திரும்பிப் போகின்றனன். மாரீசா! நீ இந்தக் கார்யத்தைச் செய்யமாட்டாயாயின், உன்னை நான் இப்பொழுதே கொன்று விடுவேன். ஆகையால் எனக்கு நீ இந்தக் கார்யத்தைப் பலாத்காரத்தினாலாவது அவஶ்யம் செய்யப்போகின்றனையேயொழியச் செய்யாதிருக்க முடியாது. ராஜ விஷயத்தில் ப்ரதிகூலமாயிருப்பவன் ஒருகாலும் ஸுகமாய் விளங்கமாட்டானல்லவா! நீ அந்த ராமனிடம் போவாயாயின், ஒருகால் உனக்கு ப்ராணன் தக்கினாலும் தக்கக்கூடுமாகையால் மரணம் நேரிடுவது ஸந்தேஹமே. மேலும் என்னேடு விரோதித்துக் கொள்வாயாயின், உனக்கு மரணம் இப்பொழுதே நேரிடுவது நிச்சயம். இதை இப்படியே உன்

புத்தியில் நன்றாக நிச்சயித்துக்கொண்டு இவ்விரண்டில் உனக்கு எது ஹிதமோ அதை அப்படியே செய்வாயாக' என்றனன். நாற்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

{மாரீசன் ராவணனுக்கு மீளவும் ஹிதங்களைப் போதித்தல்.}

ராவணன் தனது ராஜத்தனம் தோற்ற 'உனக்கு இஷ்டமில்லாமற் போயினும் செய்தே தீரவேண்டும்' என்று தனக்கு ப்ரதிகூலமாக ஆஜ்ஞாபிக்கையில் மாரீசன் அந்த ராக்ஷஸேஸ்வரனைப் பார்த்து இங்ஙனம் பருஷவாக்யத்தை மொழிந்தனன்:—'ராவண! எந்தப் பாபிஷ்டன் உனக்கும் உன்பிள்ளைகளுக்கும் உன் ராஜ்யத்திற்கும் உன் மந்த்ரிகள் அனைவர்க்கும் விநாசத்தை விளைக்கும்படியான இந்த உபாயத்தை உனக்கு உபதேசித்தனன். ராஜனே! நீ ஸுகமாயிருப்பதை எந்தப் பாபிஷ்டன் பார்க்கப் பொறுதிருக்கின்றனன்? ம்ருத்யுவுக்கு த்வாரம் போன்ற இந்தக் கொடுஞ்செயலை உனக்கு உபாயமென்று எவன் உபதேசித்தனன்? பராக்ரமஹீனர்களான எவரோ சில ராக்ஷஸர்கள் உனக்குப் பகைவராயிருக்கின்றனர்; இதற்குச் சந்தேஹமில்லை. உன்னைக் காட்டிலும் பலவந்தனாகிய ராமன் கையில் நீ அகப்பட்டு நசித்துப்போக வேண்டுமென்று அவர்கள் விரும்புகின்றனர். ராவண! கேவலம் பகைவன் இப்படி செய்யமாட்டான்; அதிலும் அற்பனுமாயிருப்பவன் எவன், நீயே ப்ரயத்னப்பட்டு நாசம் அடைய வேண்டுமென்று விரும்பி அஹிதஞ்சொல்பவனாகி உனக்கு இந்தத் துர்ப்புத்தியை உபதேசித்தனன்? ராக்ஷஸனே! உனக்கு இவ்வழியை உபதேசித்தவன், நீ தப்புக் கார்யம் செய்து அதனால் நீ அழிந்துபோகவேண்டுமென்று விரும்புகின்றனன். ராவண! லோகத்திற்கும் சாஸ்த்ரங்களுக்கும் பொருந்தாத வழியில் போகின்ற

உன்னை உன்மந்த்ரிகள் எவரும் தடுக்காதிருக்கின்றார் களே! ஆகையால் அவர்களெல்லோரும் கொல்லத் தகுந்தவர்களே. அவர்களை ஏன் கொல்லாதிருக்கின் றனை? 'ராஜன் தன்மனம் போனபடி நடக்குந் தன்மைய னாகித் துர்மார்க்கத்திற்கு முயல்வானாயின், ஸத்புருஷர் களாகிய மந்த்ரிகள் அவனை எல்லாவிதத்திலும் திருப்ப வேண்டும். அங்ஙனம் துர்மார்க்கத்தில் சென்று தடுக்க வேண்டியவனாயிருக்கின்ற உன்னை அவர்கள் தடுக்கா திருக்கின்றனர். ஜயசீலர்களில் மேலாயிருப்பவனே! அரசன் தோஷங்களற்றவனாகி நற்குணங்கள் அமையப் பெற்றவனுமாயிருப்பானாயின், மந்த்ரிகளுக்கும் அதனால் தர்மமும் அர்த்தமும் காமமும் கீர்த்தியும் உண்டாகும். ராவணா! ராஜன் துர்க்குணனாயிருப்பானாயின் மந்த்ரிக ளுக்குத் தர்மம் முதலியவை எவையும் சேரா. எல்லாம் வீணே ஆய்விடும். மந்த்ரிகளுக்குமாத்ரமே அன்று; அரசனுக்குக் குணங்கள் இல்லாதிருக்குமாயின், இதர ஜனங்களுங்கூட வ்யஸனத்தில் ஆழ்ந்துபோவார்கள். ஜயசீலர்களில் தலைவனே! தர்மத்திற்கும் ஜயத்திற்கும் ராஜனே மூலம். ஆகையால் ஸர்வாவஸ்தைகளிலும் ராஜாக்களை ரக்ஷிக்கவேண்டும். ராவணா! க்ரூரனாயிருப் பவனும் ப்ரஜைகளுக்கு ப்ரதிகூலமாயிருப்பவனும் இந்த் ரியங்களை யடக்குந் திறமையில்லாதவனும் ராஜ்யத்தை எவ்விதத்திலும் காப்பாற்ற வல்லவனல்லன். குதிரை கள், ஸாமர்த்யமில்லாத ஸாரதி ஓட்டுவானாயின், மேடு பள்ளமாயிருக்கும் ப்ரதேசத்தில் மிக வேகமாகச்சென்று அந்த ஸாரதியோடுகூட விழுவதுபோல், கொடிய உபா யங்களை ப்ரயோகிக்கும் மந்த்ரிகள், அஸமர்த்தனாகை யால் தமது ஆலோசனைகளைக் கேட்கிற மன்னவனோடு கூடப் பாழாய்விடுவார்கள். உலகத்தில் நீதிமார்க்கத் தில் நிலையுற்றவராகித் தர்மத்தைத் தவறாமல் அனுஷ்

டிக்குந் தர்மஜ்ஞர்களாகிய ஸத்புருஷர்கள் பலர் பிறரை நம்பி அவரது அபராதத்தால் தாமும் பரிவாரங்களோடுகூட நாசம் அடைந்திருக்கின்றனர். ராவணா! ஆடுகள் தமக்கு ப்ரதிகூலமாகி க்ரூரத் தன்மையுடன் வளர்ந்து தம்மைத் தின்னுந்தன்மையுடைய நரியின் ரக்ஷணத்திலிருக்குமாயின் வளர்தலின்றி க்ஷீணிப்பது போல், ப்ரதிகூலனும் க்ரூரனுமாகிய ராஜனால் ரக்ஷிக்கப்படும் ப்ரஜைகள் வ்ருத்திக்கு வரமாட்டார்கள்; அன்றியே, க்ஷீணித்துப்போவார்கள். ராவணா! நீயும் துர்ப்புத்தியும் க்ரூரனுமாகி இந்த்ரியங்களை வெல்லாமல் விஷய ஸுகத்தில் கால் தாழப்பெற்றிருக்கையால், உன்னை ராஜனாகவுடைய ராக்ஷஸர்களெல்லோரும் தப்பாமல் நாசம் அடையப்போகின்றனர். எனக்குக் [1] காகதாளீயம்போல் தெய்வாதீனமாகப் பயங்கரமான இந்த ஆபத்து ஸம்பவித்தது. நான் வேண்டுமென்று இதை வரவழைத்துக் கொள்ளவில்லையாகையாலும் பராக்கில் நேரிட்டதாகையாலும் என்னொருவனுக்கு நாசம் உண்டாவதைப்பற்றித் துக்கிக்கவேண்டிய அவஶ்யம் இல்லை. நீயோ இந்த விபத்தைப் புத்தி பூர்வமாக இப்படி வரவழைத்துக்கொண்டனை. மேலும் நீயொருத்தனே அன்று; ஸைன்யங்களோடு கூட நாசமடையப்போகின்றனை; ஆகையால் உன்னைப்பற்றியே துக்கிக்கவேண்டியதாயிருக்கின்றது. 'மஹா பராக்ரமசாலியாகிய நீ ஸஹாயமாயிருக்கின்றனை யாகையால் எனக்கென்ன கெடுதி வரப்போகிறது?' என்கிறாயோ? அங்ஙனம் நினைக்கவேண்டாம். ராமன் என்னை வதித்துப் பின்பு சீக்ரத்திலேயே உன்னையும் வதிப்பான். உன்னைக் கொல்லும்படியான சத்ருவாகிய ராமன் கையில் பட்டுச் சாவதால் நான் க்ருதார்த்தனாவேன். ராமனைப் பார்த்தமாத்ரத்திலேயே நான் ஹதனானேனென்று நிச்சயித்

1. காக தாளீயம்போல் - திடீலென்று காக்கையின் வரவும் திடீலென்று பனம்பழத்தின் விழுகையும் போல்.

துக் கொள்வாயாக. ஸீதையைக்கொண்டுவந்தவுடனே நீயும் பந்துக்களோடுகூட ஹதனுனென்று தெரிந்து கொள். நீ என்னேடுகூடி ஆஶ்ரமத்தினின்றும் ஸீதையைக் கொண்டுவருவாயாயின், பிறகு நீ பிழைத்திருக்கப்போகிறதில்லை. நானும் அப்படியே இல்லை. லங்கையும் பாழடைவது தவருது. ராக்ஷஸர்களும் ஜீவித்திருக்கப்போகிறதில்லை. ராவண! உன் மேன்மையை விரும்பி வேண்டாமென்று எவ்வளவுதூரம் வாதித்த போதிலும், என்வார்த்தையைப் பாராட்டி விமர்சம் பண்ணுமலே யிருக்கின்றனே. ஆயுள் முடியப்பெற்ற மனிதர்கள் பிணம் போன்றிருப்பார்களாகையால் நண்பர்கள் சொல்லும் ஹிதத்தை அங்கிகரிக்கமாட்டார்கள்' என்று மொழிந்தனன். நாற்பத்தொன்றுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

மாரீசன் மானுருவந்தரித்து ராமாஸ்ரமத்திற்குப் போதலும், ஸீதை அதைப் பார்த்து ஆச்சர்யப்படுதலும்.

அனந்தரம் மாரீசன் ராவணனைக் குறித்து இவ்வாறு மொழிந்து ராக்ஷஸராஜனுகிய அந்த ராவணனிடம் பயந்து வருந்தி வேறுகதியில்லாமையால் 'போவோம்' என்று. மீளவும் ராவணனைப் பார்த்து 'வில்லையும் பாணங்களையும் கத்தியையும் தரித்து என்னைக் கொல்வதற்காகப் பாணத்தை யெடுத்த ராமனது கண்ணெதிரில் நான் படவேண்டியது மாத்ரமே! ராமன் பாணந் தொடுக்கவேண்டிய அவஶ்யங்கூட இல்லை. அவ்வளவிலேயே என் ப்ராணன்கள் தொலைந்து போயின. எப்படிப்பட்டவனும் ராமனை எதிர்த்து ப்ராணன்களோடு திரும்பிவரமுடியாது. நீயொருவன் யமதண்டத்தினுல் அடிக்கப்பட்டுச் சாக ஸித்தமாயிருக்கின்றனே. உன்னைப்போலவே நானும் ஒருத்தன் இதோ இருக்கின்றனன். உனக்கு இப்படிப்பட்ட துர்ப்புத்தி

உண்டாயிருக்கையில் நான் என்ன செய்யமுடியும்? அப்பா! நான் இதோ போய்க்கொண்டிருக்கின்றனன். ராக்ஷஸனே! உனக்கு மங்கலம் உண்டாகுக' என்றுரைத்தனன். அந்த ராவணன் அவன் சொன்ன வார்த்தையைக் கேட்டு மிகவும் ஸந்தோஷம் அடைந்து அவனை மிகவும் அழுந்தக்கட்டியணைத்து 'நீ இப்படி வீரத்தன்மை அமைந்திருக்கும்படி உரைத்த உரை என்னைப்போன்றவன் சொல்வது போலவே இருக்கின்றது. இப்பொழுது நீ மாரீசனாயிருக்கின்றனை. இதற்கு முன்பு வேறொருராக்ஷஸனாயிருந்தனை. ரத்னங்களால் அலங்கரிக்கப்பட்டுப் பிசாசமுகமுடைய கழுதைகள் பூட்டப்பெற்ற இந்த ரதத்தில் சீக்ரம் என்னுடன் ஏறுவாயாக. நீ ஸீதைக்கு மிகுந்த ஆசையை விளைவித்துப் பின்பு உன்னிஷ்டப்படி நடக்கலாம். நான் ராமலக்ஷ்மணர்கள் அப்புறம் தொலைந்து ஒருவருமில்லாத ஸமயத்தில் மிதிலாதிபதியின் புத்ரியாகிய அந்த ஸீதையை எடுத்துக்கொண்டு வருகிறேன்' என்றனன். பிறகு ராவணனும் மாரீசனும் விமானம் போன்ற அந்த ரதத்தில் ஏறிக்கொண்டு அந்த ஆஶ்ரமத்தினின்றும் சீக்ரமாகப் போயினர். அவர்களிருவரும் அங்ஙனம் ரதத்திலேறிப் பட்டணங்களையும் உத்யானவனங்களையும் பர்வதங்களையும் அங்குள்ள எல்லா நதிகளையும் ராஜ்யங்களையும் உத்யானவனங்கள் நிறைந்த நகரங்களையும் பார்த்துக்கொண்டு போயினர். அனந்தரம் ராக்ஷஸர்தலைவனாகிய ராவணன் மாரீசனோடுகூட அங்ஙனம் தண்டகாரண்யத்திற்கு வந்து ராமனது ஆஶ்ரமத்தைக் கண்டனன். பிறகு ராவணன் ஸ்வர்ணத்தினால் அலங்காரஞ்செய்யப்பெற்ற அந்த ரதத்தினின்று இழிந்து மாரீசனைக் கையில் பிடித்துக்கொண்டு 'நண்பனே! வாழைமரங்கள் சுற்றிலுஞ் சூழப்பெற்ற ராமாஶ்ரமம் இதோ புலப்படுகின்றது, பார். இனி நாம்

எத்றகாக வந்தோமோ அதைச் சீக்ரம் நடத்துவா யாக' என்றனன். அப்பொழுது ராக்ஷஸனுகிய அந்த மாரீசன் ராவணன் சொன்ன வார்த்தையைக் கேட்டு மானுருவந்தரித்து ராமனது ஆஶ்ரமத்தின் த்வாரத் தில் ஸஞ்சரித்துக்கொண்டிருந்தனன். அவன் தரித்த அந்த மானுருவம் பார்வைக்கு மிகவும் வியப்பை விளை விப்பதாயிருந்தது. அதன் கொம்புகளின் நுனிகள் இந்த்ரநீலமணிமயமாயிருந்தன. முகத்தில் ரேகைகள் சில வெளுத்தும் சில கறுத்துமிருந்தன. அதன் முகத் தின் கீழ்மேல் பாகங்கள் இரண்டியில் ஒன்று செந்தா மரையின் வர்ணமுடையதாயிருந்தது. காதுகள் கரு நெய்தல்போன்ற உருவம் தீரப்பெற்று இந்த்ரநீலம் போல் நிகுநிகென்று விளங்கின. கழுத்து, கொஞ் சம் உயர்வுற்றிருந்தது. உதடுகள் இந்த்ரநீலமணியின் துண்டங்கள்போல் அழகாயிருந்தன. அதன்வயிறு முல்லைபோலும் சந்த்ரன்போலும் வஜ்ரமணிபோலும் வெளுத்து மிகவும் பளபளவென்று அழகாய் விளங்கிற்று. அதன் பக்கங்களில் ஒன்று இலுப்பைப்பூவர்ணமுடைய தாயிருந்தது. மற்றை அவயவங்களெல்லாம் தாமரைத் தாதுகள்போல் ப்ரகாசித்தன. குளம்புகள் வைடூர்ய மணி போலிருந்தன. அதன் கணைக்கால்கள் நுண்ணிய வைகளாயிருந்தன. ஸந்திபந்தங்களெல்லாம் மிகத்திட மாயிருந்தன. அதன்வால் இந்த்ரதனுஸ்ஸுபோல் பல வர்ணங்களமைந்து மேலெடுக்கப்பட்டுப் பளபளவென்று ப்ரகாசித்துக்கொண்டிருந்தது. அது பார்த்தவுடனே மனத்தை இழுத்து வசப்படுத்துவதாகி நிகுநிகுத்த வர் ணம் பொருந்திப் பலவகை ரத்னங்கள்போன்ற புள்ளி கள் அமையப்பெற்று விளங்கியது. அந்த ராக்ஷஸன் அங்ஙனம் ரமணீயமாகிய அவ்வனத்தையும் ராமனது

ஆஶ்ரமத்தையும் விளங்கச் செய்துகொண்டு ஒரு நொடிப்பொழுதில் மிகவும் அழகான மானுய்விட்டனன். அவன் அவ்வாறு மனத்திற்கினிதாகவும் கண்ணுக்கு அழகாகவும் பலவகை வர்ணங்களால் விசித்ரமாகி விளங்குகிற மானுருவந்தரித்து ஸீதாதேவியை வஞ்சிப்பதற்காக அங்கு நாற்புறங்களிலும் பசும்புல் நிறைந்த இடங்களில் மேய்ந்து உலாவிக்கொண்டிருந்தனன். அவன், மேனியில் பல வெள்ளிப் புள்ளிகள் விளங்கப்பெற்றுக் கண்ணுக்கினிதாகிச் செடிகளின் தளிர்களை இழுத்துப் பறித்துத் தின்றுகொண்டு ஸஞ்சரித்தனன். அவன், வீடுகள்போல இணைந்திருக்கிற வாழைமரங்களின் அருகில் சென்று பிறகு கர்ணிகாரவ்ருக்ஷங்களைத் தழுவி மெதுவாக அடியிட்டு இங்கு மங்கும் திரிந்து ஸீதையும் பார்க்க நேரும்படியான இடத்தில் சேர்ந்து ஆங்காங்கு உலாவிக்கொண்டிருந்தனன். அந்த மஹாம்ருகம் தாமரையிதழ்போன்ற வர்ணம்பொருந்தி அற்புதமான முதுகுடன் கூடி மிகவும் அழகாய் விளங்கி ராமாஶ்ரமத்திற்கருகில் ஸுகமாக விளையாடிக்கொண்டிருந்தது. அம்மேலான ம்ருகம் திரும்பி அப்புறம் போவதும் மீளவும் வந்து விளையாடுவதும் திரும்பிக் கொஞ்சநேரம் அப்புறம்போவதும் உடனே மீளவும் உள்ளே புகுவதுஞ் செய்துகொண்டு இவ்வண்ணம் பல தடவை வருவதும் போவதுமாயிருந்தது. அவன் அங்ஙனம் விளையாடிக்கொண்டிருந்து தரைமேல் ஓரிடத்தில் உட்கார்ந்திருந்து மீளவும் ஆஶ்ரமத்திற்கு வந்து, அங்குள்ள மானகூட்டங்களோடு சேரப்பார்ப்பான். ம்ருகரூபந்தரித்து ஸீதை தன்னைப் பார்க்கவேண்டுமென்று விரும்புகின்ற அம்மாரீசன் மான்கூட்டங்களால் சூழப்பட்டு மீளவும் திரும்பி ஆஶ்ரமத்திற்குள் வருவதும் அவ்விடம் வந்து அற்புதமாயிருக்கும்படி மண்டலாகாரமாகச் சுழலமிடுவது மாயிருந்தனன். அரண்

யத்திலுள்ள மற்றை மிருகங்கள் எல்லாம் அந்தச் சித்ர ம்ருகத்தைப் பார்த்து அருகில் சென்று மோந்து தம் மைத்தின்னும் ராக்ஷஸனென்று தெரிந்து பயந்து பத்துத் திசைகளிலும் பறந்தோடிக்கொண்டிருந்தன. அந்த ராக்ஷஸனும் மிருகங்களைக்கொன்று தின்பதே ஸ்வபாவமாயிருக்கப்பெற்றவனாயினும் தனது உண்மையை மறைக்கும் பொருட்டு அந்த அரண்யத்திலுள்ள ம்ருகங்களைத் தொட்டுப் பார்ப்பதோடு நின்று பக்ஷியாதிருந்தனன். பிறகு அழகான கண்களையுடைய ஸீதை அதேஸமயத்தில் புஷ்பங்களைப் பறிக்கவிரும்பி அம்மரங்களினருகில் வந்தனள். அழகான கண்களும் முகமும் அமையப்பெற்ற அப்பெண்மணி புஷ்பங்களைப் பறித்துக் கொண்டே கர்ணிகாரவ்ருக்ஷங்கள் அசோக வ்ருக்ஷங்கள் மாமரங்கள் முதலிய அந்த வ்ருக்ஷங்களின் அருகில் போயினள். அந்த உத்தமவனிதையாகிய ஸீதை அரண்யத்தில் வாஸஞ்செய்யத்தகாத அந்த ஸுகுமார மூர்த்தி, நானாரத்னமயமாகி முத்துப்புள்ளிகளும் ரத்னம் போன்றபுள்ளிகளும் அமைந்து அற்புதமான உருவமுடைய அந்த மேலான ம்ருகத்தைக் கண்டனள். அழகிய பற்களும் அதரமும் அமைந்த அந்த மாதரசி ஆச்சர்யத்தினால் தன்கண்கள் மலரப்பெற்று, வெள்ளிபோலும் கைரிகதாது போலும் வர்ணம் பொருந்தி விளங்கும் மயிர்களோடு ப்ரகாசிக்கின்ற அந்த ம்ருகத்தை ஸ்னேஹத்துடன் கண்டனள். அவ்வரக்கனும் ராமனது அன்பநாயகியாகிய அம்மாதரசியைக் கண்டவுடனே அவ்வனம் முழுவதையும் விளங்கச்செய்துகொண்டு முன்பைவிட மிகவும அற்புதமாயிருக்கும்படி உலாவத் தொடங்கினன். ஜனகராஜன் மகளாகிய அந்த ஸீதை முன்பு எப்போதும் தான் பாராததும் லோகோத்தரமுமாகிப் பலவகை ரத்னங்கள் போன்ற புள்ளிகளுடன் அழகாயிருக்கின்ற அந்த ம்ருகத்தைக் கண்டு பெருவியப்புற்றனள். நாற்பத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

{ஸீதை மாயாம்ருகத்தைக் கண்டு வேண்டுதலும், லக்ஷ்மணன் தடுத்தலும், ராமன் பிடிக்கப்புறப்படுதலும், }

பரிசுத்தமான பொன்போன்ற மேனியின் வர்ணமுடையவளும் அவயவங்களில் தோஷங்களொன்றுமில்லாத ஸௌந்தரியுமான அந்த ஸீதை, பருத்த இடையின் பின்புறத்தழகு விளங்கப் புஷ்பங்களைப் பறித்துக் கொண்டிருந்து, ஒரு பக்கத்தில் பொன்வர்ணமும் மற்றொரு பக்கத்தில் வெள்ளியின் வர்ணமும் பொருந்தி விளங்குகின்ற அந்த ம்ருகத்தைப் பார்த்து மிகுந்த ஸந்தோஷம் அடைந்து பர்த்தாவாகிய ராமனையும் அவன் தம்பி லக்ஷ்மணனையும் ஆயுதமெடுத்து வாருங்களென்று உரக்கக்கூப்பிட்டனள். அங்ஙனம் அந்தப் பெண்மணி கூப்பிடுகையில், புருஷஸ்ரேஷ்டர்களாகிய ராமலக்ஷ்மணர்கள் வந்து அந்த ப்ரதேசத்தில் நாற்புறமும் உற்றுப் பார்க்கையில் அந்த மாயாம்ருகத்தைக் கண்டனர். லக்ஷ்மணன் அதைப் பார்த்தவுடனே ஸந்தேஹமுற்று ராமனைப்பார்த்து மொழிந்தனன்:—'இந்த ம்ருகம் அந்த மாரீசனென்னும் ராக்ஷஸனேயென்று எனக்குத் தோற்றுகின்றது. ராஜனே! காமரூபியான இம்மாரீசன் ம்ருகரூபந்தரித்துப் பாபிஷ்டமான அந்த ம்ருகரூபத்தைக் காரணமாகக் கொண்டு, வனத்தில் ஸந்தோஷமாக வேட்டையாடுகின்ற பல ராஜர்களை ஏமாற்றிக் கொன்றனன். புருஷஸ்ரேஷ்டனே! இவன் பல மாயைகளை அறிந்தவன். ஆகையால் இவன் மாயையே இங்ஙனம் காந்தி விளங்கப்பெற்றுக் [1] கந்தர்வநகரம் போல் பொய்யேயாகி மிகவியப்பைத் தருகின்ற இந்த

---

1 கந்தர்வநகரமாவது—பலவித உருவத்துடன் வியப்புறும்படி தோன்றி நொடிப்பொழுதில் மறையுந்தன்மையதான மேகம். அது போன்று.

மானுருவமாயிருக்கின்றது. ஜகந்நாதனே! ராகவா! ரத்னம் போன்ற புள்ளிகளால் விசித்ரமாயிருக்கின்ற இப்படிப்பட்ட ம்ருகம் ப்ரபஞ்சத்தில் எங்கும் கிடையாதல்லவா! ஆகையால் இது மாயையே. இதில் ஸந்தேஹம் இல்லை' என்றனன். பரிசுத்தமான புன்முறுவல் விளங்கப்பெற்ற அம்மாதுசிரோமணி இங்ஙனஞ் சொல்லுகின்ற லக்ஷ்மணனைத் தடுத்து, அந்த ம்ருகத்தின் தோல்மேன்மைக்குப் புத்தி மயங்கி, மிக்க ஸந்தோஷத்துடன் ராமனைப் பார்த்து 'ஆர்யபுத்ரனே! மாஹாபாஹூ! இந்த ம்ருகம் மிக்க ஸுந்தரமாயிருக்கின்றது. ஆகையால் என் மனம் இதனிடத்தில் மிகவும் ஆசையுற்றிருக்கின்றது. இதைப் பிடித்துக் கொண்டு வருவாயாக. நமக்கு விளையாட உபயோகப்படும். இங்கு நமது ஆஶ்ரமத்தில் மிகவும் அழகாகப் புலப்படுந்தன்மையுள்ள ம்ருகங்களும் கவரிம்ருகங்களும் சாமர ம்ருகங்களும் ஆகப் பற்பல ம்ருகங்கள் குவியல் குவியலாகத் திரிகின்றன. நீண்ட புஜதண்டங்களுடையவனே! அப்படியே மேலான உருவம்பொருந்தி மனத்தை மயக்கும்படியான கரடிகளும் புள்ளிமான்களும் குரங்குகளும் கின்னரம்ருகங்களும் நமது ஆஶ்ரமத்தில் திரிகின்றன. ராஜனே! இம் மேலான ம்ருகத்தில் எப்படிப்பட்ட வர்ணமும் இனிப்பும் மிகுமிகுப்பும் புலப்படுகின்றனவோ, அப்படிப்பட்ட வர்ணம் முதலானவை அமைந்து இதற்கு ஒப்பாயிருக்கும் மிருகத்தை இதுவரையில் நாம் பார்த்ததில்லை. வர்ணங்களோடு கூடி விசித்ரமான அங்கங்கள் பொருந்தி ரத்னங்கள் போன்ற புள்ளிகள் மேனியில் எங்கும் நிரம்பப்பெற்ற இந்த ம்ருகம் சந்த்ரன்போல் கண்ணுக்குக் குளிர்ந்து இந்தவனம் முழுவதையும் விளங்கச் செய்கின்றது. அப்பா! இது என்ன வர்ணம்! இது என்ன

காந்தி! இதன் கண்டத்வனியும் அழகாயிருக்கின்றது. அதுவே இதற்குப் பெரிய ஸம்பத்தாயிருக்கின்றது. விசித்ரமான அவயவங்களோடுகூடி வியப்புறச் செய்கின்ற இந்த ம்ருகம் என்மனத்தை எவ்வளவோ இழுத்து மயக்குகின்றது. இந்த ம்ருகம் ப்ராணனோடு உனக்குப் பிடிபடுமாயின், இப்பொழுது நம்மெல்லோர்க்கும் ஆச்சர்யத்தை விளைவிக்கும். இனி வனவாஸந் தீர்ந்து மீளவும் ராஜ்யத்திலிருக்கும்பொழுதும் ஆச்சர்யத்தை விளைவிப்பதாகும். இவ்வளவுமாத்ரமேயன்றி இப்பொழுது இம்மிருகம் நம் அந்தப்புரத்திற்கு அலங்காரமுமாயிருக்கும். ப்ரபுவே! சிறந்ததாகிய இந்த மிருகத்தின் உருவம் அயோத்யையில் பரதனுக்கும் உனக்கும் என் மாமிமார்களுக்கும் எனக்கும் ஸந்தேஹமின்றி வியப்பை விளைவித்துக் கொண்டிருக்கும். இந்த மேலான மிருகம் ப்ராணன்களோடு உனக்குப் பிடிபடாதாயின், செத்துப் போன இதன் தோலாயினும் எனக்கு இனிப்பை விளைத்துக் கொண்டிருக்கும். இதைக் கொன்று கொண்டு வருவாயாயின், இதன்தோலை, இளம்புற்களால் செய்யப்பட்ட ஆஸனத்தின்மேல் பரப்பிக்கொண்டு அதன்மேல் உன்னுடன் உட்கார விரும்புகின்றனன். ஸ்த்ரீகள் இங்ஙனம் தமது இஷ்டப்படி பர்த்தாக்களைத் தூண்டிவிடும் நடத்தை பயங்கரமாயிருப்பது. இதுஸ்த்ரீகளுக்கு எவ்வளவும் தகாது; ஆயினும் இந்த ம்ருகத்தின் உருவத்தைப் பார்க்கையில் எனக்கு எங்குமில்லாத குதூஹலம் உண்டாகின்றதே! கொண்டு வா என்னலாகாது? உனக்குங் கூட இதில் குதூஹலம் இருக்குமாயின், கொண்டு வருவாய்' என்றனள். இந்த்ர நீலம் போன்ற கொம்புகளுடையதாகிப் பொன்வர்ணமுடைய மயிர்களின் நிகுநிகுப்பினால் பாலஸூர்யன்போன்று தளதள

வென்று விளங்குகின்ற நக்ஷத்ரங்களையுடைய ஆகாயம் போல் மின்மினுக்குகின்ற வெள்ளிப் புள்ளிகளோடு கூடின அந்த ம்ருகத்தைப் பார்த்தவுடனே ராமனது மனமும் வியப்புற்றது. இங்ஙனம் வேண்டிக்கொள்வது கேட்டும் தானே அற்புதமான அந்த ம்ருகத்தைப் பார்த்தும் ராமன் அதனுருவத்தில் ஆசைப்பட்டு ஸீதையும் தூண்டுகையில் ஸந்துஷ்டனாகித் தம்பி லக்ஷ்மணனைப் பார்த்து 'லக்ஷ்மணா! ஸீதைக்கு இந்த ம்ருகத்தின்மேல் இவ்வளவு ஆசை உண்டாயிருக்கின்றது; பார். இவ்வளவு மேலான ரூபமுடைய இப்படிப்பட்ட ம்ருகம் எங்குமே இல்லை; ஆகையால் இப்பொழுது இவ்வனத்தில் அகப்படாது. லக்ஷ்மணா! இதற்கொப்பான ம்ருகம் நந்தனவனத்திலும் சைத்ரரதமென்னும் குபேர உத்யானத்திலும் அகப்படாது. இனிப் பூமியில் அகப்படுவது ஏது? இந்த மிருகத்தின் சரீரத்தில் எதிர்முகமாகத் திரிம்பியும் ஒருமுகமாகச் சாய்ந்துமிருக்கிற மயிர்களின் வரிசைகள் பொன்புள்ளிகளால் விசித்ரங்களாகி மிகவும் விளங்குகின்றன. இம்மிருகம் கொட்டாவிவிட்டு வாய் திறக்கும்போது இதனுடைய நாக்கு வாயிலிருந்து வெளிவந்து அக்னிஜ்வாலைபோல் விளங்கி, மேகத்தினின்று வெளிப்பட்டுத் தோற்றுகிற மின்னற்கொடிபோல் ப்ரகாசிக்கின்றது, பார். இந்த்ரநீலத்தாற் செய்த கிண்ணம்போன்ற முகமும், சங்குபோலும் முத்துக்கள்போலும் வெளுத்த வயிறும் விளங்கப்பெற்று இனிப்பை விளைப்பதாகிய, இவ்வழகிய ம்ருகம் எவனுடைய மனத்தைத்தான் மயக்காது? ஸாமர்த்யமுடையவனே! பொன்மயமாகிப் பலவிதரத்னம்போன்ற புள்ளிகள் அமைந்து ஸுந்தரமாயிருக்கின்ற இதன் திவ்யரூபத்தைப்பார்த்து எவனுடைய மனந்தான் ஆச்சர்யப்படாதிருக்கும்?



1442. ஸீதை மாயாம்ருகத்தைக் கண்டு வேண்டுதல்.

லக்ஷ்மணா! ராஜாக்கள் மஹாரண்யத்தில் மாம்ஸத்திற்காகவும் வில்வித்தையில் தமக்குள்ள ஸாமர்த்யத்தை விளங்கச்செய்துகொண்டு விளையாடுவதற்கும் வேட்டையில் ம்ருகங்களை வதிக்கின்றனர். இனி இப்படிப்பட்ட விசித்ர வஸ்துவைக் கண்டால் சொல்லுவது சொல்ல வேண்டுமோ? ராஜாக்கள் மஹாவனத்தில் வேட்டையாடும் வ்யாபாரத்தினால் யானைகளின் மண்டையிலுள்ள முத்துக்கள் முதலிய தனங்களையும் மேலான ரத்னங்களும் ஸ்வர்ணமும் பொருந்தின பலவகைப்பட்ட தாதுக்களையும் தேடிப்பெறுவார்கள். இதுவும் இவ்வனத்தில் மஹாதனமே யாகையால் இதை வேட்டையாடிக் கொண்டு வருவது யுக்தமே யன்றோ! லக்ஷ்மணா! சுக்ரன் மனத்தில் விரும்பும் தனங்களெல்லாம் அப்படியே உண்டாகி அவன் பொக்கசத்தை நிரம்பச் செய்வதுபோல், வனத்தில் அகப்படக்கூடிய பலவகைப்பட்ட வஸ்துக்களில் சிறந்தவையெல்லாம் மனிதர்களின் பொக்கசத்தை நிறைப்பனவாகும். ஆயினும் 'எந்தக் கார்யத்தையும் விசாரித்தே செய்யவேண்டும்' என்கிறாயோ? வஸ்துவை விரும்புமவன், எந்த வஸ்துவின் மேன்மையைப் பார்த்து விரும்பி முன்பின் விசாரியாமல் அதைச்சாதிக்கவேண்டுமென்று முயற்சி கொள்வானோ, நீதிசாஸ்த்ரம் அறிந்தவர்களும் பொருள் கைசோராதிருக்கப் பெற்ற தனிகர்களும் அதையே ஆசைப்படத் தகுந்த பொருளென்று கூறுவார்கள். இதுவும் அப்படிப்பட்டதேயாகையால் இவ்விஷயத்தில் விசாரிக்கவேண்டியதில்லை. இந்த ம்ருகஶ்ரேஷ்டத்தின் உயர்ந்த விலையுள்ள பொன்வர்ணமான சர்மத்தில் நுண்ணிடையுடைய ஸீதை என்னுடன் உட்காருவாள். கதளியென்னும் மான்தோலும் ப்ரியகமென்னும் மான்தோலும் ப்ரவேணியென்னும் மான்தோலும் அவியென்னும் ஆட்டின்தோலும்மென்

மையில் இதற்கு ஒப்பாகா என்று எனக்குத் தோற்று கின்றது. காந்தி விளங்கப் பெற்ற இந்த ம்ருகமும் ஆகாயத்தில் திரிகின்ற ம்ருகசீர்ஷமென்னும் திவ்ய ம்ருகமும் ஆகப் பூமி ம்ருக நக்ஷத்ரம்ருகங்களாகிய இவ் விரண்டு ம்ருகங்களே சிறந்த ம்ருகங்கள். லக்ஷ்மணா! நீ என்னோடு சொன்னபடி இது மாரீசனுடைய மாயையே ஆகுமாயின், அப்போதும் இதை அவஶ்யம் கொல்ல வேண்டியதே. முன்பு க்ரூரனும் துஷ்டஸ்வபாவனுமாகிய இம்மாரீசன் இவ்வனத்தில் திரிந்துகொண்டு பல முனிவர்களைக் கொன்றிருக்கின்றனன். இது வேட்டைக்கு வந்த பெருவில்லாளிகளாகிய பல ராஜாக்களைக் கொன்றிருக்கிறதாகையால் இதை அவஶ்யம் கொல்ல வேண்டும்; முன்பு இந்தத் தண்டகாரண்யத்தில் வாதாபி யென்னும் ராக்ஷஸன் ஒருவன் ரிஷிகளை நிராகரித்துத் தான் ஆட்டுருவந் தரித்து அவர்க்குத் தின்னும் ஆஹாரமாகி அவரது உதரத்தைச் சேர்ந்து, கோவேறு கழுதை ஈனும்பொழுது அதன் கருவு வயிற்றைப் பிளந்து வெளிவந்து அதைக் கொல்லுவதுபோல் அந்த ரிஷிகளின் வயிற்றைப் பிளந்து அவர்களை வதித்துக் கொண்டிருந்தனன். அவன் அப்படியிருந்து வெகுகாலங் கழிந்த பின்பு ஒருகாலத்தில் மாம்ஸத்திலுள்ள பேராசையால் ப்ரபாவம் பொருந்திய அகஸ்த்யமாமுனியின் அருகிற் சென்று அவர்க்கு ஆஹாரமாயினன். பகவானாகிய அகஸ்த்யர் ஶ்ராத்தத்தின்முடிவில் அந்த வாதாபி தம்வயிற்றைப் பிளந்துகொண்டு நிஜரூபத்தைப்பெற விரும்புகையில் அது கண்டு கொஞ்சம் சிரித்து வாதாபியைக்குறித்து 'வாதாபீ! நீ பூலோகத்தில் பாபமென்றுங் கூட விசாரியாமல் பல ப்ராஹ்மணோத்தமர்களைக் கொலை செய்தனை. அதனால் நீ என்னுதரத்தில் ஜீர்ண

மாயினே' என்றனர். லக்ஷ்மணு! தர்மத்தில் இடைவி டாமல் நிலைநின்று இந்த்ரியங்களை அடக்கிக்கொண்டி ருக்கிற என்னைப்போன்றவனை அதிக்ரமிப்பானாயின் இம் மாரீசன் வாதாபியைப்போலவே பூமியிலிருக்கமாட் டான். அகஸ்த்யரால் வாதாபி ஹதனானாற்போல, என்னி டம் வந்த இவன் என்னால் ஹதனாகட்டும். லக்ஷ்மணு! நீ இங்கு ஸந்நத்தனாகி ஜாக்ரத்தையுடன் ஸீதையைப் பாது காத்திருப்பாயாக. ரகுநந்தனு! நமக்குச்செய்யவேண்டிய கார்யங்களெல்லாம் இந்த வைதேஹியிடத்திலேயே ஆயத்தமாயிருக்கின்றன. நம் கார்யமெல்லாம் இவளை ரக்ஷிப்பதற்காகவே. லக்ஷ்மணு! நான் இந்த ம்ருகத்தை முடியுமானால் பிடித்துக்கொண்டு வருகிறேன்; இல்லை யாயின் அடித்துக் கொன்று விடுகிறேன். நான் இதோ இந்த மானைக்கொண்டு வர வேகமாகப் போகிறேன். லக்ஷ்மணு! இந்த ம்ருகத்தின் தோலில் ஸீதைக்கு ஆசையுண்டாயிருப்பதைக் கண்டனையா. ஆகையால் முக்யமாக இதன் தோலைப்பற்றியே இது பிழைக்காது. நான் ஒரு பாணத்தால் இந்த ம்ருகத்தைக் கொன்று திரும்பும் வரையில் நீ ஸீதைக்காக ஆஶ்ரமத்திலேயே நின்று எவ்வளவும் ஏமாறாமல் காத்திருக்கவேண்டும். லக்ஷ்மணு! நான் இந்த மானைக்கொன்று தோலை எடுத் துக் கொண்டு சீக்ரமாக வருகின்றனன். லக்ஷ்மணு! மஹாஸமர்த்தனும் மஹாபலசாலியும் மிகுந்த புத்தி யுடையவனுமாகிய ஜடாயுவென்னும் பறவையுடன் நீ ஸீதையை அருகில் வைத்துக்கொண்டு ராக்ஷஸாதிக ளால் என்ன வருமோவென்று க்ஷணந்தோறும் சந் தித்து நாற்புறமும் உற்றுப் பார்த்துக்கொண்டு எவ் வகைப் பராக்குமின்றிக் காத்திருக்கவேண்டும்' என்ற னன். நாற்பத்து மூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராமன் மாயாம்ருகத்தைப் பின்தொடர்ந்து அது அகப்படாமையால் பாணந்தொடுத்தலும், அது ஸீதே! லக்ஷ்மண! என்று மடிதலும், ராமன் ஆஸ்ரமத்திற்குத் திரும்பி வேகமாக வருதலும்.

மஹாபராக்ரமசாலியாகிய ராமன் அவ்வண்ணம் தம்பியை ஆஜ்ஞாபித்துப் பொற்பிடியுடைய கத்தியை இடையில் கட்டிக்கொண்டனன். அனந்தரம் கொடும் பராக்ரமசாலியாகிய அந்த ராகவன் மூன்று வளைவுடையதும் தனக்கு ஆபரணமாயிருப்பதுமாகிய தனுஸ்ஸைக் கையில் ஏந்தி அம்பறுத்தூணிகளிரண்டையும் தோள்களில் கட்டிக்கொண்டு போயினன். அந்த ராஜஸ்ரேஷ்டனாகிய ராமன் தன்மேல் எதிர்த்து வருவது கண்டு மாரீசன் அவனை வஞ்சிக்கத் தொடங்கிப் பயத்தினால் கொஞ்ச நேரம் மறைந்திருந்து மீளவும் அவனுக்குப் புலப்பட்டனன். ராமன் கத்தியை இடையில் கட்டிக்கொண்டு வில்லைக் கையிலேந்தி ம்ருகம்போன வழியே தொடர்ந்தோடினன். பிறகு அந்த மருகம் காந்தியின் மிகுதியால் எதிரில் பளபளவென்று விளங்கி, அம்மஹாரண்யத்தில் கையும் வில்லுமாகப் புலப்படுகின்ற அந்த ராமனைப் பார்க்கும் பொழுதெல்லாம் பயந்தாற்போல் ஓடியும் தொடுத்துவிடும் பாணம் தன்மேல் படாதபடி தப்புவித்துக்கொண்டும், ஒருகால் கையில் அகப்படுவதுபோல் ஆசையுறுவித்தும், ஒரு ஸமயம் ராமனிடத்தில் பயந்தாற்போல் ஆகாயத்தில் கிளம்பிக் குதித்தோடியும், சரத்காலத்து மேகத்துண்டங்களில் மறைந்திருக்கும் சந்த்ரன்போல் வனப்ரதேசங்களில் சில இடங்களில் புலப்பட்டும் சில இடங்களில் மறைந்தும் ஓடிக்கொண்டிருக்கையில் ராமன் அச்சேஷ்டைகளைப் பார்த்துக்கொண்டே தொடர்ந்துசென்றனன். அந்த மாயாம்ருகம் ஒரு முஹூர்த்த காலத்தில் அருகில் வந்து தோற்றியும் அடிக்கடி தூரம்போய் புலப்படுவதுமாகிப் பலவாறு ம்ருக சேஷ்டைகளைச் செய்தது. இங்ஙனம் ம்ருக ரூபந்தரித்த மாரீசன் ஒரு கால் புலப்பட்டும்

ஒருகால் மறைந்தும் இப்படி ராமனை ஆஶ்ரமத்தினின்று வெகுதூரம் இழுத்துக்கொண்டு போயினன். ராமன் அந்த ம்ருகசேஷ்டைகளுக்குச் சிறிதுநேரம் கோபித்தும், அதன் அழகைப்பார்த்து வஞ்சிக்கப்பட்டுச் சிறிது நேரம் குதூஹலமுற்றும் அதன் பின் சென்றனன். இங்ஙனம் அதன் பின்சென்று வெகுதூரம் போகையால் கொஞ்சம் இளைப்புற்று ஒரு வ்ருக்ஷத்தின் நிழலில் பசும்புற்கள் நிறைந்த இடத்தில் நின்றிருந்தனன். ம்ருகரூபந் தரித்த அம்மாரீசன் ராமனை வெகுதூரம் இழுத்துக்கொண்டு போகையால் மனமயங்கச் செய்தனன். அந்த மாயாம்ருகம், மீளவும் ராமன் ஆசையுற்றுத் தன்னைப் பின்றொடரும்பொருட்டு, அரண்யத்திலுள்ள மான்கள் தன்னைச் சுற்றிலும சூழ்ந்திருக்கப்பெற்று அருகில் வந்து தோற்றிற்று. அங்ஙனம் தோற்றுகையால் ராமன் தன்னைப் பிடிக்க விருப்பமுறுகையில், அது கண்டு மீளவும் ஓடிற்று. அப்பொழுதே மறுபடியும் பயந்து கண்ணுக்குப் புலப்படாமல் மறைந்தது. பிறகு மீளவும் தூரத்தில் அது ஒரு வ்ருக்ஷஸமூஹத்தினின்று வெளிப்பட்டு வருவது கண்டு மஹாதேஜஸ்வியாகிய ராமன் அதை அடிக்கவேண்டுமென்று நிச்சயித்தனன். பிறகு சத்ருக்களை யடக்குந்தன்மையுள்ள ராகவன் மிகுந்த கோபாவேசங்கொண்டு ஸூர்யகிரணம்போல் பளபளவென்று ஜ்வலிக்கின்ற பாணத்தை எடுத்து மிகவும் திடமான தனுஸ்ஸில் தொடுத்து மஹாபலனுகையால் பலமுள்ள தனையுங்காட்டிக் காது வரையிலும் நாணை இழுத்துப் பயத்தினால் ஸர்ப்பம் போல் பெருமூச்சுவிடுகின்ற அந்த ம்ருகத்தைக் குறி செய்து ப்ரஹ்மாவால் நிருமிக்கப்பட்டுத் தகதகவென்று ஜ்வலிக்கின்ற அந்தத் திவ்யாஸ்த்ரத்தை ப்ரயோகித்தனன். இடிபோன்றதும் மிகச் சிறப்புடையதுமாகிய

அந்த ராகவபாணம் முதலில் மாரீசன் தரித்த ம்ருக சரீரத்தைப் பிளந்து, பிறகு அதிலுள்ள அவனுடைய சரீரத்தைப் பிளந்தது. அனந்தரம் அவன் பாணத்தால் பீடிக்கப்பட்டுப் பனைமரத்தளவு உயர எழும்பி மிகப் பயங்கரமாக இறைச்சலிட்டு ப்ராணன் ஒடுங்கத் தரையில் வீழ்ந்தனன். மாரீசன் மரணம் அடைபவனுகித் தனக்குள் 'ஸீதை, லக்ஷ்மணனை இங்கு அனுப்புவதற்கு என்ன உபாயம்? அப்படி அனுப்பினுலன்றோ எவரும் இல்லாதபொழுது ராவணன் ஸீதையை அபஹரிக்க முடியும்' என்று ஆலோசித்தனன். அந்த மாரீசன் ஸமயம் இதுவென்று தெரிந்துகொண்டு ராமனது கண்டத்வனிபோன்ற குரலுடன் 'ஐயோ! ஸீதே! லக்ஷ்மணு!' என்று கூச்சலிட்டனன். ராமன் ப்ரயோகித்த நிகரில்லாத அந்தப் பாணம் மர்மத்தில் படுகையில், பெருஞ் சரீரமுடைய அந்த மாரீசன் ம்ருகரூபத்தை விட்டுத் தனக்குள்ள ராக்ஷஸ ரூபத்தை அடைந்து ப்ராணன்களை விட்டனன். அனந்தரம் ராமபாணத்தால் அடியுண்ட அந்த ம்ருகம், விசித்ரமான தோள்வளைகள் விளங்கப்பெற்று மற்றுமுள்ள ஸமஸ்த ஆபரணங்களையும் அணிந்து ஸ்வர்ணமாலை தரித்துப் பெருங்கோரைப் பற்களோடுகூடிய ஓர் அரக்கனுயினன். ராமன், தரையில் வீழ்ந்து உடம்பு முழுவதும் ரக்தத்தினுல் நனைந்து பூமியில் புரளுகின்ற பயங்கரமான காட்சியுடைய ராக்ஷஸனைப் பார்த்து லக்ஷ்மணன் சொன்ன வார்த்தையை நினைத்துக்கொண்டு ஸீதையிடம் மனஞ் செல்லப்பெற்றனன். அவன் தனக்குள் 'இது மாரீசனுடைய மாயையே. மற்றென்றும் அன்று' என்று லக்ஷ்மணன் முன்னமே சொல்லினன். அது அப்படியே ஆயிற்று. நான் இப்பொழுது கொன்ற இந்த ராக்ஷஸன் மாரீ



1448. மாரீசன் ராமனால் அடிக்கப்பட்டு வீழ்தல்.

சனே. இந்த ராக்ஷஸன், நான் கூப்பிட்டாற்போல் 'ஐயோ! ஸீதே! லக்ஷ்மணு!' என்று உரக்க முறையிட்டு ப்ராணன்களை விட்டனன். இதைக் கேட்டு ஸீதை என்னபடுவாளோ! எப்படி இருப்பாளோ! மஹாபாஹு வாகிய லக்ஷ்மணனும் என்ன அவஸ்தை அடைவானே?' என்று பலவாருகச் சிந்தித்துக் கொண்டிருக்கையில், அந்த தர்மஸ்வபாவனுக்குப் பயத்தால் தேஹம் மயிர்க் கூச்சல் அடைந்தது. அங்ஙனம் ராக்ஷஸன் ம்ருகரூபந் தரித்துவர அவனைத் தான் கொல்ல, அவன் அந்த ஸ்வரத்துடன் கூப்பிட்டது கேட்டு 'இவை யெல்லாம் ஏதோ ஒரு துக்கத்திற்காக ஏற்பட்டன' என்று துக் கத்தினல் மிகுந்த பயமுற்றனன். ராமன் பிறகு மற் ருெரு ம்ருகத்தையும் கொன்று அதன் மாம்ஸத்தை எடுத்துக்கொண்டு வேகத்துடன் ஜனஸ்தானத்திலிருக் கும் தனது ஆஶ்ரமத்தின் வழியைப் பிடித்து அதற்கு எதிர்முகமாகப் போயினன். நாற்பத்து நான்காவது ஸர்க்கம் முற்றிறறு.

---

ஸீதை மாரீசன்செய்த சப்தத்தைக்கேட்டு லக்ஷ்மணனை ராமனிடம் போகும்படி ஏவுதலும், லக்ஷ்மணன் ராமனிடம் போகப் புறப்படுதலும்.

ஸீதை தன் கணவனது குரல்போலிருக்கின்ற அந் தத் துக்கத்வனியைக் கேட்டு லக்ஷ்மணனைப் பார்த்து 'போ, ராமனுக்கு என்னயிற்றே தெரிந்துகொள்வாய். ராமன் மிகவும் வருந்தி முறையிடும் த்வனியைக் கேட்ட னன். இனி என் மனமாவது ப்ராணன்களாவது நிலை நின்றிருக்கமாட்டா அல்லவா! அரண்யத்தில் கதியின்றி முறையிடுகின்ற உன் ப்ராதாவைக் காப்பாயாக. இப்

பொழுது உனக்கு இதுவே செய்யத்தகுந்த கார்யம். ஸிம்ஹங்களின் வசம் அகப்பட்ட காளையெருதுபோல், ராக்ஷஸர்கையில் அகப்பட்டுக் காக்குந்திக்கின்றி அலே கின்ற உன் ப்ராதாவாகிய அந்த ராமனிடம் விரைந்து செல்வாயாக' என்றனள். ஸீதை அங்ஙனம் எவ்வளவு சொல்லினும் அவன் ப்ராதாவின் ஆஜ்ஞையை நினைத் துப் போகவில்லை. அனந்தரம் ஸீதை கோபத்துடன் அவனைப் பார்த்து 'லக்ஷ்மணா! உன் ப்ராதாவுக்கு இப் படிப்பட்ட துரவஸ்தை வந்திருந்தும் அவனை ரக்ஷிக்கப் போகாதிருக்கின்றனையே! ஆகையால் நீ உன் ப்ராதா வுக்கு மேலுக்கு மித்ரன்போல் புலப்படுகிறாயல்லது, வாஸ்தவத்தில் சத்ருவே! லக்ஷ்மணா! நீ, எனக்காக ராமன் நாசமடையவேண்டுமென்று விரும்புகின்றனை. என்னிடத்தில் ஆசைப்பட்டிருக்கிறாயாகையால் என் னைப்பற்றி ராமன் கதியைப் பார்க்கப் போகாதிருக்கின் றனை. இது நிச்சயம். ராமனுக்குக் கஷ்டம் வருவதே உனக்கு ப்ரியமென்று எனக்குத் தோற்றுகின்றது. உனக்கு ப்ராதாவினிடத்தில் எள்ளளவும் ஸ்னேஹம் இல்லை. ஆகையால் பேரொளியனாகிய அம்மஹாநு பாவனுக்கு ஆபத்து நேரிட்டிருந்தும் போய்ப் பாராமல் ஸுகமாயிருக்கின்றனை. 'உன்னைக் காப்பதை விட்டு எப்படி போவேன்' என்கிறாயோ? நீ முக்யமாக ராமனைப் பற்றி இங்கு வந்தவனேயன்றி என்னைப்பற்றி அன்று. அப்படிப்பட்ட ராமன் ப்ராண ஸந்தேஹம் பெற்றபின்பு நான் இந்த ஆஶ்ரமத்திலிருந்து செய்ய வேண்டிய கார் யம் என்னிருக்கின்றது? ஆகையால் என்னை ரக்ஷிப்ப தற்காக நீ இங்கிருக்க வேண்டியதில்லை' என்றனள். இங்ஙனம் சொல்லிக் கண்ணீர் பெருக்கிக்கொண்டு சோ கத்திலாழ்ந்து பயந்த பெண்மான்போல் சபலையாயிருக்

கின்ற ஸீதையைப் பார்த்து லக்ஷ்மணன் இங்ஙனம் மொழிந்தனன்:— 'வைதேஹி! பன்னகர்களாயினும் அஸுரர்களாயினும் கந்தர்வர்களாயினும் தேவதைகளாயினும் மனுஷ்யர்களாயினும் ராக்ஷஸர்களாயினும் உன் பர்த்தாவாகிய ராமனை ஜயிக்க வல்லரல்லர். இதற்கு ஸந்தேஹம் இல்லை. தேவீ! மங்கலரூபிணி! யுத்தத்தில் தேவேந்த்ரனைப்போன்ற ராமனோடு எதிரிட்டு யுத்தஞ் செய்பவன் தேவதைகளிலாவது மனுஷ்யர்களிலாவது கந்தர்வர்களிலாவது பக்ஷிகளிலாவது ராக்ஷஸர்களிலாவது பிசாசர்களிலாவது கின்னரர்களிலாவது ம்ருகங்களிலாவது பயங்கரமான உருவமுடைய தானவர்களிலாவது நேரமாட்டான். ராமனை யுத்தத்தில் வதிக்க எப்படிப்பட்டவர்க்கும் ஸாத்யமன்று. ஆகையால் நீ இங்ஙனம் சொல்லவேண்டாம். ராமன் இல்லாதபொழுது உன்னை இந்த வனத்தில் தனியே விட்டுப்போக எனக்குத் தைர்யம் உண்டாகவில்லை. மிகவும் பலிஷ்டர்களாயிருப்பவர் பலங்களைக் கூட்டிக்கொண்டு வருவார்களாயினும், இவ்வளவென்! தேவேந்த்ரனோடும் தேவதைகளோடுங்கூடி மூன்று லோகங்களும் ஸந்நத்தர்களாகி ஒரு பிடியாக எதிர்த்து வந்தாலும் ராமனது பலத்தைத் தடுக்கமுடியாது. மனத்தில் ஸமாதானம் பெறுவாயாக. இந்த மனவருத்தைத் துறப்பாயாக. உன் கணவன் அந்த மஹாம்ருகத்தைக் கொன்று சீக்ரத்தில் வருவான். நாம் கேட்ட குரலும் ராமனுடைய குரலன்று. எவனோ ஒருவன் மாயையால் இப்படி செய்தானென்பதே நிச்சயம். எவனோ அன்று; கந்தர்வநகரம்போல் விசித்ரமாகி மனமயக்கம் விளைக்கவல்ல ராக்ஷஸனாகிய அந்த மாரீசனது மாயையே அது. விதேஹராஜன் புதல்வியே! நீ, நான் காத்து ஒப்புவிக்கவேண்டிய வஸ்துவாயிருக்கின்றனை. சிறந்த இடையின் பின்

புறமுடைய மாதரசே! மஹானுபாவனாகிய ராமன் உன்னைப் பாதுகாக்கும்படி என்னிடத்தில் ஒப்புவித்துவிட்டுப்போயினன். ஆகையால் உன்னை இவ்வரண்யத்தில் தனியே விட்டுப்போக வல்லமையற்றிருக்கின்றனன். வைதேஹீ! மேலும் இங்குள்ள ராக்ஷஸர்கள் தமது ஸ்வாமியாகிய கரனைக் கொன்றதனாலும் 'ஜனஸ்தான வதத்தினாலும் நம்மேல் பகைகொண்டிருக்கின்றனர். அவர்கள் ஹிம்ஸையையே விளையாட்டாகவுடையவர்; நம்மை ஹிம்ஸிக்க விரும்பி மனமயங்கச் செய்வதற்காக இம்மஹா வனத்தில் பலவிதமான வார்த்தைகளை நடத்திக்கொண்டிருக்கின்றனர். இதைப்பற்றி நீ சிந்திக்க வேண்டாம்' என்றனன். லக்ஷ்மணன் இவ்வாறு கூறுகையில், ஸீதை கோபித்துக்கொண்டு மிகவும் கண்கள் சிவக்கப்பெற்று ஸத்யவாதியாகிய லக்ஷ்மணனைப் பார்த்துக்கொடிய மொழி மொழிந்தனள்:—துஷ்டஸ்வபாவனே! மன இரக்கமில்லாத கொடுஞ்செயலுக்குத் துணிந்தவனே! கொடுந்தன்மையுடையவனே! குலத்தைக்கெடுக்க வந்தவனே! ராமனுக்கு மஹாவ்யஸனம் உண்டானது உனக்கு ப்ரியமேயென்று எனக்குத் தோற்றுகின்றது. ஆனது பற்றியே ராமனுக்கு இப்படிப்பட்ட வ்யஸனம் நேர்ந்திருப்பது கண்டும் அவனைப் பாதுகாக்கப் போகாமல் இந்த வார்த்தைகளெல்லாம் பேசுகின்றனை. லக்ஷ்மணா! எப்பொழுதும் மேலுக்கு மித்ரன்போல் நடனஞ் செய்துகொண்டு திரியும் சத்ருக்களும் க்ரூரர்களுமாயிருக்கிற உன்னைப்போன்றவர்களுக்கு இப்படிப்பட்ட பாபபுத்தி உண்டாவது ஓர் ஆச்சர்யம் அன்று. நீ மிகவும் துஷ்டன்; ஆகையால், நீயாகவோ, அல்லது பரதன் தூண்டி அனுப்பினதாலோ, என் நிமித்தமாகக் கபடவேஷம் பூண்டு நீயொருவன் எல்லோரையும் விட்டு

ராமனொருவனை அரண்யத்தில் பின்றொடர்ந்து வருகின்றனை. லக்ஷ்மணா! என்னைப் பெறவேண்டுமென்கிற அம்முயற்சி உனக்காயினும் பரதனுக்காயினும் ஸித்திக்காது. நருநெய்தல்போல் கறுத்த மேனியின்வர்ணம் அமைந்து தாமரையிதழ்போன்ற கண்கள் விளங்கப் பெற்ற ராமனைப் பர்த்தாவாகப்பற்றி மற்றொரு அல்ப புருஷனை எப்படி விரும்புவேன்? ஸௌமித்ரா புத்ரனே! உன்னெதிரிலேயே ப்ராணன்களை விடுவேன். இதற்கு ஸந்தேஹம் இல்லை. ராமனை விட்டு க்ஷணமாயினும் பூமியில் பிழைத்திரேன்' என்றனள். ஸீதை இப்படி உடம்பெல்லாம் மயிர்க்கூச்சலுண்டாகும்படி உரைத்த பருஷ வாக்யத்தைக் கேட்டும் லக்ஷ்மணன் ஜிதேந்த்ரியனாகையால் கலக்கமின்றி அஞ்சலி செய்து 'நான் உனக்குப் பதில் சொல்ல முயற்சி கொள்ளேன். நீ எனக்குத் தெய்வம்போல் பூஜிக்கத் தகுந்தவள். மைதிலியே! இப்படி மிகவும் அனுசிதமான வார்த்தை சொல்வது ஸ்த்ரீகளிடத்தில் ஓர் அற்புதம் அன்று. ஸ்த்ரீகளுக்கு இது ஸ்வபாவமே. உலகத்தில் எங்கும் இப்படியே புலப்படுகின்றது. ஸ்த்ரீகள் விநயம் முதலான தர்மங்களைக் கைவிட்டவர்; சஞ்சலமான மனமுடையவர்; க்ரூரஹ்ருதயர்கள்; எப்படிப்பட்ட நண்பர்களுக்கும் விரோதத்தை விளைப்பார்கள். வைதேஹீ! நீ ஜனகராஜன் வயிற்றில் பிறந்தும் இப்படி பேசுவது உனக்குத் தகுதியன்று. நீ சொன்னவார்த்தை என் காதுகளிரண்டுக்கும் நெருப்பில் காய்ச்சின நாராசம் போலிருக்கின்றது. இப்படிப்பட்ட வார்த்தையை நான் பொறுக்க வல்லனல்லேன். ந்யாயவாதியாகிய என்னைப் பார்த்து நீ எப்படி அந்யாயமாகப் புருஷவார்த்தைகளை மொழிந்தனையோ, அவற்றையெல்லாம் இவ்வனத்தில் திரிகின்ற தேவதைகள் அனைவரும் ஸாக்ஷிகளாயிருந்து கேட்பார்களாக. பெரியோனாகிய அண்ணனது ஆஜ்ஞையில் நிலை நின்றிருக்கிற என்னைக் குறித்து

இப்படி ஸந்தேஹிக்கின்றனையே. இதற்கு உன்னைப் பழிக்கவேண்டும். சீ! நீ என்ன! இப்பொழுதே நீ நசிப்பாயாக. பெண்மை இயற்கையாகவே துஷ்டமானது. சிறந்தமுக முடையவளே! நான் ராமனிருக்கு மிடத்திற்குப் போகின்றனன். உனக்குச் சுபம் உண்டாகுமாக. அகன்ற கண்களுடையவளே! உன்னை வனதேவதைகள் அனைவரும் மனவூக்கத்துடன் ரக்ஷிப்பார்களாக. ஜானகி! இப்பொழுது எனக்குத் தோற்றுகிற அவசகுனங்கள் பயங்கரமாயிருக்கின்றன. ஆகையால் நான் மறுபடியும் திரும்பி வந்து ராமனோடுகூட உன்னைப் பார்ப்பேனோ! பார்க்க மாட்டேனோ! இது எனக்குத் தெரியவில்லை.' என்றனன். லக்ஷ்மணன் இப்படி சொல்லுகையில் ஸீதை ரோதனஞ் செய்துகொண்டு கண்ணீர் பெருக்கினால் நனைந்தவளாகி அவனைப் பார்த்து மீளவும் பருஷமாகச் சொல்லத்தொடங்கி 'லக்ஷ்மணா! நான் ராமனை விட்டுப்பிரிந்து ஒரு நிமிஷமாயினும் இருக்கமாட்டேன். கோதாவரியில் வீழ்ந்து ப்ராணன்களை விடுகிறேன். உச்சுருக்காவது போகட்டுக்கொள்கிறேன். இடுக்கான இடத்தினின்றும் வீழ்ந்தாவது தேஹத்தை விடுகிறேன். கொடிதான விஷத்தையாவது பானஞ்செய்கிறேன், நெருப்பிலாவது குதித்து விடுகிறேன். எவ்விதத்திலாவது ப்ராணன்களை விடுவேனன்றி வைத்துக்கொள்ளமாட்டேன். நான் ராமனைத் தவிர மற்றபுருஷனைப் பாதத்தினாலும் தொடமாட்டேன்' என்றனள். இங்ஙனம் ஸீதை லக்ஷ்மணனை நிந்தித்து வருந்தி அவ்வருத்தத்தின் மிகுதியால் ரோதனஞ் செய்துகொண்டு இரண்டு கைகளாலும் வயிற்றில் மோதிக்கொண்டனள். அகன்ற கண்களையுடைய அந்த ஸீதை மிகவும் வருத்தமுற்று ரோதனஞ் செய்து

கொண்டிருப்பதைக் கண்டு மனத்தில் வருந்துகின்ற லக்ஷ்மணன் ஸமாதானப்படுத்தினன். ஆனல் அவள் நல்ல வார்த்தை சொல்லும் வ்யாஜத்தினல் போகாமல் காலங்கழிக்கிருனென்று கோபித்தவளாகித் தனது பர்த்தாவின் உடன் பிறந்தவனுகிய அந்த லக்ஷ்மணனேடு ஒன்றும் பேசாதிருந்தனள். பிறகு தீரனுகிய லக்ஷ்மணன் ஸீதைக்கு வந்தனஞ் செய்து கைகூப்பிக் கோபாவேசத்தினல் கொஞ்சமாகவே நமஸ்கரித்துத் தனியே எப்படி விட்டுப்போகலாமென்று அடிக்கடி அவளைத் திரும்பிப்பார்த்துக் கொண்டே ராமனிடம் போயினன்.

நாற்பத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

லக்ஷ்மணன் சென்றதும் ராவணன் ஸந்யாஸியாக ஸீதையிடம் வந்து அவளழகைப் புகழ்தலும், ஸீதையை வ்ருத்தாந்தம் வினவுதலும், ஸீதை பதில் கூறுதலும்.

ராமனுடைய தம்பி லக்ஷ்மணன், ஸீதை இங்ஙனம் பருஷமாகச் சொல்லுகையில், கோபமூற்றவனுயினும் ஸீதையைத் தனியே விட்டுப்போக விருப்பமில்லாமையால் கால்கள் பின்னுக்கிழுக்க ராமனிடம் சீக்ரமாகப் போய்ச் சேரவேண்டுமென்னும் த்வரையுடன் ராமனைக் குறித்துப் புறப்பட்டனன். ராவணனும் அவகாசத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தனன். ஆகையால் அப்பொழுது லக்ஷ்மணனுங்கூடப் போகையால் ஸீதை தனியேயிருப்பது கண்டு ஸமயம் அகப்பட்டதென்று சீக்ரமாக ஸந்யாஸிரூபந் தரித்து ஸீதாதேவியைக் குறித்து வந்தனன். அந்த ராவணன் மழமழப்புடைய காவி வஸ்த்ரந் தரித்து அழகிய குடுமியுடையவனுகிக் குடை

யைப் பிடித்துக்கொண்டு பாதங்களில் பாதுகைகளை அணிந்து இடத்தோளில் அழகிய த்ரிதண்டத்தையும் அத்தகைய கமண்டலுவையும் வைத்து இங்ஙனம் ஸந்யாஸிவேஷத்துடன் ஸீதையிடம் வந்தனன். ஸூர்ய சந்த்ரர்கள் இல்லாதபோது பெரிய இருள் ஸந்தியைச் சூழ்வதுபோல் மஹாபாபிஷ்டனாகிய அந்த ராவணன் அண்ணனும் தம்பியுமாகிய ராமலக்ஷ்மணர்கள் இல்லாத ஸமயம் பார்த்து ஸீதையிடம் வந்தனன். அனந்தரம் மிகப்பயங்கரமான அங்காரகக்ரஹம் சந்த்ரனைப்பிரிந்த ரோஹிணியைப் பார்ப்பதுபோல், மஹாபயங்கரனாகிய ராவணன் ராமனைப் பிரிந்திருக்கிற அந்த இளம்பருவமுடையவளைப் பெரும்புகழமைந்தவளை ராமபத்னியைக் கண்டனன். ராவணன் பயங்கரமான தேஜஸ்ஸும் வ்யாபாரமுமுடையவனாகையால் அவனைப் பார்த்து ஜனஸ்தானத்திலுள்ள வ்ருக்ஷங்களெல்லாம் பயத்தினால் சிறிதும் அசையாதிருந்தன. காற்றும் நன்றாக வீசவில்லை. சீக்ரமாகப் பெருகுந் தன்மையுள்ள கோதாவரீநதியும் அந்த ராவணன் சிவந்த கண்களுடன் பார்க்கையில் பயத்தினால் அசைவதுமின்றி மெல்லமெல்ல நழுவத்தொடங்கிற்று. ராமன் பிரிந்து போகும் ஸமயத்தை எதிர்பார்த்துக்கொண்டிருந்த ராவணன், அவனில்லாத அந்த அவகாசத்தில் ஸந்யாஸி வேஷத்துடன் ஸீதையைக் கிட்டினன். அந்த துர்ஜ்ஜனன் ஸூஜனவேஷம் பூண்டு கணவனைக் குறித்துக் கவலையுற்றிருக்கின்ற ஸீதையிடம், சனி சித்ராநக்ஷத்ரத்தினிடம் வருவதுபோல் வந்தனன். அவன் புற்களால் மூடப்பட்ட கிணறு போல் மனத்தில் பாபிஷ்டனாகி மேலுக்கு ஸாதுவேஷம் போகட்டுக்கொண்டு பெரும்புகழுடையவளாகிய அந்த ராமபத்னியை ஸீதையைப் பார்த்துக்கொண்டு நின்றனன். மங்கலமே ஒருவடிவங்கொண்டாற்போலாகி,

அழகிய பல்வரிசைகளும் சிறந்த அதரமும் பூர்ணசந்த்ரன்போன்ற முகமும் அமையப்பெற்றுத் தாமரையிதழ் போன்ற அழகான கண்கள் விளங்கப் பொன்வர்ணமுடைய பட்டுவஸ்த்ரம் தரித்து ராமனது துக்கத்வனியைக் கேட்டபடியால் மனங்குதிரப்பெறுமல் கண்ணீர் பெருக்கிக்கொண்டு பர்ணசாலையில் உட்கார்ந்திருக்கின்ற அந்த ஸீதையினிடம் துஷ்டஸ்வபாவனுகிய அந்த ராவணன் வந்தனன். அந்த ராக்ஷஸர் தலைவன் மன்மத பாணங்களால் மனங் கலங்கப்பெற்று வேதாத்யயனஞ் செய்து கொண்டு எவரும் இல்லாத ஸமயத்தில் ஸீதையைப் பார்த்து வணக்கத்துடன் இவ்வாறு மொழிந்தனன். உலகமனைத்திலும் மேலாயிருப்பவளும் கையிலேந்தும் தாமரை மலரில்லாத லக்ஷ்மிபோல் புலப்படுகின்றவளும் தேஹகாந்தியால் பளபளவென்று விளங்குகின்றவளுமாகிய அந்தப் பெண்மணியைக் கண்டு, அந்த ராவணன் புகழத் தொடங்கினன்:— 'பொன்வர்ணமுடையவளே! பொன்வர்ணமுடைய பட்டு வஸ்த்ரந் தரித்திருப்பவளே! நீ யார்? தாமரை மலர்போன்ற கண்களும் கைகளும் கால்களுமுடையவளாகையால் தாமரைமலர்மாலை யணிந்த தாமரையோடைபோல் இருக்கின்றனை. அழகிய முகமுடையவளே! நீ பூதேவியா? கிர்த்தியா? மங்கலஸ்வரூபிணியாகிய ஸ்ரீ தேவியா? காந்திக்கு அதிஷ்டானதேவதையாகிய லக்ஷ்மியா? அப்ஸரஸ்த்ரீயா? அல்லது ஐச்வர்யத்தின் அதிஷ்டான தேவதையா? சிறந்த இடையின் பின்புறமுடையவளே! இஷ்டப்படி உலாவ முயன்ற ரதிதேவியா? உன் பற்கள் ஒன்றோடொன்று ஸமமாகிக் கூரான நுனியுடன் கூடி நிகுநிகுப்புற்று வெளுத்திருக்கின்றன. உன் கண்கள் அகன்று நிர்மலமாகிச் சிவந்த 'நுனியுடையனவும் கறுத்த கருவிழியுடையனவுமாயிருக்கின்றன. இடை

யின் முன்புறம் மிகவும் அகன்று பருத்திருக்கின்றது. துடைகள் யானையின் தும்பிக்கைபோல் அடி பருத்து நுனி சிறுத்திருக்கின்றன. உன் கொங்கைகள் உயர்ந்து உருண்டு ஒன்றோடொன்று நெருங்கி யிருக்கின்றன; மற்றும் மிகவும் பருத்து உயர்ந்திருக்கையால் அசைகின்றவைபோல் புலப்படுகின்றன. மேலும், அவை பருத்து உயர்வுற்ற நுனியுடையனவும் ஆசைப்படத்தகுந்தனவும் நிகுநிகுப்புடையவைகளும் பனம்பழம்போன்றவைகளும் மேலான மணிகள் கோத்த ஹாரங்களை அணிந்தவைகளுமாகி மிகவும் அழகாயிருக்கின்றன. அழகிய புன்னகையும் பற்களும் கண்களுமுடையவளே! அழகிய விலாஸங்களுடையவளே! ஆசைப்படத்தகுந்தவளே! நதி தன் ப்ரவாஹத்தால் கரையைக் கரைப்பதுபோல், நீ உன் அழகினால் என்மனத்தைப்பறிக்கின்றனை. நீ பிடியில் அடங்கும்படி நுண்ணியதான இடையுடையவளாயிருக்கின்றனை. உன் தலை மயிர்கள் அழகாயிருக்கின்றன. உன் கொங்கைகள் ஒன்றோடொன்று நெருங்கியிருக்கின்றன. உன்னழகை என்னவென்று சொல்லப் போகிறேன். உன்னைப்போன்ற அழகுடைய பெண்மணியைத் தேவதைகளிலாவது கந்தர்வர்களிலாவது கின்னரர்களிலாவது பூமியில் மநுஷ்யஸ்த்ரீகளிலாவது இதுவரையில் எப்பொழுதும் நான் பார்த்ததேயில்லை. உலகனைத்திலும் மேலான உன் லாவண்யத்தையும் உன் ஸௌகுமார்யத்தையும் உன் இளம்பிராயத்தையும், இவைகளுக்கெல்லாம் இணங்காதபடி அரண்யத்தில் வாஸஞ் செய்வதையும் பார்த்தால் 'இப்படிப்பட்ட லக்ஷணமுடைய பெண்மணி அடவிக்கு வருவதேனோ?' என்று என்மனம் நிச்சயிக்கப்பெறாமல் தடுமாறுகின்றது. அப்படிப்பட்ட மென்மையும் பருவமுமுடைய நீ இவ்

வரண்யத்தில் வஸிப்பது யுக்தமன்று. நீ வீட்டிற்குத் திரும்பிப்போவாயாக. இது 'பயங்கரர்களும் காமரூபி களுமான ராக்ஷஸர்கள் வாஸஞ்செய்யுமிடம். நீ ஸம்ருத்தியுடையனவும் அழகிய [1] கந்தமுடையனவும் ரமணீயங்களுமான உப்பரிகைகளின் நுனிகளிலும் பட்டணத்து உத்யானங்களிலும் ஸஞ்சாரஞ்செய்யத் தகுந்தவள். மங்கலமே உருவங்கொண்டாற்போலிருப்பவளே! கறுத்த கண்களுடையவளே! மேலான பூமாலைகளும் சிறந்த போகத்ரவ்யங்களும் நல்ல வஸ்த்ரங்களும் மிகவும் சிறப்புடைய புருஷனுமே உனக்குத் தகுமென்று யான் நினைக்கின்றனன். உன் ஸம்பந்தமுள்ள பூமாலையே சிறப்புடையது; நீ எதைப் புசிக்கின்றனையோ, அதுவே போஜ்ய வஸ்துக்களில் சிறந்தது; நீ உடுத்துகிற வஸ்த்ரமே வஸ்த்ரங்களில் சிறந்தது; நீ எவனைக் கணவனாக அங்கீகரிக்கின்றனையோ, அவனே புருஷர்களில் சிறந்தவன்' என்று யான் நினைக்கின்றனன். அழகிய முகமுடையவளே! சிறந்த இடையின் பின்புறமுடையவளே! உன்னைப் பார்க்கையில், எனக்குத் தெய்வமடந்தையென்று தோற்றுகின்றது. நீ ருத்ரர்களோடு ஸம்பந்தித்தவளா? அல்லது மருத்துக்களைச் சேர்ந்தவளா? இல்லையாயின், வஸுக்களில் அடங்கிய ஓர் பெண்பிள்ளையா? அல்லது ஆதித்யர்களில் உட்பட்டவளா? கந்தர்வர்களாவது தேவதைகளாவது கின்னரர்களாவது இவ்விடம் வரமாட்டார்கள். இது ராக்ஷஸர்கள் வஸிக்கும் ப்ரதேசம். நீ இங்கு எப்படி வந்தனை? இங்குக் குரங்குகளும் ஸிம்ஹங்களும் சிறுத்தைப்புலிகளும் புலிகளும் மான்களும் கரடிகளும் பெரும்புலிகளும் கழுகுகளும் திரிந்துகொண்டிருக்கின்றனவே. அவைகளைப்பார்த்து நீ எப்படி பயப்படாதிருக்கின்றனை? அழகிய முகமுடையவளே! இம்மஹாரண்யத்தில் மிகவும் மதித்துப் பயங்கரங்களாகி மிக்க பலமுள்ள யானைகளைப் பார்த்துத் தனியளாகிய நீ எப்படி பயப்படாதிருக்கின்றனை? கல்

1. கந்தம்-வாஸனை.

யாணி! உன்பேர் யாது? நீ யாருடையவள்? எங்கிருந்து வந்தனை? பயங்கரமாகி ராக்ஷஸர்கள் ஸஞ்சரிக்கப் பெற்ற தண்டகாரண்யத்தில் தனியாக ஏன் ஸஞ்சரிக்கின்றனை?'' என்று வினவினன். துஷ்டஸ்வபாவனாகிய ராவணன் அவ்வண்ணம் புகழ்ந்து சொல்லுகையில், ஸீதை ப்ராஹ்மண ஸந்யாஸிவேஷத்துடன் வந்த அவனைக் கண்டு நிஜமான ஸந்ந்யாஸியேயென்று ப்ரமித்து அதிதிஸத்காரத்திற்கு வேண்டிய ஸமஸ்த பூஜாத்ரவ்யங்களாலும் அவனைப் பூஜித்தனள். அவள் ராவணனுக்கு முதலில் ஆஸனம் அளித்துப் பாத்யங்கொடுத்துப் பிறகு ஸாதுவேஷத்துடன் புலப்படுகின்ற அந்த ராவணனைப் பார்த்து 'அன்னம் பக்வமாகி ஸித்தமாயிருக்கின்றது. புசிப்பீராக' என்று மொழிந்தனள். அந்தனம் ப்ராஹ்மணவேஷம் போகட்டுக்கொண்டு சுரைக்காய்ப் பாத்ரங்கொண்டு குஸும்பச்சாயந் தோய்த்த காவித்துணி உடுத்து வந்த ராவணன் அப்பெண் பிள்ளையைக் கொண்டுபோவதிலேயே கண் வைத்தவனாகையால் அவனைப் போஜனஞ்செய்யும்படி ஒப்புக்கொள்ளச்செய்வது ஸீதைக்கு ஸாத்யம் அல்லாதிருந்தது; அது தெரியாமல் அவனைப் பார்த்து ஸீதை ப்ராஹ்மணனைப்போலவே அப்பொழுது போஜனஞ் செய்ய அழைத்தனள். 'அந்தணரே! இதோ வ்ரதமுடையவர் உட்காருகிற ஆஸனம். இதில் ஸுகமாக உட்காரலாம். இதோ பாத்யம். அங்கீகரிப்பீராக. இதோ உமக்காக மேலான காய்கிழங்கு முதலிய காட்டிலுண்டாகும் பதார்த்தங்கள் பக்வஞ்செய்யப்பட்டிருக்கின்றன. இங்கு இவைகளைக் குறையில்லாமல் புசிப்பீராக' என்றனள். இப்படி போஜனஞ் செய்யும்படி அழைக்கப்பட்ட ராவணன் ஸமஸ்த அன்னமும் ஸித்தமாயிருக்கிறதென்று அதிதிகளுக்குச் சொல்லும் வார்த்தையைச் சொல்லிக் கொண்டு போஜனஞ்செய்ய வேண்டுகின்றவளும் ராஜேந்

த்ரனுகிய ராமனது பத்னியுமான மைதிலியை நன்ருகப் பார்த்துத் தன் மரணத்தின்பொருட்டுப் பலாத்காரஞ் செய்து தைர்யத்துடன் பறித்துக்கொண்டுபோக மனங் கொண்டனன். அனந்தரம் அப்பொழுது ஸீதை வேட்டைக்குப் போயிருக்கின்ற ஸுந்தராகாரனுகிய தன் பர்த்தாவை ராமனேயும், லக்ஷ்மணனேயும் எதிர்ப்பார்த்துக்கொண்டு பலவாருக அவர்கள் போன திசையைப் பார்த்துக்கொண்டிருந்தும் அப்பெண்மணிக்கு அம் மஹாரண்யமே புலப்பட்டதன்றி ராமலக்ஷ்மணர்கள் புலப்படவில்லை. நாற்பத்தாருவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஸீதை தன் வ்ருத்தாந்தத்தை ராவணனுக்குச் சொல்லுதலும், ராவணன் தன்னைத் தெரிவித்துக் கையைப் பிடிக்கும்படி ஸீதைக்குச் சொல்லுதலும், ஸீதை பருஷோக்திகள் சொல்ல நிராகரித்தலும்.

தன்னைப் பறிக்க விரும்பிய ராவணனுல் அங்ஙனம் வினவப்பட்ட வைதேஹி அழகிய அங்கங்களையுடைய அப்பெண்மணி, அவனது ஸந்யாஸிவேஷத்தைப்பற்றி, தன் வ்ருத்தாந்தத்தைச் சொல்லத் தொடங்கினள். அவள் தனக்குள் ‘இவன் ப்ராஹ்மணன்; அதிலும்; அதிதி; வினவினதைச் சொல்லாவிடின் என்னைச் சபிப்பான்’ என்று கொஞ்சநேரம் ஆலோசித்து அவனை நோக்கி மொழிந்தனள்:—‘ப்ராஹ்மணோத்தமனே! நான் மஹானுபாவனும் மிதிலாதிபதியுமாகிய ஜனகராஜன் புதல்வி. நான் ஸீதையென்னும் பேருடையவள். உனக்குச் சுபம் உண்டாகுமாக, ராமனுடைய பார்யை. நான் விவாஹமான பின்பு இக்ஷ்வாகு வம்சத்தரசர்களின் வாஸஸ்தானமாகிய அயோத்யையில் பன்னிரண்டு ஸம்

வத்ஸரங்கள் ஸமஸ்தபோக பதார்த்தங்களும் ஸம்ருத்தமாயிருக்கப்பெற்றுப் பர்த்தாவுடன் மனுஷ்யர்கள் அனுபவிக்கும் போகங்களையெல்லாம் அனுபவித்துக் கொண்டிருந்தனன். அனந்தரம் பதின்மூன்றுவது ஸம்வத்ஸரத்தில் ஸமர்த்தராகிய எமது மாமனர் தசரதமஹாராஜர் ஸாமந்தராஜர்களோடும் மந்த்ரிகளோடும் கலந்து ராமனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்ய வேண்டுமென்று ஆலோசித்தனர். அங்ஙனம் ராமனுக்குப் பட்டாபிஷேகம் ஆரம்பித்துக் கொண்டிருக்கையில், என் மாமியார் கைகேயி யென்பவள் பர்த்தாவை வரம் கேட்டனள். அந்தக் கைகேயி ஸத்யஸந்தரும் ராஜஸ்ரேஷ்டருமாகிய என் மாமனரை, தான் அவர்க்கு முன்பு செய்திருந்த உபகாரத்தினல் வசப்படுத்திக்கொண்டு ஸத்யத்தின்மேல் ஆணையிடுவித்து, என் பர்த்தாவை ராமனைப் பட்டணத்தினின்று வனத்திற்குப் போகும்படி அனுப்புவதும் தன்புதல்வன் பரதனுக்குப் பட்டங்கட்டுவதுமாகிய இவ்விரண்டு வரங்களைக் கேட்டனள். அந்தக் கைகேயி தன் பர்த்தாவைப் பார்த்து 'நீ மற்றேது செய்தாலும் நான் இப்பொழுது போஜனஞ் செய்யேன்; உறங்கவுமாட்டேன். தீர்த்தபானமுஞ் செய்யேன். ராமனுக்குப் பட்டாபிபிஷேகஞ் செய்வாயாயின், இப்பொழுதே என்ப்ராணன்களை விடுவேன்' என்றனள். அவள் இங்ஙனம் சொல்லிக்கொண்டிருக்கையில், பஹுமானங் கொடுக்குந்தன்மையுள்ள என் மாமனர் மிக்க மேன்மையுடன் அனுபவிக்கத் தகுந்தனவாகி விளங்குகிற ஸுவர்ண ரத்னுதிகளை அந்த வரங்களுக்கு ப்ரதியாகக் கொடுத்து எவ்வளவு வேண்டிக் கொண்டபோதிலும் அவள் அவைகளை அங்கீகரிக்கவில்லை. அப்பொழுது மஹாதேஜஸ்ஸுடன் விளங்குகின்ற என்பர்த்தாவுக்கு இருபத்தைந்து ஸம்வத்ஸரங்

கள். நான் பிறந்து அப்பொழுது பதினெட்டு ஸம்வத்ஸரங்கள் கணக்காகின்றன. என் பர்த்தா ராமனென்னும் பேர்கொண்டு உலகமெங்கும் ப்ரஸித்திபெற்றவன்; மிகுந்த குணங்களுடையவன்; ஸத்யஸந்தன்; பரிசுத்தன்; விசாலமான கண்களும் நீண்ட புஜதண்டங்களுமுடையவன்; ஸமஸ்த ப்ராணிகளுக்கும் ஹிதஞ்செய்வதில் மனவூக்கங்கொண்டவன். ராமன் அரண்யத்திற்கு அனுப்பத்தகாத இப்படிப்பட்ட பிராயமும் இத்தகைய குணங்களுமுடையவன். மஹாதேஜஸ்வியாகிய அவன் தந்தை, [1] காமார்த்தனுகையால் கைகேயிக்கு 'நீ சொன்னபடி செய்கிறேன்' என்று ப்ரதிஜ்ஞை செய்து ப்ரியஞ்செய்ய விரும்பி அப்படிப்பட்ட குணமுடைய ராமனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்வதை நிறுத்திவிட்டனர். கைகேயி, பட்டாபிஷேகத்திற்காகத் தந்தையினிடம் வந்த என்பர்த்தாவை ராமனைப் பார்த்து மனக்களிப்புடன் 'ராமா! உனக்கு உன்தந்தை என்னிடம் இவ்வண்ணம் ஆஜ்ஞாபித்திருக்கின்றனர். அதைச் சொல்லுகிறேன் கேள். அகண்டகமான இந்த ராஜ்யத்தைப் பரதனுக்குக் கொடுக்கவேண்டும். ராமா! நீ பதினான்கு ஸம்வத்ஸரங்கள் அரண்யத்தில் வாஸஞ்செய்யவேண்டும். ஆகையால் ஊரை விட்டு அரண்யம் போவாயாக. உன் தந்தையை அஸத்யதோஷத்தினின்றும் தப்புவிப்பாயாக' என்றனள். ராமன் எதற்கும் பயப்படாதவன்; மேலும் வ்ரதங்களில் திடமாக மனஞ்செல்லப்பெற்றவன். ஆகையால் என் பர்த்தா அப்பொழுது கைகேயியைப் பார்த்து 'அப்படியே போகிறேன்' என்று சொல்லி அவ்வார்த்தையின்படி வனத்திற்கு வந்தனன். ப்ராஹ்மணா! ராமன் வ்ரதங்களில் மனம் திடமாயிருக்கப் பெற்றவ

1 காமார்த்தன்—காமத்தினால் வருந்தினவன்.

னென்பதில் ஸந்தேஹமென்? ஒருவர்க்குக் கொடுப்பா னன்றித் தான் கைநீட்டி வாங்கமாட்டான்; ஸத்யத் தையே பேசுவான்; அபத்தம் எள்ளளவும் பேசமாட் டான். இது ராமனுடைய நிகரில்லாத வ்ரதம். இதை எப்பொழுதும் கைவிடமாட்டான். ராமனுக்குச் சக்க ளத்தித்தாயின் பிள்ளை லக்ஷ்மணனென்று ஒரு ப்ராதா உளன். அவன் மஹாவீர்யமுடையவன். யுத்தத்தில் எப்படிப்பட்ட பகைவரையும் நீறு செய்யவல்லவன்; புரு ஷச்ரேஷ்டன். ராமனுக்கு எப்போதும் அவன் ஸஹாய மாயிருப்பான். பரமதார்மிகனும் த்ருடவ்ரதனுமாகிய அந்த லக்ஷ்மணனென்னும் ப்ராதா என்னோடு வனத் திற்குப் புறப்படுகின்ற ராமனைத் தான் வில்லும் கையு மாகப் பின்றொடர்ந்து வந்தனன். எப்போதும் தர்மம் தவறாதவனும் ஜிதேந்த்ரியனுமாகிய ராமன் தாபஸ வேஷம் தரித்து ஜடைகள் தரித்துக்கொண்டு, பார்யை யாகிய என்னோடும் தம்பி லக்ஷ்மணனோடும் தண்டகா ரண்யத்திற்கு வந்தனன். ப்ராஹ்மணர் தலைவனே! அங்ஙனம் கைகேயி நிமித்தமாக ராஜ்யம் கைசோரப் பெற்ற நாங்கள் மூவரும் அதிபயங்கரமான இவ்வரண் யத்தில் ப்ரதாபமஹிமையால் ஸஞ்சரித்துக்கொண்டி ருக்கின்றனம். கொஞ்சநேரம் இருந்து ச்ரமம் தீர்த் துக்கொள்வாயாக. இவ்விடம் பரிசுத்தமாயிருக்கிறதா கையால் இங்கிருப்பது உனக்கு ஸுகமாயிருக்கும். என் பர்த்தா பலவகைப்பட்ட வன்யபதார்த்தங்களையும் எடுத்துக்கொண்டு சீக்ரமாக வருவான். ப்ராஹ்மணா! இனி நீயும் உன்கோத்ரத்தை உள்ளது உள்ளபடி சொல்வாயாக. இப்படி தனியாக இத் தண்டகாரண் யத்தில் நீ ஏன் திரிகின்றனை?' என்றனள். ராமபத்னி யாகிய அந்த ஸீதை இங்ஙனம் சொல்லுகையில், பிற

மஹாபலிஷ்டனுகிய ராக்ஷஸர்தலைவன் ராவணன் க்ரூரமாக உத்தரஞ் சொல்லினன்:—'ஸீதே! தேவர்களோடும் அஸுரர்களோடும் பன்னகர்களோடும் கூடின ஸமஸ்த லோகங்களும் எவனுல் பயப்படுத்தப்பட்டனவோ, அப்படிப்பட்ட ராக்ஷஸ கணப்ரபுவாகிய ராவணனென்பவன் நானே. நிந்தைக் கிடமாகாதவளே! பொன்வர்ணமுடைய மேனியுடையவளாகிப் பட்டுவஸ்த்ரந் தரித்து அழகு விளங்கப்பெற்ற உன்னைப் பார்த்தது முதலாக என்பார்யைகளிடத்தில் எனக்கு ப்ரீதி உண்டாகாதிருக்கின்றது. அந்தந்த ஸ்தலங்களிலிருந்து நான் பல ஸ்த்ரீகளைப் பறித்துக்கொண்டு வந்திருக்கின்றனன்; உனக்கு மங்கலம் உண்டாகுமாக; அவர்கள் எல்லாரினும் நீ எனக்குப் பட்டமஹிஷியாயிருப்பாயாக. ஸமுத்ரத்தினிடையிலிருக்கிற ஒரு பர்வதத்தின் நுனிமேல் எனது மஹா பட்டணம் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கின்றது. அது லங்கையென்னும் பேருடையது. அது சுற்றிலும் ஸமுத்ரத்தால் சூழப்பட்டிருக்கின்றது. ஸீதே! அந்த லங்கையில் என்னேடுகூட உத்யானவனங்களில் விளையாடிக் கொண்டிருக்கலாம். மடந்தையர் மணியே! அப்பொழுது நீ இவ்வரண்யத்தில் வாஸஞ் செய்வதை எவ்வளவும் நினைக்கமாட்டாய். ஸீதே! நீ எனக்குப் பார்யையாவாயாயின், ஸமஸ்த ஆபரணங்களும் அணிந்த ஐயாயிரம் தாஸிகள் உனக்கு எப்பொழுதும் பரிசர்யை செய்து கொண்டிருப்பார்கள்' என்றனன். குற்றமற்ற அவயவங்கள் அமையப்பெற்ற அந்த ஜனகராஜன் புதல்வியாகிய ஸீதை ராவணன் இவ்வாறு கூறுகையில், அது கேட்டு மிகவும் கோபித்து, அந்த ராக்ஷஸனை எவ்வளவும் பொருள்செய்யாமல் இங்ஙனம் மறுமொழி கூறினள். 'மஹா பர்வதம்போல் எப்படிப்பட்டவர்க்கும் அசைக்கமுடியாதவனும் மஹேந்த்ரனை

கிகர்த்தவனுமாகிய பர்த்தாவும் ஸ்வாமியும் மஹாஸமுத்ரம்போல் கலக்கமுடியாதவனுமாகி விளங்கும் ராமனையே நான் அனுஸரித்திருப்பவள். நான், ஸர்வலக்ஷணங்களும் பொருந்திப் பெரிய வடவ்ருக்ஷம்போல் மிகுந்த வைசால்யமுடையவனும் யாவரும் தன்னை அணுகும்படியான பெருமையுடயவனும் ஸத்யஸந்தனும் மஹாபாக்யமுடையவனுமாகி விளங்கும் ராமனையே அனுஸரித்திருப்பவள். நீண்ட புஜதண்டங்களும் அகன்ற மார்பும் அமைந்து ஸிம்ஹம்போல் கம்பீரமான நடைமிடுக்குடையவனும் புருஷஶ்ரேஷ்டனும் பராக்ரமத்தில் ஸிம்ஹம் போன்றவனுமாகிய ராமனையே நான் அனுஸரித்திருப்பவள். பூர்ணசந்த்ரன்போன்ற முகமுடையவனும் இந்த்ரியங்களை வென்றவனும் பெருங்கீர்த்தியுடையவனும் மஹானுபாவனும் ராஜகுமாரனுமாகிய ராமனையே நான் அனுஸரித்திருப்பவள். நீ நரிபோன்றவன். உனக்கு எள்ளளவும் பெறக்கூடாத பெண்சிங்கம்போன்ற என்னை விரும்புகின்றனை. ஸூர்யனைக் காந்தி பிரியாதிருப்பதுபோல், ராமனைப் பிரிந்திருக்கப்பொருத என்னை உனக்குத் தொட்டுப்பார்க்கவும் ஸாத்யமன்று. ராவணா! ராமனது அன்பு நாயகியாகிய என்னை விரும்புகின்றனையே! இப்படிப்பட்ட மந்தபாக்யனாகிய நீ இனிப் [1] பொன்மயமான வ்ருக்ஷங்கள் பலவற்றைப் பார்ப்பாய். இது நிச்சயம். ம்ருகங்களுக்குச் சத்ருவும் மஹாபலமுடையதும் பசித்திருப்பதும் பெருவேகத்துடன் செல்வதுமாகிய ஸிம்ஹத்தின் முகத்தினின்றும், அப்படியே பசித்து வேகமாகச் செல்கின்ற ஸர்ப்பத்தினுடைய முகத்தினின்றும் கோரைப் பல்லைப் பிடுங்க விரும்புகின்றனை. நீ பர்வதஶ்ரேஷ்டமாகிய

---

1. மரணம் ஸமீபிக்கப்பெற்றவர்கள் பொன் மரங்களைப் பார்ப்பார்களென்று ப்ரஸித்தியென்று கோவிந்தராஜர்.

மந்தரத்தைக் கையில் பிடித்துக்கொண்டுபோக விரும்புகின்றனை. அது அஸாத்யமாயிருப்பதுபோலவே என்னைக் கொண்டுபோவதும் ஸாத்யமன்று. மேலும், காலகூட விஷத்தைப்பருகி ஸுகமாகப் போக விரும்புகின்றனை. நீ ராமனது ப்ரியபார்யையாகிய என்னைப்பெற விரும்புகின்றனையே! அப்படிப்பட்ட நீ ஊசியால் கண்ணைத் துடைக்க விரும்புகின்றனை; நாக்கால் கத்தியை நக்குகின்றனை. பின்னிட்டு வரும் நாசத்தை அறியாதிருக்கின்றனை. ராமனுடைய ப்ரியபத்னியாகிய என்னைக் கொண்டுபோக விரும்புகின்ற நீ, கழுத்தில் கல்லைக்கட்டிக்கொண்டு ஸமுத்ரத்தில் நீந்தி அக்கரை சேர விரும்புகின்றனை; மற்றும், ஸூர்யன் சந்த்ரன் இருவரையும் கையில் பிடித்துக்கொண்டு போக ஆசைப்படுகின்றனை. இது முடியாதென்று அறியாதிருக்கின்றனையே! சுபாசாரமுடைய ராமனது பார்யையை அபஹரித்துக்கொண்டுபோக விரும்புவது கண்டால், எரிகிற அக்னியைத் துணியில் வாரி எடுத்துக்கொண்டு போக விரும்புவதுபோல் இருக்கின்றது. நீ, ராமனுக்குத் தகுந்த பார்ய்யயாகிய என்னைப்பெற விரும்புகின்றனை; இது கூரான நுனியுடைய சூலங்களின்மேல் நடக்க விரும்புவது போலிருக்கின்றது. அரண்யத்தில் ஸிம்ஹத்திற்கும் நரிக்கும் எவ்வளவு பேதமோ, சிறிய கால்வாய்க்கும் ஸமுத்ரத்திற்கும் எவ்வளவு பேதமோ, மேலான மத்யத்திற்கும் வெடித்த கஞ்சிக்கும் எவ்வளவு பேதமோ, ராமனுக்கும் உனக்கும் அவ்வளவு பேதம் இருக்கின்றது. பொன்னுக்கும் பித்தளைக்கும் எவ்வளவு பேதமோ, சந்தனக்குழம்புக்கும் சேற்றிற்கும் எவ்வளவு பேதமோ, வனத்தில் யானைக்கும் பூனைக்கும் எவ்வளவு பேதமோ, தசரதகுமாரனாகிய ராமனுக்கும் உனக்கும் அவ்வளவு பேதம் உண்டு. காகத்திற்

கும் கருடனுக்கும் எவ்வளவு பேதமோ, நீர்க்காகத்திற்கும் மயிலுக்கும் எவ்வளவு பேதமோ, ஜலத்திலுள்ள ஸாரஸத்திற்கும் ஹம்ஸத்திற்கும் எவ்வளவு பேதமோ, ராமனுக்கும் உனக்கும் அவ்வளவு பேதம் உண்டு. தேவேந்த்ரனை நிகர்த்த ப்ரபாவம் பொருந்தி வில்லையும் பாணத்தையும் கையில் ஏந்தி ராமன் நிற்கையில், நீ என்னை அபஹரித்த போதிலும், ஈ வஜ்ராயுதத்தை விழுங்குமாயினும் அது அதற்கு ஜீர்ணமாகாததுபோல் நான் உனக்கு ஜீர்ணமாக மாட்டேன். மேலும், உனக்கு மரணத்தையே விளைப்பேன்' என்றனள். பரிசுத்தமான மனமுடைய அந்த ஸீதா தேவி இங்ஙனம் வெகு தைர்யத்துடன் அந்த ராவணனுக்குச் சொல்லி, அனந்தரம் பயத்தினால், காற்றில் அசைந்து அல்லாடுகின்ற வாழைமரம்போல் நடுங்க, ம்ருத்யுவை நிகர்த்த மஹாப்ரபாவமுடைய அந்த ராவணன் அங்ஙனம் ஸீதை பயந்து நடுங்குவது கண்டு மேலும் பயத்தை விளைக்கும் பொருட்டுத் தன் குலத்தையும் பலத்தையும் பேரையும் தான் நடத்தின மஹாகார்யங்களையும் சொல்லத்தொடங்கினன். நாற்பத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராவணன் தன் பராக்ரமாதிகளைப் புகழ்ந்து ஸீதைக்குச் சொல்லுதலும், ஸீதை தூறுதலும்.

ஸீதை இங்ஙனம் சொல்லிக்கொண்டிருக்கையில், ராவணன் கோபாவேசமுற்று நெற்றியில் புருவத்தை நெரித்துக்கொண்டு பருஷவசனங்களுடன் பதிலுரைத்தனன் :—' அழகிய மேனியின் வர்ணமுடையவளே ! நான் குபேரனுக்குத் தம்பி ; அவனுடைய சக்களத்தித் தாயின் புதல்வன்; பத்துத்தலைகள் விளங்கப்பெற்று

மஹாபராக்ரமமுடையவன். என்னை ராவணனென்பார்கள். உனக்கு க்ஷேமம் உண்டாகுக. ம்ருத்யுவைப் பார்த்து ப்ரஜைகள் ஓடுவதுபோல், என்னைப்பார்த்துத் தேவதைகளும் கந்தர்வர்களும் பிசாச உரக பன்னகர்களும் பயந்து எப்பொழுதும் ஓடிப்போவார்கள். முன்பு ஒருகாரணத்தைப்பற்றி என் சக்களத்தித்தாயின் குமாரனுகிய குபேரனுக்கும் எனக்கும் த்வந்த்வயுத்தம் நேரிட்டது. அப்பொழுது நான் கோபித்துப் பராக்ரமத்தைக் காட்டி அவனை ஜயித்தனன். அந்தக் குபேரன், எனக்குப் பயந்து ஸர்வவஸ்துக்களும் நிறைந்த தன் பட்டணமாகிய லங்கையை விட்டுக் கைலாஸபர்வதம் சிவஸ்தானமாகையால் அங்கு நான் தொந்தரவு செய்யமாட்டேனென்று நினைத்து அந்தப் பர்வதோத்தமத்தின்மேல் வஸித்திருக்கின்றனன். மங்கலஸ்வபாவையே! இப்பொழுது நான் எதன்மேல் ஏறிக்கொண்டு ஆகாயத்தில் ஸஞ்சரிக்கின்றேனே, இஷ்டப்படி செல்வதும் சுபமாயிருப்பதுமாகிய அந்தப் புஷ்பக விமானம் அந்தக் குபேரனிடத்தினின்று பராக்ரம பலத்தினுல் ஜயித்து ஸம்பாதிக்கப்பட்டதே. மைதிலி! எனக்குக் கோபம் உண்டாயிருக்கும்பொழுது இந்த்ரன் முதலிய தேவதைகளும் என்முகத்தைக் காண்பார்களாயின், அந்த க்ஷணமே பயந்து ஓடிப்போவார்கள். நான் எங்காவது நின்றாலும் உலாவினுலும் அங்கெல்லாம் காற்றும் பயத்தினுல் மெதுவாக வீசிக்கொண்டிருக்கும். ஸூர்யன் கொடியகிரணங்களுடையவனுயினும், என்னிடத்தில் பயந்து குளிர்ந்த கிரணங்களைப் பரப்புவான். எங்கெங்கு நான் ஸஞ்சரிப்பேனே, அங்கங்கெல்லாம் வ்ருக்ஷங்கள் இலையுங்கூட அசையாதிருக்கும். நதிகள் ஜலம்பாயாமல் நின்றிருக்கும். எனக்கு, ஸமுத்ரத்திற்கு

அக்கரைபோலிருக்கிற த்ரிகூட பர்வதத்தின்மேல், பயங்கரர்களான ராக்ஷஸர்கள் நிறைந்த லங்கையென்னும் சிறந்த பட்டணம் இந்த்ரனுக்கு அமராவதிபோல் ப்ரகாசித்துக் கொண்டிருக்கின்றது. அந்தப் பட்டணத்திற்குச்சுற்றிலும் வெள்ளி மயமாகி வெளுத்து விளங்குகிற பெரிய மதிள் ஒன்று இருக்கின்றது. அந்தப் பட்டணத்தில் மெத்தை மேடை முற்றம் முதலியவை அனைத்தும் ஸ்வர்ணமயமாயிருக்கும். வெளிவாசற்படிகள் வைடூர்யமணியால் செய்யப்பட்டவைகளாயிருக்கும். அதில் யானைகளும் குதிரைகளும் தேர்களும் நிறைந்திருக்கும். எப்பொழுதும் வாத்யங்கள் முழங்கிக்கொண்டிருக்கும். ஸமஸ்தகாலங்களிலும் வ்ருக்ஷங்கள், புஷ்பித்துக் காய்த்து நிறைந்திருக்கப்பெற்ற உத்யானங்கள் பலவும் அழகாயிருக்கும். ஸீதே! ராஜ குமாரத்தியே! நீ அப்படிப்பட்ட அப்பட்டணத்தில் மனம் பொருந்தப்பெற்று என்னோடுகூட வஸித்திருப்பாயாயின், மனுஷ்ய ஸ்த்ரீகளை எவ்வளவும் நினைக்கமாட்டாய். சிறந்த மேனியின் வர்ணமுடையவளே! அங்கு நீ என்னோடுகூட மனுஷ்ய லோக போகங்களையும் தேவலோக போகங்களையும் அனுபவித்துக்கொண்டிருப்பாயாயின் கேவலம் ஒரு மனுஷ்யனாகி அல்பாயுஸ்ஸாயிருக்கின்ற ராமனை எள்ளளவும் நினைக்கமாட்டாய். தசரதமஹாராஜன் தனக்கு ப்ரியபுத்ரனாகிய பரதனை ராஜ்யத்தில் நிறுத்திக்கொண்டு, ராமன் ஜ்யேஷ்ட குமாரனாயிருந்தும் வீர்யமற்றவனாகையால் அவனை ராஜ்யத்தினின்றும் துரத்திவிட்டனன். அகன்ற கண்களுடையவளே! அங்ஙனம் ராஜ்யத்தை இழந்து புத்தியும் பாழாகித் தாபஸவேஷம் பூண்டு தயை செய்வதற்குரியவனாகிய அந்த ராமனைப் பிடித்துக்கொண்டு நீ என்ன செய்யப்போகின்றனை? நான்



1471. ராவணன் ராமாஸ்ரமத்திற்கு வந்து ஸீதையை விரும்ப அவள் அவனைத் தூறுதல்.

ஸமஸ்த ராக்ஷஸர்களுக்கும் ப்ரபுவாயிருக்கின்றனன். இப்படிப்பட்ட என்னை நீயே ப்ரார்த்திக்க வேண்டியிருக்க, நானே மன்மதபாணங்களால் பீடிக்கப்பட்டு உன்னிடம் வந்து வேண்டிக்கொள்கையில், நீ நிராகரிப்பது யுக்தமன்று. பயமுறுந்தன்மையளே! ஒருகால் ராமனுக்குப் பயந்து என்னை இப்பொழுது திரஸ்கரித்த போதிலும், ஊர்வசி முதலில் தன்பாதங்களில் வீழ்ந்த புரூரவனைக் காலால் தள்ளி அனந்தரம் அவனைப் பெறுதற்குப் பரிதபித்தாற்போல், என்னைப் பற்றிப் பிறகு 'பாழாக்கிக்கொண்டேனே' என்று பச்சாத்தாபம் அடையப்போகின்றனை. [1] வரவர்ணினீ! அந்த ராமன் கேவலம் ஒரு மனுஷ்யமாத்ரனே; யுத்தத்தில் என்னுடைய ஒரு விரலுக்கும் நிகராகமாட்டான். ஆகையால் அவனுக்கு நீ பயப்படவேண்டாம். உனது பாக்யத்தினுல் உனக்கு நான் ப்ராப்தனுயினன். இனி என்னைப் பெறுவாயாக' என்றனன். ராவணன் இவ்வாறு சொல்லுகையில், ஸீதை, கோபாதிசயத்தினுல் கண்கள் சிவக்கப்பெற்று, ஜனமில்லாத ப்ரதேசமாயினும், அப்படிப்பட்டவன் தன்னை வருந்தி வேண்டியும் மனம் கலங்கப்பெருத அந்த மஹாபதிவ்ரதை, ராக்ஷஸர் தலைவனுன அந்த ராவணனைப் பார்த்து இங்ஙனம் பருஷவார்த்தைகளைச் சொல்லினள்:— 'ஸர்வப்ராணிகளும் வணங்கும்படியான பெருமையுடைய தேவதையாகிய குபேரனை எனக்கு அண்ணனென்று சொல்லிக்கொண்டு ஏன் இப்

---

1. சீதகாலத்தில் ஸுகோஷ்ணமான ஸமஸ்த அவயவங்களுடையவளும் வெயிற்காலத்தில் ஸுகசீதலமான ஸமஸ்த அவயவங்களுடையவளும், பர்த்தாவிடத்தில் பக்தியுடையவளுமாகிய மடந்தை வரவர்ணினியெனப்படுவாள். இதற்கு 'ஶீதே ஸுகோஷ்ணஸர்வாங்கீ க்ரீஷ்மே யா ஸுகஶீதலா! பர்த்ருபக்தாசயா நாரீ ஸா பவேத் வரவர்ணினீ' என்று ப்ரமாணம்.

படிப்பட்ட பாபத்திற்கு முயற்சி செய்கின்றனை? ரா வணு! நீ இப்படி க்ரூரனும் துர்ப்புத்தியும் இந்த்ரியங் களை அடக்காமல் விஷய ஸுகங்களில் தாழ்ந்தவனுமா யிருக்கின்றனை. ஆகையால் நீ ராஜனுயிருக்குந் தோ ஷத்தினுல் உன் கீழ்ப்படிந்த ராக்ஷஸர்கள் அனைவரும் தப்பாமல் நாசம் அடையப்போகிருர்கள். தேவேந்த்ர னது பார்யையாகிய சசீதேவியைப் பறித்தாயினும் ப்ரா ணன்களோடிருக்கக் கூடும்; ராமனது பார்யையாகிய என்னைப்பறித்தாலோ, எவ்விதத்திலும் பிழைத்திருக்க முடியாது. நிகரில்லாத ரூபஸௌந்தர்யங்களையுடைய சசீதேவியைத் திரஸ்கரித்து வஜ்ராயுதம் பிடித்த தே வேந்த்ரன் கையினின்ருயினும் தப்புவித்துக்கொண்டு வெகுகாலம் பிழைத்திருக்கக் கூடுமேயன்றி, ராக்ஷஸா! என்னைப் போன்றவளைத் தூஷித்து நீ அம்ருதபானஞ் செய்யினும், மரணத்தினின்று தப்புவித்துக்கொள்ள வல்லனுகமாட்டாய்' என்றனள். நாற்பத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராவணன் நிஜரூபந்தரித்து ஸீதையைப்
பறித்துக் கொண்டு போதலும்,
ஸீதா விலாபமும்.

மஹாபராக்ரமசாலியும் பத்துத்தலையனுமாகிய ரா வணன் ஸீதை சொன்ன வார்த்தையைக் கேட்டுக் கோ பத்தினுல் கைமேல் கையைத் தட்டி மிகவும் பெரிய உருவம் தரித்தனன். அப்பால் அந்த ராவணன்; மறு படியும் ஸீதையைப் பார்த்து மேலும் பருஷமாகப் பேசி னன்:—'ஸீதே! நீ பைத்யம்பிடித்தவள்; ஆகையால் என் பல பராக்ரமங்களை நான்முன்பு சொல்லும்பொழுது நீ கேட்கவில்லை யென்று தெரிகின்றது. நான் ஆகாயத்

தில் நின்று இரண்டு கைகளால் இந்தப் பூமி முழுவதை யும் எடுப்பேன். ஸமுத்ரத்தையெல்லாம் குடித்துவிடு வேன்; யுத்தத்தில் ம்ருத்யுவையும் கொல்லுவேன்; கூரான பாணங்களால் ஸூர்யனையும் தடுப்பேன். பூமி முழுமையும் பிளந்து போகடுவேன். பைத்யமுள்ள வளே! என் ஸங்கதி உனக்குத் தெரியவில்லை. நான் நினைத்தபடி வடிவங் கொள்ளவல்லவன்; மேலும் விரும் பினவற்றையெல்லாங் கொடுக்குந் திறமுடையவன்; உனக்குத் தகுந்த பர்த்தாவாயிருக்கின்றனன். என் னைப் பார்ப்பாயாக' என்று மொழிந்தனன். ராவணன் அங்ஙனஞ் சொன்னவுடனே கோபமுற்றிருக்கிற அவன் கண்கள் ஸூர்யன்போல் விளங்கி அக்னிபோல் எரி கிற நெருப்புப்பொறிகளை உதிர்த்துக் கொண்டு கடைக ளில் கோரோசனைவர்ணமுடையனவாகி மிகவும் சிவப் புற்றன. குபேரன் தம்பியாகிய அந்த ராவணன் அந்த க்ஷணத்திலேயே பார்க்க இனிதாயிருந்த ஸந்யாஸி வேஷத்தை விட்டு யமனது உருவம்போல் அதிபயங்கர மான தன்னுருவத்தைக் கொண்டனன். விசித்ர சக்தி யுடையவனாகிய அந்த ராக்ஷஸன் மிகுந்த கோபாவேசங் கொண்டு கண்கள் மிகவும் சிவக்கப்பெற்று நல்ல பொற் குண்டலங்கள் செவியில் விளங்க, நீலமேகம்போன்ற மேனியின் வர்ணமுடையவனாகிப் பத்துத் தலைகள் மேலெழ வில்லையும் பாணத்தையும் ஏந்திக்கொண்டு புலப்பட்டனன். மஹாகாயனாகிய அந்த ராக்ஷஸராஜன் ராவணன் அந்த ஸந்யாஸிவேஷத்தைவிட்டு நிஜரூபந் தரித்துக் கோபத்தினால் கண்கள் மேன்மேலும் சிவக்க மேகஸமூஹம்போன்ற கறுத்த காந்தி பரந்து வீசப் பெற்றுச் சிவந்த வஸ்த்ரந்தரித்து ஸ்த்ரீரத்னமாகிய அந்த ஸீதையைப் பார்த்துக்கொண்டு 'இப்படிப்பட்ட என்னுருவத்தைப் பார்த்தாயினும் என்னைக் கைப்பற்று

வளா' என்னும் நினைவுடன் நின்றிருந்தனன். நுனி மயிர்கள்கறுத்து நிகுநிகென்று விளங்கப்பெற்று ஸூர்ய கிரணம்போல் கண்ணெடுத்துப் பார்க்கமுடியாதவளாகி விலையுயர்ந்த வஸ்த்ரந்தரித்து மேலான ஆபரணங்களை அணிந்து ப்ரகாசிக்கின்ற அந்த ஸீதையைப் பார்த்து ராவணன் 'அழகான இடையின் பின்புறமுடையவளே! மூன்று லோகங்களிலும் மிகவும் ப்ரஸித்திபெற்ற பர்த்தா வேணுமென்று விரும்புவாயாயின், என்னைக் கைப்பற்றுவாயாக. உனக்கு நான் தகுந்த பர்த்தாவாயிருக்கின்றனன். மங்கலஸ்வபாவையே! பெரும்புகழோனுகிய நான் உனக்குப் புகழத்தகுந்த அன்பனுயிருக்கின்றனன். ஆகையால் நீ வெகுகாலம் என்னைப்பெற்று வாழ்வாயாக. உனக்கு நான் ஒருகாலும் அனிஷ்டம் செய்ய மாட்டேன். நீ மனுஷ்யனுகிய ராமன்மேல் மனத்தை விட்டு என்னிடத்தில் ஸ்னேஹபக்தத்தை வைப்பாயாக. ஸீதே! உனக்கு ஒன்றும் தெரியாது. ஆயினும் உன்னை எல்லாம் அறிந்த பண்டிதையாக நீயே நினைத்துக் கொண்டிருக்கின்றனை. ஒரு பெண்பிள்ளையின் வார்த்தைக்காக ஸுகமான ராஜ்யத்தை விட்டு நண்பர்களையும் பிரிந்து க்ரூரம்ருகங்கள் நடையாடுகின்ற இவ்வரண்யத்தில் வஸிக்கின்றானே! இப்படி ராஜ்யத்தினின்றும் நழுவி எந்தக் கார்யமும் கைகூடப்பெறுமல் [1] அல்பாயுஷ்கனுகிய அந்தத் துர்ப்புத்தியினிடத்தில் அந்த ராமனிடத்தில் எந்தக் குணங்களைப் பார்த்து நீ ப்ரீதி உண்டாகப்பெற்றிருக்கின்றனை?' என்றனன். 'சிறிதுநேரம் பொறுத்திருப்பாயாக. மீளவும் ஸத்காரஞ்செய்கிறேன்' என்று ப்ரியமான உரைகளையே உரைத்தமையால் ப்ரியஞ்செய்வதற்கே உரியவளாகிய அந்த ஸீதையை, அந்த ராக்ஷஸன் மிகவும் துஷ்டஸ்வபாவனுகையால் இங்ஙனம் பருஷமாகப் பேசி உடனே காமவெறி

1. அல்பமான ஆயுஸ்ஸையுடைய.

மீதூரப்பெற்று அருகிற்சென்று புதன் ஆகாயத்தில் ஸுகமாகத் திரிகின்ற ரோஹிணியைப்பிடிப்பதுபோல், ஸீதையைப் பிடித்துக்கொண்டனன். அவன் தனக்குள்ள சாபத்தைப்பற்றின பயத்தினால் ஸீதையின் தேஹம் தன்மேல் படாதிருக்கும்படி தாமரையிதழ் போன்ற கண்களையுடைய அவளை இடக்கையால் தலைமயிர்களிலும் வலக்கையால் துடைகளிலும் பிடித்துக்கொண்டனன். ம்ருத்யுபோல் புலப்பட்டுக் கூரான கோரைப்பற்கள் ஜ்வலிக்க நீண்ட புஜதண்டங்களோடு விளங்குகின்ற அந்த ராவணன் ஸீதையைப் பிடிப்பதைக் கண்டு வனதேவதைகள் பயத்தினால் வருந்தி ஓடிப்போயினர். அந்தர்த்தானுதிகளுக்குத் தகுந்திருக்கையால் ஆச்சர்யத்தை விளைப்பதும் திவ்யமாயிருப்பதும் கழுதைகள் பூட்டப்பெற்றதும் காதுகளுக்குக் கடோரமாயிருக்கும்படி சப்தஞ் செய்வதும் பொற்சக்கரங்களுடன் விளங்குவதுமாகிய ராவணனுடைய மஹாரதம் முன்பு கண்ணுக்குத்தெரியாமல் மறைந்திருந்து அப்பொழுது புலப்பட்டது. அந்த ராவணன் பெருந் த்வனி எழும்படி பருஷவாக்யங்களால் அந்த ஸீதையை விரட்டிக்கொண்டே துடைகளைக் கைகளால் பிடித்து எடுத்துக்கொண்டு அப்பொழுது தன் ரதத்தின் மேல் ஏற்றினன். பாதிவ்ரத்யத்தினால் மிகவும் புகழ்பெற்ற அந்த ஸீதை அங்ஙனம் ராவணன் கையால் பிடிக்கப்பட்டவளாகி வருத்தமுற்று அரண்யத்தில் தூரத்திலிருக்கின்ற ராமனைக் குறித்து 'ராமா' என்று பேரைச் சொல்லிப் பலவாறு புலம்பினள். காமமோஹங்கொண்ட அந்த ராவணன் தன்னைச் சிறிதும் விரும்பாமல் நாககன்னிகைபோல் ரதத்தில் புரண்டு துடிக்கின்ற அந்த ஸீதையை மீளவும் துடைகளில் பிடித்து எடுத்துக்கொண்டு ரதத்துடன்

கூட ஆகாயத்தில் கிளம்பினன். அங்ஙனம் அந்த ராக்ஷ ஸர்தலைவன் ஆகாசமார்க்கத்தினால் தன்னை எடுத்துக் கொண்டு போகையில், அந்த ஸீதை மனவருத்தங் கொண்டு மதம் பிடித்தவள்போலவும் மனம் ப்ரமித்த வள்போலவும் இவ்வண்ணம் கதறினள். 'ஐயோ! லக்ஷ் மணா! மஹாபாஹோ! அண்ணனது மனத்தை எப் பொழுதும் அருள்புரியச் செய்பவனே! கரவதம் முதற் கொண்டு ராக்ஷஸன் கோபித்து என்னை இப்பொழுது எடுத்துக்கொண்டு போகிறானென்பது உனக்குத் தெரி யாதே! ரகுகுலவிளக்கே! ராமா! ஆஸ்ரிதர்களை ரக்ஷிப் பது உனக்குத் தர்மமே! அந்தத் தர்மத்திற்காக ப்ரா ணன்களையும் ஸுகத்தையும் தனங்களையும் இழக்குந் தன்மையனே! இப்படிப்பட்ட நீ, உன்னை ஆஸ்ரயித்த என்னை ஒருவன் அதர்மமாக எடுத்துக்கொண்டு போ கையில் பாராதிருக்கின்றனையே! பரந்தபா! நீ துஷ்டர் களையெல்லாம் சிக்ஷிக்குந் தன்மையனல்லையோ. அப் படியிருந்தும் நீ இப்படிப்பட்ட பாபிஷ்டனாகிய ராவண னைச் சிக்ஷியாதிருக்கின்றனை ஏன்! ஆமாம், சிக்ஷை உடனே எப்படி உண்டாகும்? அடா துஷ்டஸ்வபாவனே! கெடுமதியுடைய ஒருவன் ஒரு பாபகார்யஞ்செய்தால், அந்தப் பாபத்திற்குப் பயன் உடனே உண்டாகாது. பயிர் உடனே பலிக்காதல்லவா. காலம் வந்தபொழுதே அது பக்வமாகிப் பலனைக் கொடுக்குமல்லவா? அப்படி யே இதுவும் பலிப்பதற்குக் காலமும் ஸஹாயமாகக் கூடி வரவேண்டும். அப்படிப்பட்ட துஷ்டனாகிய நீ காலவசத்தினால் புத்திகெட்டு இப்படிப்பட்ட பாப கார் யத்தைச் செய்தனை. ஆகையால் நீ ப்ராணன்களுக்கு முடிவைக் கொடுப்பதும் பயத்தை விளைப்பதுமாகிய விபத்தை ராமனிடத்தினின்று பெறுவாயாக. ராமன் தர்மத்தில் விருப்பமுடையவன்; பெரும்புகழுடையவன். அப்படிப்பட்டவனுடைய தர்மபத்னியாகிய என்னை,

ஐயோ! ராக்ஷஸன் பறித்துக் கொண்டு போகின்றனன். ஆகையால் இப்போது கைகேயியும் அவளது பந்துக்களும் தமது விருப்பம் ஈடேறி மனக்களிப்புறுவார்களாக. ஜனஸ்தானத்தில் நன்கு பூத்திருக்கின்ற கர்ணிகாரவ்ருக்ஷங்களே! உங்களை அழைத்து வேண்டுகின்றனன். ராவணன் ஸீதையைத் திருடிக்கொண்டு போகிறுனென்று சீக்ரமாக ராமனுக்குச் சொல்வீர்களாக. நல்ல புஷ்பங்கள் பூத்து மேலான சிகரங்களையுடையதாகி விளங்கும் ப்ரஸ்ரவணபர்வதமே! உன்னை வணங்குகின்றேன். நீ, ராவணன் ஸீதையைக் கொண்டுபோகிறுனென்று சீக்ரமாக ராமனுக்குச் சொல்வாயாக. ஹம்ஸங்களும் ஸாரஸங்களும் கலகலவென்று கூவப்பெற்ற கோதாவரீநதியே! உனக்கு வந்தனஞ் செய்கின்றேன்; ராவணன் ஸீதையைக் கொண்டு போகிறுனென்று சீக்ரம் ராமனுக்குச் சொல்வாயாக. பலவகைவ்ருக்ஷங்கள் நிறைந்திருக்கின்ற இந்த வனத்திலுள்ள தேவதைகளே! உங்களெல்லோர்க்கும் நமஸ்காரஞ் செய்கின்றேன். என்னை ராவணன் பறித்துக்கொண்டு போகிறுனென்று என் பர்த்தாவுக்குச் சொல்வீர்களாக. இவ்வனத்தில் எந்தெந்த ஜந்துக்கள் வஸிக்கின்றனவோ, அவை யெல்லாவற்றையும் மற்றும் இங்குள்ள ம்ருகபக்ஷிஸமூஹங்களையும் சரணம் அடைகின்றேன். பர்த்தாவுக்கு மிகவும் ப்ரீதிக்கிடமாகி ப்ராணன்களைக்காட்டிலும் மேலாயிருந்தும் இங்ஙனம் பறிக்கப்படுகின்ற என்னைக் குறித்து 'ஸீதை பரவசையாகி ராவணனுல் பறிக்கப்பட்டாள்' என்று ராமனுக்குச் சொல்வீர்களாக. அம்மஹாபாஹு மஹாபலனுகையால் என் ஸங்கதியைத் தெரிந்து கொள்வானுயின், நான் ஸ்வர்க்கலோகத்திலிருப்பேனுயினும், யமன் எடுத்துக் கொண்டு போயிருப்பானுயினும், பராக்ரமத்தை வெளியிட்டு என்னைத்

திருப்பிக்கொண்டு வருவான்' என்று உரக்க முறையிட்டனள். அப்பொழுது நீண்டகண்களையுடைய ஸீதை இங்ஙனம் கேட்பவர்களுக்கு மன இரக்கம் உண்டாகும்படியான வார்த்தைகளை மிக்க துக்கத்துடன் புலம்பிக்கொண்டு போகையில், வ்ருக்ஷத்தில் உட்கார்ந்திருக்கின்ற கழுகாகிய ஜடாயுவைக் கண்டனள். ராவணன் கையில் அகப்பட்டுக்கொண்ட அழகிய இடையின்பின்புறமுடைய அவள் அந்த ஜடாயுவைக்கண்டு துக்கத்தினால் வார்த்தைகள் தழதழத்துப் பயம் மேலெழப்பெற்று ஹோ என்று பெயரைச்சொல்லி 'அய்யனே! ஜடாயூ! என்னைக் காண்பாயாக. இந்தப்பாபிஷ்டனாகிய ராவணன் காண்போர்களுக்குக் கருணை உண்டாகும்படி என்னை அநாதையைப்போல் எடுத்துக்கொண்டு போகின்றனன்; காண்பாய். இந்த ராக்ஷஸன் க்ரூரன்; மிகுந்த பலமுடையவன்; ஜயசீலன்; கையில் ஆயுதமேந்தினவன்; மேலும் கபடயுத்தஞ்செய்யுந் துர்ப்புத்தி. உனக்கு இவனைத் தடுக்க ஸாத்யமன்று. ஆகையால் மற்றை என்னசெய்யக்கூடும்? ஜடாயூ! இப்படி இருக்கையால் நீ போய் ராவணன் என்னை எடுத்துக்கொண்டு போகும் வ்ருத்தாந்தத்தையெல்லாம் நடந்தபடியே ஒன்றுந்தவறாமல் ராமனுக்கும் லக்ஷ்மணனுக்கும் சொல்லவேண்டும்' என்றனள். நாற்பத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஜடாயு ராவணனைத் தடுத்து ஸீதையை விடும்படி ஹிதமான உரைகளைக் கூறுதல்.

அந்த வ்ருக்ஷத்தின்மேல் கொஞ்சம் நித்ரித்துக்கொண்டிருந்த ஜடாயு, ஸீதை தன்னைக் கூப்பிட்டதைக்

கேட்டுக் கண்விழித்து உடனே முறையிட்டுச் சொன்ன வாக்யங்களைச் செவியுற்றுப் பேருருவமுடையவனுகை யால் முதலில் வேகமாக ராவணனைப் பார்த்துப் பிறகு ஸீதையைக் கண்டனன். பிறகு பர்வதசிகரம்போன்ற உருவமுடையவனும் கூரான மூக்குடையவனும் ஸ்ரீராம னுக்கு உபகாரஞ் செய்யும்படியான பாக்யலக்ஷ்மி விளங் கப் பெற்றவனுமாகிய அந்தப் பக்ஷிராஜன் வ்ருக்ஷத் தின்மேல் இருந்துகொண்டே ராவணனைப் பார்த்து இங்ஙனம் சுபமான வாக்யத்தை மொழிந்தனன்:—

'ஓ ராவணு! நான் ஸனாதன தர்மத்தைத் தவருதவன்; ஸத்யஸந்தனுமாயிருப்பவன். என்பேர் ஜடாயுவென் பார்கள். கழுகுகளுக்குத் தலைவனுயிருப்பவன்; மஹா பலமுடையவன். ஆகையால் பொருள்செய்து என் வார்த்தையைக் கேட்பாயாக. தசரதகுமாரனுகிய ரா மன் ஸமஸ்தலோகங்களுக்கும் ப்ரபு; மஹேந்த்ரவருணர் களோடு ஸமானமானவன்; ஸமஸ்த லோகங்களுக்கும் ஹிதஞ்செய்பவன். நீ எடுத்துக்கொண்டுபோக விரும்பு கின்ற இப்பெண்மணி அந்த லோகநாதனுகிய ராமனு டைய தர்மபத்னி; மிகுந்த புகழுடையவள். இவள் ஸீதையென்னும் பேருடையவள். மஹாபலனே! தர் மத்தைத் தவருமல் அனுஷ்டிக்குந் தன்மையுடைய உன் னைப்போன்ற மன்னவன் பரஸ்த்ரீகளை எப்படி தொடக் கூடும்? அதிலும் ராஜஸ்த்ரீகளை விசேஷித்து ரக்ஷிக்க வேண்டுமல்லவா! பரதாரங்களைத் தொடுவது தகா தல்லவா! பரதாரங்களைத் தீண்டநினைப்பது அற்பத் தனம். ஆகையால் பரதாரத்தைப் பறிக்கையாகிற இந்தப் பாபகார்யத்தினின்று புத்தியைத் திருப்பிக் கொள்வாயாக. பண்டிதனுயிருப்பவன் பிறர் நிந்திக்கும் படியான கார்யத்தை எவ்வளவும் செய்யலாகாது. தெரிந்தவன் தனது பார்யையைப் பரபுருஷர் தொடாத படி எப்படி ரக்ஷிக்கவேண்டுமோ, அப்படியே பிறரது பார்யைகளையுங்கூட ரக்ஷிக்கவேண்டும். நீ பௌலஸ்த்

யனது வயற்றில் பிறந்தவன். [1] சிஷ்டர்களான ராஜாக்கள் சாஸ்த்ரத்தில் சொல்லப்படாத தர்மத்தையாவது அதர்மத்தையாவது காமத்தையாவது எவ்வளவும் விரும்பமாட்டார்கள். மற்ற உலகத்தவர் எப்படியாயினும் இருப்பார்களாக. உன்னைப்போன்ற ராஜாக்களுக்கு இது மிகவும் அநுசிதம். ராஜனே தர்மத்தை நிறைவேற்றுபவன். காமத்தையும் அவனே நடத்துகின்றனன்; அர்த்தங்களுக்கும் மேலான விளைநிலமாயிருப்பவன். தர்மத்திற்கும் சுபத்திற்கும் பாபத்திற்கும் ராஜனே மூலம். ராஜமூலமாகவே அவை நடக்கக்கூடியவை. ராஜனைப் பார்த்தே உலகங்கள் தர்மாதர்மங்களில் நடப்பார்கள். ஆகையால் ராஜன் தன்னைப்பற்றிச் செய்யாமற் போயினும், லோகத்தைப்பற்றியாயினும் பாபத்தை விட்டுத் தர்மாதிகளையே ஆசரிக்கவேண்டும். ராக்ஷஸவீரனே! உனக்குப் பாபமே ஸஹஜஸ்வபாவமாயிருக்கின்றது. ஆகையால் விஷயலோலனாயிருக்கின்றனை. பாபிஷ்டனுக்குத் தேவார்ஹமான விமானம் போல், இப்படிப்பட்ட உனக்கு ஐஸ்வர்யம் எப்படி யோக்யமாகும்? இப்படி விஷயலோலனாயிருப்பாயாயின், நீ ஐஸ்வர்யத்தை இழப்பாய். எவனுக்கு எது ஜன்மத்தோடு வந்த ஸ்வபாவமோ, அதை உபதேசாதிகளால் போக்குவது எள்ளளவும் ஸாத்யமன்று. ஆகையால் என் நல்வார்த்தை உன் நெஞ்சில் படவில்லை. நல்ல உபதேசம் துர்ப்புத்திகளின் மனத்தில் வெகுநாள் நிலைபெறாது. 'சத்ரு பார்யைகளைப்பறிப்பது என் ஸ்வபாவம்' என்கிறாயோ? மஹாபலமுடையவனும் தர்ம ஸ்வபாவனுமாகிய ராமன் உன்ராஜ்யத்திலாவது உன்பட்டணத்திலாவது உனக்கு எவ்விதமான அபராதமும் செய்யவில்லையன்றோ? சத்ருவாகாத அப்படிப்பட்டவனுக்கு நீ ஏன் அபராதஞ் செய்கின்றனை? 'ராமன் எதிர்த்த கரனைக் கொன்றனன்.

1. சிஷ்டர்-நல்லொழுக்கமுடையவர்.

அதற்காக ராமபார்யையை எடுத்துக்கொண்டு போகி றேன்' என்கிருயா? நல்லது. ஜனஸ்தானத்திலுள்ள கரன் முன்பு சூர்ப்பணகை நிமித்தமாக மிதம் விஞ்சி நடக்கையில், ராமன் எவர்க்கும் துக்கத்தை விளைக்குங் கார்யங்களைச் செய்யாதவனுயினும் தன்னைக் காக்கும் பொருட்டு அந்தக் கரனைக் கொன்றனன். இவ்விஷயத் தில் ராமன்மேல் தப்பு யாதிருக்கின்றது? உண்மையைச் சொல்வாயாக. தப்பிருக்கிறதென்று அந்த லோகநாத னுடைய பார்யையை அபஹரித்துக்கொண்டு போகின் றனையே! சீக்ரமாக ஸீதையை விடுவாயாக. இந்த்ரனு டைய வஜ்ராயுதம் வ்ருத்ராஸுரனைக் கொன்றாற்போல் ராமன், மிகக்கொடியதும் நெருப்பே இதுவென்னலாம் படியிருப்பதுமாகிய தன்கண்ணுல் உன்னைத் தஹியா திருப்பானுக. மஹாவிஷமுள்ள ஸர்ப்பத்தைத் துணி யின் முனையில் முடிந்துகொண்டு அதைச் சிறிதும் தெரிந்து கொள்ளாதிருக்கின்றனை. கழுத்தில் கால்பா சத்தைச் சுற்றிக்கொண்டு அதைத் தெரிந்துகொள்ளா திருக்கின்றனை. நல்லியற்கையுடையவனே! எவ்வள வால் மனுஷ்யனுக்குப் பீடை உண்டாகாதோ. அவ் வளவு பாரமே ஏற்றுக்கொள்ளலாம். எது வ்யாதியை விளைக்காமல் ஸுகமாக ஜீர்ணமாகுமோ அந்த அன் னத்தையே உட்கொள்ளலாம். எதைச்செய்தால் தர்ம மாவது [1] கீர்த்தியாவது யசஸ்ஸாவது விளையாதோ, தேஹத்திற்குத் துக்கம்மாத்ரம் விளையுமோ அப்படிப் பட்ட கார்யத்தை எவன் செய்வான்? மூடனே செய் வான். என்னைக் கிழவனென்று அவமதிக்கிருயோ? ராவணு! நான் பிறந்து, தந்தை பாட்டன் வரிசையில் வந்த [2] க்ருத்ரராஜ்யத்தை முறையே பரிபாலனஞ்செய்து கொண்டிருந்து இப்போதைக்கு அறுபதினுயிரம் ஆண்டு கள் ஆகின்றன. மேலும் வில்லு முதலிய ஆயுதங்கள்

---

1 கீர்த்தி—ஐஸ்வர்யாதிகளால் விளையும் புகழ். யசஸ்ஸு-போகங் களை அனுபவிக்கையால் விளையும்புகழ்.

2 க்ருத்ரராஜ்யம்—கழுகுகளின் ராஜ்யம்.

எனக்கு இல்லை. நான் கிழவனே. நீ வயதுள்ளவன்; வில்லும் பாணமும் தரித்திருக்கின்றனே; கவசமும் போட்டுக்கொண்டிருக்கின்றனே; ரதத்தின்மேல் ஏறிக் கொண்டிருக்கின்றனே. ஆயினும் ஸீதையை எடுத்துக் கொண்டு நீ க்ஷேமமாகப் போய்ச்சேரமாட்டாய். உன்னைப் போகவிடுவேனே? வேதங்களை யறிந்தவர்களில் தலைவனுயிருப்பவன் பார்த்துக்கொண்டிருக்கையில், ந்யாயஸித்தங்களான அனுமானங்களைக்கொண்டு அசைக்க முடியாத ப்ராமாண்யத்தையுடைய வேதஶ்ருதியை ப்ரதிவாதி வேருெரு பொருள்கூறித் திருப்பிக்கொள்ள முடியாதிருப்பதுபோல், நான் பார்த்துக்கொண்டிருக்கையில் ஸீதையைப் பலாத்காரஞ்செய்து எடுத்துக் கொண்டு போக உனக்கு எவ்வளவும் ஸாத்யமன்று. ராவணு! நீ சூரனுயிருப்பாயாயின், என்முன்னே நின்று யுத்தஞ்செய்வாயாக. இல்லையாயின், ராமன் வரும் வரையில், கொஞ்சநேரம் பொறுத்திருப்பாயாக. முன்பு கரனைப்போல் நீயும் அடிபட்டுத் தரையில் புரளுவாய். எவன் யுத்தத்தில் பலவாறு தைத்ய தானவர்களைக் கொன்றுனே, மரவுரி உடுத்திருக்கின்ற அந்த ராமனே சீக்ரத்திலேயே உன்னை யுத்தத்தில் வதித்துவிடுவான். ஓடிப்போகிறுயென்? அற்பனே! அந்த ராஜகுமாரர்கள் வெகுதூரம் போயிருக்கின்றனர். நான் என்ன செய்வேன்? அவர்களைச் சீக்ரமாக அழைத்துக்கொண்டுவர வல்லனல்லேன். இதற்குள் நீ அவர்களுக்குப் பயந்து விரைவில் கண்ணிற்படாமல் மறைகின்றனே. இதில் ஸந்தேஹம் இல்லை. அவர் வாராதிருந்தாலும் என்ன? நான் ப்ராணன்களோடிருக்கும் வரையில், நீ தாமரையிதழ்போன்ற கண்களையுடைய இம்மங்கல மூர்த்தியை ராமனது அன்புநாயகியை ஸீதையை எடுத்துக்கொண்டு போகப்பெறுய். 'நீ என்ன செய்யமுடியும்?' என்கிறுயோ? நான் என்ப்ராணன்களையாயினும் கொடுத்து மஹானுபாவனுகிய ராமனுக்கும் அவன் தந்தையும்

என்ஸ்னேஹிதனுமாகிய தசரதனுக்கும் ப்ரியம் செய்ய வேண்டும். ராவணு! நில் நில். கொஞ்சநேரம் நின்று பார்ப்பாயாக. என் பலமுள்ளதனையும் உனக்கு யுத்த மென்னும் அதிதிஸத்காரம் நடத்துகிறேன். ராக்ஷஸா! உன்னை வெறுமனே போகவொட்டேன். காம்பினின்றும் பழத்தை விழத்தள்ளுவதுபோல், உன்னை இம்மேலான ரதத்தினின்றும் கீழே விழத்தள்ளுகின்றேன்' என்றனன். ஐம்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஜடாயு ராவணர்களின் யுத்தமும், ஜடாயு அடிபட்டு வீழ்தலும்.

இப்படி அந்த ஜடாயு ந்யாயம் அமைந்திருக்குமாறு கூறுகையில், ராவணனுக்குக் கோபம் மேலெழ, இருபது கண்களும் அக்னிபோல் ஜ்வலித்தன. அந்த ராக்ஷஸர் தலைவன் கோபத்தினுல் கண்கள் மிகவும் சிவக்கவும் செவிகளில் நல்ல பொற்குண்டலங்கள் விளங்கவும்பெற்று அந்த வார்த்தைகளைப் பொறுக்கமுடியாமல், அந்தப் பக்ஷிராஜன்மேல் எதிர்த்தோடினன். ஆகாயத்தில் மேகங்கள் எதிர்காற்றுல் ஏவப்பட்டு ஒன்றோடொன்று உறைவதுபோல், அம்மஹாரண்யத்தில் அந்த ராவண ஜடாயுக்கள் ஒருவர்க்கொருவர் கலந்து துமுலயுத்தஞ் செய்தனர். அப்பொழுது இரண்டு மால்யவந்த மஹா பர்வதங்கள் இறகுடன்கூடிப் போர்செய்வதுபோல், அந்தப் பக்ஷிராஜனும் ராக்ஷஸராஜனும் அற்புதமாக யுத்தஞ் செய்தனர். அனந்தரம் மஹாபலனுகிய ராவணன் மிகவும் பயங்கரமாகிக் கூரான நுனியுடைய நாலீகபாணங்களையும் நாராசபாணங்களையும் மாவெட்டி போன்ற நுனியுடை பாணங்களையும் அந்தப் பக்ஷிராஜனைச் சுற்றிலும் சரமாரியாக வர்ஷித்தனன். பக்ஷிகளில் தலைமையுள்ள அந்தக் கழுகு ஜடாயுவும் ராவணன் ப்ரயோகித்த அந்தப் பாணஸமூஹங்களையெல்

லாம் பொருள்செய்யாமல் அங்கீகரித்தனன். மஹா பலனுகிய அந்தப்பக்ஷிராஜன் ராவணனது சரீரம் முழுமையும் கூரியநகமுள்ள பாதங்களால் பீறிப் பலவாறு விரணங்களைச் செய்தனன். பிறகு ராவணன் கோபித்துத் தனது பகைவனை முடிக்க விரும்பிப் பயத்தை விளைவிப்பவைகளும் காலதண்டம் போன்றவளுமாகிய பத்துப் பாணங்களை எடுத்துக் கொண்டனன். மஹாவீர்யனுகிய ராவணன் நன்கு தீட்டப்பட்டு மிகக்கூராகி நுனியில் ஆணிகளையுடையனவும் குறிதவறுதவைகளும் பயங்கரங்களுமாகிய அந்தப் பத்துப்பாணங்களைக் காதுவரையிலும் இழுத்துத் தொடுத்து விட்டு ஜடாயுவைப் பிளந்தனன். அந்த ஜடாயுவும் அந்தப் பாணங்களால் அடிக்கப்பட்டு வருந்தியும் அந்த ராக்ஷஸனது ரதத்தில் கண்ணீர்களைப் பெருக்கிக் கொண்டிருக்கும் ஸீதையைக் கண்டு அவைகளைப் பொருள் செய்யாமல் மீளவும் ராவணன்மேல் எதிர்த்தோடினன். அனந்தரம் மஹாதேஜஸ்வியாகிய அந்தப் பக்ஷிராஜன், முத்துக்களாலும் ரத்னங்களாலும் அலங்கரிக்கப்பட்டு பாணமும் தொடுக்கப்பெற்ற அந்த ராவணனுடைய வில்லைத் தன்கால்களால் முறித்தனன். ராவணன் கோபத்தினுல் மெய்ம்மறந்து மற்றொருவில்லை எடுத்துக்கொண்டு ஜடாயுவின்மேல் நூறுநூருகவும் ஆயிரமாயிரமாகவும் பாணங்களை ப்ரயோகித்தனன். அப்பொழுது யுத்தத்தில் ஜடாயு, ராவணன் ப்ரயோகித்த பாணங்கள் தன்னைச் சுற்றிலும் நிரம்பச் சூழ்ந்துகொள்கையில், அவைகளினிடையில் கூண்டிலிருக்கும் பக்ஷிபோல் மிகவும் விளங்கினன். ஜடாயு மஹாதேஜஸ்வியாகையால் அந்தப் பாணங்களையெல்லாம் இறகுகளால் தடுத்து உதறிவிட்டுக் கால்களால் ராவணனுடைய பெரிய தனுஸ்ஸை முறித்தனன். அந்தப் பக்ஷிராஜன்

மஹாவீர்யமுடையவனுகையால் தகதகவென்று விளங்குகின்ற ராவணனுடைய அந்தக்கவசத்தையும் தன் இறகுகளால் தூள்தூளாகும்படி முறித்தனன். பின்னும் மஹாபலனுகிய அந்த ஜடாயு யுத்தத்தில் பொற்கவசங்களிடப்பெற்றுத் திவ்யங்களாகிப் பிசாசமுக முடையனவும் மிகுந்த வேகமுடையனவுமாகிய ராவண ரதத்திலுள்ள அந்தக் கழுதைகளையும் கொன்று விட்டனன். சிறப்புற்று நல்ல ஏர்க்காலும் மினைத்தபடி செல்லுந் திறமையும் அக்னிபோல் ஜ்வலிக்குந்தன்மையும் அமைந்து பொன்னுலும் ரத்னங்களாலும் சித்ரஞ் செய்யப்பெற்ற சக்ரங்களுடையதுமாகிய அந்த ராவணனது மஹாரதத்தையுங்கூட ஜடாயு முறித்தனன். மேலும், பூர்ணசந்த்ரன்போல் விளங்குகின்ற அந்த ராவணனுடைய வெண்கொற்றக் குடையையும் சாமரங்களையும் அவைகளைப் பிடித்துக்கொண்டிருந்த ராக்ஷஸர்களையும் மூக்கினுல் வெகுவேகமாக விழத்தள்ளினன். இவ்வாறு ராகவனுக்கு உபகாரஞ்செய்யும்படி நேர்ந்த மஹாபாக்யமுடையவனும் மஹாபலிஷ்டனுமாகிய அந்தப் பக்ஷிராஜன் மீளவும் அந்த மூக்கினுலேயே விரைவாக அந்த ராவணஸாரதியின் பெருந்தலையை அறுத்துத் தள்ளினன். அந்த ராவணன் அங்ஙனம் வில்லு முறிந்து ரதமும் பாழாகிக் குதிரைகளும் மாண்டு ஸாரதியும் முடியப்பெற்று ஸீதையை மடியில் எடுத்துக்கொண்டு தரையில் வீழ்ந்தனன். ராவணன் வாஹனம் முறிந்து தரையில் வீழ்வது கண்டு ஸமஸ்த பூதங்களும் 'நல்லது நல்லது' என்று க்ருத்ரராஜனுகிய ஜடாயுவைக் கொண்டாடின. அனந்தரம் பக்ஷிராஜனுன அந்த ஜடாயு கிழத்தன்மையால் இளைப்புற்றிருப்பது கண்டு ராவணன் ஸந்தோஷித்து மீளவும் ஸீதையை எடுத்துக்கொண்டு ஆகாயத்தில் கிளம்பினன். மஹாதேஜஸ்வியாகிய அந்தப் பக்ஷிராஜன், ராவணன்

தன்னை அலக்ஷ்யஞ்செய்து ஸந்தோஷமாக ஸீதையை மடியில் எடுத்துக்கொண்டு போவது கண்டு உயரக் கிளம்பி ராவணனுக்கெதிரே சென்று அவன் வழியை மடக்கி அவனை நோக்கி இங்ஙனம் மொழிந்தனன்:— 'அடா அல்பபுத்தி! ராமன் வஜ்ரம்போல் பாயும்படி மேலான பாணங்களுடையவன்; அப்படிப்பட்ட ராமனது பார்யையையாகிய இவளை, நீ ராக்ஷஸர்களை முடியச் செய்வதற்கே எடுத்துக்கொண்டு போகின்றனை. தாஹமுண்டாகப் பெற்றவன் ஜலத்தைக் குடிப்பது போல், நீ ஸீதாபஹரணமென்னும் இவ்விஷத்தைப் பானஞ்செய்கின்றனை. இது உனக்கு மாத்ரமே அன்று; உனது நண்பர்களுக்கும் பந்துக்களுக்கும் மந்த்ரிகளுக்கும் ஸைன்யங்களுக்கும் பரிவாரங்களுக்கும் விநாசத்தை விளைவிக்கும். மூடர்கள் தாம் செய்யும் கார்யத்திற்குப் பின்னிட்டுத் தப்பாமல் நேரிடும்பலனைத் தெரிந்துகொள்ளாமல் உன்னைப்போல் சீக்ரத்திலேயே நாசம் அடைவார்கள். நீ காலபாசத்தினால் கட்டப்பட்டிருக்கின்றனை. மீன், தன்னை வதிப்பதற்காக மாம்ஸமிடப்பெற்ற தூண்டில்முள்ளை விழுங்கித் தப்புவித்துக் கொண்டு போயினும் அதை விடுவித்துக் கொள்ள முடியாததுபோல், நீ பாசத்தைச் சாவதற்காகப் பூட்டிக்கொண்டு எங்குப்போயினும், அதை விடுவித்துக் கொள்ள வல்லனல்லை. ராவணா! எப்படிப்பட்டவர்க்கும் எதிரிடமுடியாத அந்தக் காகுத்ஸ்தகுலதிலகர்கள் ராமலக்ஷ்மணர்கள், நீ இப்பொழுது அவரது ஆஶ்ரமத்திற்கு நடத்தின இந்த அவமானத்தை ஒருகாலும் பொறுக்கமாட்டார்கள். உன்னைத் தப்பாமல் கொன்று விடுவார்கள். இப்போது பயந்தவனாகி எவரும் இல்லாத ஸமயம் பார்த்து லோகநிந்தைக்கிடமான கார்யத்தைச் செய்தனையே! இது திருடர் நடக்கும் வழி. வீரர்கள்

எவ்விதத்திலும் இந்த வழியில் புகார். ராவணு ! நீ சூரத்தன்மையுடையவனுயின், யுத்தஞ் செய்வாயாக. ராமலக்ஷ்மணர்கள் வரும்வரையில் ஒரு முஹூர்த்த காலம் பொறுத்திருப்பாயாக. அப்பொழுது உன் தம்பி கரனைப்போல் அடிப்பட்டுத் தரையில் படுத்துருளுவாய். மரணகாலம் ஸமீபித்திருக்கும்பொழுது புருஷன் தன் விநாசத்திற்காக எப்படிப்பட்ட அதர்மகார்யத்தைச் செய்வானே அப்படிப்பட்ட அதர்மகார்யத்திற்கு நீ முயன்றனே. உனக்கு மரணம் ஸமீபித்திருக்கின்றது. எந்தக் கார்யத்திற்குப் பாபபலன் ஸம்பந்தித்திருக்குமோ, அப்படிப்பட்ட கார்யத்தை எவன் செய்வான்? ஸமஸ்தலோகாதிபதியும் தான்தோன்றியும் ஜ்ஞாநாதிகுணங்கள் நிறைந்தவனுமாகிய ப்ரஹ்மதேவனுங்கூட அக்கார்யத்தைச் செய்யமாட்டான்' என்றனன். இங்ஙனம், வீர்யசாலியாகிய அந்த ஜடாயு மேன்மையை விளக்கும் வாக்யங்களைச் சொல்லிப் பிறகு அந்த ராவணன் தன்னைப் பாராட்டாமல் ஓடிப்போவது கண்டு கபீலென்று பத்துத்தலையனுகிய அந்த ராக்ஷஸனுடைய முதுகின்மேல் நன்கு மோதும்படி வீழ்ந்தனன். அந்த ஜடாயு அவனை அங்ஙனம் பிடித்துப் பலாத்காரஞ் செய்து போகவொட்டாமல் நிறுத்தி, யானைப்பாகன் துஷ்ட யானையின்மேல் ஏறி மாவெட்டியால் அதைப் பலவாறு குத்துவதுபோல், ராவணன்மேல் வீழ்ந்து கூரான நகங்களால் அவன் முதுகுமுழுமையும் பீறிவிட்டனன். அந்த ஜடாயுவுக்கு நகங்களும் இறகுகளும் மூக்குமே ஆயுதமன்றி வேறில்லை. ஆகையால் அந்தப் பக்ஷி ராஜன் மூக்கினுல் அந்த ராவணனுடைய முதுகைக் குத்திக் குளம்பறித்து நகங்களாலும் பீறித் தலைமயிர்களையும் பிடுங்கிப்போகட்டனன். கழுகுகளுக் கரசனுகிய அந்த ஜடாயு அங்ஙனம் தன்னை அடிக்கடி பிடித்துத் தொந்தரவு செய்கையில் பொறுக்கமுடியாமல்

அந்த ராவணன் கோபத்தினால் உதடுகள் துடிக்கப் பெற்று அந்தப் பக்ஷியை அடிப்பதற்காகத் திரும்பி னன். அனந்தரம் பத்துத்தலையனாகிய அந்த ராவணன் கோபத்தினால் மெய்ம்மறந்து இடத்துடையால் ஸீதை யை இறுக்கிப்பிடித்துக்கொண்டு வேகத்துடன் ஜடாயு வை உள்ளங்கையால் அடித்தனன். பகைவரைப் பிடித் துப் பீடிக்கவல்ல அந்தப் பக்ஷிராஜன் ஜடாயு அப்பொ ழுது அவனைச் சுற்றித் திரிந்து ஸமயம் பார்த்து மூக்கி னால் இடக்கைகள் பத்தையும் அறுத்துப் பிடுங்கிப் போகட்டனன். ராவணனுடைய புஜங்கள் இங்ஙனம் அறுக்கப்படுகையில், உடனே புற்றினின்று விஷஜ்வாலை களின் வரிசைகளோடுகூட ஸர்ப்பங்கள் புறப்பட்டு வரு வதுபோல், அறுத்த இடத்தினின்று பளபளவென்று விளங்கும் ஆயுதங்களோடுகூட மீளவும் அங்ஙனமே புஜங்கள் விரைவில் முளைத்தன. பிறகு கோபத்தினால் ராவணன் ஸீதையை விட்டு அந்தக் கழுகுகளுக்கரசனை முட்டிகளாலும் பாதங்களாலும் குத்திக் குழுக்கினன். அனந்தரம் நிகரில்லாத பராக்ரமமுமுடைய அந்த ராக்ஷஸராஜனுக்கும் பக்ஷி ராஜனுக்கும் ஒரு முஹூர் த்தகாலம் மஹாயுத்தம் நடந்தது. அந்தப் பக்ஷி, இங்ஙனம் ராமனுக்காக ஶ்ரமப்பட்டுப் போராடிக் கொண்டிருக்கையில், ராவணன் கத்தியை எடுத்து அதனுடைய இறகுகளையும்[1] பக்கங்களையும் பாதங்களை யும் வெட்டினன். கொடுஞ்செயலுடைய அந்த ராக்ஷ ஸன் அவ்வண்ணம் இறகுகளை அறுக்கையில் அந்தப் பக்ஷிராஜன் அந்த க்ஷணத்திலேயே அடிபட்டுக் குற்று யிருடன் பூமியில் வீழ்ந்தனன். ஸீதை, அங்ஙனம் ஜடாயு ரக்தம்பெருகப்பெற்றுப் பூமியில் வீழ்ந்திருப்பது கண்டு, தன் பந்துவாயிருப்பவன் ஒருவன் விழுந்திருக்கக் கண்

---

1 இங்குப் பக்கமாவது—இறகுகளின் அடிப்பாகம்.



1488. ராவணஜடாயுக்களின் யுத்தம்.

டாற்போலவே மிகவும் துக்கமுற்று அவனருகே செல்ல ஓடிப்போயினள். கறுத்த மேகம்போல் காந்தி விளங்கப் பெற்று வெளுத்த மார்புடன் புலப்படுகின்ற மஹனீய வீர்யமுடைய அந்த ஜடாயு தரையில் வீழ்ந்து அணைந்த காட்டுத்தீபோன்றிருக்கையில், லங்கேஶ்வரனாகிய ராவணன் கண்டனன். அனந்தரம் அப்பொழுது சந்த்ரன் போல் காந்தி விளங்கப்பெற்ற முகமுடைய அந்த ஜனக ராஜன் புதல்வியாகிய ஸீதை, ராவணனது வேகத்தினால் நலுங்கித் தரையில் வீழ்ந்திருக்கின்ற அந்தப்பக்ஷி ராஜனைக் கட்டியணைத்துக் கொண்டு அடிக்கடி ரோதனஞ் செய்தனள். ஐம்பத்தொன்றுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஸீதையை மறுபடியும் ராவணன் எடுத்துக் கொண்டு போகும் வேகத்தில் அவளுடைய பூமாலைகள் ஆபரணங்கள் முதலியன கீழே வீழ்தலும், ஜகத்து முழுவதும் விகாரமுறுதலும்.

ராக்ஷஸர் தலைவனாகிய ராவணன் குற்றுயிரோடு இப்படியும் அப்படியும் துடித்துக்கொண்டு ராமாஶ்ரமத்திற்கு அருகில் தரையில் வீழ்ந்திருக்கின்ற ஜடாயுவைக் கண்டனன். சந்த்ரபிம்பம்போன்ற முகமுடைய அந்த ஸீதையோ ராவணனால் அடிக்கப்பட்ட அந்தப் பக்ஷிராஜனைக்கண்டு மிகவும் வருந்திப்புலம்பத்தொடங்கினள். அந்தச் சந்த்ரமுகி பலவந்தனாகிய ராவணனால் அடிக்கப்பட்ட அந்தப் பக்ஷீந்த்ரனைக் கட்டிக்கொண்டு மிக மனவருத்தத்துடன் இவ்வாறு புலம்பினள்:— 'கண் துடிப்பது முதலிய லக்ஷணங்களைக் கண்டும் பிங்களி முதலிய பக்ஷிகளின் ஸ்வரத்தை ஆராய்ந்தும் வரப்போகிற ஸுகதுக்கங்களை மனிதர்கள் தப்பாமல் தெரிந்துகொள்வதைக் கண்டிருக்கின்றனம். (கண் துடிப்

பது முதலியனவும் பக்ஷி ஸ்வரங்களும் மனிதர்களுக்கு வரும் ஸுகதுக்கங்களை அறிவிக்கிற சகுனங்களல்லவா?) ராமா! உனக்கு இப்பொழுதுண்டான மஹாவ்யஸனத்தை இன்னம் அறியாதிருக்கின்றனையே. உனக்குச் சகுனங்களால் தெரியவில்லையா? இந்த ம்ருக பக்ஷிகள் எனக்காக, ககுத்ஸ்த குலாலங்காரனுகிய உனக்கு இந்த வ்யஸனத்தை அறிவிக்கும்பொருட்டு ஓடிவருகின்றனவே. என்னைக் காப்பாற்றுவதற்காக வந்த இந்த ஜடாயுவும் என் தௌர்ப்பாக்யத்தினுல், பாபிஷ்டனுகிய ராவணனுல் அடியுண்டு பூமியில் வீழ்ந்திருக்கின்றனன். ராமா! லக்ஷ்மணு! என்னை இப்பொழுது காப்பீர்களாக' என்றிவ்வாருக அப்பெண்மணி மிகவும் பயந்து கேட்பவர் முன்னம் முறையிடுவதுபோல், தூரத்தில் ஏதும் கேட்கப்பெருதிருக்கின்ற ராமலக்ஷ்மணர்களின் பேரைச் சொல்லி [1] ஆக்ரந்தனஞ்செய்தனள். ராக்ஷஸர் தலைவனுன ராவணன் புஷ்பமாலைகளும் பூஷணங்களும் நலுங்கப்பெற்று அநாதைபோல் புலம்புகின்ற அந்த ஸீதையிடம் போயினன். அந்தகனை நிகர்த்த அந்த ராக்ஷஸ ராஜன், கொடிபோல் பூமியில் சுற்றிக்கொண்டும் பெரிய வ்ருக்ஷங்களைக் கட்டிக்கொண்டும் மஹாரண்யத்தில் ராமனைப் பிரிந்து தனியளாகி 'ராம! ராம!' என்று முறையிட்டுக் கொண்டிருக்கின்ற அந்த ஸீதையை 'விடு விடு' என்று பலவாறு கூறிக்கொண்டு தன் வாழ்நாளை முடித்துக்கொள்வதற்காகத் தலைமயிர்களில் பிடித்துக் கொண்டனன். ஸீதைக்கு இப்படிப்பட்ட திரஸ்காரம் உண்டானவுடனே ஜங்கம ஸ்தாவரங்கள் நிறைந்த ப்ரபஞ்சம் முழுவதும் வரம்பழியப்பெற்று ஸத்த்வ ப்ராக்ருதி மாறிப் பேரிருள் மூடப்பட்டவைபோல், ஒன்றுந் தோற்றப் பெருதிருந்தன. அப்பொழுது வாயுவும் வீசவில்லை.

1 ஆக்ரந்தனம்-கதறுதல்.

ஸூர்யனும் ஒளியற்றவனுயினன். ஸ்ரீமானுகிய ப்ரஹ்ம தேவனும், ஸீதை ராவணனுல் தீண்டப்பட்டு வருத்த முற்றிருப்பதைத் திவ்யத்ருஷ்டியால் அறிந்து 'கார்யம் ஆயிற்று' என்று சொல்லிக்கொண்டனன். தண்டகா ரண்யவாஸிகளான மஹர்ஷிகள் அனைவரும் ஸீதையை ராவணன் திருடிக்கொண்டுபோவது கண்டு துக்கத்தை யும், தெய்வாதீனமாக அங்ஙனம் ராவணனுக்கு விநாசம் ஸமீபித்ததே யென்றுணர்ந்து ஸந்தோஷத்தையும் பெற்றவராயினர். ராக்ஷஸேஶ்வரனுகிய அந்தராவணன் 'ராமா! ராம' என்றும், 'லக்ஷ்மணு' என்றும் ரோதனஞ் செய்கின்ற அந்த ஸீதையை எடுத்துக்கொண்டு ஆகாய மார்க்கத்தில்போயினன். பத்தரைமாற்றுத் தங்கத்தில் செய்யப்பட்டு மெருகிடப்பெற்ற ஆபரணம்போல் பளபள வென்று விளங்கும் சரீரகாந்தி யமைந்து பொன் வர்ண முடைய பட்டுவஸ்த்ரந் தரித்திருக்கின்ற அந்தராஜகுமா ரத்தி மேகத்தினிடையில் தளதளவென்று மின்னும் மின்னற்கொடிபோல் அந்த ராவணனுடைய மடியில் ப்ரகாசித்தனள். அவள் உடுத்திருந்த பொன்வர்ண முடைய பட்டுவஸ்த்ரம் காற்றினுல் மேல் வீசப்படுகை யில், அதனுல் ராவணன், அக்னி எரியப்பெற்ற பர்வதம் போல் அதிகமாக ப்ரகாசித்தனன். மிகுந்த மங்கலஸ்வ ரூபையாகிய அந்த ஸீதையின் மேனியினின்று மிக்க வாஸனையுடையவைகளும் சிவந்தவைகளுமாகிய தாம ரை யிதழ்கள் ராவணனைச் சுற்றிச் சிதறி விழ்ந்தன. பொன்வர்ணமுடையதாகி ஆகாயத்தில் காற்றின்வேகத் தினுல் உயரப்பறக்கின்ற அந்த ஸீதையின் பட்டுவஸ்த்ர மானது, மத்யாஹ்னத்தில் ஸூர்யகாந்தியால் சிவந்த மேகம்போல் விளங்கியது. நன்கு அமைந்திருக்கின்ற மூக்கையுடைய அந்த வைதேஹியின் அழகிய முகம்

ராவணனுடைய மடியில் அகப்பட்டு ராமனைப் பிரிந் திருக்கையால், காம்பில்லாத தாமரைமலர்போல் விளக்க முறுதிருந்தது. அழகிய நெற்றியும் மயிர்நுனிகளு முடையதாகி மலர்ந்த தாமரையின் உள்ளிதழ்போல் விளங்குவதும் தோஷங்களொன்று மில்லாதிருப்பதும் அழுக்கின்றி நிகுநிகென்று வெளுத்து விளங்கும் பற் களால் அலங்கரிக்கப்பட்டதுமாகிய அந்த ஸீதையின் முகம் ராவணன் மடியைச் சேர்ந்து கறுத்த மேகத் தைப் பிளந்துகொண்டு புலப்படுகிற சந்த்ரன்போல் புலப் பட்டது. தீர்க்கமுகிய மூக்கும் சிவந்தழகிய அதரமும் அமையப்பெற்றுப் பொன்வர்ணமுடையதாகிச் சந்த்ரன் போல் பார்க்க இனியதுமாகிய அந்த ஸீதையின் முகம் ரோதனத்தினுல் ஓயாத கண்ணீர் பெருக்குடன் கூடிப் பசையற்றதாயிற்று. அந்த ராக்ஷஸனிடத்தில் பயந்து நடுக்கமுற்று வருந்துகின்ற அந்த வைதேஹியின் அழ கிய முகம் ராமனைப் பிரிந்து பகலில் உதித்த சந்த்ரன் போல் சிறிதும் விளக்கமூறுதிருந்தது. பொன் வர்ண முடைய அப்பெண்மணி, சரீரங் கறுத்திருக்கப்பெற்ற அந்த ராவணனிடம் அகப்பட்டிருக்கையால் நீலரத்னத் தில் பொருந்தின பொன்னரைநாண்மாலைபோல் ப்ர காசித்தனள். தாமரைமலர்போன்ற வர்ணம் பொருந் திப் பொன்போல் பளபளவென்று விளங்குந்தன்மையும் அமைந்து, சிறந்த பொற்பூஷணங்களை அணிந்திருக் கின்ற அந்த ஜனகராஜன் புதல்வி, ராவணனிடம் அகப் பட்டு, மேகத்தில் விளங்கும் மின்னற்கொடிபோல் ப்ர காசித்தனள். மரத்தின் தளிர்போல் சிவந்திருக்கின்ற அந்த வைதேஹி, கறுத்தமேனியையுடைய அந்த ராவ ணனிடம் அகப்பட்டுப் பொற்சங்கிலி யானையை விளங் கச் செய்வதுபோல் அவனை விளங்கச் செய்தனள். அந்த ராக்ஷஸர்தலைவன் அந்த ஸீதையை எடுத்துக்

கொண்டு அவளது ஆபரணங்களின் ஒளியுடன்கூடி இருக்கையால், மின்னலோடும் இடிகளோடுங்கூடின நீலமேகம்போல் ப்ரகாசித்தனன். ஸீதையை எடுத்துக்கொண்டு போகையில, அந்த வேகத்தால் அந்த ஸீதையின் சிரஸ்ஸினின்று புஷ்பங்கள் நழுவி மழைத்தாரைபோல் பூமியில் நாற்புறத்திலும் வீழ்ந்தன. அங்ஙனம் நாற்புறத்திலும் நழுவி வீழ்கின்ற அந்தப் புஷ்பவர்ஷமானது ராவணன் போகிற வேகத்தினுலுண்டாகும் காற்று வசத்தினுல் துரத்தப்பட்டு அவனுக்கு முன்னம் போயிற்ருயினும் மீளவும் அவன் வேகத்துடன் ஓடிவருகையால் அவனைச்சுற்றியே யிருந்தது. உயர்ந்த மேருபர்வதத்தைச் சுற்றி நிர்மலமான நக்ஷத்ரங்களின் வரிசை சூழ்ந்திருப்பதுபோல், ராவணனைச் சுற்றிலும் அத்தப் புஷ்ப வர்ஷம் சூழ்ந்திருந்தது. அப்பொழுது வைதேஹியின் வாமபாதத்தினின்று ரத்னங்களால் அலங்கரிக்கப்பட்டதும் மின்னற்குவியல் போல் பளபளவென்று விளக்க முற்றதுமாகிய சிலம்பு இனிய ஒலியுடன் பூமியில் வந்து வீழ்ந்தது. குபேரன் தம்பியாகிய அந்த ராவணன் ஆகாயத்தில் தன்தேஜஸ்ஸினுல் பெருங்கொள்ளிபோல் விளங்குகிற ஸீதையை எடுத்துக்கொண்டு இவ்வண்ணம் ஆகாயவழியில் சென்றனன். அக்னிபோல் தகதகவென்று விளங்குகின்ற அந்த வைதேஹியின் சிலம்பு தவிர மற்றுஞ்சில ஆபரணங்களும் பேரொலியுடன் ஆகாயத்தினின்று புண்யம் க்ஷீணிக்கப் பெற்ற நக்ஷத்ரங்கள்போல் தரையில் வீழ்ந்தன. அப்பொழுது சந்த்ரன்போல் வெளுத்து விளங்குகிற முக்தாஹாரமானது ஸீதையின் ஸ்தனமண்டலத்தினின்று நழுவி, ஆகாயத்தினின்று விழுகிற கங்காநதி போல்ப்ரகாசித்தது. அப்பொழுது வ்ருக்ஷங்கள் ராவணனது வேகத்தாலுண்டாகும் காற்றினுல் அடிக்கப்

பட்டு நுனிகளை அசைக்கிக்கொண்டு பலவகைப் பக்ஷிக ளின் த்வனிகளோடுகூடி ஸீதையை ஸமாதானப் படுத் தும்பொருட்டுத் தலைகளை அசைக்கிப் பயப்படவேண்டா மென்று மொழிவனபோல் புலப்பட்டன. தாமரைக் குளங்கள் ஒளிமழுங்கின தாமரை மலர்களாகிற முகங் களுடன்கூடிக் கலக்கமுற்ற மீன்களும் முதலைமுதலிய ஜலஜந்துக்களுமாகிற கண்களுடையனவாகி ஆபத்தில் மூழ்கின தமது ஸகியைப் பார்த்து வருத்தப்படுவது போல், ஸீதையைப் பார்த்து வருத்தமுற்றனவாகிப் புலப் பட்டன. அப்பொழுது ஸிம்ஹங்களும் புலிகளும் மற்று முள்ள ம்ருகங்களும் பக்ஷிகளும் நாற்புறத்தினின்றும் வந்து ராவணன்மேல் கோபங்கொண்டு நிழலை அனு ஸரித்து ஸீதையைப் பின்றொடர்ந் தோடிப்போயின. பர்வதங்கள் முகங்களில் கண்ணீர்போல் அருவிகளில் ஜலப்ரவாஹம் பெருகவும் உயர எடுக்கப்பட்ட கைகள் போல் சிகரங்கள் விளங்கவும் பெற்று, ராவணன் ஸீதை யை எடுத்துக்கொண்டுபோவது கண்டு ரோதனஞ் செய்வனபோல் புலப்பட்டன. மிகுந்த ஒளியுடைய ஸூர்யனும் ஸீதை ராவணனால் அபஹரிக்கப்படுவது கண்டு மனக்களிப்பின்றி ஒளிமழுங்கி வெளுத்த மண் டலமுடையவனாயினன். ஸமஸ்தபூதங்களும் குவியல் குவியலாகச் சேர்ந்து 'ராமனது பார்யையாகிய ஸீதை யை ராவணன் எடுத்துக்கொண்டு போகின்றானே! ஆகையால் தர்மமே இல்லை. இனி ஸத்யமென்பது எங்கே? கபடமில்லாமையும் தயையும் பாழாய்விட்ட னவே!' என்று புலபிக்கொண்டிருந்தன. சிறிய மான் குட்டிகள் மிகவும் பயமுற்று முகம் வாடிக் கண்ணீர் பெருக்கிக்கொண்டு கலங்கினபார்வையுடன் கண்ணெ டுத்து நோக்கிநோக்கி ரோதனஞ்செய்தன. அங்ஙனம் இப்படி அப்படி யென்னமுடியாத வருத்தத்தில் ஆழ்ந் து உரக்க முறையிட்டு 'லக்ஷ்மணா! ராமா!' என்று

இனிய குரலுடன் கதறிக்கொண்டு ராமலக்ஷ்மணர்கள் வருவார்களோவென்று அடிக்கடி பூமியை உற்றுப் பார்த்துக்கொண்டு போகின்ற ஸீதையை நோக்கி வன தேவதைகள் சரீரம் நடுங்கப்பெற்றனர். நுனிமயிர்கள் அவிழ்ந்தலையவும் நெற்றியில் திலகம் கலையவும் பெற்ற அந்தப் பதிவ்ரதையான ஸீதையை, அந்த ராவணன் தன்விநாசத்தின்பொருட்டே தெரியாமல் அபஹரித்துக் கொண்டு போயினன். அழகிய பல்வரிசைகளும் ஸஹஜமான புன்னகையும் விளங்கப்பெற்ற அந்த மைதிலி அப்போது பந்துஜனங்களை விட்டுப்பிரிந்து ராமலக்ஷ்மணர்களையும் காணுமல் பயத்தின் மிகுதியால் வருந்தி ஒளிமழுங்கின முகமுடையவளாயினள். ஐம்பத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஸீதை ராவணனது வீர்யாதிகளைப் பலவாறுக நிந்தித்தல்.

ஜனகராஜன் புதல்வியாகிய ஸீதை, ராவணன் தன்னை எடுத்துக்கொண்டு ஆகாசமார்க்கத்தில் கிளம்பக்கண்டு மிகவும் பயந்து பெரு நடுக்கமுற்று வருத்தத்தில் ஆழ்ந்தனள். ராவணன் அங்ஙனம் கொண்டு போகையில், ஸீதை கேட்போர்களுக்கு மன இரக்கமுண்டாகும்படி கதறலிட்டுக்கொண்டு ரோதனஞ்செய்வதனுலும் ரோஷத்தினுலும் கண்கள் சிவக்கப்பெற்றுத் தன்னை எடுத்துக்கொண்டு ஆகாயமார்க்கஞ்செல்லக் கிளம்புகிற பயங்கரமான கண்களையுடைய அந்த ராக்ஷஸர் தலைவனைப் பார்த்து இங்ஙனம் மொழிந்தனள்:—'அடா ராவணு! நீ எவ்வளவு நீசத்தன்மையுடையவனே! எவரும் இல்லாத ஸமயம் பார்த்து என்னைத்திருடிக்கொண்டு ஓடிப்போகின்றனையே! இப்படிப்பட்ட கார்யஞ் செய்வதனுல் உனக்குச் சிறிதும் வெட்கம்

உண்டாகவில்லையா? அடா துஷ்டஸ்வபாவனே! நீ என்னை அபஹரிக்கவிரும்பி, பயப்படுந்தன்மையனுகை யால் ராமனிடம் பயந்து, மாயையால் மிருகரூபந்தரித்து. வஞ்சனைசெய்து ராமனை அப்புறம் தொலைய இழுத்துக் கொண்டு போயினை. இது நீ செய்த கார்யமே; நிஜம். என்னை ரக்ஷிப்பதற்காக முயன்றுவந்த அந்தப் பக்ஷி ராஜன் வயது முதிர்ந்தவன்; என் மாமனுருடைய நண்ப னுகிய அவனையும் இதோ் கொன்றுவிட்டனையே! நீ எவ் வளவு சூரனடா! ராக்ஷஸாதமனே! நீ, 'நான் ராவ ணன்' என்று உன்பேரைச் சொல்லி என்னை யுத்தத் தில் வென்ருயல்லவா! அஹஹ! உன் பராக்ரமம் மிகப் பெரியது! அடா அற்பனே! ஸ்த்ரீயை, எவரும் இல்லாத போது, அதிலும் பிறனுடைய பத்னியைப் பறித்துக் கொண்டு போகின்றனையே! இப்படிப்பட்ட நிந்தைக்கிட மான கார்யத்தைச் செய்து எப்படி வெட்கப்படா திருக்கின்றனை? சூரனென்று எண்ணிக்கொண்டிருக்கிற நீ, நிந்திக்கத்தகுந்ததும் மிகக்கொடியதும் மிக்க அதர் மமுமாகிய கார்யத்தை இப்பொழுது செய்தனையே! உலகத்திலுள்ள புருஷர்கள் அனைவரும் இதைச்சொல் லிக்கொள்வார்கள். அப்பொழுது (என்னை எடுத்துக் கொண்டு வந்தபொழுது) நீ சொல்லிக்கொண்ட உன் வீர்யத்தையும் உன் பலத்தையும், சீ, எரிப்பாயாக. குலத்திற்கெல்லாம் அபவாதத்தை விளைக்கின்ற இப் படிப்பட்ட உன் நடத்தை சீ, பாழாகுமாக. நீ இப்படி வேகமாக ஓடிப்போவாயாயின், எவர் என்ன செய்யக் கூடும்? ஒரு முஹூர்த்த காலமாயினும் பொறுத்து நிற்பாயாக. ப்ராணன்களோடு திரும்பிப்போகமாட் டாய். செத்தே தீருவாய். ஸமர்த்தனுன நீ ராக்ஷஸ ஸைன்யத்தையெல்லாங் கூட்டிக்கொண்டு வருவாயா யினும், அந்த ராஜகுமாரர்களின் கண்களில் படுவா யாயின், முஹூர்த்தகாலமாயினும் ஜீவித்திருக்கப் பெருய். பறவை, அரண்யத்தில் பற்றிக் கொழுந்து விட்டெரிகின்ற அக்னியின் ஜ்வாலை தன்மேல் படுவதைப்

பொறுக்கமுடியாததுபோல், அந்த ராமலக்ஷ்மணர்களின் பாணம் படுவதை நீ எள்ளளவும் பொறுக்கமாட்டாய். ராவணு! உன் ஹிதத்தை நன்கு விசாரித்து மனத்தில் கபடமின்றி என்னை விட்டுப் போவாயாக. நீ என்னை விடமாட்டாயாயின், என்னை இங்ஙனம் அவமதித்துப் பறித்துக்கொண்டு போனதற்கு என் பர்த்தாவாகிய ராமனும் அவன் தம்பியாகிய லக்ஷ்மணனும் பெரிய கோபாவேசங்கொண்டு உன்னைக் கொல்லத் தொடங்குவார்கள். அப்பா! 'ராமன் கொன்றாலும் கொல்லட்டும்; என் விருப்பம் நிறைவேறினல் போதும்' என்கிருயோ? நீசா! நீ எந்த எண்ணங்கொண்டு என்னை இப்படி பலாத்காரஞ் செய்து எடுத்துக்கொண்டு போக விரும்புகின்றனையோ, அவ்வெண்ணம் உனக்கு நிறைவேருது. இது வீணே. நான் தேவேந்த்ரனைப்போன்ற என்ப்ராணநாதனுகிய ராமனைப் பார்க்க நேராமல் பகைவன் கையில் அகப்பட்டு, இப்பொழுது பிழைத்திருப்பினும், இப்படி வெகுகாலம் ப்ராணன்களை வைத்துக்கொண்டிருக்கப்போறேன். மனுஷ்யன் மரணகாலத்தில் விபரீதங்களைச் செய்வதுபோல், நீயும் உனக்கு ஹிதம் எதுவோ மேன்மையை விளைப்பது எதுவோ அதைத் தெரிந்துகொள்ளாமல் விபரீதங்களைச் செய்கின்றனை. சாவு நெருங்கப்பெற்றிருப்பவர்களனைவர்க்கும், ஹிதம் எதுவோ அது ருசிக்காது. நீ இப்பொழுது கண்டத்தில் காலபாசத்தைப் பூட்டிக்கொண்டிருப்பவனுக எனக்குத் தோற்றுகின்றனை. ஆகையால் சாக ஸித்தமாயிருக்கிற உனக்கு நான் சொல்லும் ஹிதம் பிடிக்காது. ராவணு! இது பயப்படவேண்டும் ஸமயம். நீ பயமற்றிருக்கின்றனை. ஆகையால் உனக்கு மரணம் ஸமீபித்திருப்பது நிச்சயம். நீ சீக்ரத்திலேயே [1] ஸ்வர்ணமயமான வ்ருக்ஷங்களைப் பார்க்கப்போகின்றனை. இது நிச்சயம். இனிச் சீக்ரத்திலேயே பயங்கரமான ரக்த

1 இது சீக்ரத்தில் மரணம் நேரிடப்பெற்றவர்க்குத் தென்படும் அடையாளம்.

ப்ரவாஹங்களோடுகூடின வைதரணீநதியையும் பயங்கரமான அஸிபத்ரவனத்தையுங்கூட யமலோகத்தில் காண்பாய். அப்படியே அக்னியில் காய்ச்சப்பட்ட பொற்புஷ்பங்களையுடையதும் காய்ச்சப்பட்ட வைடூர்ய மணிமயமான சிறந்த இலைகளையுடையதும் இரும்பாற் செய்யப்பட்ட முட்கள் நிறைந்ததும் தீக்ஷ்ணமுமாகிய நரகத்திலுள்ள [1] சால்மலி வ்ருக்ஷாகாரமான ஸ்தம்பத்தையும் பார்க்கப்போகின்றனை. 'காலாந்தரத்தில் இப்படிப்பட்ட கதி வரட்டும்; இப்பொழுது ஸுகம் நேருமல்லவா' என்கிறாயோ? மன இரக்கமில்லாத நீ மஹானுபாவனாகிய அந்த ராமனுக்கு இப்படிப்பட்ட அபகாரத்தைச் செய்தாயல்லவா; ஆகையால் விஷபானஞ் செய்தவன்போல், இனி வெகுகாலம் பிழைத்திருக்க மாட்டாய். 'உன்னைக்கொண்டு தேசாந்தரம் போகிறேன். அப்பொழுது ராமன் என்ன செய்வான்' என்கிறாயோ? ராவணா! மஹானுபாவனாகிய என் கணவன் ராமன் இருக்கையில் அவிழ்த்துப்போகடமுடியாத காலபாசத்தைக் கழுத்தில் கட்டிக்கொண்டாற் போலாயிற்றே! இனி எங்குப்போய் ஸுகம்பெறுவாய்? 'ராமனுக்கு இப்படிப்பட்ட சக்தி எப்படி' என்கிறாயோ? எவன் தம்பியுங்கூட இல்லாமல் தானொருவனே மஹாரண்யத்தில் ஒரு நொடிப்பொழுதில் பதினாலாயிரம் மஹாராக்ஷஸர்களைக் கொன்றானோ, அப்படிப்பட்ட மஹாபராக்ரமசாலியும் ஸமஸ்த அஸ்த்ரங்களிலும் வல்லவனும் மிகுந்த பலமுடையவனுமாகிய ராமன் தன் அன்பு நாயகியை அபஹரித்தவனாகிய உன்னைக் கூரான பாணங்களால் எப்படி வதஞ்செய்யாது விடுவான்?" என்றனள். ஸீதை ராவணன் மடியிலிருந்து பயமும் வருத்தமும் மேலெழப்பெற்றுப் பருஷமாகவும் மனஇரக்கம் உண்டாகும்படிக்கும் புலம்பிக்கொண்டு இவ்வார்த்

1. சால்மலி வ்ருக்ஷம்போன்ற - சால்மலி வ்ருக்ஷம் - இலவ்மரம்.

தைகளையும் மற்றும் பல வார்த்தைகளையும் கூறினள். அங்ஙனம் ஸீதை மிகுந்த மனவருத்தத்திலாழ்ந்துபுலம்பிக்கொண்டு மனஇரக்க முண்டாகும்படி பற்பலவாறு சொல்லினும் துக்கத்தினுல் மனஇரக்கம் உண்டாகும்படி பலவாறு துடிக்கினும் உடம்பெல்லாம் கிடுகிடுவென்று நடுக்கமுற்றிருப்பினும் அந்தப் பாபிஷ்ட ராவணன் அதையெல்லாம் பாராட்டாமல் அவளை எடுத்துக்கொண்டே போயினன். ஐம்பத்து மூன்ருவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஸீதை சில ஆபரணங்களை மூட்டை கட்டி யெறிதலும், ராவணன் ஸீதையை அசோக வனத்தில் வைத்து ராமனைக் கொல்லும் படி சிலராக்ஷஸர்களை ஜனஸ்தானத்திற்கு அனுப்புதலும்.

ராவணன் அங்ஙனம் எடுத்துக்கொண்டு போகையில், ஸீதை ஒருத்தனும் ரக்ஷகனுகப் பெருமல் வழியில் ஒரு பர்வதசிகரத்திலிருக்கின்ற ஐந்து வானரஶ்ரேஷ்டர்களைக் கண்டனள். அகன்ற கண்களும் பருத்த இடையின் பின்புறமுமுடைய அந்தப்பெண்மணி 'இந்த வானரோத்தமர்கள் ராமனைத் தெய்வாதீனமாகக் காண்பார்களாயின் என்ஸங்கதியைச் சொன்னுலுஞ் சொல்லக்கூடும்' என்று நினைத்துப் பொன்வர்ணமுடைய தன்பட்டு உத்தரீயத்தில் ஆபரணங்களை மூட்டையாகக் கட்டி அவர்களின் நடுவில் விழும்படி விட்டெறிந்தனள். ஆபரணங்களைத் தன்பட்டு வஸ்த்ரத்தில் வைத்துக் கட்டி வானரர்களினிடையில் விழும்படி ஸீதை வீசியெறிந்த ஸமாசாரத்தை அந்த ராவணன் அவளைக் கொண்டுபோகிற விரைவில் அறியவில்லை. கோரோசனையின் வர்ணமுடைய கண்கள் பொருந்திய அந்த வானரர்களோ கேவலரல்லர்; வானரஶ்ரேஷ்டர்கள். அவர்கள் அங்ஙனம் 'ராம! ராம! என்று கதறிக்

கொண்டிருக்கின்ற விசாலாக்ஷியாகிய அந்த ஸீதை யைத் தமது கண்களை மலர விழித்து இமைகொட்டா தவர்போல் கண்கொட்டாமல் பார்த்துக்கொண்டிருந்த னர். அந்த ராக்ஷஸேஸ்வரன், ஸீதை அங்ஙனம் ரோ தனஞ்செய்துகொண்டிருக்கையில் அதைச் சிறிதும் பாராட்டாமல் எடுத்துக்கொண்டுபோய்ப் பம்பா ஸரஸ் ஸைக் கடந்து, அதுவரையில் ராமலக்ஷ்மணர்கள் வந்து விடுவார்களோ என்னும் பயத்தினால் ராமாஸ்ரமத்தைத் திரும்பித்திரும்பிப் பார்த்துக்கொண்டே போனவன் அப்பொழுது அந்தக் கண்பார்வையைத் திரும்பிக் கொண்டு லங்கைக்கு எதிர்முகமாகப் போயினன். ராவ ணன் தனக்கு மரணஹேதுவான அந்த ஸீதையைக் கூரான கோரைப் பற்களையுடையதும் கொடிய விஷத் தைக் கக்குவதுமாகிய பெண்ஸர்ப்பத்தைக் கொண்டு போவது போல், மடியில் இட்டுக்கொண்டு பெரும் ஸந் தோஷத்துடன் போயினன். அவன், தனுஸ்ஸினின்று விடுபட்ட பாணம்போல் பெருவேகத்துடன் ஆகாச மார்க்கத்தில் வனங்களையும் நதிகளையும் பர்வதங்களை யும் குளங்களையும் கடந்துபோயினன். அவன், திமியென் னும் மீன்களுக்கும் மகரமீன்களுக்கும் வாஸஸ்தானமா யிருப்பதும் வருணனுக்கிருப்பிடமும் அழிவற்றதும் நதி களுக்கெல்லாம் புகுமிடமுமாகி விளங்குகிற ஸமுத்ரத் தைச்சேர்ந்து அதைக் கடந்து போயினன். ஸீதையைக் கொண்டு போகின்ற ராவணனைப் பார்த்துப் பயத்தி னால் ஸமுத்ரம் தழதழத்து அலைகள் அடங்கவும் மத்ஸ் யங்களும் மஹாஸர்ப்பங்களும் வெளிப்புறப்படாமல் உள் ளேயே மறையவும் பெற்றிருந்தது. அப்பொழுது ஆகா யத்திலிருக்கின்ற சாரணர்கள் பார்த்து 'ஸரி, ராவணன் இவ்வளவோடு முடிந்தான்' என்று பேசிக்கொண்டனர். ஸித்தர்களும் அப்பொழுது அங்ஙனமே மொழிந்தனர். அந்த ராவணன், உருவந்தரித்த ம்ருத்யுவைப்போன்று துக்கத்தினால் துடிக்கின்ற ஸீதையை மடியில் எடுத்துக்

கொண்டு லங்காபுரிக்குள் ப்ரவேசித்தனன். ராவணன் நன்கு ஏற்படுத்தப்பட்ட ராஜமார்க்கத்தையுடைய லங்காபுரியைச் சேர்ந்து பலஜனங்கள் நிறைந்திருக்கிற கட்டுக்கள் நிரம்பின தன் அந்தப்புரத்திற்குள் நுழைந்தனன். ராவணன், மயன் ஆச்சர்ய சக்திகள் அமைந்த ஸ்வயம்ப்ரபையென்னும் பெண் பிள்ளையைப் பிலத்தில் வைத்தாற்போல், கறுத்த கடைக்கண்களையுடையவளும் சோகமோஹங்களில் ஆழ்ந்திருப்பவளுமாகிய அந்த ஸீதையை அவ்விடத்தில் வைத்தனன். அனந்தரம் ராவணன் பிசாசம்போல் பயங்கரமாகப் புலப்படுகின்ற ராக்ஷஸ ஸ்த்ரீகளைப்பார்த்து 'என் அனுமதியில்லாமல் புருஷனாவது ஸ்த்ரீயாவது இந்த ஸீதையைப் பார்க்கலாகாது. இப்படிக்கு நீங்கள் காத்துக்கொண்டிருக்க வேண்டும். முத்துக்களையாவது ரத்னங்களையாவது ஸுவர்ணங்களையாவது வஸ்த்ரங்களையாவது ஆபரணங்களையாவது ஸீதை எதெது விரும்புவாளோ, அதையெல்லாம் அப்பெண்மணிக்கு எனக்குக் கொடுப்பது போலவே கொடுக்கவேண்டும். எவள் தெரிந்தோ தெரியாமலோ ஸீதைக்குக் கொஞ்சமாயினும் ஏதேனும் அப்ரியவார்த்தையைச் சொல்வாளோ, அவளுக்கு ப்ராணன் இனிதன்று. அவளைக் கொன்றுவிடுவேன். (எவளுக்கு ப்ராணன்களில் ப்ரீதி இல்லையோ வதத்தில் பயம் இல்லையோ அவளே ஸீதைக்கு அப்ரியஞ்சொல்வாளன்றி மற்றை எவளும் சொல்லாள். சொன்னவளுடைய ப்ராணன்களை உடனே போக்கிவிடுவேன்)' என்றனன். ப்ரதாபசாலியாகிய ராக்ஷஸர்தலைவன் அந்த ராக்ஷஸிகளுக்கு இங்ஙனம் சொல்லி அந்தப்புரத்தினின்றும் புறப்பட்டு இனி என்னசெய்யவேண்டுமென்று ஆலோசித்துக்கொண்டிருக்கையில், மஹாவீர்யமுடை

யவர்களும் மாம்ஸாஹாரர்களுமாகிய ராக்ஷஸர்கள் எண் மரைக் கண்டனன். மஹாபராக்ரமனுகிய அந்த ராவ ணன் ப்ரஹ்மாவிடம் தான் வரம்பெற்றிருக்கையால் மெய்ம்மறந்து அவரது பலபராக்ரமங்களைப் புகழ்ந்து அவர்களை நோக்கி இவ்வாக்யத்தை மொழிந்தனன்:— 'நீங்கள் பலவகை ஆயுதங்களைக் கொண்டு இங்கிருந்து மிகவும் விரைந்து புறப்படுவீர்களாக. பூர்வத்தில் ஜன ஸ்தானம் கரனுக்கு வாஸஸ்தானமாயிருந்தது. அது இப்பொழுது ராக்ஷஸர்கள் அனைவரும் முடிகையால் ஸந்நிவேசங்களெல்லாம் சூன்யமாகிப் பாழாயிருக்கின் றது. அங்குப் போவீர்களாக. நீங்கள் கேவல நீதி பலங்களையே யன்றிப் பௌருஷபலத்தையுங்கூட அவ லம்பித்துப் பயத்தைத் தூரத்தில் துறந்து ராக்ஷஸர்க ளெல்லாம் முடிந்துபோகையால் பாழாயிருக்கின்ற அந்த ஜனஸ்தானத்தில் காத்திருப்பீர்களாக. 'பௌருஷ பலத்தை ஏன் கைப்பற்றவேண்டும்' என்கிறீர்களோ? நான் கரதூஷணர்களை நாயகராக ஏற்படுத்தி மிகவும் பெரிய ஸைன்யத்தை ஜனஸ்தானத்தில் வைத்திருந் தேனே! அந்த ஸைன்யத்தையெல்லாம் கரதூஷ ணர்களோடுகூட யுத்தத்தில் ராமன் பாணங்களால் முடித்துவிட்டனன். அதன் நிமித்தமாக எனக்குப் பொறுக்கமுடியாதிருக்கையால் தைர்யம் மிகப்பெற்றுக் கோபம் மேலெழுகின்றது. இங்ஙனம் கோபாவேசத்தி னுல் தேஹம் தெரியாதிருப்பதுபற்றி நான் போவது யுக்தமாயில்லை. ஆனுல் நான் போகாதிருப்பதற்குப் பயம் காரணம் அன்று. இவ்வளவேயன்றி எனக்கு ராமன்மேல் மிகவும் பயங்கரமான மஹாவைரம் உண் டாயிருக்கின்றது. ஆகையால் என்பகைவன்மேல் பகை யைத் தீர்த்துக்கொள்ளவிரும்புகின்றனன். பகைவனை யுத்தத்தில் கொல்லாது போவேனுயின் எனக்குத் தூக் கம் பிடிக்காதல்லவா! அதற்காகவே 'பௌருஷபலத்

தையும் கைப்பற்றியிருப்பீர்களாக' என்கிறேன். கர தூஷணர்களை க்ரூரமாகக் கொன்ற அந்த ராமனைக் கொல்லுவேனாயின், ஏழையாயிருப்பவன் பெரும்பொருள் பெற்று ஸந்தோஷிப்பது போல் ஸுகம் பெறுவேன். நீங்கள்மாத்ரம் ஜனஸ்தானத்தில் இருந்துகொண்டு 'ராமன் என்ன செய்கிறான்' என்று அவனுடைய ஸமாசாரங்களையெல்லாம் உள்ளதை உள்ளபடியே தெரிந்துகொண்டு அந்த ஸங்கதியை எனக்கு அனுப்பிக்கொண்டிருக்கவேண்டும். நீங்கள் எல்லோரும் இராக்கதத் தன்மையில் சிறந்தவராகையால் உங்களுக்கு எவ்வித ஸங்கடத்திலும் பயம் இராது. ஆயினும் சத்ரு ப்ரபலனாகையாலும் ஏமாறியிருந்தால் எப்படிப்பட்டவனுக்கும் கெடுதி நேரிடுமாகையாலும் நீங்கள் எவ்வளவும் பராக்கின்றிப் போகவேண்டும். ராமனது வதத்தைப்பற்றி இடைவீடின்றி ப்ரயத்னஞ்செய்துகொண்டே இருக்கவேண்டும். 'கராதிகள் இருந்த இடத்தில் எம்மைப் போன்றவர் எப்படி இருக்கக்கூடும்' என்கிறீர்களோ? நான் யுத்தங்களில் பலதடவை உங்கள் பலத்தைப் பார்த்திருக்கின்றேன். ஆனதுபற்றியே இந்த ஜனஸ்தானகார்யத்தில் உங்களை நியோகித்தேன்' என்றனன். அனந்தரம் அந்த ராக்ஷஸர்கள் எண்மரும், பெரும் பொருள் அடங்கின பல ஸங்கதிகளைச் சொல்லி ராவணன் இனிய உரைகளால் புகழுகையில் அவனை நமஸ்கரித்து வேகத்தின் மிகுதியால் தமது உருவத்தை ஒருவரும் கண்ணெடுத்துப் பார்க்கமுடியாதவராகி லங்கையினின்று ஜனஸ்தானத்திற்குப் போயினர். [1] பிறகு ராவணனோ, ஸீதையைப் பார்த்து மிகவும் காமவிகாரங்

---

1. பிறகு ராவணன் ஸீதையைக் கொண்டு வந்ததற்கு மிகவும் ஸந்தோஷம் அடைந்து 'இனி இவள் நமக்கு ஜரித்துவிட்டாற் போலவே; நம்முடையவளே' என்று மைதிலியைத் தன்னுடையவளாக நிச்சயித்து ராமனோடு விரோதத்தையும் ஏறிட்டுக்கொண்டு மோஹத்தினால் ஸந்தோஷமுற்றவனாயினன் என்றும் பொருள் கூறலாம்.

கொண்டு, அவளை எடுத்துக்கொண்டு வந்து அதனால் ராமனுடன் விரோதத்தை ஏற்படுத்திக்கொண்டதற்குத் துக்கப்படவேண்டியதாயிருப்பினும் மோஹத்தினால் ஸந்தோஷம் பெற்றவனாயினன். ஐம்பத்து நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராவணன் ஸீதைக்குத் தன்போகஸாதனங்களைக் காட்டித் தன்னை வரிக்கும்படி வேண்டுதல்.

ராவணன், பயங்கரமான உருவமுடையவர்களும் மஹாபலசாலிகளுமாகிய எட்டு ராக்ஷஸர்களை ஜனஸ்தானத்திற்குப் போகும்படி அனுப்பிப் புத்திஸாமர்த்யமில்லாதவனாகையால் அவ்வளவில் தான் க்ருதார்த்தனாற்போல் நினைத்துக்கொண்டனன். அவன் வைதேஹியை நினைத்துக்கொண்டு மன்மதபாணங்களால் பீடிக்கப்பட்டு அந்த ஸீதையைப் பார்க்கும்பொருட்டு மிக்க பதற்றத்துடன் அழகியதான அந்தப்புரத்திற்குள் நுழைந்தனன். ராக்ஷஸர்தலைவனாகிய அந்த ராவணன் அந்தப்புரத்தில் ப்ரவேசித்து அங்கு ராக்ஷஸிகளின் இடையில் சோகத்தினால் வருந்துகின்ற ஸீதையைக் கண்டனன். முகம் முழுவதும் கண்ணீர் நிரம்பப்பெற்று வருந்திச் சோகபாரத்தினால் பீடிக்கபட்டுக் காற்றுவேகத்தினால் தள்ளுண்டு ஸமுத்ரத்தில் மூழ்கும் ஓடம்போல் வ்யாகுலமுற்று, ம்ருகங்களின் கூட்டத்தினின்று நழுவி நாய்களால் சூழப்பட்ட மான்பேடு போல் ராமலக்ஷ்மணர்களைப் பிரிந்து ராக்ஷஸர்களின் நடுவில் அகப்பட்டுத் தடுமாறித் தலைவணக்கிச் சோகத்தில் ஆழ்ந்து மனக்களிப்பின்றி எதையும் பார்க்க விரும்பாதிருக்கின்ற ஸீதையிடஞ்சென்று, அவள் துக்கத்தால்

வருத்திப் பரவசையாயிருக்கையால் ஒன்றும் செய்ய முடியாமல் வேண்டாமென்று எவ்வளவு தடுத்தபோதிலும் அதைக் கேளாமல் பலாத்காரமாக எடுத்துக்கொண்டு போய், தேவக்ருஹம்போல் மேலாயிருக்கின்ற தனது க்ருஹத்தையெல்லாங் காட்டினன். அதில் சிறிய விமானங்களும் பெரிய விமானங்களும் நிறைந்திருந்தன. அனேகமாயிரம் ஸ்த்ரீகள் அங்கு விளங்கினர். மேலும், பலவகைப் பக்ஷிகள் கலகலவென்று கூவிக்கொண்டிருந்தன. அனேகவித ரத்னங்கள் அங்கு ப்ரகாசித்தன. மேலும், ஸாதாரணமான ஸ்வர்ணங்களாலும் உருக்கி அழுக்கெடுத்த சிறந்த ஸ்வர்ணங்களாலும் ஸ்படிகக் கல்லுகளாலும் வெள்ளியாலும் இயற்றப்பட்டு வஜ்ர மணிகளாலும் வைடூர்யமணிகளாலும் விசித்ரஞ் செய்யப்பட்டு அற்புதங்களாகித் தமது அழகினால் கண்களையும் மனத்தையும் இழுக்கவல்ல ஸ்தம்பங்கள் பலவும் அங்குத் தோற்றின. அதைக் காட்டி உடனே ராவணன் ஸீதையை எடுத்துக்கொண்டு திவ்யதுந்துபிவாத்யம்போல் சப்திப்பதும் சிறந்த பொன்னாற்செய்த வாசற்படியுடையதும் ஸ்வர்ணத்தினால் நிருமிக்கப்பட்டதுமாகி ஆச்சர்யமாயிருக்கின்ற மேலுப்பரிகைக்குப் போகும் படியின்மேல் ஏறினன். அந்தப் படிக்கட்டில் தந்தத்தால் செய்த சாளரங்களும் வெள்ளியால் செய்த சாளரங்களும் பார்க்க மிகவும் அழகாயிருந்தன. அந்தப் படிக்கட்டின்மேல் பொன்சாளரங்கள் வரிசையாக ஏற்படுத்தப்பெற்ற மேடைகள் வரிசைவரிசையாகப் புலப்பட்டன. ராவணன், அந்தச் சாளரங்களின் அடியில் சுண்ணாம்பு பூசப்பட்டவைகளும் ரத்னங்கள் பல இழைக்கப்பெற்றவைகளுமாகி விசித்ரங்களாயிருக்கின்ற தன் க்ருஹத்திலுள்ள அந்தந்த ப்ரதேசங்களையெல்லாம் ஸீதைக்குக் காண்பித்தனன். சோகத்தில் ஆழ்ந்திருக்கின்ற அந்த ஸீதைக்கு ராவணன் நடைவாவிகளையும் பலவகை வ்ருக்ஷங்களோடு கூடின குளங்களையும் காண்பித்தனன். அந்தப்பாபிஷ்டன் உத்தமமான

தன் க்ருஹத்தை யெல்லாம் ஸீதைக்குக் காண்பித்து அவளுக்குத் தன்னிடத்தில் விருப்பத்தை விளை விக்க நினைத்து இவ்வாக்யத்தை மொழிந்தனன்:— 'ஸீதே! பத்துக்கோடி ராக்ஷஸர்களும் இன்னம் இரு பத்திரண்டு கோடிராக்ஷஸர்களும் இருக்கின்றனர். அவர்களெல்லோரும் பயங்கரமான கார்யங்களைச் செய் யுந்தன்மையர். அவர்கள் எல்லோர்க்கும் நான் ப்ரபு. வ்ருத்தர்களும் பாலர்களும் தவிர என்னொருவனுக்கு மாத்ரம் பரிசாரகர்கள் ஆயிரம்பேர் இருக்கின்றனர். எனக்கு ராஜபரிகரம் ஏதேது இருக்கின்றதோ அதெல் லாமும் என் ப்ராணனும் உன்னதீனமே. அகன்ற கண் களுடையவளே! நீ எனக்கு ப்ராணன்களைக் காட்டி லும் மேலாயிருப்பவள். அன்பிற்கிடமானவளே! நீ எனக்குப் பார்யையாவாயாக. அப்பொழுது இந்த அந் தப்புரத்திலுள்ள பல உத்தமஸ்த்ரீகளில் என் பார்யை கள் எவர் எவர் இருக்கின்றார்களோ, அவர்கள் எல் லோர்க்கும் நீ தலைவியாயிருப்பாயாக. நான் சொன்ன வார்த்தையை மனத்தில் ஏற்றுக்கொள்வாயாக. இது வே நல்லது. ராமனென்கிற வேறுபுத்தியால் உனக்கு ப்ரயோஜனமென்? என்னைக் கைப்பற்றுவாயாக. மன்ம தாவேசத்தால் வருந்துகின்ற என்மேல் அனுக்ரஹம் செய்வாயாக. இதுவே நீ செய்யத்தகுந்த கார்யம். ராமன் இங்கு வருவதற்கும் ப்ரஸக்தி இல்லை. ஏனெனில் இந்த லங்கை நூறுயோஜனை அளவுடையது; பலவாயி ரம் ராக்ஷஸர்களால் சுற்றிலும் சூழப்பட்டிருக்கின்றது. தேவதைகளும் அஸுரர்களும் இந்த்ரனுடன் கலந்து வருவார்களாயினும் இதை ஆக்ரமித்துப் புகமுடியாது. வீர்யத்தில் எனக்கு நிகரானவன் எந்தலோகத்திலும் தேவதைகளிலாயினும் யக்ஷர்களிலாயினும் பக்ஷிகளி லாயினும் எவனும் எனக்குத் தெரியவில்லை. ராஜ்யம் கைசோரப்பெற்று மனக்களிப்பின்றித் தாபஸனாகி

ஆயுள்முடியப்பெற்று ஒளியும் அற்பமாயிருக்கப்பெற்ற கேவலமனுஷ்யனுகிய ராமனுல் என்ன கார்யம் செய்யப் போகின்றனை? ஸீதே! நீ என்னையே கைப்பற்றுவாயாக. நானே உனக்குத் தகுந்த கணவனு யிருக்கின்றனன். பயமுறுங் தன்மையளே! யௌவனம் நிலையாயிருப்ப தன்று. இது உனக்கும் தெரிந்த விஷயமே. என்னுடு கூட இங்கு யௌவன ஸுகங்களை அனுபவிப்பாயாக. சிறந்த முகமுடையவளே! ராமனைப் பார்க்கவேண்டு மென்றுங்கூட நீ மனத்தில் ஆசை வைத்துக்கொள்ள வேண்டாம். அவனுக்கு இங்கு வரவேண்டுமென்று மனத்தில் நினைப்பதற்காயினும் சக்தி யாதிருக்கின்றது? மஹாவேகமுள்ள வாயுவை ஆகாயத்தில் கயிற்றுல் பிடித்துக் கட்டமுடியாது. எரிகின்ற அக்னியின் புகை யில்லாத ஜ்வாலையையும் பிடிக்கத் தரம் அன்று. அப் படியே இங்கிருக்கின்ற உன்னைப் பெறுவது ராமனுக்குச் சிறிதும் ஸாத்யமன்று. மங்கலஸ்வபாவையே! என் புஜங் களால் பாதுகாக்கப்படுகின்ற உன்னைப் பராக்ரமத்தி னுல் இங்கிருந்து கொண்டுபோகுந் திறமுடையவன் மூன்றுலோகங்களிலும் எனக்குப் புலப்படவில்லை. நீ லங்கையில் மிகவும் பெரிதான இந்த ராஜ்யத்தையெல் லாம் பரிபாலனஞ் செய்வாயாக. இன்னும் என்னைப் போன்றவர்களும் தேவதைகளும் ஜங்கமஸ்தாவரங் களும் உனக்குப் பரிசாரகர்களாவோம். நீ எனக்குப் பட்டமஹிஷியாய் அபிஷேக ஜலங்களால் நனைந்தவ ளாகி ஸந்தோஷத்துடன் என்னை மனக்களிப்புறச் செய் வாயாக. நீ முன்பு செய்த பாபகர்மம் வனவாஸத்தினுல் தீர்ந்துபோயிற்று. இனி நீ நன்கு ஆசரித்த தர்மத்தின் பலனை இங்கு அனுபவிப்பாயாக. ஸீதே! நீ இங்கு என் னுடுகூடத் திவ்யகந்தமுடைய ஸமஸ்த மாலைகளையும் உத்தமங்களான பூஷணங்களையும் அனுபவிப்பாயா

அழகிய இடையின் பின்புறமுடையவனே! என் தமையனான குபேரனுக்குப் புஷ்பகமென்னும் ஒரு விமானம் உண்டு. அது ஸூர்யன்போல் விளக்கமுற்றிருக்கும். நான் புஜபலத்தினால் ஜயித்து அதைக் கைப்பற்றினன். அந்த விமானம் எத்தனைப்பேர்களும் உட்காரப்போதுமான [1] வைசால்யமுடையதாகி ரமணீயமாயிருக்கும். அதற்கொப்பானது வேறொன்றும் இல்லை. ஸீதே! அந்த விமானத்தில் என்னோடுகூட நீ ஸுகமாக விளையாடலுற்றிருப்பாயாக. அழகிய இடையின் பின்புறமுடையவளே! சிறந்த முகமுடையவளே! தாமரைபோல் விளக்கமுற்று நிர்மலமாகிப் பார்க்க மிகவும் அழகாயிருக்கின்ற மேலான உன்முகம் துக்கத்தினால் ஆநந்தமின்றி ப்ரகாசியாதிருக்கின்றதே! ஆகையால் துக்கத்தைத் துறப்பாயாக' என்றனன். ராவணன் இவ்வாறு சொல்லிக்கொண்டிருக்கையில், அந்தப் பெண்மணியாகிய ஸீதை வஸ்த்ரத்தின் நுனியால் சந்த்ரன்போல் ஸுந்தரமாயிருக்கின்ற முகத்தை மூடிக்கொண்டு மிகவும் கண்ணீர் பெருக்கினள். பாபாத்மாவாகிய அந்த ராக்ஷஸர்தலைவன் ராவணன் அங்ஙனம் ராமனையே த்யானித்துக்கொண்டு பூதாவேசங்கொண்டவள்போல் ப்ரஜ்ஞையின்றி வருத்தமுற்றுச் சிந்தையால் ஒளிமாறிப் பரிதபித்துக்கொண்டிருக்கின்ற ஸீதையைப் பார்த்து மொழிந்தனன்:—'ஸீதே! பர்த்தாவைக் கைவிட்டு மற்றொருவனைக் கைப்பற்றினால் தர்மலோபம் நேருமேயென்று லஜ்ஜைப்பட வேண்டாம். தெய்வகதியால் உனக்கு என்னோடு நேருகின்ற இந்த ஸம்பந்தம் அதர்மம் அன்று. ரிஷிகளால் கொண்டாடப்பட்டதே. ஸுந்தரங்களான இந்த உன் சரணங்களை என் தலைகளைச் சாய்த்து நன்கு படியும்படி பலவாறு வணங்குகின்றனன். என்மீது விரைந்து அருள்

---

1. வைசால்யம்-விஸ்தாரம்.

புரிவாயாக. உனக்கு உட்பட்டனன். உனக்குத் தாஸனுயினன். நான் மன்மததாபத்தினுல் பரிதபித்து என்பெருமைக்குத் தகாத நீசமான இவ்வார்த்தைகளை மொழிந்தனன். ராவணன் இதுவரையில் எப்படிப்பட்ட மடந்தைக்கும் தலை வணக்கி நமஸ்கரித்தறியானே!'' என்றனன். ராவணன் ஜனகராஜன் புதல்வியாகிய ஸீதையோடு இங்ஙனஞ் சொல்லிக் காலன்வசம் அகப்பட்டு 'இவள் என்னுடையவள்' என்று நினைவிட்டனன். ஐம்பத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஸீதை ராவணனை ஸிரவித்துப் பேசுதலும், ஸீதையை மீளவும் அசோகவனத்திற்குக் கொண்டுபோதலும்.

சோகத்தினுல் மனக்களிப்பற்றிருக்கின்ற ஸீதை, ராவணன் அங்ஙனம் சொல்லக்கேட்டுப் பயத்தை விட்டுப் பதிவ்ரதை பரபுருஷனேடு நேரே வார்த்தை சொல்லலகாதாகையால் ராவணனுக்கும் தனக்கும் இடையில் ஒரு த்ருணத்தை இட்டுக்கொண்டு அவனைப்பார்த்து மொழிந்தனள்:—தசரதரென்னும் மஹாராஜர் ஒருவர் இருந்தனர். அவர், ஸேது ஜலத்தைத் தடுப்பதுபோல் தர்மமர்யாதைகளை அழிய வொட்டாமல் ஏற்படுத்துந் தன்மையர். (அவர் தர்மமர்யாதைகளுக்கு அழியாத ஸேதுவாயிருப்பவர்.) ஸத்யஸந்தரென்று ப்ரஸித்திபெற்றவர். அவரது குமாரனே அந்த ராமன். இப்படிப்பட்ட குலத்திற்சேர்ந்த நான் எப்படி வழி தப்பி நடப்பேன்? ராமனென்னும் அம்மஹானுபாவன் தர்மஸ்வபாவன்; மூன்று லோகங்களிலும் புகழ்பெற்றவன்; முழந்தாள் வரையிலும் நீண்ட பாஹுதண்டங்களுடையவன்; கண்கள் அகன்று அழகாயிருக்கப்பெற்றவன்; ஸர்வலோகங்

களுக்கும் தெய்வமாயிருப்பவன். அவனே என்பர்த்தா. ஆகையால் அவன் எனக்கும் தெய்வம். அப்படிப்பட்ட பர்த்தாவைக் கைப்பற்றினவள் வழிதப்பி நடப்பளா? அவன் இக்ஷ்வாகுவம்சத்தில் பிறந்தவன்; ஸிம்ஹம்போல் உயர்ந்த தோள்களுடையவன்; மஹாதேஜஸ்வி. அவனுக்கு லக்ஷ்மணனென்னும் ஒரு தம்பி உளன். அந்த ராமனே தம்பியுடன் வந்து உன் ப்ராணன்களை வாங்கப் போகின்றனன். 'ஆனால் இன்னம் அவன் ஏன் வெறுமனே இருக்கிறான்?' என்கிறாயோ? நீ ராமனுக்கெதிரில் என்னைப் பலாத்காரமாக எடுத்துக்கொண்டு வந்திருப்பாயாயின், இவ்வளவில் கரனைப்போல் யுத்தத்தில் அடிபட்டு ஜனஸ்தானத்தில் படுத்திருப்பாய். பயங்கரமான உருவமுடையவர்களும் மஹாபலிஷ்டர்களுமாகிய ராக்ஷஸர்கள் இருக்கிறார்களென்று சொல்லினையே; கருத்மானிடத்தில் ஸர்ப்பத்தின் விஷம் ஓங்காதிருப்பதுபோல் ராமனிடத்தில் அவர்கள் எல்லோருடைய வீர்யமும் எவ்வளவும் உபயோகப்படாது. அந்த ராமனது வில்லினின்று வெளிப்பட்டு ஸ்வர்ணத்தால் அலங்கரிக்கப்பட்ட பாணங்கள், கங்காப்ரவாஹத்தின் அலைகள் அதன் கரையைக் கரைப்பதுபோல் உன் சரீரத்தை அழித்துக் கரைக்கப் போகின்றன. ராவணா! தேவதைகளுக்கும் ராக்ஷஸர்களுக்கும் கொல்ல முடியாதவனாயினும் அந்த ராமனுக்கு உன்மேல் மிகுந்த வைரம் உண்டாகும்படி செய்து கொண்டாயாகையால் நீ ப்ராணன்களோடிருந்து அவனிடத்தினின்று தப்புவித்துக்கொள்ள வல்லவனல்லை. உனக்கு இன்னம் பிழைத்திருக்க வேண்டிய நாட்கள் மிகுந்திருக்குமாயினும் அவைகளை ராமனே முடிக்கப் போகின்றனன். யூபஸ்தம்பத்தில் கட்டப்பட்ட பசுவுக்குப் பிழைத்தல் அரிதாயிருப்பதுபோல், இனி உனக்

குப் பிழைத்தல் அரிது. ராவண! ராமன் ரோஷம் நிரம்பி எரிகிற தீக்கண்களால் உன்னைக் காண்பானா யின், நீ உடனே கொளுத்தப்பட்டு அவமானம் பெறு வாய். ராமன் ஆகாயத்தினின்றும் சந்த்ரனைத் தரை யில் விழத்தள்ளவும் வல்லவன்; நாசஞ்செய்யவும் திற முடையவன். ஸமுத்ரம் முழுவதையும் உலரச்செய்ய வல்லவன். அப்படிப்பட்ட ராமன் தன் ஸீதையை இங்கு விட்டுவைக்க மாட்டானென்பதைப் பற்றிச் சொல்ல வேண்டுமோ? உனக்கு ஆயுள்முடிந்துவிட்டது. உன் ராஜ்யலக்ஷ்மியும் சீக்ரத்தில் அழியப் போகின்றது. உன்வலிவும் இந்த்ரியங்களும் விரைவில் நாசமடையப் போகின்றன. நீ பரஸ்த்ரீயைத் தொட்ட பாபத்தினுல் இந்த லங்காபுரியும் சீக்ரத்தில் வைதவ்யத்தை அடை யப்போகின்றது. அரண்யத்திலிருந்த என்னை நான் அபிப்ராயப்படாதிருக்கையில் என் பர்த்தாவின் பார்ஶ் வத்தினின்று பிரித்துக்கொண்டு வந்தனை. இங்ஙனங் கொண்டுவந்து என்னிடத்தில் நீ இப்படிப்பட்ட பாப கார்யத்திற்கு முயன்றனையே; இது உனக்கு மேன் மேலும் ஸுகத்தை விளைவிப்பதாகாது. துக்கத்தை யே விளைக்கும். 'ராமன் தீனன், தாபஸன்' என்றனை. என் பர்த்தாவாகிய அந்த ராமன் தெய்வபலமுடையவன்; மஹாதேஜஸ்வி; ஆனதுபற்றியே தன் பராக்ரமத்தை அவலம்பித்துச் சூன்யமாகிய தண்டகாரண்யத்தில் நிர்ப் பயனுயிருகின்றனன்; உன்னை விடமாட்டான். அந்த ராமன் யுத்தத்தில பாணங்களைப்பெய்து உன் அவயவங் களிலுள்ள மதத்தையும் பலத்தையும் வீர்யத்தையும் அப்படிப்பட்டகர்வத்தையும் இவைபோன்ற மற்றுமுள்ள எல்லாவற்றையும் தொலைக்கப் போகின்றனன். தெய் வச்செயலால் பூதங்களுக்கு விநாசம் நேருங்காலத்தில் மனிதர்கள் காலனுக்கு வசப்பட்டு அப்பொழுது மனவூக் கமற்று விபரீதகார்யங்களைச் செய்வார்கள். ராக்ஷஸா தமனே! நீ என்னை இப்படி கிரஸித்தாயாகையால் இப்

பொழுது நீயும் உன்னைச் சேர்ந்த ராக்ஷஸர்களும் அத்தப்புரஜனங்களும் வதத்தை அடையும்படியான அக்காலம் உனக்கு ஸமீபித்திருக்கின்றது. யாகசாலையினிடையில் ஸ்ருக்கு ஸ்ருவம் முதலான உபகரணங்களோடு கூடி ப்ராஹ்மணர் படிக்கிற மந்த்ரங்களால் பரிசுத்தமாகிய யாகவேதிகையைச் சண்டாலன் காலால் மிதிக்கப் பெறுனல்லவா? ராக்ஷஸாதமனே! அவ்வண்ணம் பரம தார்மிகனுகிய ராமனுடைய தர்மபத்னியும் பதிவ்ரதையுமான என்னைப் பாபிஷ்டனுகிய உனக்குத் தொட எள்ளளவும் ஸாத்யமன்று. எப்பொழுதும் தாமரைவனங்களில் ராஜஹம்ஸத்துடன் க்ரீடித்துக்கொண்டிருக்கிற பெண்ராஜஹம்ஸம் புற்குவியல்களில் புரளுகின்ற நீர்க்காகத்தை எப்படி கண்ணெடுத்துப்பார்க்கும்? ராவண! இந்தத் தேஹம் இயற்கையாகவே ஜடமாயிருப்பது; மேலும் சேஷ்டைகளெல்லாம் அடங்கப்பெற்றிருப்பது. இப்படிப்பட்ட இதைக் கட்டிலும் கட்டுவாயாக. பக்ஷிக்கிலும் பக்ஷிப்பாயாக. எனக்கு இந்தத் தேஹத்தையாவது ப்ராணனையாவது ரக்ஷிக்கவேண்டிய அவஸ்யம் எவ்வளவும் இல்லை. நான், 'ஸீதை பாதிவ்ரயத்தை விட்டாள்' என்னும் அபவாதத்தைமாத்ரம் பூமியில் விளைவித்துக்கொள்வதற்கு எள்ளளவும் பொறுக்கமாட்டேன்' என்றனள். ஸீதை கோபாவேசங்கொண்டு இங்ஙனம் மிகப் பருஷமாகப் பேசிப் பிறகு ராவணனேடு ஒன்றும் பேசாதிருந்தனள். ஸீதை இங்ஙனம் மயிர்க்கூச்சலை விளைக்கும்படி பருஷமாகப் பேசினதற்கு ராவணன் கோபம் மிகப்பெற்று ஸீதையைப் பார்த்துப் பயமுறுத்தும்படியான வார்த்தைகளைச் சொல்லத்தொடங்கி 'ஸீதே! நான் சொல்லும் வார்த்தையைக் கேள். இன்னம் பன்னிரண்டு மாதங்கள் எதிர்பார்க்கிறேன். கோபமுறுந்தன்மையளே! அழகிய புன்னகையுடைய

வளே! இவ்வளவில் நீ என்னைப் பற்ற மாட்டாயாயின், பிறகு மறுநாள் காலையில் புசிக்கும் பொஜனத்திற்காக உன்னை என்சமையற்காரர்கள் துண்டு துண்டாக வெட்டு வார்கள்.' என்றனன். பகைவரை அழமூட்டுந்தன்மைய ஞன ராவணன் ஸீதையுடன் இவ்வண்ணம் பருஷமாகச் சொல்லிப் பிறகு கோபத்துடன் ராக்ஷஸஸ்த்ரீகளைப் பார்த்து 'மாம்ஸங்களையும் ரக்தங்களையும் ஆஹாரமாக வுடைய ராக்ஷஸஸ்த்ரீகளே! நீங்கள் சீக்ரத்தில் விகார முடைய பயங்கர உருவங்களைத் தரித்து இந்த ஸீதை யின் அஹங்காரத்தை அடக்குவீர்களாக' என்றனன். மிகவும் பயமுறுத்தும் படியான உருவத்தையுடைய அந்த ராக்ஷஸிகள் குவியல் குவியலாக நின்று ராவணன் சொன்னமாத்ரத்தில் அங்கிகாரத்தை அறிவிக்கும்படி அஞ்சலி செய்து ஸீதையைச் சுற்றிக்கொண்டு நின்ற னர். பயங்கரமான உருவமுடைய ராவணன் பூமியைப் பிளப்பவன்போல் அடிகளை இட்டெழுந்திருந்து அந்த ராக்ஷஸிகளைப் பார்த்து 'இந்த ஸீதையை அசோக வனிகையின் மத்தியில் கொண்டுபோய் வைப்பீர்களாக. அங்கு இவளைச் சுற்றி நீங்கள் சூழ்ந்திருந்து ரஹஸ் யமாக ரக்ஷித்துக் கொண்டிருக்கவேண்டும். அந்த அசோகவனத்தில் நீங்கள் கோரமாக விரட்டியும், மிக வும் பயப்படுத்தினுல் ப்ராணன்கள் போய்விடுமாகையால் மீளவும் இனிய உரைகளைச் சொல்லித் தேற்றியும் அடவியிலுள்ள பெண்யானையை ஸ்வாதீனப்படுத்துவது போல் இந்த ஸீதையை வசப்படுத்துவீர்களாக' என்ற னன். ராவணன் இப்படி ஆஜ்ஞாபிக்கையில், அந்த ராக்ஷஸிகள் ஸீதையை எடுத்துக்கொண்டு அசோக வனத்திற்குப் போயினர். அங்குள்ள வ்ருக்ஷங்கள் ஸர்வகாலத்திலும் காயும் பூவும் நிறைந்து பலவகைப்

புஷ்பங்களும் பழங்களும் அமைந்து விளங்குந்தன்மை யனவாயிருக்கும். அங்குள்ள பக்ஷிகள் எக்காலத்தி லும் மதம்பெற்றிருக்கும். ஜனகராஜன் புதல்வியாகிய அந்த ஸீதை ராக்ஷஸிகள்கையில் அகப்பட்டுப் புலி களின் இடையில் அகப்பட்ட பெண்மான்போல் துக்கத் தினுலும் பயத்தினுலும் அங்கங்களெல்லாம் விலவிலக் கப் பெற்றிருந்தனள். ஜனகராஜன் குமாரத்தியாகிய ஸீதை ஸஹஜமாகவே ஸ்த்ரீஸ்வபாவத்தினுல் பயப்படுந் தன்மையுடையவளாகையால் கயிற்றுல்கட்டுண்ட பெண் மான்போல் மிகவும் துயரமுற்று எள்ளளவும் ஸுகம் பெறுதிருந்தனள். அப்பொழுது ஸீதை விகாரமான கண்களையுடைய ராக்ஷஸிகள் மிகவும் விரட்டுகையில் அங்குச் சிறிதும் ஸுகம் நேரப்பெறுமல் தனக்குத் தேவ தையும் ப்ராணவல்லபனுமாகிய ராமனை நினைத்துக் கொண்டு பயமும் துக்கமும் பீடிக்கப்பெற்று ப்ரஜ்ஞை தப்பி மூர்ச்சித்தனள். ஐம்பத்தாறுவது ஸர்க்கம் முற் றிற்று.

---

ராமன் ம்ருகரூபந்தரித்த மாரீசனைக் கொன்று திரும்பிவரும் மார்க்கத்தில் அவச குனங்களும வழிநடுவில் வருகிறலக்ஷ் மணனைக் கண்ணுறுதலும், மீளவும் அவ சகுனங்களைக் கண்டு சோகித்துக் கொண்டே வருதலும்.

ராமன் ம்ருகரூபந்தரித்துத் திரியும் காமரூபியாகிய மாரீசராக்ஷஸனை வதித்துச் சீக்ரமாகத் தன ஆஶ்ர மத்துக்குப் போகும்வழியே திரும்பிவந்தனன். அவன் ஸீதையைப் பார்க்க விரும்பி வேகமாக வருகையில், அவனுக்குப் பின்புறத்தில் ஒரு நரி பயங்கரமான த்வனி யுடன் ஊளையிட்டது. ராமன் முன்னமே மாரீசனது

ஸ்வரத்தினுல் என்ன விளையுமோவென்று சங்கித்திருப்பவன். மேலும் பயங்கரமாகவும் மயிர்க்கூச்சலை விளக்கும்படியும் அந்த நரி ஊளையிடுகையில் அதைக் கேட்டு மிகவும் சங்கித்தவனுகித் தனக்குள் ‘நரி ஊளையிடுகிற விதங்கண்டால் ஏதோ அசுபம் நேருமென்று எனக்குத் தோற்றுகின்றது. ஐயோ! ஸீதை ராக்ஷஸர்களால் பக்ஷிக்கப்படாதிருப்பாளா! ம்ருகரூபந்தரித்த மாரீசன் என்ஸ்வரத்தை அறிந்துகொண்டு அந்த ஸ்வரத்தை ஏறிட்டு ‘ஹா ஸீதே! லக்ஷ்மணு!’ என்று உரக்கச்செய்த சப்தத்தை லக்ஷ்மணன் கேட்பானுயின், அவன் என் ஸ்வரத்தைக் கேட்டு வெறுமனே இருக்கமாட்டான். அப்படியே அதைக்கேட்ட ஸீதையும் அவனைப் போகும்படி அனுப்பாமல் இருக்கமாட்டாள். ஆகையால் அவனைவிட்டு என்னைத் தேடிக்கொண்டு சீக்ரமாக என்னிடம் வருவான். மாரீசன் பொன்மானுருவம் பூண்டு என்னை ஆஶ்ரமத்தினின்று வெகுதூரம் இழுத்துக்கொண்டுபோய்க் கடைசியில் என் பாணத்தால் அடிக்கப்பட்டுக் கீழே விழுந்து மீளவும் ராக்ஷஸனுயினன். மேலும் வெறுமனே சாகாமல் ‘ஐயோ! லக்ஷ்மணு! அடிபட்டுப் போகிறேனே!’ என்று என் குரலைப்போன்ற குரலுடன் இவ்வார்த்தையை மொழிந்தனன். இந்தக் காரணங்களால் ராக்ஷஸர்களெல்லோரும் சேர்ந்து ஸீதையைக் கொல்லவேண்டுமென்று விரும்பினுர்களென்பது நிச்சயம். ஜனஸ்தானவாஸத்திற்காக ராக்ஷஸர்களோடு வைரம் வைத்துக்கொண்டனன். மஹாரண்யத்தில் எவரும் இல்லாமல் தனியாயிருக்கின்ற அந்த ஸீதாலக்ஷ்மணர்கள் க்ஷேமமாயிருப்பார்களா? மேலும் இப்பொழுது பயங்கரமான துர்நிமித்தங்களும் பல புலப்படுகின்றனவே’ என்று ராமன் சிந்தித்தனன். இங்ஙனம் ரகுகுலகுமாரனுகிய அந்த ஸ்ரீராமன் நரியின் சப்தத்

தைக் கேட்டும், ம்ருகரூபந்தரித்த மாரீசன் தன்னை ஆஶ்ரமத்தினின்று அப்புறம்கொண்டுபோனதைக் கண்டும் ஸம்சயம் அடைந்தவனாகி இவ்வாறு சிந்தித்துக் கொண்டே ஜனஸ்தானத்திலுள்ள தனது ஆஶ்ரமத்தைக் குறித்து வந்தனன். ம்ருகங்களும் பக்ஷிகளும் தீனங்களாகி வருந்துகின்ற ராமனிடம் வந்து மஹானுபாவனாகிய அவனை [1] இடஞ்செய்து பயங்கரமாகக் கூச்சலிட்டன. ராமன் மஹாபயங்கரமான அந்தத் துர்நிமித்தங்களைக் கண்டு பரபரப்புடன் மீளவும் வேகமுற்றுத் தனது ஆஶ்ரமத்தின் வழியைப்பற்றி நடந்தனன். அந்த ராகவன் அழகிய அங்குலியுடைய ஸீதையையும் மஹாபலிஷ்டனாகிய லக்ஷ்மணனையும் நினைத்துக்கொண்டே ஜனஸ்தானத்திலுள்ள தனது ஆஶ்ரமத்திற்கு வந்தனன். அங்ஙனம் அவன் வந்துகொண்டிருக்கையில், முகவொளி மழுங்கி விலவிலத்த மேனியுடன் வருகின்ற லக்ஷ்மணனைக் கண்டனன். கண்டவுடன் அந்த லக்ஷ்மணன் திகிலடைந்து வருந்தித், தன்னைப்போலவே திகிலுற்றுத் துக்கத்திலாழ்ந்திருக்கின்ற ராமனது அருகிற் சென்று கலந்துகொண்டனன். அனந்தரம் அண்ணனாகிய ராமன், ஜனஸஞ்சாரமின்றி ராக்ஷஸர்கள் திரியும்படியான அரண்யத்தில் ஸீதையைத் தனியே விட்டு லக்ஷ்மணன் வந்ததற்கு அவனைப் பலவாறு நிந்தித்தனன். ரகுகுலகுமாரனாகிய அந்த ராமன் லக்ஷ்மணனுடைய இடக்கையைப் பிடித்துக் கொண்டு முதலில் பருஷமாகவும் கடைசியில் மதுரமாகவும் இருக்கின்ற வார்த்தைகளை மனவருத்தம் விளங்குமாறு இங்ஙனம் மொழிந்தனன்:—'ஐயோ! லக்ஷ்மணா! நீ அந்த நம் ஸீதையைத் தனியாகவிட்டு இவ்விடம் வந்தனையே! அப்ப! நிந்தைக்கிடமான கார்யஞ்செய்தனையே! நல்லியற்கையுடையவனே! நமக்கு இவ்விஷயத்தில் க்ஷேமம் உண்

---

1. அப்ரதக்ஷிணஞ்செய்து.

டாகுமா? வீரனே! இப்பொழுது எனக்கு அசுப சகுனங்களே பலவும் புலப்படுவது கண்டால் எல்லாவிதத்திலும் ஸீதையை வனத்தில் திரியும் ராக்ஷஸர்கள் எடுத்துக்கொண்டாவது போயிருப்பார்கள்; அல்லது பக்ஷித்தாயினும் இருப்பார்கள். எனக்கு ஸந்தேஹம் இல்லை. புருஷஶ்ரேஷ்டனே! ஜனகராஜன் புதல்வியாகிய ஸீதை பிழைத்து க்ஷேமமாயிருக்க நாம் காணப்பெறுவோமா? ம்ருகஸமூஹங்களும் நரியும் பக்ஷிகளும் ஸூர்யகிரணங்களால் விளங்குந் திசைமுகமாகிப் பயங்கரமாகக் கூவுகின்றன. மஹாபலனே! அந்த ராஜகுமாரத்தியாகிய ஸீதைக்கு க்ஷேமம் உண்டாகுமா? முன்பு ம்ருகம்போல் தோற்றின அந்த ராக்ஷஸன் தன்னைப் பின்றொடர்ந்து வருகின்ற என்னை மோசஞ்செய்துவெகு தூரம்கொண்டு போய் எவ்வளவோ ஶ்ரமப்பட்டும் குறிக்கு அகப்படாமல் கடைசியில் என்னால் அடிக்கப்பட்டு மரணம் அடைந்துகொண்டே இதோ ராக்ஷஸரூபம் பெற்றனன். இப்பொழுது ஸீதையைக் குறித்து என்மனம் வருந்திக் களிப்பற்றிருக்கின்றது; என்னுடைய இடக்கண்ணும் விகாரமாகத் துடிக்கின்றது; ஆகையால், லக்ஷ்மணா! ஸீதை ராக்ஷஸர்களால் அபஹரிக்கப்பட்டனளோ, மரணம் அடைந்தனளோ, மார்க்கத்தில் எடுத்துக்கொண்டு போகப்படுகின்றனளோ, தெரியவில்லையே யன்றி ஆஶ்ரமத்தில் இருக்கமாட்டாளென்பது நிஜம். இதற்கு ஸந்தேஹமே இல்லை' என்றனன். ஐம்பத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராமன் ஸீதையைப் பெறுவது ஸந்தேஹமென்று தோற்றுகையில் சோகத்தினால் புலம்புதல்.

தசரதகுமாரனாகிய ராமன் சூன்யமான மஹாரண்யத்தில் ஸீதையை விட்டுவந்து வருந்துகின்ற லக்ஷ்மண

னைப் பார்த்து 'லக்ஷ்மணா! பயங்கரமான தண்டகாரண்யத்திற்கு நான் ப்ரயாணமாயினும் என்னைப் பிரிந்திருக்கப்பொறாமல் பின்றொடர்ந்து வந்தனளே! அப்படிப்பட்ட ஸீதையை விட்டு நீ இவ்விடத்திற்கு வந்தனையே! அந்த ஸீதை இப்பொழுது எங்கே இருக்கின்றனள்? ராஜ்யத்தைப் போக்கடித்துக்கொண்டு மனக்களிப்பின்றித் தண்டகாரண்யத்தில் ஓடித்திரிந்தலேகின்ற என்னுடன் ஒத்து அந்தந்த துக்கங்களைத் தானும் அனுபவித்துக்கொண்டு எனக்கு ஸஹாயமாயிருந்த அந்த ஸீதை அந்த நுண்ணிடையுடைய பெண்மணி எங்கே இருக்கின்றனள்? வீரனே! எவளை விட்டுப் பிரிந்து ஒரு முஹூர்த்த காலமும் பிழைத்திருக்கப்பொறேனோ, என் ப்ராணன்களுக்கு ஸஹாயமான அந்த ஸீதை, தேவகன்னிகைபோல் விளங்குந்தன்மையுள்ள அம்மாதரசி எங்கே இருக்கின்றனள்? லக்ஷ்மணா! பொன்வர்ணமுடைய மேனியமைந்த அந்த ஜனகராஜன்புதல்வி இல்லையாயின் [1] தேவாதிபத்யத்தையாயினும் பூமண்டலாதிபத்யத்தையாயினும் எள்ளளவும் விரும்பமாட்டேன். நல்லியற்கையுடையவனே! எனக்குப்ராணன்களைக்காட்டிலும் இனியளாகிய ஸீதை பிழைத்திருப்பாளா? அப்படிப்பட்ட ஸீதையைப் பிரிவேனாயின், எனக்கு இப்பொழுதே ப்ராணன்கள் போய்விடும்; ஆகையால் என்வனவாஸவ்ரதம் பதினான்கு ஸம்வத்ஸரங்களென்னுங்கெடுவு முடியும்வரையில் நடக்காமையால் நிறைவேறாமற்போய்விடும். இப்படிப்பட்டவிபத்து நேரப்பெறாதிருந்து என்வ்ரதம் பொய்யாகாதிருக்குமா? அதை நடத்தியே தீருவேனா? லக்ஷ்மணா! ஸீதை நசித்துப்போவளாயின், அவளைப்பற்றி நானும் மரணம் அடைந்து நீ அயோத்யைக்குப் போனவுடனே அந்தக் கைகேயி உன்னைப்பார்த்துத் தன்விருப்

---

1. தேவாதிபத்யம்-தேவதைகளுக்கு ப்ரபுவாயிருத்தல்.

பம் ஈடேறப்பெற்று எவ்வளவோ ஸுகமுற்றிருப்பா ளல்லவா? அங்ஙனம் புதல்வனுகிய நான் மரணம் அடை கையில் என்தாயான கௌஸல்யை மிகவும் மன இரக் கத்திற்கிடமான தசையைப் பெற்றும், பிள்ளையோடும் துரைத்தனத்தோடும் கூடி மனக்கருத்தெல்லாம் நிறை வேறப்பெற்ற கைகேயியை அடுத்துப் பிழைக்கவேண்டு மல்லவா? அப்படிப்பட்ட விபரீதம் நேராதிருக்குமா? லக்ஷ்மணு! ஸீதை பிழைத்திருப்பாளாயின் மீளவும் நான் ஆஶ்ரமத்திற்கு வருவேன். அவள் மேலான நடவடிக்கை யுடையவள். அப்படிப்பட்டவள் மரணம் அடைந்திருப் பாளாயின் அவ்வாஶ்ரமம் ஏதுக்கு? ப்ராணன்களையே விட்டுத்தொலைப்பேன். லக்ஷ்மணு! நான் ஆஶ்ரமத்திற்கு வந்தவுடனே, ஸீதை முகத்தில் வெண்முறுவல் விளங் கப்பெற்று என்னுடன் வார்த்தை சொல்லிக்கொண்டு எதிர்கொண்டு வாராளாயின் உடனே நசித்துப் போவேன். லக்ஷ்மணு! ஸீதை பிழைத்திருப்பாளாயின் சொல்லுவாயாக. அவள் பிழைத்திருக்கிருளா இல்லை யா? அல்லது நீ பராக்காயிருக்கையில் ராக்ஷஸர்கள் பார்த்துத் திக்கற்றிருக்கின்ற ஸீதையைப் பிடித்துப் பக்ஷித்து விட்டார்களா? அந்த ஸீதை [1] ஸுகுமாரை; மேலும் இளம்பருவமுடையவள்; என்றும் துக்கம் அறி யாதவள். என்னை விட்டுப் பிரிந்ததற்கு மனம் பொறுக் காமல் வருந்திக்கொண்டிருப்பாள். இது நிஜம். கபடி யும் மிகவும் துஷ்டஸ்வபாவனுமாகிய அந்த ராக்ஷஸன் 'லக்ஷ்மணு!' என்று உரக்கக் கூச்சலிடுகையால் ஶூரனு கிய உனக்குங்கூட எல்லாவிதத்திலும் பயம் உண்டா யிற்று. என் கண்டத்வனிபோன்ற அந்த ராக்ஷஸனது சப்தத்தைக் கேட்டு நீ வந்தாயாகையால் ஸீதையும் கேட்டிருப்பாளென்றும், ஆனதுபற்றியே அவள் பயப்

1 ஸுகுமாரை—மென்மையுடையவள்.

பட்டு உன்னை அனுப்புகையில் என்னைப் பார்க்கவேண்டுமென்று நீ விரைவில் வந்தாயென்றும் நினைக்கின்றனன். அடவியில் ஸீதையைத் தனியாக விட்டு வந்தாயாகையால் எல்லாவிதத்திலும் நீ பெருங்கஷ்டத்தை விளைவித்தனை. க்ரூரர்களான ராக்ஷஸர்களுக்கு நம்மிடத்தில் பகையைத் தீர்த்துக்கொள்ள அவகாசம் நேராதிருந்தது. இப்பொழுது நீ அவகாசத்தை உண்டாக்கி விட்டனையே! ராக்ஷஸர்கள் நான் கரனைக் கொன்றதனால் மிகவும் துக்கித்திருக்கின்றனர். பயங்கரமான உருவத்தையுடைய அவர்கள் அந்த மன வருத்தத்தைப் பற்றியும் அதிலும் மாம்ஸாஹாரர்களாகையாலும் ஸீதையைக் கொன்றிருப்பார்கள். இதற்கு ஸந்தேஹம் இல்லை. சத்ருக்களை அழிப்பவனே! நான் எல்லாவிதத்திலும் இப்படிப்பட்ட வ்யஸனத்தில் மூழ்கிவிட்டனன். இப்பொழுது என்ன செய்வேன்? இப்படிப்பட்ட வ்யஸனத்தில் மூழ்கவேண்டுமென்னும் விதி இருக்கிறதென்றே நினைக்கின்றேன்' என்றனன். இங்ஙனம் ஸ்ரீராகவன் அழகிய இடையின் புறமுடைய ஸீதையைச் சிந்தித்துக்கொண்டே லக்ஷ்மணனுடன் ஜனஸ்தானத்திலுள்ள தன் ஆஶ்ரமத்திற்கு வந்தனன். வீரனாகிய அந்த ஸ்ரீராமன் மிகவும் வருந்தியிருக்கின்ற தன் தம்பியை நிந்தித்துக்கொண்டு, பசியினாலும் வெகுதூரம் போய் வந்த ஶ்ரமத்தினாலும் தாஹத்தினாலும் பெருமூச்செறிந்துகொண்டு வாய் உலர முகமும் விலவிலத்துப்போகத் தன் ஆஶ்ரமத்தின் ஸமீபத்திற்கு வந்து அவ்விடம் ஸீதை இல்லாமையால் சூன்யமாயிருக்கக் கண்டு அனந்தரம் ஆஶ்ரமத்திற்குள் புகுந்து அங்கும் ஸீதையைக் காணாமல் ஸீதை விளையாடுகிற சில இடங்களுக்குச் சென்று அங்குள்ள க்ரீடாஸ்தானங்களில் 'இது இப்படி, அது அப்படி' என்று மொழிந்து கொண்டே மேனியில் மயிர்க்கூச்சம் உண்டாகப்பெற்று ஸீதையைக் காணாமல் மிகவும் வருத்தமுற்றனன். ஐம்பத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராமன் ஸீதையைக் காணுமல் அவளை விட்டு வந்ததற்குக் காரணம் என்ன வென்று லக்ஷ்மணனை வினவுதலும் லக்ஷ்மணன் அந்த வ்ருத்தாந்தத் தைக் கூறுதலும்.

அனந்தரம் ரகுகுலகுமாரனுகிய ராமன் ஆஶ்ரமத்தினின்று வந்து மிகுந்த மனவருத்தத்துடன் தடுமாறுகின்ற லக்ஷ்மணனை வழிநடுவில் பார்த்து மீளவும் இவ்வாறு வினுவினன். அந்த லக்ஷ்மணனைப் பார்த்து ராமன் மொழிந்தனன்:—'நான், 'நீ காத்துக்கொண்டிருக்கிருயே; இனிக்கெடுதி என்?' என்னும் நம்பிக்கையோடு ஸீதையை வனத்தில் விட்டு வந்திருக்கையில், நீ அவளை விட்டு ஏன் வந்தனை? லக்ஷ்மணு! ஸீதையை அரண்யத்தில் விட்டு வந்த உன்னைப் பார்த்த உடனே ஸீதைக்கு ஏதோ அனிஷ்டம் நேரிட்டிருக்குமென்று சங்கைப்பட்டு என் மனம் வாஸ்தவமாகவே மிகவும் வருத்தமுற்றது. லக்ஷ்மணு! ஸீதையை விட்டுவருகின்ற உன்னை வழியில் தூரத்தில் கண்டவுடனே எனது இடக்கண்ணும் இடப்புஜமும் நடுமார்பும் துடிக்கின்றன' என்றனன். இங்ஙனம் ராமன் சொல்லுகையில், சுபலக்ஷணங்கள் அமைந்தவனும் ஸுமித்ரையின் புதல்வனுமாகிய லக்ஷ்மணன் ஸீதை மொழிந்த வார்த்தைக்குத் தான்பட்ட துக்கத்தோடுகூடத் 'தகாதகார்யஞ் செய்தாயே' யென்று ராமன் சொன்னதற்கு மேலும் மனவருத்தம் வளரப்பெற்றவனுகி மனவருத்தமுற்றிருக்கின்ற அண்ணனை நோக்கி 'நான் ஸ்வயமாகவே தோன்றபடி செய்யுந்தன்மையினுல் ஸீதையை அவ்விடம் விட்டு இங்கு வந்தவனல்லேன். மிகவும் க்ரூரமான வார்த்தைகளைச் சொல்லி அவளே என்னைப் போவென்று தொந்தரவு செய்கையில் உன்னிடம் வந்தேனேயன்றி வேறில்லை. 'ஐயோ! ஸீதே! லக்ஷ்மணு!' என்றும் 'ரக்ஷிப்பாய்' என்றும் நீ சொன்ன விதமாகவே உன் குரலை நிகர்த்து அந்த ராக்ஷஸன் மொழிந்த வாக்யம் ஸீதையின் செவி

யிற்பட்டது. அதைக் கேட்டவுடனே அவள் உன்னிடத்திலுள்ள ஸ்னேஹத்தினுல் உனக்கேதோ ஆபத்து நேரிட்டதென்று பயந்து அங்கங்களெல்லாம் விலவிலக்கப்பெற்று ரோதனஞ் செய்துகொண்டு 'போ போ' என்று என்னை மொழிந்தனள். அங்ஙனம் அவள் அடிக்கடி என்னைப் போகும்படி தூண்டிக்கொண்டிருக்கையில், நான் உன் வீர்யம் ஒருவராலும் எதிரிட முடியாததென்றும் உனக்கு ஆபத்து நேரிடாதென்றும் திடமான விஸ்வாஸமுடையவனுகையால் அவளைப் பார்த்து இவ்வாக்யத்தை மொழிந்தனன்:—'ராமனுக்குப் பயத்தை விளைவிக்கும்படியான ராக்ஷஸனை நான் பார்த்ததே இல்லை. நீ ஸமாதான முற்றிருப்பாயாக. இது ராமனுடைய கண்டத்வனி அன்று. எவனே இப்படி முறையிட்டனன். ராமன் தேவதைகளையுங்கூடப் பயகாலங்களில் ரக்ஷிக்க வல்லவன். ஸீதே! 'ரக்ஷிப்பாய்' என்னும் இவ்வார்த்தை மஹாகுலத்தில் பிறந்த சூரனுக்கு நிந்திக்கத் தகுந்ததும், அதிலும் ஆபத்காலத்தில் பெண்பிள்ளையை ஸஹாயமாக அபேக்ஷித்துக் கூப்பிடுவதாகையால் மிகவும் அற்பமுமாயிருப்பது. இப்படிப்பட்ட வார்த்தையை ராமன் எப்படி மொழிவான்? மங்கலஸ்வபாவமுடையவளே! எவனே ஒரு ராக்ஷஸன் ஏதோ ஒரு ப்ரயோஜனத்தை உத்தேசித்து எனது அண்ணனுடைய கண்டஸ்வரம்போன்ற குரலைக் கொண்டு 'காப்பாய் காப்பாய்' என்று கூவினனன்றி வேறில்லை. 'லக்ஷ்மணு! என்னைக் காப்பாய்' என்று சொன்ன வாக்யத்தில் ஸ்வரம் வேறுவிதமாயிருந்தது. ஆகையால் இந்த விசேஷத்தைப் பரிசோதித்துப் பார்க்கையில் அது ராமன் குரலே அன்றென்று ஏற்படுகின்றது. ஆகையால் உன்னைப்போன்றவள் இப்படி வருந்துவது யுக்தமன்று. அற்ப ஸ்த்ரீகளுக்கே இங்ஙனம் செய்

வது தகும். போரும். வருத்தப்பட வேண்டாம். விலவிலத்துப்போவது யுக்தமன்று. என்னை அனுப்ப வேண்டுமென்னும் பரபரப்பின்றி ஸுகமாயிருப்பாயாக. யுத்தத்தில் ராமனை வெல்ல வல்லமையுள்ள புருஷன் மூன்று லோகங்களிலும் எங்காயினும் இதுவரையில் பிறந்ததே இல்லை; இனிப் பிறக்கப்போகிறதும் இல்லை. தேவேந்த்ரனை முன்னிட்டுக்கொண்டு தேவதைகள் எல்லோரும் எதிர்த்து வந்தபோதிலும் யுத்தத்தில் ராமனை ஜயிக்க வல்லரல்லர்' என்று மொழிந்தனன். இங்ஙனம் நான் மொழிகையில் ஸீதை மனங்கலங்கி யுக்தாயுக்தம் தெரியாமல் கண்ணீர் பெருக்கிக்கொண்டு என்னைக் குறித்துப் பயங்கரமான இவ்வாக்யத்தைமொழிந்தனள்: 'அண்ணன் எப்படியோ நாசம் அடைந்த பின்பு என்னைப் பெறவேண்டுமென்று நீ என்னிடத்தில் கொடிய எண்ணங் கொண்டிருக்கின்றனை. வெறுமனே இந்த வீணெண்ணங் கொள்ளலாமன்றி நீ என்னவோ என்னைப்பெற வல்லனல்லை. இப்படி ராமன் உரக்க முறையிட்டுக் கொண்டிருப்பினும் அவனிடம் போகாதிருக்கின்றனையே! ஆகையால் பரதன் ஸங்கேதஞ்செய்து அனுப்புகையில் தருணம் பார்த்து ராமனைக் கொல்ல வேண்டுமென்று அவனைப் பின்றொடர்ந்து வருகின்றாயன்றி வேறில்லை. நீ பகைவன்; கபடவேஷம் போகட்டுக்கொண்டிருக்கின்றனை. எனக்காக ராமனைப் பின்றொடர்ந்து வருகின்றனை. இப்பொழுது அது உனக்கு நேரிட்டதாகையால் முன்போல் அவனுக்குப் போய் ஸஹாயஞ் செய்யாதிருக்கின்றனை' என்றனள். ஸீதை இங்ஙனம் சொல்லுகையில் நான் தொந்தரவுடன் கண்கள் சிவக்கப்பெற்றுப் பெருங்கோபங்கொண்டு உதடுகள் துடிக்க ஆஶ்ரமத்தை விட்டுப் புறப்பட்டு உன்னை எதிர்

கொண்டுவந்தேன்' என்றனன். லக்ஷ்மணன் இங்ஙனம் சொல்லிக்கொண்டிருக்கையில் ராமன் பரிதாபமுற்று மெய்ம்மறந்து அவனைப் பார்த்து மொழிந்தனன்:— 'நல்லியற்கையுடையவனே! ஸீதையை விட்டு நீ வருவது மிகவும் தகாத கார்யம். நான் ராக்ஷஸர்களைத் தடுப்பதில் மிகவும் ஸமர்த்தனென்பதை நீ அறிந்திருந்தும் ஸீதை அந்தக் கோபவார்த்தை மொழிந்ததற்குப் பொறுமல் அவளை விட்டுப் புறப்பட்டு வந்தனையே. நீ ஸீதையை விட்டுவந்ததனால் உன்னைப்பார்த்தும் எனக்கு ஸந்தோஷம் உண்டாகவில்லை. ஸ்த்ரீ விவேகமில்லாதவள்; அதிலும் கோபமுற்றவள். அவள் ஏதோ பருஷமாகச் சொன்னால் அவ்வளவில் அவளை விட்டு வந்தனையே; இது எவ்வளவும் யுக்தமன்று. ஸீதை போவென்று தூண்டுகையில் பெண்பிள்ளை சொன்னாளென்று பொறுத்துக் கொள்ளவேண்டும். பொறுமை யில்லையாயின் மறைவிலாவது இருந்து காத்துக்கொண்டிருக்கவேண்டும்; அன்றி அவள் பலவந்தஞ் செய்தவளவிலேயே கோபத்திற்கு உட்பட்டு என் ஆஜ்ஞையைச் செய்யாது போயினை. எந்த விதத்தில் பார்க்கினும் இது உன்மேல் பெரிய அபநீதியே. எவன் ம்ருகரூபந் தரித்து வஞ்சித்து என்னை ஆஸ்ரமத்தினின்று வெகுதூரம் இழுத்துக் கொண்டு போனனோ, அந்த ராக்ஷஸன் இதோ என் பாணத்தால் அடிபட்டு நிலத்தில் விழுந்திருக்கின்றனன். நான் வில்லில் விளையாட்டாகவே பாணத்தைத் தொடுத்து இழுத்து அவலீலையாக நாட்டுகையில் அவன் அதனால் அடியுண்டு ம்ருகரூபத்தை விட்டுத் தோள் வளைகளுடன் விளங்குகின்ற ராக்ஷஸதேஹத்தைப் பெற்றனன். அப்பொழுது என் பாணத்தால் அடிக்கப்பட்டவுடனே அந்த ராக்ஷஸன் தீனஸ்வரத்தோடு என் குரலைப்போன்ற குரலுடன் வெகுதூரம் நன்றாகக் கேட்கும்படி மிகவும் பயங்கரமான அந்த வார்த்தையைக்

கூச்சலிட்டுச் சொல்லினன். அதைக்கேட்டு நீ ஸீதையை விட்டு வந்தனை' என்றனன். ஐம்பத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

**ராமன் ஆஸ்ரமத்தில் ஸீதையைக் காணாமல் வருத்தமுறுதல்.**

அங்ஙனம் ராமன் ஆஸ்ரமத்திற்கு வந்துகொண்டிருக்கையில் அவனது இடக்கண்ணின் கீழிமை மிகவும் துடித்தது. அவனது நடையும் தடைபட்டது. தேஹம் முழுவதும் நடுக்கமுற்றது. அவன் இவ்வாறு அடிக்கடி அவசகுனங்கள் பலவாகப் புலப்படுவது கண்டு 'ஸீதை க்ஷேமமாயிருப்பாளா?' என்று மொழிந்தனன். அனந்தரம் ஸீதையைக் காணவேணுமென்னும் பேராவலுடன் மிக்க வேகங்கொண்டு நடந்து ஆஸ்ரமத்திற்குச் சென்று அங்கு இருப்பிடத்தில் ஸீதை இல்லாதிருப்பது கண்டு மிகவும் மனம் தத்தளிக்கப் பெற்றனன். ராமன் வேகத்துடன் உயரக் கிளம்புவான்போல் அவயவங்களை இப்படியும் அப்படியும் உதறிக்கொண்டு பர்ணசாலையில் ஆங்காங்கு ஸீதை இருக்கக்கூடிய இடங்களெல்லாவற்றையும் நன்கு தேடிப்பார்த்தனன். அந்தப் பர்ணசாலை அப்பொழுது ஸீதை இல்லாமையால், ஹேமந்தருதுவில் பனியின் பெருக்கில் அடிபட்டு ஒளியற்ற தாமரையோடைபோல் ராமனுக்குப் புலப்பட்டது. அங்குள்ள வ்ருக்ஷங்களில் ஹீனஸ்வரத்துடன் வண்டுகள் சப்தித்துக் கொண்டிருக்கையில் அந்த ஆஸ்ரமம் ரோதனஞ்செய்வதுபோன்று புஷ்பங்கள் வாடி மிருகங்களும் பக்ஷிகளும் வருத்தத்தினால் மழுங்கியிருப்பதுபற்றி அழகின் மிகுதியின்றிக் கலங்கி கலங்குலையப் பெற்று வனதேவதைகளும் ஒழிந்துபோகப் பெற்றிருந்தது. அந்த ஸீதை ராவணனுக்காகக் கொண்டுவந்து போகடுகையால் க்ருஷ்ணாஜினமும் தர்ப்பங்களும் இருக்கவேண்டிய இடத்திலில்லாமல் வேறோரிடத்தில்

சிதறிக் கலேந்திருந்தன. ராவணன் பிடித்திழுக்கும் போது ஸீதை முறுக்கிக்கொண்டு தர்ப்பாஸனத்தையும் பாயையும்பிடித்துக்கொண்டாளாகையால் அவை தாறு மாறுகக் கிடந்தன. இங்ஙனம் தன்னிருப்பிடம் சீர் திருத்தம் அழிந்து சூன்யமாயிருக்கக் கண்டு ராமன் 'ஸீதை பயப்படுந் தன்மையள். அவள் எவராலாயினும் அபஹரிக்கப்பட்டாளோ! அல்லது மரணம் அடைந்தாளோ! அல்லது தெய்வாதீனமாகக் கண்ணுக்குப் புலப் படாதிருக்கின்றுளோ! அல்லது ராக்ஷஸர்களால் பக்ஷிக் கப்பட்டாளோ! அல்லது எங்கேனும் விளேயாட்டுக்காக மறைந்திருக்கின்றுளோ! அல்லது எவரும் இல்லாமை யால் பயந்து மறைந்து வனத்திற்கே போயிருக்கின்று ளோ! ஸீதை புஷ்பம் பறிக்கவாவது பழங்கொண்டு வரவாவது போயிருப்பாளோ! அல்லது ஸ்னனத்தின் பொருட்டுத் தாமரையோடைகளுக்குப் போயினளோ! அல்லது ஜலங்கொண்டுவர நதிக்குப் போயினளோ'! என்று அடிக்கடி புலம்பிக்கொண்டிருந்தனன். ராமன் எவ்வளவோ ப்ரயத்னப்பட்டு எங்குத் தேடிப்பார்க்கி னும் அரண்யத்தில் ப்ரியையான பத்னியைக் காணப் பெறுதிருந்தனன். அவன் சோகத்தினல் கண்கள் சிவக் கப்பெற்று அந்தச் சோகத்தினல் பைத்யம் பிடித்தவன் போல் புலப்பட்டனன். ராமன் ஒரு செடியினின்று மற் ெருருசெடிக்கும் ஒரு மலேயினின்று மற்ெருரு மலேக்கும் ஒருநதியினின்று மற்ெருரு நதிக்கும் ஓடித்திரிந்து புலம்பிக்கொண்டு சோகமாகிற கலங்கின ஸமுத்ரத்தில் மூழ்கிக் கிடந்தனன். (அவன் ஒவ்வொரு வ்ருக்ஷத்தின் அருகிலும் சென்று இவ்வாறு வினவினன்:—)'ஓ கடம்ப வ்ருக்ஷமே! என் அன்பு நாயகியான ஸீதையென்னும் ஒருத்தியை நீ கண்டனேயா? அவளுக்குக் கடம்பபுஷ் பங்களில் ப்ரீதி அதிகம். ஆகையால் அவள் உன்னிடம்

வரக் கண்டிருக்கக்கூடும். மேலும் அவளது முகம் மிகவும் அழகாயிருக்கும். நீ அறிவாயாயின் அவள் எங்கிருக்கிருளோ அதை எனக்குச் சொல்லுவாயாக. ஓ வில்வமரமே! சிகுசிகென்ற தளிர் போன்ற மேனியுடையவளும் பொன்வர்ணமுடைய பட்டுவஸ்த்ரந்தரித்தவளும் வில்வப்பழம்போன்ற கொங்கையுடையவளுமாகிய ஸீதையைப் பார்த்திருப்பாயாயின், எங்கிருக்கிருளோ அதைச் சொல்லுவாயாக. அப்படி இல்லையாயின், ஓ அர்ஜுனவ்ருக்ஷமே! உன்னிடத்தில் மிகுந்த ப்ரீதியுடையவளாகையால் அவள் ஸங்கதி உனக்குத் தெரிந்திருக்கக்கூடும். ஆகையால் நீயாவது சொல்லுவாயாக. பயப்படுந்தன்மையளாகிய அந்த ஜனகராஜன் புதல்வி பிழைத்திருக்கிருளா இல்லையா? இந்த அர்ஜுன வ்ருக்ஷம் பார்த்திருக்கவேண்டும். ஆனது பற்றியே தளிர்களோடும் புஷ்பங்களோடும் ப்ரகாசிக்கின்றது. ஆகையால் இதற்குத் தன்னைப்போன்ற துடைகளையுடைய ஸீதையின் ஸங்கதி ஸ்பஷ்டமாகத் தெரிந்திருக்கும். இந்தத் திலக வ்ருக்ஷம் ஸமீபத்தில் வண்டுகளின் கானங்களோடு விளங்குகின்றது. ஆகையால் இது மேன்மையுடையது. ஸீதை திலக புஷ்பங்களில் மிகுந்த ப்ரீதியுடையவளாகையால் இதற்கு ஸீதையின் ஸங்கதி நன்ருகத் தெரிந்திருக்கக்கூடும். அசோக வ்ருக்ஷமே! நீ எப்பொழுதும் சோகத்தைப் போக்குந்தன்மையுடையவன். சோகத்தினுல் மனந்தந்தளிக்கப் பெற்ற எனக்கு என் அன்புநாயகியைக் காட்டிச் சீக்ரமாக என்னையும் உன்னேடொத்த பெயருடையவனுக்குவாயாக; நீ அசோகமென்னும் பெயருடையவனுகையால் என்னையும் அசோகனுக்குவாயாக; சோகமற்றவனுக்குவாயாக. பனைமரமே! பழுத்த பனம்பழம்போன்ற கொங்கைகளையுடைய ஸீதையை நீபார்த்திருப்பாயாயின், என்னிடத்தில் உனக்குத் தயையும் உண்டாயிருக்குமாயின் அழகிய நிதம்பத்தையுடைய அந்தப் பெண்மணி எங்

கிருக்கிருளோ, அதைச் சொல்வாயாக. ஓ நாவல் மரமே! நீ ஸீதையைப் பார்த்திருப்பாயாயின் சொல்வாயாக. என் ப்ராணநாயகி நாவற் பழம்போல் நிர்மலமாகி சிகுசிகென்ற மேனியுடையவள். இந்த அடையாளத்தினுல் நீ அவளை அறிந்திருப்பாயாயின், பயமின்றி எனக்குச் சொல்வாயாக. ஓ கர்ணிகாரமே! நீ இப்பொழுது அழகிய புஷ்பங்களோடு மிகவும் விளங்குகின்றனை. பதிவ்ரதையாகிய என் ப்ராணநாயகி உன் புஷ்பங்களில் மிகவும் ப்ரீதி யுடையவள். ஆகையால் உன்னிடம் வந்திருக்கக்கூடும். அவளைப் பார்த்திருப்பாயாயின், எங்கிருக்கிருளோ அதைச் சொல்வாயாக' என்று வ்ருக்ஷங்கள்தோறும் சென்று ஸீதையை வினவினன். மஹாயசஸ்வியாகிய அந்த ஸ்ரீராமன் இவ்வண்ணம் மா கடம்பு ஆச்சா பலா மருதாணி தவம் மாதுளை வேங்கை முதலிய மரங்களையும், அவ்வண்ணமே மல்லிகை மாதவி சண்பகம் தாழை முதலிய பூஞ்செடிகளையும் கிட்டிச் சென்று வினவி வனத்தில் நாற்புறமும் திரிந்துகொண்டு சித்தப்ரமம் பிடித்தவன்போல் புலப்பட்டனன். மீளவும் ஸ்ரீராகவன் மானைப் பார்த்து 'ஓ மானே! இந்த வ்ருக்ஷங்களெல்லாம் தெரிந்தும் சொல்லாதிருக்கின்றன. அவை அறியாதிருப்பினும் மான்குட்டியின் கண்கள் போன்ற கண்களையுடைய ஸீதையை நீ அறிந்திருப்பாயல்லவா? மான்பேடுபோல் அழகிய கண்பார்வையுடையவளாகையால் என் ஆசைநாயகியும் மான்பேடுகளோடு கூடியிருப்பாள். அந்த அடையாளத்தைக்கொண்டு நீ அவளைப் பார்த்திருப்பாயாயின், எனக்குச் சொல்வாயாக. ஓ கஜமே! உன் துதிக்கைபோலவே எனது ஆசைநாயகியின் துடைகள் இருக்கும். யானைகளனைத்திலும் தலைமையுள்ள யானையே! அந்த அடையாளத்தினுல் அவளைப் பார்த்திருப்பாயாயின் எனக்குச் சொல்

வாயாக. ஓ பெரும் புலியே! அவள் ஸங்கதி உனக்குத் தெரிந்திருக்குமென்று நினைக்கிறேன். என் ப்ராண நாயகி சந்த்ரபிம்பம்போன்ற முகமுடையவள். அவளு டைய ஸங்கதியை இந்த ம்ருகங்கள் பயத்தால் எனக் குச் சொல்லவில்லை. நீ சூரனுகையால் அப்படிப்பட்ட பயமுடையவனல்லை. என் அன்பு நாயகியைப் பார்த்தி ருப்பாயாயின் பயமின்றி எனக்குச் சொல்வாயாக. அடி என் அன்புநாயகியே! ஏன் ஓடிப்போகின்றனை. தாமரையிதழ்போன்ற கண்களுடையவளே! தூரத்தில் உன்னைப் பார்த்தனன். இனி நிற்பாயாக. வ்ருக்ஷங் களில் மறைந்துகொண்டு என்னோடு பேசாதிருக்கின்ற னையே. இது ஏனோ? அழகிய நிதம்பமுடையவளே! நில் நில். ஓடாதே. உனக்கு என்னிடத்தில் சிறிதும் தயை இல்லை. நீ அவ்வளவாகப் பரிஹாஸஞ் செய்யுக் தன்மையளல்லையே. இப்பொழுது ஏன் என்னை இப்படி உபேக்ஷிக்கின்றனை. சிறந்தமேனியின் வர்ணமுடைய வளே! நீ ஓடிப் போயினும், பொன்வர்ணமுடைய உன் பட்டுவஸ்த்ரம் உன்னை அறிவித்தது. ஆகையால் உன் னைக் கண்டுகொண்டனன். என்னிடத்தில் உனக்கு ஸ்னேஹம் உளதாயின், ஓடாது நிற்பாயாக. அழகிய வெண்முறுவலுடைய என் ஸீதை இங்கு இல்லவே இல்லை. இது வாஸ்தவம். எவராலாவது முடிக்கப்பட் டிருப்பாள். இல்லையாயின் இப்படி நான் துக்கத்தில் மூழ்கிக்கிடக்கையில் என்னை எள்ளளவும் உபேக்ஷித் திருக்கப்பொருள். ஆகையால் நானில்லாதபோது மாம் ஸாஹாரர்களான ராக்ஷஸர்கள் பாலையாகிய என் ப்ரா ணநாயகியின் அவயவங்களையெல்லாம் வேறுவேருகச் செய்து பக்ஷித்திருப்பார்கள். இதுவே நிஜம். மிகவும் அழகான பல்வரிசையும் அழகான [1] அதரமும் [2] நாஸி கையும் அழகான குண்டலங்களும் விளங்கப்பெற்றுப் பூர்ண சந்த்ரன்போன்ற என்ப்ராணநாயகியின் முகம் ராக்ஷஸர்கள் வந்து சுற்றிக்கொள்கையில் காந்தியின்

1. அதரம் - உதடு. 2. நாஸிகை - மூக்கு.

பெருக்கு சிறுக்கப் பெற்றிருக்குமே. இதற்கு ஸந்தே ஹம் உண்டோ? சண்பகமலரின் வர்ணம்போன்ற வர்ண முடையதாகிக் கண்டாபரணங்களோடு விளங்கி மிகவும் மேன்மை அமையப்பெற்றுச் சுபலக்ஷணங்கள் பொருந் தின ஸீதையின் மிடறு, அவள் கதறிக்கொண்டிருக் கையில்தானே ராக்ஷஸர்களால் பக்ஷிக்கப்பட்டிருக்கும். பக்ஷிப்பார்களென்னும் பயத்தினால் இப்படியும் அப்படி யும் உதறப்பட்டு விரல்கள் நுனியில் துடித்துக்கொண் டிருக்கையில், தளிர்போல் மெதுவாயிருப்பவைகளும் கைவளைகளோடும் தோள்வளைகளோடுங்கூடி விளக்க முற்றவைகளுமாகிய என் ப்ராணநாயகியின் கைகளையுங் கூட ராக்ஷஸர்கள் பக்ஷித்திருப்பார்கள். இளம்பருவ முடையவளாகிய அந்த வைதேஹியை ராக்ஷஸர்கள் பக்ஷிப்பதற்காகவே நான் விட்டுபோனாற்போ லாய்விட் டதே. கூடவருங் கூட்டத்தவர் விட்டுப்போகையில் பல பந்துக்களையுடையவளாயினும் தனியே அகப்பட்டுக் கொண்ட ஓர் பெண்பிள்ளை மிருகாதிகளால் பக்ஷிக்கப் படுவதுபோல் ராக்ஷஸர்களால் பக்ஷிக்கப்பட்டனள். ஐயோ! மஹாபாஹுவே! லக்ஷ்மணா! நீ எங்காயினும் என் ப்ராணநாயகியைப் பார்த்தனையா? மங்கலஸ்வ பாவமுடையவளே! என் ப்ராணநாயகியே! ஐயோ ஸீதே! நீ எங்குப் போயினையோ?' என்று அடிக்கடி ராமன் புலம்பினன். ராமன் இவ்வாறு புலம்பிக்கொண்டு ஒரு வனத்தினின்று மற்றொரு வனத்திற்குத் திரிந்து கொண்டு ஓரிடத்தில் துக்கத்தின் மிகுதியால் ஸீதை யின்போலி எள்ளளவுமில்லாத வற்றையுங்கூட ஸீதை யென்று ப்ரமித்தும், மற்றோரிடத்தில் ஸீதையின் போலியுள்ள கொடி செடி முதலியவற்றைக் கண்டு ஒற்றுமையைக் கொண்டு ஸீதையென்று ப்ரமித்தும், மற்றோரிடத்தில் ப்ராணநாயகியைத் தேடத்தொடங்கி மதம் பிடித்தவன்போல் மார்க்காமார்க்க விவேகமின் றிச் சுற்றிக்கொண்டு மிருந்தனன். ராமன் அவ்வாறு மனம் கிலேகிற்கப்பெறாமல் ஓரிடத்திலும் காலூன்றா



1531. ராமன் ஸீதையைக் காணுமல் ஸீதை எங்கே என்று லக்ஷ்மணனை வினவுதல்.

மல் சிறிய அரண்யங்களிலும் பெரிய அரண்யங்களிலும் நதிகளிலும் பர்வதங்களிலும் மலையருவிகளிலும் மிக்க வேகத்துடன் ஓரிடத்தினின்று மற்றோரிடத்திற்குத் திரிந்து சுற்றிக்கொண்டிருந்தனன். அந்த ராமன் விசாலமாயிருப்பதும் இடைவெளியின்றி நெருக்கமாயிருப்பதுமாகிய வனத்தில் சென்று அவ்வாறு முழுவதும் தேடித்திரிந்து பிறகு ஸீதை அகப்படுவளென்கிற ஆசை சிறிதும் உண்டாகப்பெறுமல் மீளவும் அவ்வன்பு நாயகியைத் தேடுவதற்கு மேலான முயற்சி செய்தனன். அறுபதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராமன் ஸீதையைக் காணுமல் புலம்புதலும், லக்ஷ்மணன் ஸமாதானப் படுத்துதலும்.

தசரதகுமாரனுகிய ராமன் ஸீதை இல்லாமையால் பாழாயிருக்கின்ற ஆஸ்ரமத்தையும் சூன்யமாயிருக்கின்ற பர்ணசாலையையும் கலைந்து சிதறிக் கிடக்கின்ற ஆஸனங்களையும் பார்த்து முழுவதுந்தேடியும் அங்கு ஸீதையைக் காணுமல் 'ஸீதே' என்று பேரைச்சொல்லி உரக்கமுறையிட்டுத் துக்கத்தைப் பொறுக்கமுடியாமல் அழகிய தன்கைகளை உயரத்தூக்கிக்கொண்டு, 'லக்ஷ்மணு! ஸீதை எங்கே? இங்கிருந்து எவ்விடத்திற்குப் போயினள்? ஸௌமித்ராபுத்ரனே! அல்லது எவன் எடுத்துக்கொண்டுபோயினன்? அல்லது எவன் பக்ஷித்துவிட்டனன்? ஸீதே! நீ செடியின்மறைவில் மறைந்துகொண்டு 'நான் மறைந்திருக்கையில் நீ தெரிந்து பிடித்துக் கொள்ளாமற் போயினையே' என்று என்னைப் பரிஹாஸஞ் செய்ய விரும்புவாயாயின், பரிஹாஸஞ் செய்தது போரும். இனிப் புலப்படுவாயாக. நான் மிகவும் துக்கித்திருக்கின்றேனே. என்னிடம் வருவாயாக. ஸீதே! நல்லியற்கையுடையவளே! வெகுகாலமாக உபலாலனஞ் செய்துவருகையால் உன்னிடம் சங்கையில்லாமல் நம்பிக்கையுற்ற எந்த மான் குட்டிகளோடு விளையா

டிக்கொண்டிருப்பாயோ, அத்தகைய இம்மான்குட்டி கள் இப்பொழுது நீ மறைந்திருக்கையால் உன்னைக் காணுமல் கண்களில் நீர் பெருகப்பெற்று உன்னையே சிந் தித்துக்கொண்டிருக்கின்றன. லக்ஷ்மணு! நான் ஸீதை யைப் பிரிந்து ஜீவித்திருக்கமாட்டேன். நான் ஸீதை யைப் பறிகொடுத்ததாலுண்டான மஹாதுக்கத்தினுல் மரணம் அடைகையில் என்னை ஸ்வர்க்கத்தில் என் தந் தை தசாதமஹாராஜர் பார்ப்பார்; இது நிச்சயம்; பர லோகத்தில் என் தந்தை என்னைப் பார்த்து 'நான் ஆஜ்ஞை செய்கையில் நீ அதன்படி பதினுன்கு ஸம்வத் ஸரங்கள் வனவாஸஞ் செய்கிறேனென்று ப்ரதிஜ்ஞை செய்து அந்தக்கெடு முடியாததன் முன்னமே இங்கு என்னிடம் எப்படி வந்தனை? நீ இஷ்டப்படி நடக்கின்ற வன்; துஷ்டன்; அபத்தம் பேசுந்தன்மையன். சீ! போ' என்று நிந்திப்பாரே. ஸந்தேஹமே இல்லை. அழகிய நிதம்பமுடைய வைதேஹீ! ஸ்வாதீனந்தப்பி மிகவும் துக்கித்துத் தீனத்தனங்கொண்டு மனோரதங்கைகூடப் பெருமல் மனஇரக்கத்திற்கிடமாயிருக்கின்ற என்னைக், கபட நடவடிக்கையுடையவனைக் கீர்த்தி கைவிடுவது போல விட்டுத்துறந்து நீ எங்குப் போகின்றனை? அழ கிய இடையுடையவளே! துக்கித்திருக்கின்ற என்னை விட்டுப் போகாதே! உன்னை விட்டு நிமிஷமாயினும் ஜீவித்திருக்கப் பொறேனே! ப்ராணன்களை விட்டு விடு வேன்' என்று புலம்பினன். ராமன் ஸீதையைப்பார்க்க மிக்க மனவிருப்பங்கொண்டு பெருந் துக்கத்தினுல் தத் தளித்துக்கொண்டு இவ்வளவு புலம்பியும் ஸீதையைக் காணப் பெருதிருந்தனன். லக்ஷ்மணன் அவ்வாறு பெருஞ் சேற்றில் விழுந்து தடுமாறுகின்ற யானையைப் போல் ஸீதையைக் காணுமல் துக்கஸமுத்ரத்தில் மூழ் கிக்கிடக்கின்ற தசரதகுமாரனை ராமனைப் பார்த்து, மிகவும் அவனது ஹிதத்தை விரும்பி இங்ஙனம் மொ ழிந்தனன்.—'நீண்ட புஜதண்டங்களுடையவனே! நீ சூரத்தன்மையுடையவன். துக்கப்படுவது யுக்தமன்று.

நான் ஸீதையைத்தேட ப்ரயத்னஞ் செய்கிறேன். நீயும் என்னேடுகூட ப்ரயத்னஞ் செய்வாயாக. சூரனே! இவ்வடவி குஹைகள்போன்ற பல பெரும்புதர்களுடையது; ஆகையால் ஸீதை இங்கு எங்காயினும் இருக்கக்கூடும். ஸீதை அடவியில் திரிவதில் மிகவும் ப்ரியமுடையவள்; ஜலக்ரீடை செய்வதிலும் பெரும் பைத்யமுடையவள். ஆகையால் அவள் வனத்திற்குள் போயிருப்பாள். அல்லது நன்கு புஷ்பித்திருக்கின்ற தாமரைக் குளத்திற்காவது போயிருப்பாள். ஸீதை ஸ்னானஞ் செய்வதற்காக, மீன்கள் துடிக்கவும் நீர்வஞ்சிகள் விளங்கவும் பெற்ற நதிக்காவது போயிருப்பாள்; அல்லது பரிஹாஸத்திற்காக வனத்தில் ஓரிடத்தில் மறைந்திருப்பாள். புருஷஸ்ரேஷ்டனே! ஸீதை நம்மைப் பயப்படுத்த விரும்பியோ, அல்லது நம்ஸாமர்த்யத்தை அறிய விரும்பியோ, அரண்யத்தில் ஓரிடத்தில் மறைந்திருப்பாள். செல்வப் பெருக்குடையவனே! அவளைத் தேடுவதற்குச் சீக்ரத்தில் ப்ரயத்னப்படுவோம். ராமா! உனக்கு இஷ்டம் உளதாயின், ஸீதை இருக்கும் இடந்தெரிவதற்காக இவ்வனம் முழுவதும் தேடிப்பார்ப்போம். மனத்தில் துக்கம் வைத்துக்கொள்ளவேண்டாம்' என்றனன். ராமன் ஸ்னேஹத்தினுல் லக்ஷ்மணன் சொன்ன வார்த்தையைக்கேட்டு மனத்தில் ஸமாதானம் அடைந்து லக்ஷ்மணனேடுகூட ஸீதையைத் தேட ஆரம்பித்தனன். தசரதகுமாரர்களான அந்த ராம லக்ஷ்மணர்கள் அரண்யங்களிலும் பர்வதங்களிலும் நதிகளிலும் குளங்களிலும் மற்றுமுள்ள இடங்களிலுமாக முழுவதும் ஸீதையைத் தேடினர். அந்த ராம லக்ஷ்மணர்கள் அந்த ப்ரஸ்ரவண பர்வதத்தின் தாழ்வரைகளிலும் குஹைகளிலும் சிகரங்களிலும் எவ்வளவு தேடினும் அந்த ஸீதை அகப்படவில்லை. ராமன் அந்த ப்ரஸ்ரவணபர்வதம் முழுவதும் தேடி லக்ஷ்மணனைப்

பார்த்து 'லக்ஷ்மணா! இந்த ப்ரஸ்ரவணபர்வதத்தில் நல்வி யற்கையுடையளாகிய ஸீதை புலப்படவில்லை' என்றனன். அனந்தரம் தண்டகாரண்யத்தில் ஸீதையைத் தேடிக் கொண்டே லக்ஷ்மணன் மிகுந்த மனவருத்தத்துடன் மஹாதேஜஸ்வியாகிய ப்ராதாவான ராமனைப் பார்த் துப் 'பேரறிஞனே! மஹாபாஹுவாகிய விஷ்ணு பலி சக்ரவர்த்தியைப் பந்தனஞ்செய்து இந்தப் பூமியைப் பெற்றாற்போல் நீ ஸந்தேஹமின்றி ஸீதையைக்கொண்டு போனவனைச் சிக்ஷித்து அந்த ஜனகராஜன்புதல்வி யைப் பெறுவாய்' என்றனன். ராமன், லக்ஷ்மணன் இவ் வாறு ஸ்னேஹம் விளங்கும்படி சொன்னவார்த்தை களைக் கேட்டுத் துக்கத்தினால் மனம் தபிக்கப்பெற்று லக்ஷ்மணனைப் பார்த்துத் தீனவாக்யத்துடன் 'எல்லா மறிந்தவனே! இவ்வரண்யம் முழுவதும் தேடினோம். தாமரை மலர்ந்திருக்கப்பெற்ற தாமரைக்குளங்களோ டும் பலகுஹைகளோடும் மலையருவிகளோடுங்கூடிய இந் தப்ரஸ்ரவண பர்வதம்முழுமையும் நன்கு தேடிப்பார்த் தாய் விட்டது. எனக்கு ப்ராணன்களைக்காட்டிலும் மேலாயிருக்கின்ற ஸீதை இன்னம் அகப்படாதிருக்கின் றனளே!' என்றனன். ராமன் ஸீதை அபஹரிக்கப்படு கையால் மிகவும் நலுங்கி மனக்களிப்பற்று வருந்தி இங்ஙனம் புலம்பிக்கொண்டு துக்கத்தின் மிகுதியால் முஹூர்த்தகாலம் மூர்ச்சித்தனன். ராமன் பரிதாப முற்று அவயவங்களெல்லாம் இளைக்க ப்ரஜ்ஞைதப்பிச் சேஷ்டைகளொன்றுமின்றி ஆதுரனாகித் துக்கத்தினால் புலம்பிக்கொண்டு மிகவும் உஷ்ணமான நெடுமூச்சுக்களை எறிந்து ஒன்றுஞ் செய்யப்பெறாமல் உட்கார்ந்திருந்த னன். தாமரைபோன்ற கண்களையுடைய அந்த ராமன் அங்ஙனம் பலமுறை பெருமூச்செறிந்துகொண்டு கண் ணீர் வந்து கண்டத்தில் அடைத்துக்கொள்கையால்

தழதழத்தவாக்யத்துடன் 'ஐயோ! ப்ராணநாயகியே' என்று பேர்சொல்லிக் கூப்பிட்டுப் பலமுறை உரக்கக் கதறினன். அனந்தரம் பந்துக்களிடத்தில் மிகுந்த ப்ரீதியுடையவனும் தர்மங்களை அறிந்தவனுமாகிய லக்ஷ்மணன் கைகூப்பிக்கொண்டு வணக்கத்துடன் பல வித நல்வார்த்தைகளைச் சொல்லி அந்த ராமனைச் சமா தானப்படுத்தினன். அந்த ராமனோ என்றால், லக்ஷ்ம ணன் மொழிந்த அவ்வசனத்தைப் பொருள் செய்யாமல் அன்பிற்கிடமான அந்த ஸீதையைக் காணப் பெருமை யால் அடிக்கடி கதறலிட்டனன் அறுபத்தொன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராமன் புலம்புதல்.

நீண்ட புஜதண்டங்களும் தாமரையிதழ்போன்ற கண்களுமுடைய அந்த ஸ்ரீராமன் ஸீதையைக் காணா மல் அந்தப் பிரிவினாலுண்டான காமமோஹத்தினால் ப்ரஜ்ஞையின்றி இங்ஙனம் அபாரமாகப் புலம்பத் தொ டங்கினன். ராமன், ஸீதை எதிரில் இல்லாமையால் அவளைப் பாராதிருப்பினும் மன்மதன்கையில் அகப்பட்டு ஸ்வாதீனந்தப்பி ஸீதையைக் கண்ணெதிரில் காண்ப வன்போலவே சொல்லத்தொடங்கிப் புலம்பிச் சொல் லும் வார்த்தையாகையால் 'இன்னது இனியது இவ் வளவு' என்று நிரூபித்துச் சொல்லமுடியாத உரைகளு டன் கண்டத்தில் கண்ணீர் வந்தடைக்கையால் வார்த் தைகள் தழதழக்கப்பெற்று ஒன்றுஞ் சரியாக உச்சரிக்க முடியாமல் இவ்வாறு புலம்பினன்:—'ப்ரீதிக் கிடமா யிருப்பவளே! நீ புஷ்பங்களில் மிகவும் ப்ரீதியுடையவளா கையால், நன்கு புஷ்பித்து ஸ்வர்ணம்போல் விளங்கு கின்ற அசோக வ்ருக்ஷத்தின் கிளைகளால் உன் தேஹத் தை, என் துக்கத்தை மேன்மேலும் வளரச்செய்து கொண்டு மறைக்கின்றனை. உன்னைப் பார்த்தாய் விட் டதே. இனி இப்படி மறைத்துக்கொள்வதேனோ? தேவீ! உன் துடைகள் வாழையின் அடிப்பாகத்தை

கிகர்த்திருப்பவை. வாழைமரங்களால் அவைகளை நீ மறைத்துக்கொண்டபோதிலும் அவ்விரண்டும் எனக்குப் புலப்படுகின்றன. நீ நன்குமறைத்துக்கொள்ள வல்லமை யற்றவள். தேவி! மங்கலஸ்வபாவமுடையவளே! நீ பரிஹாஸஞ் செய்வதற்காகக் கர்ணிகாரவனத்தில் புகுகின்றனை. நீ பரிஹாஸஞ் செய்வதால் எனக்கு மிகவும் மனவருத்தம் உண்டாகின்றதே. இப்படி பரிஹாஸஞ்செய்வது ஏதுக்காக? இனிப்போதும். ஸீதே! ப்ரீதிக்கிடமாமிருப்பவளே! என்ன ப்ரயோஜனம்? முன்பு எனக்கு இந்தப்பரிஹாஸம் இனிதாகவேயிருப்பினும் இப்பொழுது நான் இளைப்புற்றிருக்கையால் அது எனக்கு மிகவும் வருத்தத்தை விளைப்பதாயிருக்கின்றது. அன்பிற்கிடமாயிருப்பவளே! விசேஷித்துப் பரிஹாஸஞ்செய்வது ஆஶ்ரமங்களில் நல்லதன்று. பரிஹாஸத்திலேயே உனக்கு ப்ரீதியென்று உன் ஸ்வபாவம் எனக்கு நன்றாகத் தெரியும். அகன்ற கண்களுடையவளே! இனி நீ வருவாயாக. நீ இல்லாமையால் உன் பர்ணசாலை பாழாயிருக்கின்றதே. லக்ஷ்மணா! ராக்ஷஸர்கள் ஸீதையைப் பிடித்துப் பக்ஷித்து விட்டார்களோ; அல்லது எடுத்துக்கொண்டு போய்விட்டார்களோ. இது நிஜம். இல்லையாயின் நான் எவ்வளவு புலம்பினும் அவள் என்னிடம் வராமல் என்னை உபேக்ஷித்திருக்கின்றனளே. இப்படி இருப்பாளா? லக்ஷ்மணா! இந்த ம்ருகக்கூட்டங்கள் கண்ணீர் பெருக்கிக் கொண்டிருப்பதைக் கண்டால், ஸீதை ராக்ஷஸர்களால் பக்ஷிக்கப்பட்டனளென்று சொல்பவை போல் புலம்பகின்றன. ஐயோ! என் ப்ராணநாயகி! உலகங்கட்கெல்லாம் பூஜிக்கத்தகுந்தவளே! ஓ பதிவ்ரதாமணியே! வரவர்ணினி! எங்குப் போயினையோ? நீ இப்படி காணாது போனமையால் கைகேயியின் கருத்து நிறைவேறிவிட்டதே! ஸீதையோடுகூடப் புறப்

பட்டு வந்து இனி ஸீதையில்லாமலே ஊருக்குச்சென்று பாழாயிருக்கின்ற அந்தப்புரத்தில் மறுபடியும் எப்படி அடி வைப்பேன்? உலகத்தவர் இனி என்னை வீர்யமில்லாதவனென்றும் தயையற்றவனென்றும் சொல்லுவார்களே. ஸீதை காணுமற்போகையில், நான் ப்ராணன்களை வைத்துக்கொண்டிருக்கப் பொறேனுகையால் என் அதைர்யம் வெட்டவெளிச்சமாய் விடுமல்லவா! ஸீதை அபஹரிக்கப்படுகையால் எனக்குப் பயப்படுந்தன்மையும் ஏற்படுமல்லவா? நான் வனவாஸத்தை முடித்து மீளவும் ஊர்போய்ச் சேர்ந்தவுடனே மிதிலாதிபதி ஜனகர் வந்து என்னை க்ஷேமம் விசாரிக்கையில் அவர் முகத்தை எப்படி பார்ப்பேன்? ஜனகமஹாராஜர் ஸீதை இல்லாமல் நான்மாத்ரமே வந்திருப்பது கண்டு புதல்வியினிடத்திலுள்ள ப்ரீதியால் பரிதாபமுற்று மூர்ச்சையடைவார். இதற்கு ஸந்தேஹம் உண்டோ? அல்லது அயோத்யைக்கே போகாதிருந்து விடுகிறேன். அது பரதனது பரிபாலனத்தினுல் ஸமஸ்த பதார்த்தங்களும் ஸம்ருத்தமாயிருக்கப் பெற்றதே; ஆயினும் அங்குப் போனுல் இத்தனை ஸங்கடங்கள் நேருமாகையால் அயோத்யைக்கு நான் போகமாட்டேன். ஆயிரம் படச் சொல்வி என்? ஸீதை இல்லையாயின், ஸ்வர்க்கமுங்கூட எனக்குப் பாழாயிருப்பது போலவே. லக்ஷ்மணு! நீ என்னை இங்கு அரண்யத்திலேயே விட்டு அழகிய அயோத்யாபுரிக்குப் போவாயாக. நான் ஸீதையை விட்டு எவ்விதத்திலாயினும் எவ்வளவும் ஜீவிக்கமாட்டேன். நீ போய்ப் பரதனை அழுந்தக் கட்டிக்கொண்டு அவனைப் பார்த்து 'ராமன் அனுமதி கொடுத்தனன்; இஷ்டப்படி பூமியைப் பரிபாலனஞ் செய்வாயாக' என்று நான் சொன்னதாகச் சொல்லவேண்டும். என் தாய் கைகேயிக்கும் ஸுமித்ரைக்கும் கௌஸல்யைக்கும் நீ நான் ஆஜ்ஞைசெய்தபடி ந்யாயந்தவருமல் நமஸ்காரஞ் செய்யவேண்டும். அதற்கு நீ வல்லவனே யல்லவா? நீ

சொன்னபடி செய்பவன். ஆகையால் என் தாயான கௌஸல்யையை ப்ரயத்னப்பட்டுப்பாதுகாத்துக்கொண் டிருக்கவேண்டும். பகைவரை அடக்குந் தன்மையுள்ள லக்ஷ்மணனே! இங்ஙனம் ஸீதை காணுமற்போனதை யும் நான் நசித்துப்போனதையும் ஸவிஸ்தரமாக என் தாயான கௌஸல்யைக்குத் தெரியச் சொல்லவேண்டிய தாயிருக்கும்' என்று புலம்பினன். இங்ஙனம் அந்த ஸ்ரீராகவன் அழகிய கேசங்களையுடைய அந்த ஸீதையை வனத்தில் தேடி எங்கும் காணுமல் மிகவும் தீனனுகிப் புலம்பிக்கொண்டிருக்கையில், லக்ஷ்மணன் பயத்தினுல் விலவிலத்த முகமுடையவனுகி மனம் தத்தளித்து மேனி முழுவதும் பரிதாபமுற்றிருக்கப்பெற்றனன். அறு பத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராம விலாபம்.

ராஜகுமாரனுகிய அந்த ஸ்ரீராமன் ப்ராணநாயகி யைப் பிரிந்து அந்தப் பெண்மணியை நினைத்துக்கொள் கையால் காமமும் பிரிந்திருக்கையால் துக்கமும் பீடிக் கப்பெற்றுத் தம்பிக்கு மேன்மேலும் மனவருத்தத்தை விளைவித்துக்கொண்டு மேனியெல்லாம் கண்கொண்டு காணமுடியாமல் வருந்தப்பெற்று மீளவும் முன்பைவிட மிகவும் க்ரூரமான துயரத்தில் மூழ்கினன். ராமன் ஸீதையைப் பிரிந்த சோகம் மேன்மேலும் வளர்ந்து வரப்பெற்று அந்தச் சோகத்தில் மூழ்கி, வ்யஸனம் நேரிடுங்காலத்தில் உலகத்தவர் நடப்பதுபோல், உஷ்ண மான பெருமூச்சுக்களை எறிந்து ரோதனஞ் செய்து கொண்டு தன்னைப் பார்த்துப் பெருஞ் சோகத்தில் மூழ்கி வருந்துகின்ற லக்ஷ்மணனைக் குறித்து வருத் தம் நிரம்பின வாக்யத்தை இங்ஙனம் மொழிந்த னன்:—'என்னைப்போல் பாபகார்யஞ் செய்தவன், என் னைத் தவிர மற்றொருவனும் இப்பூமண்டலத்தில் கிடை யானென்று நான் நினைக்கின்றனன். ஏனெனில்—பரம்

பரையாகத் துக்கத்தின்மேல் துக்கம் வந்து என் ஹ்ரு தயத்தையும் மனத்தையும் பேதித்துக்கொண்டு எனக்கு ஸம்பவிக்கின்றதே! இப்படி எவர்க்கு நேரிடும்? நான் பூர்வஜன்மத்தில் வேணுமென்று விரும்பிப் பலபாபங் களைப் பல தடவைகள் செய்திருக்கின்றனன். இது நிஜம். துக்கத்தின்மேல் துக்கத்தை அனுபவிக்கின்றே னே; இது அந்தப் பாபங்களின் பலனே இப்பொழுது எனக்கு அனுபவிக்கவேண்டியதாய் நேர்ந்திருக்கின் றது. ஆமாம். துக்கத்தின்மேல் துக்கந்தான். லக்ஷ் மணா! ராஜ்யங் கை சோருவது, பந்துக்களைப் பிரிவது, தந்தையை இழப்பது, தாயைப் பிரிந்து வருவது, ஆகிய இவை யெல்லாவற்றையும் ஒவ்வொன்றாக நினைத்துப் பார்க்கையில் என் துக்கராசியை நிரம்பச் செய்கின்றன. லக்ஷ்மணா! நான் ஜன ஸஞ்சாரமில்லாத இவ்வரண்யத் திற்கு வந்து ஸீதையின் முகத்தைப் பார்த்துக்கொண்டி ருப்பதனாலும் இங்குள்ள தேஹப்ரயாஸத்தினாலும் இந்த வருத்தங்களையெல்லாம் மறந்திருந்தனன். இப் பொழுது ஸீதையைப் பிரிந்த மாத்ரத்திலேயே காஷ் டங்களால் நெருப்பு ஜ்வலிப்பதுபோல் அந்தத் துயரங்க ளெல்லாம் திடீலென்று மீளவும் மேலுக்குக் கிளம்பின. ஸமஸ்த லோகங்களாலும் பூஜிக்கத்தகுந்தவளான என் ப்ராணநாயகி பயப்படுந்தன்மையள். ராக்ஷஸன் பலாத் காரமாக அபஹரித்துக்கொண்டு ஆகாயத்திற்குப் போ கையில், மிகவும் உரக்கப்புலம்பிக்கொண்டு பயத்தினால் தன் இனிய குரல்மாறி விகாரமான கண்டத்வனியுடன் ரோதனஞ் செய்திருப்பாள். இது நிச்சயம். இனிய காட்சியுடைய சிறந்த செஞ்சந்தனத்திற்கே எப்பொழு தும் தகுந்தவைகளும் உருண்டு அழகாயிருப்பவைகளு மாகிய என் ப்ராணநாயகியின் கொங்கைகள் இப்பொழுது ராக்ஷஸன் பக்ஷிப்பதற்காக அறுக்கையில், ரக்தப்ரவா

ஹத்தில் நனைந்து சிறிதும் விளக்கமுறாதிருக்கும். இது நிச்சயம். முன்பு மதுரமும் பொருள் தெளிவுடையதும் மெதுவாயிருப்பதுமான மொழியுடன் விளங்குந்தன்மையுள்ளதும் சுருண்டிருண்ட குழற்கற்றையுடையதும் அவ்வண்ணம் அழகியதுமான அந்த ஸீதையின் முகம், இப்பொழுது ராக்ஷஸன் கையில் அகப்படுகையால் ராஹுவின் முகத்தில் விழுந்த சந்த்ரன்போல் எவ்வளவும் ப்ரகாசியாதிருக்கும். இது நிச்சயம். என்னைத் தவிர மற்றெவனையுந்தொட விரும்பாத அந்தப்பதிவ்ரதாமணியின் கண்டம் எப்பொழுதும் ஹாரங்களால் அலங்காரமுற்றிருப்பதற்கே உரியது. ரக்தத்தையே ஆஹாரமாகக் கொள்ளுந்தன்மையரான ராக்ஷஸர்கள் அப்படிப்பட்ட கண்டத்தைச் சூன்யமான அரண்யத்தில் எவரும் திக்கில்லாமையால் தப்பாமல் முறித்து ரக்தத்தைப் பானம் செய்திருப்பார்களே! ஜனஸஞ்சாரமில்லாத அரண்யத்தில் ஸீதை, நான் இல்லாமையால் ராக்ஷஸர்கள் தன்னைத் திருடி இழுத்துக்கொண்டுபோகையில் துக்கித்து அகன்றழகிய கண்களை விழித்து நான் வரும் வழியைப் பார்த்துக் கொண்டே அழுகுரல் பக்ஷியின்பேடைபோல் பேரொலியுடன் கதறல் செய்திருப்பாள். லக்ஷ்மணா! கம்பீரஸ்வபாவமுடையவளும் அழகிய புன்னகை விளங்கப்பெற்றவளுமாகிய அந்த ஸீதை இந்த நிர்ஜனப்ரதேசத்தில் முன்பு இந்தப் பாரையின்மேல் என்னோடு கூட ஸமீபத்தில் உட்கார்ந்திருந்து சிரித்துக் கொண்டே உன்னைப்பார்த்துப் பலவார்த்தைகளைச் சொல்லிக்கொண்டிருந்தனள். நதிகளில் தலைமையுள்ள கோதாவரியிடத்தில் என் ப்ராணநாயகிக்கு எப்பொழுதும் ப்ரீதி அதிகமாயிருக்கும். ஒருகால் அவ்விடம் போயிருப்பாளோ என்று நினைக்கிறேன், போயிருக்க மாட்டாள். என்னை விட்டு அந்த மாதரசி எப்பொழுதும் தனியாகப் போனதே இல்லை. ஆகையால்

அங்ஙனம் நினைப்பது யுக்தமன்று தாமரைமலர் போன்ற முகமும் தாமரையிதழ்போல் அகன்று அழகான கண்களும் அமையப்பெற்ற அந்த வைதேஹி ஒருகால் தாமரைமலர்களைப் பறித்துக்கொண்டு வரப் போயிருக்கக்கூடுமோ என்னவோ? ஆ! அப்படி நினைப்பதும் ஸரியன்று. அவள் எப்பொழுதாயினும் என்னை விட்டுத் தனியே தாமரைக்குளங்களுக்குப் போனதே இல்லை. இவ்வனத்தில் வ்ருக்ஷங்கள் மிகவும் புஷ்பித்திருக்கின்றன. பலவகைப் பறவைகளும் குவியல் கூடி இங்கு விளங்குகின்றன. இவ்வளவு அழகாயிருக்கையால் இந்த வனத்திற்குப் போயிருப்பாளா? அப்படி நினைப்பதும் யுக்தமன்று. அவள் பயப்படுந்தன்மையள்; தனியாயிருப்பதற்கு மிகவும் பயப்படுவாள். ஆகையால் இங்கும் போயிருக்கமாட்டாள். ஓ ஸூர்யனே! நீ உலகத்தில் எவை நடக்கின்றனவோ எவை நடக்கக்கூடியவைகளோ, அவையெல்லாந் தெரிந்தவன். உலகத்தவர் ஆசரிக்கும் புண்யகர்மங்களுக்கு ஸாக்ஷியாயிருப்பவன். ஆகையால் உனக்குத் தெரிந்திருக்கலாம். என் ப்ராணநாயகி எங்கேனும் போயினளா? அல்லது, அவளை எவனேனும் எடுத்துக்கொண்டு போயினனு? அவளைக் காணாமையால் ஓயாமல் வருந்துகின்ற எனக்கு அவள் ஸங்கதியைச் சொல்வாயாக. ஓ வாயுவே! ஸமஸ்த லோகங்களிலும் உனக்கு நித்யமும் தெரியாதது எதுவும் எப்பொழுதும் இல்லை. நற்குலத்தில் பிறந்த அப் பெண்மணியின் ஸங்கதியைச் சொல்வாயாக. எவராயினும் அவளை எடுத்துக்கொண்டு போயினர்களா? அல்லது மரணம் அடைந்தனளா? அல்லது எந்த மார்க்கத்திலாவது இருக்கின்றனளா?'' என்று வினவிக்கொண்டு ராமன் புலம்பினன். இங்ஙனம் புலம்பிக்கொண்டு சோகத்தில் மூழ்கிச் சரீரம பரவசமாகி ப்ராஜ்ஞையற்றிருக்கின்ற ராமனைப் பார்த்து லக்ஷ்மணன் தைர்யம் அழியப் பெறுதவனுகையால் ந்யாயத்தில் நின்று அப்பொழுதைககுத் தகுந்த வாக்யத்தை மொழிந்தனன்:—'பெரியோ

னே! சோகத்தைத் துறப்பாயாக. தைர்யத்தைக் கைப் பற்றுவாயாக. ஸீதையைத் தேடும்பொருட்டு உத்ஸா ஹத்தை ஏற்றுக்கொள்வாயாக. உலகத்தில் உத்ஸாஹ முடையவர் மிகவும் செய்யமுடியாத கார்யங்களிலும் வருந்த மாட்டார்களல்லவா' என்றனன். இங்ஙனம் மஹாபராக்ரமசாலியாகிய லக்ஷ்மணன் எவ்வளவு ஸமா தானஞ் சொல்லிக்கொண்டிருந்தபோதிலும் ரகுவம்சத் தை வளரச்செய்யுந் தன்மையனுகிய அந்த ராமன் வருந்தி அந்த வார்த்தைகளைப் பாராட்டாமல் உள்ள தைர்யத்தையும் துறந்து மீளவும் பெருந்துக்கத்தில் ஆழ்ந்தவனுயினன். அறுபத்துமூன்றுவது ஸர்க்கம் முற் றிற்று

---

வழியில் புலப்படுகிற அடையாளங்களால் ஸீதை அபஹரிக்கப்பட்டனளென்று நிச்சயித்துக் கொள்தல்.

அந்த ராமன் தீனனுகித் தீனமான வசனத்துடன் லக்ஷ்மணனைப் பார்த்து இவ்வாக்யத்தை மொழிந் தனன்:—'லக்ஷ்மணு! ஸீதை தாமரைப்புஷ்பங்களைப் பறிக் கிறதற்காகக் கோதாவரீநதிக்குப் போயிருப்பாளா? நீ சீக்ரம் கோதாவரிக்குப் போய்த் தெரிந்து கொண்டு வருவாய்' என்றனன். சத்ருவீரர்களை உருமாய்க்கவல்ல லக்ஷ்மணன், ராமன் இவ்வாறு சொன்னவுடனே அடி களை வேகத்துடன் வைத்துக்கொண்டு கோதாவரீநதிக் குப் போயினன். லக்ஷ்மணன் பலதுரைகளை (ஸ்னுனகட் டடங்களை) யுடைய அந்நதி முழுவதும் தேடி ராமனிடம் வந்து 'கோதாவரீ நதியின் துரைகளில் எங்கும் எனக்கு ஸீதை அகப்படவில்லை. நான் எவ்வளவு கூப்பிட்டபோ திலும் அவளுக்குச் செவிப்படவில்லை. துக்கத்தையெல் லாம் போக்கடிக்கவல்ல ஸீதை எங்குப் போயினளோ; அந்த ஜனகராஜன் புதல்வி எங்கே இருக்கின்றனளோ; அவ்விடம் எனக்குத் தெரியவில்லை' என்றனன். லக்ஷ

மணன் சொன்னது கேட்டு ராமன் தீனனாகிப் பரிதாப முற்று யுக்தாயுக்தந்தெரியாமல் மயங்கியிருக்கையால் தானே கோதாவரிக்குப் போயினன். ராமன் அங்ஙனம் அந்நதியின் அருகிற்சென்று 'ஸீதை எங்கே' என்று வினவினன். ராமன் கீழ் பல ஜந்துக்களையும் வினவினபொழுது 'வதிக்கத் தகுந்தவனாகிய ராக்ஷஸ ப்ரபு ராவணன் ஸீதையை எடுத்துக்கொண்டு போனான்' என்று அவனுக்கு முன்வந்து வனத்திலுள்ள ஜந்துக்களில் ஒன்றும் சொல்லவில்லை. அப்படியே இப்பொழுது கோதாவரீநதியும் சொல்லவில்லை. ராமன் துக்கித்து அங்ஙனம் வினவுகையில், அந்நதி தானே சொல்லாதிருந்ததுமன்றிப் பிறகு ஸமஸ்தபூதங்களும் 'எமக்காக நீ ராமனுக்கு அவன்ப்ராணநாயகியின் ஸமாசாரத்தைச் சொல்வாய்' என்று தூண்டினபோதிலும் ஸீதாவ்ருத்தாந்தத்தை எவ்வளவும் சொல்லவில்லை. அந்நதி துராத்மாவாகிய ராவணனுடைய பயங்கரமான உருவத்தையும் அவனுடைய தாருணமான கார்யங்களையும் நினைத்துப் பயந்திருப்பதுபற்றி ராமனுக்கு ஸீதையின் போக்கைச் சொல்லவில்லை. ராமன் ஸீதையைப் பாராமையால் மிகவும் வருந்தி, கோதாவரி ஏதுஞ்சொல்லாமல் ஸீதையைப் பார்க்கலாமென்னும் ஆசையைப் போக்குகையில், லக்ஷ்மணனைப் பார்த்து 'நல்லியற்கையுடையவனே! இந்தக் கோதாவரி எவ்வளவும் வினவினதற்குப் பதில் சொல்லாதிருக்கின்றது. நான் ஸீதை இல்லாமல் ஜனகமஹாராஜரிடத்திற்கும் நம் தாய் கௌஸல்யையிடத்திற்கும் போய் ஸீதையைக் குறித்து அவர்க்கு அப்ரியத்தை என்னென்று சொல்லுவேன்? நான் ராஜ்யத்தைப் போக்கடித்துக்கொண்டு அரண்யத்தில் வஸிப்பவனாகி [1] வன்யங்களான காய் கிழங்குகளை ஆஹாரஞ் செய்து மிகவும் துக்கித்துக்கொண்டிருந்த போதிலும் ஸீதை என் துக்கத்தையெல்லாம் போக்கடித்துக்

---

1. வன்யம்-வனத்தில் உண்டானது.

கொண்டிருந்தனளே! அப்படிப்பட்ட ஸீதை இப்பொழுது எங்குப் போயினள்? பந்துக்களை விட்டுப்பிரிந்தனன்; அவர்கள் இல்லாமற் போயினும் ஸீதையாயினும் கூட இருக்கிறாளல்லவா என்று நினைத்துக்கொண்டிருக்கையில் அந்த ராஜகுமாரத்தியையும் காணுமற்போயினன். இனிக் கண்களில் தூக்கம் பிடிக்காத எனக்கு ஒவ்வொரு ராத்ரியும் நீண்டு ஒருயுக்மாயிருக்கு மென்று நினைக்கின்றனன். இப்பொழுது ஸீதை அகப்படுவாளாயின், நான் அவளுடன் கூடிக் கோதாவரி நதிக்கரைகளிலும் ஜனஸ்தானத்திலும் இந்த ப்ரஸ்ரவண பர்வதத்திலும் இவையெல்லாவற்றிலும் விளையாடுவேனே! மஹாவீரனே! இந்த ம்ருகங்கள் அடிக்கடி என்னைப் பார்த்துக்கொண்டிருக்கின்றன; இவை எனக்கு ஸீதையின் ஸங்கதியைச் சொல்லவேண்டு மென்றிருப்பவை போல் இவைகளின் சேஷ்டைகளால் தெரியவருகின்றது' என்று மொழிந்து அனந்தரம் புருஷஸ்ரேஷ்டனாகிய அந்த ராமன் நீர்நிறைந்த கண்களுடன் அந்த மிருகங்களைப் பார்த்து 'ஸீதை எங்கே' என்று வினவினன். ராமன் அங்ஙனம் வினவினவுடனே அந்த ம்ருகங்களெல்லாம் எழுந்திருந்து தென்திசைமுகமாகி எல்லாம் ஆகாயத்தைப் பார்த்துக்கொண்டு அந்த ஸீதை அபஹரிக்கப்பட்டு எந்த மார்க்கமாகப் போயினளோ அதே மார்க்கத்தைப் பிடித்து ஓடி ராமனைப் பார்த்துக் கொண்டிருந்தன. அந்த மிருகங்கள் ஆகாசமார்க்கத்தையும் தென்திசையையும் பூமியையும் பார்த்துக்கொண்டே மீளவும் அந்தத் தென்திசை மார்க்கமாகவே போக விரும்புவதைக் கண்டு அவைகள் செய்யும் சேஷ்டையின் அபிப்ராயத்தை லக்ஷ்மணன் தெரிந்து கொண்டனன். லக்ஷ்மணன் மிகுந்த மதியுடையோனாகையால், அந்த ம்ருகங்கள் செய்த சேஷ்டைகள் அவை சொல்ல

வேண்டிய வார்த்தைகளெல்லாம் சொன்னாற்போலிருந்த படியால், அவைகளின் சேஷ்டைகளால் வார்த்தைகளைக் கேட்டாற்போலவே அபிப்ராயத்தைத் தான் ஊஹித்துக்கொண்டு மிக்க மனவருத்தத்துடன் அண்ணனைப் பார்த்து 'தேவா! நீ ஸீதை எங்கே' என்று வினவினவுடனே இந்த மிருகங்கள் வேகத்துடன் எழுந்திருந்து தென்திசையையும் பூமியையும் காட்டுகின்றன. ஆகையால் நாம் தென்மேற்காக ராக்ஷஸர் வஸிக்கிற நிருதி திக்கைப் பிடித்தே நேராகப் போவோம். ஒருகால் ஸீதையைக் கண்டுபிடிக்கும் உபாயம் ஏதாயினும் அகப்படக்கூடும். இல்லையாயின் மேன்மைப் படுத்துவதற்குரிய ஸீதையே அகப்பட்டாலும் அகப்படக்கூடும்' என்றனன். ஸ்ரீமானாகிய அந்த ஸ்ரீராமன் அப்படியே ஆகட்டுமென்று லக்ஷ்மணன் பின்றொடர்ந்து வரப்பெற்றுத் தலைவணங்கித் தரையைப் பார்த்துகொண்டே தென்திசையைப் பிடித்துப் போயினன். அவ்வண்ணன் தம்பிகள் இருவரும் இப்படி ஒருவர்க்கொருவர் வார்த்தை சொல்லிக்கொண்டே சென்று பூமியில் புஷ்பங்கள் இறைந்திருக்கப்பெற்ற வழியைக்கண்டனர். வீரனாகிய அந்த ஸ்ரீராமன் பூமியில் மழைபெய்தாற்போல் இறைந்திருக்கின்ற புஷ்பங்களைக் கண்டு துக்கித்தவனாகித் தன்னைப்போலவே துக்கித்திருக்கிற லக்ஷ்மணனைப் பார்த்து 'லக்ஷ்மணா! நான் இந்தப் புஷ்பங்களின் அடையாளத்தை அறிவேன். நானே அரண்யத்தில் இந்தப் புஷ்பங்களைக் கொண்டு வந்து ஸீதைக்குக் கொடுக்கையில் அந்த வைதேஹி சொருக்கில் வைத்து முடிந்துகொண்டனள். எனக்கு ப்ரியஞ்செய்யவேண்டி இந்தப் புஷ்பங்களை வாடவொட்டாமல் ஸூர்யனும், கலையவொட்டாமல் வாயுதேவனும், தன்மேல் தரித்துக்கொண்டிருப்பதனால்

பெரும்புகழுள்ள பூமிதேவியும் ரக்ஷித்துக்கொண்டிருக்கிறார்களென்று நினைக்கிறேன்' என்றனன். புருஷஶ்ரேஷ்டனும் தர்மிஷ்டனுமாகிய ராமன் இவ்வாறு மஹாபாஹுவாகிய லக்ஷ்மணனுக்குச் சொல்லி ப்ரஸ்ரவணபர்வதத்தைப் பார்த்துப் 'பர்வதஶ்ரேஷ்டமே! ஸமஸ்த அவயவங்களிலும் தோஷஞ் சிறிதுமின்றி ஸௌந்தரியாகி என்னைப் பிரிந்து வருந்துகின்ற ஓர் பெண்மணியை ரமணீயமான இந்த வனப்ரதேசத்தில் ஏதேனுங் கண்டிருப்பாயா?' என்று வினவினன். உடனே பர்வதத்தினின்றும் உண்டான ப்ரதித்வனியைக் கேட்டு ராமன் ஸிம்ஹம் க்ஷுத்ரம்ருகத்தை விரட்டுவதுபோல் அந்தப் பர்வதத்தைக் கோபத்துடன் விரட்டிக்கொண்டு 'பர்வதமே! நான் உன் தாழ்வரைகளையெல்லாம் இடித்துப் பொடி செய்து பாழாக்குவதற்கு முன்னமே பொன்வர்ணமுடையவளும் பொன்ப்ரதிமைபோல் விளங்குந்தன்மையளுமாகிய அந்த ஸீதையைக் காட்டுவாயாக' என்றனன். அனந்தரம் அப்பர்வதம் ராமன் இவ்வாறு சொன்னதையே ப்ரதித்வனி செய்கையால் ஸீதையைக் குறித்துச் சொன்னாற் போலிருந்தது ; ஆனால் ஸீதையைக் காண்பிக்கவில்லை. பிறகு தசரதகுமாரனான ராமன் மீளவும் பர்வதத்தைப்பார்த்துப் 'பாணாக்னியால் உன்னை எரித்துவிடுவேன்; அங்ஙனம் எரிக்கப்பட்ட நீ உடனே நீறாய் விடுவாய். பிறகு உன்னிடத்தில் பசும்புல்லாவது செடியாவது தளிராவது இல்லாமற்போகுமாகையால் உன்னை எப்பொழுதும் எவரும் அணுகமாட்டார்கள்' என்றுரைத்து மீளவும் லக்ஷ்மணனைப் பார்த்து 'லக்ஷ்மணா! உலகத்தில் பூஜிக்கத்தகுந்தவளும் சந்த்ரன்போன்ற அழகான முகமுடையவளுமாகி விளங்கும் ஸீதையின் ஸங்கதியை இந்நதி எனக்குச் சொல்லாதுபோமேயாயின், இதை இப்பொழுதே உலர்த்தி விடுகிறேன்' என்றனன். இங்ஙனம் அவன் ரோஷாவேசத்துடன் இறைந்

துகொண்டு நெருப்புப் போன்ற கண்களுடன் தஹிக்க நினைத்தவன் போலிருக்கையில், ஒரு ராக்ஷஸனுடைய பெரிய அடிவைப்பையும் அவனுக்குப் பயந்து ராமாஶ்ர மத்திற்குப் போக விரும்பி அந்த ராக்ஷஸன் பின்றொ டர்ந்து வருகையில் இப்படியும் அப்படியும் ஓடுகின்ற ஸீதையின் அடிகளையும், அதுவரையில் புலப்படாமை யால் அப்பொழுது பூமியினின்று வெளிக்கிளம்பினாற் போல் இருக்கக் கண்டனன். அந்த ராமன் ஸீதையின் அடிகளையும் ராக்ஷஸனுடைய அடிகளையும் கண்டு மே லும் ஆங்காங்கு அறுந்து வீழ்ந்திருக்கின்ற வில்லையும் அம்புறாத்தூணிகளையும் பலவாறாக முறிந்து வீழ்ந்திருக் கின்ற ரதத்தையும் கண்டு பரபரப்புற்ற மனத்துடன் தனக்கன்பனாகிய தம்பியைப் பார்த்து மொழிந்தனன்:—
'லக்ஷ்மணா! இங்குக் காண்பாயாக. ஸீதையின் பூஷ ணங்களினின்று பொன் துகள்கள் இறைந்திருக்கின்றன. மேலும், பலவகைப் புஷ்பமாலைகளும் இறைந்திருக்கின் றன. லக்ஷ்மணா! உருக்கின பொன் துளிகள்போல் சித் ரங்களான ரக்தபிந்துக்கள் பூமிமுழுவதும் நிறைந்திருக் கின்றன, பார். லக்ஷ்மணா! காமரூபிகளாகிய ராக்ஷ ஸர்கள் ஸீதையை வெட்டிவெட்டிப் பங்கிட்டுக் கொண் டாவதிருப்பார்கள்; அல்லது பக்ஷித்தாவதிருப்பார் கள். ஆனதுபற்றியே இவ்வாறு பொட்டுப்பொட்டாக ரக்தபிந்துக்கள் புலப்படுகின்றன. அந்த ஸீதையின் நிமித்தமாக இரண்டு ராக்ஷஸர்கள் விவாதப்பட்டு இங்குப் பயங்கரமான யுத்தம் நடத்தினதாகத் தோற் றுகிறது. நல்லியற்கையுடையவனே! முத்துக்களும் ரத் னங்களும் இழைக்கப்பெற்று ஸ்வர்ணத்தினால் அலங் கரிக்கப்பட்டு முறிந்து தரையில் வீழ்ந்திருக்கின்ற இப் பெரும் வில்லு எவனுடையது? இதோ ஸ்வர்ணமயமான கவசம் முதிர்ந்த ஸூர்யன்போல் விளக்க முற்று வை டூர்யமணிகள் இழைக்கப்பெற்றதாகி முறிந்து தரையில்

வீழ்ந்திருக்கின்றதே! இது எவனுடையது? நூறு கம்பி களுடையதும் திவ்யமான பூமாலையால் அலங்கரிக்கப் பட்டதுமாகிய குடை இதோ காம்பு நன்கு முறிந்து பூமியில் விழுந்திருக்கின்றதே! இது எவனுடையது? ஸ்வர்ணமயமான கவசங்களிடப்பெற்றவைகளும் பிசாச முகமும் பயங்கரமான பெரிய உருவமும் அமையப் பெற்றவைகளுமாகிய இந்தக் கோவேறுகழுதைகள் யுத்தத்தில் ஆடிப்பட்டு வீழ்ந்திருக்கின்றனவே! இவை எவனுடையவை? மிகவும் காந்தி விளக்கப்பெற்று எரி கிற அக்னிபோல்ப்ரகாசிப்பதும் யுத்தத்தில் நாயகனு டைய அடையாளத்தைக் காட்டவல்லதுமாகிய த்வஜ மும் இதோ ஒடிந்து வீழ்ந்திருக்கின்றது. யுத்தத்தின் பொருட்டான ரதமும் ஒன்று இதோ அடிபட்டு முறிந் துகிடக்கின்றது. இது எவனுடையது? ரதத்தின் இருசுபோல் நீண்டிருப்பவைகளும் ஸ்வர்ணரேகைக ளால் அலங்காரஞ்செய்யப்பெற்றவைகளுமாகிய பாணங் கள் இதோ நுனி ஒடிந்து மொக்கையாகிச் சிதறித் தரையில் வீழ்ந்திருக்கின்றனவே! இவை பயங்கரகர்மா வாகிய எவனுடைய பாணங்களோ? லக்ஷ்மணா! பாணங் கள் நிறைந்திருக்கின்ற அம்புறாத்தூணிகள் இரண்டு பொடிபொடியாகச் செய்யப்பட்டு வீழ்ந்திருக்கின்றன; பார். சாட்டிக்கோலையும் கடிவாளக்கயிறுகளையும் கை யிற் பிடித்துக்கொண்டு செத்துவீழ்ந்திருக்கின்ற இந்த ஸாரதி எவனுடையவனோ? புருஷஸ்ரேஷ்டனே! நல்வி யற்கை யுடையவனே! இதோ இருவர் தலைப்பாகை களோடும் ரத்னகுண்டலங்களோடும் யுத்தத்தில் அடிப் பட்டு வீழ்ந்திருக்கின்றனரே! இவ்விருவரும் சாமரம் பிடிப்பவர்; இவர்கள் எவனுடையவர்களோ! இம்மார்க் கத்தின் போக்கு எவனோ ஒரு புருஷனுடையதாகவும், அதிலும் எவனோ ஒரு ராக்ஷஸனுடையதாகவும்தோற்று கிறது. ஸந்தேஹமே இல்லை. இதுவரையில் ராக்ஷஸர் மேல் எனக்கு அவ்வளவாக விரோதம் உண்டாகவில்லை. ஆகையால் அவர்களது அபராதத்தைப் பொறுத்திருந்

தனன். இப்பொழுது நூறுமடங்கதிமாக வைரம் உண்டாய்விட்டது. இனி அவர்களது ப்ராணன்களையெல்லாம் முடித்துவிடுகின்றேன்; பார். ஸௌம்யனே! திசையற்று மனஇரக்கமுறத்தக்க ஸீதையை மிகவும் க்ரூரஹ்ருதயர்களும் காமரூபர்களுமாகிய ராக்ஷஸர்கள் எடுத்துக்கொண்டு போனார்களோ, அல்லது அடித்துக் கொன்றுவிட்டார்களோ, அல்லது பக்ஷித்துவிட்டார்களோ, இவற்றில் ஒருவிதஞ்செய்திருப்பார்கள். மஹாரண்யத்தில் ஸீதையை எடுத்துக்கொண்டு போகையில், 'ஆபத்காலங்களில் தர்மம் ரக்ஷிக்கும்' என்பார்களே! அந்தத் தர்மம் அவளை ரக்ஷிக்கவில்லையே! நல்லியற்கையுடையவனே! லக்ஷ்மணா! ராக்ஷஸர்கள் ஸீதையை எடுத்துக்கொண்டு போயோ, பக்ஷணஞ்செய்தோ ஆனபின்பு எனக்குத் தேவதைகள் எவர் ப்ரியஞ்செய்யவல்லவர்? ப்ரியஞ்செய்வார்களாயின் முன்னமே ஸீதையை ரக்ஷித்திருக்கமாட்டார்களா! ரக்ஷித்திருப்பார்களே! லக்ஷ்மணா! உலகத்தைப் படைக்கும்படியான ஸாமர்த்யமுடையவனாயினும் சூரனாயினும் தயை நிறையப்பெற்றவனாயிருப்பானாயின் அவனுடைய ஸாமர்த்யம் தெரியாதாகையால் ஸமஸ்த பூதங்களும் அவனை அவமதிக்கும். இது லோகஸ்வபாவம். லோகஹிதத்தில் ஊற்றமுடையவனா யிருக்கையால் மெதுவான மனமுடையவனும் தயை நிறைந்தவனும் விஷயசாபலமில்லாதவனுமாகிய என்னைத் தலைமையுள்ள தேவதைகளுங்கூட வீர்யமற்றவனென்று நினைக்கின்றனர். இது நிச்சயம். லக்ஷ்மணா! என்னிடமுள்ள காருண்யம் முதலிய நற்குணங்களுங்கூடத் தோஷமாயின பார். (அவமானத்தை விளைக்கையால் தோஷமே ஆகின்ற குணத்தினால் ப்ரயோஜனம் என்ன?) ராக்ஷஸர்களுக்கு அனுகூலமாயிருக்கின்ற ஸமஸ்தபூதங்களுக்கும் ராக்ஷஸர்களுக்கும் இப்பொழுதே நாசத்தின் பொருட்டே என்னிடம் குணமும் தே

ஷமாயிற்று. தயையைத் தூரத்தில் விட்டுக் கோபத்தைக் கைப்பற்றுகின்றனன். பெருந்தன்மையுடையனுகிய ஸூர்யன் உதித்துச் சந்த்ரனுடைய நிலவையெல்லாம் அழித்தே ப்ரகாசிப்பதுபோல் என்தேஜஸ்ஸூமெதுவாயிருக்கை முதலிய குணங்களை அடக்கியே ப்ரகாசிக்கட்டும். லக்ஷ்மணு! தேவதைகளே அன்று; இன்னம் அவர்களைச்சேர்ந்த யக்ஷர்களாயினும் கந்தர்வர்களாயினும் பிசாசர்களாயினும் ராக்ஷஸர்களாயினும் கின்னரர்களாயினும் மனுஷ்யர்களாயினும் ஸுகம் பெறமாட்டார்கள். லக்ஷ்மணு! ப்ரஹ்மாஸ்த்ரம் முதலிய திவ்யாஸ்த்ரங்களாலும் பாணங்களாலும் ஆகாயத்தையெல்லாம் நிரம்பச்செய்கின்றனன், பார். இப்பொழுது மூன்று லோகங்களிலும் எவர்க்காயினும் ஸஞ்சரிக்க அவகாசமில்லாதபடி செய்கின்றனன். இப்போது இந்த க்ரஹஸமூஹத்தின் ஸஞ்சாரத்தைத் தடுத்துச் சந்த்ரனை மறையச்செய்து அக்னியையும் வாயுவையும் நாசஞ் செய்து ஸூர்யன் ஒளியை மறைத்துப் பர்வதங்களின் கொடுமுடிகளைப் படசூர்ணஞ் செய்து ஜலாதாரங்களையெல்லாம் உலரச்செய்து செடிகளையும் கொடிகளையும் புதர்களையும் த்வம்ஸஞ்செய்து ஸமுத்ரங்களை உருமாய்த்து இங்ஙனம் மூன்று லோகங்களையும் நாசஞ்செய்கின்றனன்; பார். இப்பொழுது தேவதைகள் அந்த ஸீதையை க்ஷேமத்துடன் முன்பிருந்தபடியே எனக்குக் கொடாதிருக்கிறுர்களல்லவா. ஆனதுபற்றி, லக்ஷ்மணு! இந்த முஹூர்த்த காலத்திலேயே என் பராக்ரமத்தைப் பார்க்கப்போகின்றனர். லக்ஷ்மணு! எனது நாண்கயிற்றினின்று விடப்பட்ட பாணஸமூஹங்கள் ஆகாயம் முழுவதும் எவ்வளவும் அவகாசமில்லாதபடி நெருக்கமாகக் கவர்ந்து கொள்கையில் ஸமஸ்த பூதங்களும் தப்புவித்துக் கொள்வதற்காக ஆகாயத்

திற்கு எழும்பிப்போக வல்லவையல்ல. லக்ஷ்மணா! என் பாணங்களால் இந்த ஜகத்தெல்லாம் கலங்கிப் பாழாகிப் பக்ஷிகளும் ம்ருகங்களும் மூலைக்குமூலைச் சிதறிப் பறந்தோட. மற்றவையெல்லாம் ஆகுல்ப்பட அவ்வவையெல்லாம் தந்தமது மர்யாதையைக் கடந்து வருந்தப்போகின்றன; பார். இப்பொழுது ஸீதாநிமித்தமாகத் தடுக்கமுடியாத பாணங்களைக் காதுவரையிலும் இழுத்து ப்ரயோகித்து ப்ரஹ்மாண்டத்தில் பிசாசர்களாயினும் ராக்ஷஸர்களாயினும் முதலே இல்லாதபடி செய்கின்றனன். இப்பொழுது என்னால் ரோஷத்துடன் ப்ரயோகிக்கப்பட்டு வெகுதூரம் போகவல்ல என்பாணங்களின் வலிவைத் தேவதைகள் காண்பார்களாக. என் கோபத்தினால் மூன்றுலோகங்களும் நாசம் அடைகையில் தேவதைகளாவது தைத்யர்களாவது பிசாசர்களாவது ராக்ஷஸர்களாவது எவரும் தக்கார்கள்; உடனே உருமாய்ந்துபோவார்கள். தேவ தானவ யக்ஷ ராக்ஷஸ லோகங்களும் என் பாணங்களால் பலவாறு பொடி செய்யப்பட்டு இனி இருக்கமாட்டா. லக்ஷ்மணா! தேவதைகள் ஸீதையை எடுத்துக்கொண்டு போயினும் அவள் மரணம் அடைந்திருப்பினும் எனக்குக் கொண்டு வந்து கொடார்களேயாயின், நான் இப்பொழுது பாணங்களால் இந்த லோகங்களையெல்லாம் தந்தமது மர்யாதையைக் கடக்கும்படி செய்து விடுகிறேன். என்ப்ராண நாயகி அபஹரிக்கப் பட்டிருப்பினும் மரணம் அடைந்திருப்பினும் தேவதைகள் அவளை எனக்குக் கொடார்களாயின், இப்பொழுது ஸமஸ்த ஜங்கம ஸ்தாவரங்களோடு கூடிய மூன்று லோகங்களையும் நாசஞ்செய்து விடுகிறேன்' என்றனன். இங்ஙனம் கம்பீரமாக மொழிந்து கோபத்தினால் கண்கள் சிவக்கப்பெற்று வில்லைக் கையில்பிடித்துக் கொடிய ஸர்ப்பம்போல் பயங்கரமாகத் தகதகவென்று விளங்குகிற பாணத்தை எடுத்து

அந்த வில்லில் தொடுத்துச் சத்ருபட்டணங்களை வெல்லுந்திற முடையோனுகிய செல்வ ராமன் ப்ரலயகாலாக்னி போன்று மிகவும் கோபித்து இவ்வசனத்தை மொழிந்தனன்:— 'லக்ஷ்மணு! உலகத்தில் ஸமஸ்த பூதங்களும் எப்படி கிழத்தன்மையையும் ம்ருத்யுவையும் காலத்தையும் அத்ருஷ்டத்தையும் எப்பொழுதும் தடுக்க வல்லமை யற்றவைகளோ, அப்படியே கோபித்திருக்கின்ற என்னையும் தடுக்க எவர்க்கும் ஸாத்யம் அன்று! முன்பிருந்தபடியே அழகிய பற்கள் விளங்கப் பெற்றுத் தோஷங்களொன்றுமின்றிய மிதிலாதிபதியின் புதல்வியாகிய ஸீதையைத் தேவதைகள் எனக்கு இப்பொழுது கொடார்களாயின் தேவ கந்தர்வ மனுஷ்ய பன்னகர்களோடும் பர்வதங்களோடுங்கூடின ப்ரபஞ்சத்தையெல்லாம் நாசஞ்செய்து விடுகிறேன்' என்றனன்.

அறுபத்து நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

லக்ஷ்மணன் ராமனுக்கு ஸமாதானங் கூறுதல்.

அங்ஙனம் ஸீதை அப்ஹரிக்கப்பட்டதற்கு இளைப்புற்றுப் பரிதபிக்கின்ற ராமன் ப்ரலயகாலாக்னிபோல் உலகங்களை நாசஞ்செய்ய முயன்று நாணேறிட்ட வில்லின்மேல் கண்வைத்து அடிக்கடி பெருமூச்செறிந்து கொண்டு ப்ரலயகாலருத்ரன்போன்று ஜகத்தை யெல்லாம் தஹிக்க விருப்பமுற்று இதுவரையில் என்றும் இல்லாத பயங்கர உருவத்துடன் பெருங்கோபாவேச முற்றிருப்பது கண்டு லக்ஷ்மணன் லோகநாசம் நேருமோ என்னும் பயத்தினுல் முகம் வாட அஞ்சலி செய்து கொண்டு இவ்வாக்யத்தை மொழிந்தனன்:—'நீ இதுவரையில் மிருதுஸ்வபாவனும் ஜிதேந்த்ரியனும் ஸர்வபூதங்களுக்கும் ஹிதனுமாயிருந்து இப்பொழுது கோபத்தில் அகப்பட்டு நீ அந்த ஸ்வபாவத்தைக் கைவிடுவது யுக்தமன்று. சந்த்ரனிடத்தில் காந்தியும் ஸூர்யனிடத்

தில் ப்ரகாசமும் வாயுவிடத்தில் திரிதலும் பூமியிடத்தில் பொறுமையும் நிலைநின்றிருக்கின்றன. இங்ஙனம் ஒவ்வோரிடத்தில் ஒவ்வொன்று நிலையுற்றிருக்கும். உன்னிடத்தில் இவையனைத்தும் நிகரில்லாத புகழும் நிலைநின்றிருப்பவை. இங்கு யுத்தபூமியில் ஒருரதமே புலப்படுகின்றது. ஒருவனுடைய நடையாட்டமே தெரிகின்றது. ஆகையால் ஒருவனே உனக்கு அபராதஞ்செய்தவன். ஒருவன் செய்த அபராதத்திற்கு நிரபராதிகளான லோகங்களை யெல்லாம் வதிப்பது யுக்தமன்று. ஆயுதங்களோடும் இதரமான யுத்தத்திற்கு வேண்டிய உபகரணங்களோடும் கூடி முறிந்து விழ்ந்திருக்கின்ற இந்த யுத்தரதம் எவனுடையதோ, எந்தப் பகைவனால் முறிக்கப்பட்டதோ, முறிக்கப்பட்டது எதற்காகவோ, இந்த விஷயத்தைப் பற்றியோ, அல்லது மற்ற எதைப் பற்றியோ, எனக்கு ஒன்றும் தெரியவில்லை. ராஜகுமாரனே! இந்த ப்ரதேசம் குதிரைகளின் குளப்படிகளாலும் ரதசக்ரங்களாலும் கொற்றப்பட்டு ரக்தபிந்துக்களால் நனைந்து மிகவும் பயங்கரமாகப் புலப்படுகின்றது. ஆகையால் இதில் இதற்கு முன்னம் மஹாயுத்தம் நடந்ததென்று தெரிகிறது. மேலாகப் பேசவல்லவனே! இந்த யுத்தம் ஒரு ரதிகனுடையதாகவே இருக்கிறது. இருவருடையதாகவாவது பலருடையதாகவாவது புலப்படவில்லை. ஏனென்றால்—பெரும் ஸேனை இருந்ததாக அடிகளின் போக்கு பூமியில் புலப்படவில்லை. ஒருவனுக்காக உலகத்தையெல்லாம் நாசஞ்செய்வது யுக்தமன்று. அரசர்கள் அபராதத்திற்குத் தகுந்த தண்டனையே செய்துகொண்டு ம்ருதுஸ்வபாவர்களும் சாந்தர்களுமாயிருப்பார்களல்லவா. நீயோ அந்த ராஜர்களைப் போன்றவன்மாத்ரமே அன்று. ஸர்வகாலத்திலும் ஸமஸ்த பூதங்களுக்கும் ரக்ஷகனுயிருப்பவன்; பரம

கதியாயிருப்பவன். ராமா! இப்படிப்பட்ட உனக்குப் பார்யை நசிப்பது நல்லதென்று எவன் நினைப்பான்? யாகஞ் செய்யதீக்ஷித்துக் கொண்டிருப்பவனுக்கு ருத்விக்குகள் சாபம் முதலிய அபசாரங்களைச் செய்வார்களாயின், அவை யாகத்தைக் கெடுத்து அதன் மூலமாகத் தமக்கும் பயம்விளைக்குமென்று அவனுக்கு அப்ரியத்தைச்செய்ய விரும்பமாட்டார்கள். அப்படியே லோகரக்ஷகனான உனக்கு நதிகளாவது ஸமுத்ரங்களாவது பர்வதங்களாவது தேவ கந்தர்வ தானவர்களாவது தாமே கெடுவோமென்னும் பயத்தினால் அப்ரியஞ் சிறிதுஞ் செய்யமாட்டார்கள். ராஜனே! லோகநாசத்தைவிட்டு என்னோடுகூடி வில்லைக்கையில் பிடித்துப் பரமரிஷிகள் ஸஹாயமாக வரப்பெற்று ஸீதையை எடுத்துக்கொண்டு போன பாபிஷ்டனைத் தேடுவதே உசிதம். ஸமுத்ரத்திலும் பர்வதங்களிலும் வனங்களிலும் பலவகைப்பட்ட பயங்கரமான குஹைகளிலும் நதிகளிலும் தாமரைக்குளங்களிலும் தேடிப்பார்ப்போம். அங்ஙனம மனவூக்கம் மிகப்பெற்றுத் தேவ கந்தர்வ லோகங்களிலும் உன் பார்யையை அபஹரித்தவன் அகப்படும்வரையில் தேடிக்கொண்டிருப்போம். கோஸலேந்த்ரனே! தேவதைகள் ஸாமோபாயத்திற்கு (நல்வார்த்தைக்கு) உன் பத்னியைக் கொடார்களாயின் அதன் பிறகு தண்டோபாயத்திற்குத் தகுந்தகாலமாகையால் அதை நடத்தலாம். ராமா! நீ நன்னடத்தையையும் ஸாமோபாயத்தையும் வணக்கத்தையும் நீதியையும் உபயோகப்படுத்தி ஸீதை அகப்படாளாயின், அதற்குப் பின்பு, பொற்பிடிகள் இடப்பெற்று மஹேந்த்ரனது வஜ்ராயுதம் போன்ற பாணங்களால் நினைத்த கார்யத்தை நிறைவேற்றிக் கொள்வாயாக' என்றனன். அறுபத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## லக்ஷ்மணன் ராமனுக்கு மேல் செய்யவேண்டிய கார்யத்தைக் கூறுதல்.

அனந்தரம் அவ்வாறு சோகத்தினல் பரிதபித்து அநாதன்போல் புலம்பி மிகவும் மோஹித்து ரோதனஞ் செய்துகொண்டு மனங்குதிரப்பெருதிருக்கின்ற ராமனை முஹூர்த்தகாலத்தில் ஸௌமித்ராபுத்ரனுகிய லக்ஷ்மணன் ஸமாதானப்படுத்தி அவன் பாதங்களிரண்டையும் பிடித்துக்கொண்டு அவனைப் பார்த்து மொழிந்தனன்—'ராமா! பலதேவதைகள் சேர்ந்து மிகவும்ப்ரயாஸப்பட்டு அதிபோக்யமான அம்ருதத்தைச் சம்பாதித்தாற்போல் உலகங்கட்கு ஆநந்தம் விளைப்பவனுகிய தசரதனெருவன் வ்ரதோபவாஸாதிகளான பல தேஹப்ரயாஸங்களைப் பட்டு அஶ்வமேதம் முதலிய பெரிய கார்யங்களையும் செய்து அதிபோக்யனுகிய உன்னைப் பெற்றனன். [1] ஜனரஞ்ஜகனுகிய அந்த மஹாராஜன் உன்னெருவனுடைய குணங்களால் கட்டுண்டு உன்னைப் பிரிந்திருக்கப்பொருமல் ஸ்வர்க்கம் சென்றனன். இது பரதனிடம் கேட்டபடியே உனக்குச் சொல்லினன். ஆகையால் இது அபத்தமன்று. நீ காகுத்ஸ்த வம்சத்தில் பிறந்தவன்; ஆகையால் மஹாஸத்த்வமுள்ள அப்ராக்ருதன். அப்படிப்பட்ட நீ இப்பொழுது நேரிட்டிருக்கிற இந்த வருத்தத்தைப் பொறுக்க முடியாயாயின், இனி அற்பபலனுகிய க்ஷத்ரியன் எவன்தான் பொறுக்கவல்லவன்? புருஷஶ்ரேஷ்டனே! நீ இங்ஙனம் துக்கித்திருக்குங் காரணத்தினல் தேஜஸ்ஸைக் கொண்டு உலகத்தையெல்லாம் தஹித்து விடுவாயாயின், அதனல் பீடிக்கப்பட்டு ப்ரஜைகள் மற்ற எவ்விடத்திற் சென்று ஸுகம் பெறுவார்கள்? இங்ஙனம் அர்த்தானர்த்தங்களை அடைவது உலகங்கட்கு ஸ்வபாவமேயன்றி வேறில்லை. நஹுஷனுடைய புதல்வனுகிய யயாதி, இந்த்ரலோகம் பெற்றும் அபநீதியால் ஸ்வர்க்கத்தினின்றும்

1. ஜனரஞ்ஜகன்-ஜனங்களைக்களிக்கச் செய்பவன்.

கழுவித் துக்கமுற்றவனாயினன். எவர் மஹர்ஷியோ, எவர் நம்தந்தைக்குப் புரோஹிதரோ, அப்படிப்பட்ட வஸிஷ்டருக்கு நூறுபுதல்வர்கள் பிறந்து ஒரேகாலில் ஒரே குவியலாக நூறு பேர்களும் விஸ்வாமித்ரரால் பாழாய்விட்டனர். ஸத்யப்ரதிஜ்ஞனே! எவள் உலகங்கட்கெல்லாம் தாயும் விஷ்ணுதேவனது பத்னியுமாகி உலகங்களால் வணங்கப்படுகின்றனளோ, அப்படிப்பட்ட இந்தப் பூமிதேவிக்குங்கூடச் சலனம் புலப்படுகின்றது. நீ பெரியோர்களிடத்தில் உண்மையான விஷயங்களைக் கேட்டவன். அப்படிப்பட்ட நீயே எனக்கு இப்படி உபதேசித்திருக்கின்றனை. எவர் தர்மத்தை நடத்துபவர்களோ, எவர் [1] காலவிபாகம் முதலியவற்றால் ஜகத்தை நடத்துகின்றனர்களோ, எவர் ஸமஸ்தபதார்த்தங்களையும் தோற்றச் செய்கையால் ஜகத்திற்குக் கண்ணாவார்களோ, எவரிடத்தில் ஜகமெல்லாம் நிலைநின்றிருக்கின்றதோ, அப்படிப்பட்ட மஹாபலிஷ்டர்களாகிய ஸூர்ய சந்த்ரர்களுக்குங்கூட க்ரஹணமொன்று நேரிடுகின்றது. ஆயிரம்படச் சொல்லியென்? புருஷதிலகனே! மிகவும் பெரிய ப்ராணிகளும் (மாந்தாதா நலன் முதலிய மஹாஜனங்களும்) தேவர்களும் ஸமஸ்த பூதங்களுக்கும் அந்தர்யாமியாகிய தெய்வத்தின் கருத்தை மீறி நடக்க வல்லராகவில்லை. ஆண்புலியே! தேவேந்த்ரன் முதலிய தேவதைகளிலும் ந்யாயாந்யாய மூலங்களான ஸுகதுக்கங்கள் நடப்பதாகவே கேள்விப்படுகின்றனம். ஆகையால் நீ துக்கிப்பது யுக்தமன்று. நீ பாபத்திற்கு மிகவும் தூரமாயிருப்பவன்; மேலும் வீரத்தன்மை அமையப்பெற்றவன். ஸீதை நாசம் அடைந்திருப்பினும் அபஹரிக்கப்பட்டிருப்பினும், நீ கேவலம் ஒரு க்ஷத்ரியன் போல் வருந்துவது யுக்தமன்று. ராமா! பதார்த்தங்களை எப்பொழுதும் உள்ளபடி அறியுந்திறமை அமையப்பெற்று மிகவும் பெரிய துக்கங்கள் ஸம்பவிக்கினும்

1. காலவிபாகம்-பகல் இரவு நாள் பக்ஷம் முதலிய காலங்களின் பிரிவினை.

கார்யாகார்யவிவேகம் அழியாதிருக்கப்பெற்ற உன்னைப்போன்றவர் எப்படிப்பட்ட கஷ்டத்திலும் வருந்த மாட்டார்கள். புருஷஸ்ரேஷ்டனே! மேலும், எதனாலும் கலங்காத மதியுடையவனாகி நன்மை தீமைகளை உள்ளபடி ஆலோசித்துப் பார்ப்பாயாக. அப்பொழுது இந்தக் கஷ்டம் எதனால் வந்ததோ தெரியும். மிகவும் அறிஞராயிருப்பவர் ஸமயத்திற்குத் தகுந்த மதியுடையராகி வரப்போகிற நன்மை தீமைகளைத் தெரிந்துகொள்வார்கள். பூர்வத்தில் செய்த கர்மங்களின் குணங்களாயினும் தோஷங்களாயினும் ப்ரத்யக்ஷமாக அறிய ஸாத்யப்படுபவையல்ல. மேலும், அந்தக் கர்மங்கள் எந்தரீதியில் செய்யப்பட்டவையென்பதும் நிச்சயிக்க முடியாது. பலன்களைப்பற்றியே ஊஹிக்கவேண்டும். பூர்வத்தில் அவைகளைச் செய்யாதிருப்போமாயின், இப்பொழுது அவைகளின் பலன்கள் நேரமாட்டா. அப்பொழுது அந்தக் கர்மங்களைச் செய்திருப்பது பற்றியே இப்பொழுது அவைகளின் பலன்களை அனுபவிக்கவேண்டியதாயிருக்கின்றது. இதற்குத் துக்கிப்பதேனோ? ராமா! நீயே முன்பு எனக்கு இவ்விஷயங்களையெல்லாம் இங்ஙனம் பலவாறாகப் போதித்திருக்கின்றனை. ஒன்றான ப்ருஹஸ்பதி போன்றவனாயினும் ஸர்வஜ்ஞனாகிய உனக்கு எவன் போதிக்கவல்லவன்? பேரறிஞனே! உன் புத்தி தேவதைகளுக்குங்கூட ஸம்பவிக்காது. ஆனால் இப்பொழுது உன்னறிவு துக்கத்தினால் மழுங்கியிருக்கின்றது. ஆகையால் நான் அதை எழுப்புகிறேனன்றி வேறில்லை. இக்ஷ்வாகுவம்சத்திற்கு அலங்காரமாயிருப்பவனே! ஸ்வர்க்கத்திலுள்ள ஸாத்விகராகிய தேவ கந்தர்வாதி ப்ராணி ஸமூஹத்தைக் காண்பாயாக. மனுஷ்யலோகத்திலுள்ள ப்ராஹ்மணர் முதலிய ப்ராணி ஸமூஹத்தைக் காண்பாயாக. ஸமஸ்தலோகங்களையும்

ஸம்ஹாரஞ்செய்யவல்ல உன்பராக்ரமத்தையும் காண்பாயாக. அப்படிப்பட்டவர்மேல் இப்படிப்பட்ட பராக்ரமத்தை உபயோகப்படுத்தலாகாதென்பது உனக்கே தெரிந்த விஷயம். ஆகையால் சத்ருக்கள் எவரோ அவரைக் கொல்ல முயற்சி செய்வாயாக. புருஷ திலகனே! ஸமஸ்தத்தையும் நாசஞ்செய்வதால் உனக்கு ப்ரயோஜனம் யாது? பாபிஷ்டனாகிய எவன் சத்ருவெனத் தெரிந்துகொண்டு அவனையே நீ நாசஞ்செய்வது யுக்தம்' என்றனன். அறுபத்தாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராமன் ஜடாயுவைக் கண்டு துக்கித்தல்.

ராமன் தான் பெரியோனாயினும், [1] ஸாரக்ராஹியாகையால், தம்பியாகிய லக்ஷ்மணன் மிகவும் ஸாரம் பொருந்தியிருக்குமாறு மேலான உரைகளைச் சொன்னவுடனே அதை அங்கீகரித்தனன். மஹாபாஹுவாகிய ராமன் தனக்கு நேரிட்டகோபத்தை அடக்கிக்கொண்டு அற்புதமாகிய தனுஸ்ஸை ஊன்றிக்கொண்டு லக்ஷ்மணனைப் பார்த்து மொழிந்தனன்:— 'குழந்தாய் லக்ஷ்மணா! என்ன செய்வோம்? எங்கென்று போவோம்? ஸீதையை எந்த உபாயத்தால் பெறுவோமென்று ஆலோசனை செய்வாயாக' என்றனன். அங்ஙனம் பரிதாபத்தினால் வருந்துகின்ற அந்த ஸ்ரீராமனைப் பார்த்து லக்ஷ்மணன் மொழிந்தனன்:—'இந்த ஜனஸ்தானத்தில் ராக்ஷஸர்கள் பலர் திரிந்துகொண்டிருக்கின்றனர்; பற்பல செடிகளும் கொடிகளும் நிறைந்திருக்கின்றன. ஆகையால் இங்கேயே நீ தேடிப்பார்க்கவேண்டும். இங்கு மலைகளில் புகக்கூடாத இடங்களும் அகன்ற கல்வெடிப்புகளும் மறைவான கற்களின் ஸந்திபாகங்களும் நானாவித

---

1. ஸாரக்ராஹி - இடத்தின் மேன்மை தாழ்மைகளைப் பாராமல் எல்லா இடங்களிலுமுள்ள ஸாரத்தையும் எடுத்துக்கொள்ளுந் தன்மையன்.

குஹைகளும் பலவகை ம்ருகஸமூஹங்கள் நிறைந்து பயங்கரமாயிருக்கின்றன. கின்னரர்களின் வாஸஸ்தானங்களும் கந்தர்வர்களின் இருப்பிடங்களும் இருக்கின்றன, அவைகளெல்லாவற்றிலும் நீ என்னோடுகூட ஸங்காஹத்துடன் தேடுவது யுக்தமாயிருக்கின்றது. புருஷதிலகனே! உன்னைப் போன்ற புத்திசாலிகளான மஹானுபாவர்கள் வாயுவேகத்திற்குப் பர்வதங்கள் அசையாதிருப்பதுபோல், ஆபத்காலங்களில் மனம் சலிக்கப்பெறமாட்டார்கள்' என்றனன். லக்ஷ்மணன் இவ்வாறு மொழிகையில் ராமன் ஸீதை அகப்படாமைக்குக் கோபாவேசம் விளங்கப்பெற்று, பயங்கரமான க்ஷுரப்ரமென்னும் பாணத்தை வில்லில் தொடுத்து லக்ஷ்மணனோடுகூட அவ்வனம் முழுவதும் தேடித்திரிந்தனன். அனந்தரம் ராமன், பர்வதசிகரம்போல் புலப்பட்டுக்கொண்டு ரத்தம் பெருகப்பெற்று நனைந்து தரையில் வீழ்ந்திருக்கின்ற பக்ஷிராஜனாகிய மஹாபாக்யமுடைய ஜடாயுவைக் கண்டனன். ராமன் பர்வதசிகரம்போன்ற உருவமுடைய அந்த ஜடாயுவைப் பார்த்து, லக்ஷ்மணனைநோக்கி 'விதேஹராஜன் புதல்வியாகிய ஸீதையை இவனே பக்ஷித்தனன். இவ்விஷயத்தில் ஸந்தேஹமில்லை. இந்த ராக்ஷஸன் கழுகுவேஷம் பூண்டு இவ்வனத்தில் இருப்பவன். இது நிச்சயம். நீண்ட கண்களையுடைய ஸீதையைப் பிடித்துத் தின்று ஸுகமாக உட்கார்ந்திருக்கின்றனன். நுனிகள் தளதளவென்று விளங்கப்பெற்றுக் கூரிதவருந்திருக்கின்ற பயங்கரமான பாணங்களால் இவனைக் கொன்றுவிடுகிறேன்' என்றனன். ராமன் இங்ஙனம் சொல்லி மிகவும் கோபித்தவனாகி வில்லில் க்ஷுரப்ரமென்னும் பாணத்தைத் தொடுத்து ஸமுத்ரத்தை முடிவாகவுடைய பூமியையெல்லாம் நடுங்கச்செய்பவன்போல் அடிகளையிட்டுக்கொண்டு

அத்தக்கழுகை எதிர்த்துப் போயினன். அந்தப்பக்ஷி யோ என்றால் துக்கித்திருக்கின்ற தசரதகுமாரனாகிய ராமனைப்பார்த்து நுரையுடன்கூடிய ரக்தத்தைக் கக்கிக்கொண்டு ஹீனஸ்வரமான வாக்யத்தை மொழிந்தது:—'சிரஞ்சீவி! நீ எவளை மேலான ஓஷதியைப் போல் மிக்க மனவூக்கத்துடன் இம்மஹாவனத்தில் தேடுகின்றனையோ, அந்த ஸீதையையும் என்ப்ராணன்களையும் ஆக இவ்விரண்டையும் ராவணன் கொண்டு போயினன். ராமா! நீயும் லக்ஷ்மணனும் இல்லாத ஸமயத்தில் பலவந்தனாகிய ராவணன் ஸீதையை எடுத்துக்கொண்டு போகக் கண்டனன். பிறகு நான் எடுபட்டுப் போகின்ற ஸீதையைக் கண்டு அவளுக்கு எதிர்முகமாகச்சென்று ராவணனை யுத்தத்தில் தகைந்து இவ்விடத்திலேயே அவனது ரதத்தைப் பொடிசெய்து அதினின்றும் அவனைக் கீழே குதிக்கும்படி செய்தனன். ராமா! என்னால் முறிக்கப்பட்ட இவ்வில்லு ராவணனுடையது. முறிந்திருக்கின்ற இந்தக் கவசமும் அவனுடையதே. என்னால் முறிக்கப்பட்ட இந்த யுத்த ரதமும் அவனுடையதே; பார். என்னுடைய இறகுகளின் அடியால் யுத்தத்தில் வீழ்ந்திருக்கின்ற இவனும் அவனுடைய ஸாரதியே. ராவணன், நான் இளைப்புற்றிருக்கையில் என் இறகுகளைக் கத்தியால் வெட்டிப் போகட்டு ஜனகமஹாராஜன் புதல்வியாகிய ஸீதையை எடுத்துக்கொண்டு ஆகாசமார்க்கத்தில் கிளம்பிப் போயினன். என்னை முன்னமே ராக்ஷஸன் ஒருவாறு அடித்திருக்கின்றான். மீளவும் நீயும் அடிக்கவேண்டாம்' என்றனன். அப்பொழுது ராமன் தனக்கு ஜடாயு ஸீதையைக் குறித்துச்சொன்ன [1] ப்ரிய ஸமாசாரத்தைக் கேட்டவுடனே முகம் நிரம்பக் கண்ணீர்பெருக்

---

1. ஸீதையை ராவணன் எடுத்துக்கொண்டுபோன விஷயம் அப்ரிய

கிப் பரிதாபம் இருமடங்கு வளரப்பெற்றுத் தத்தளித்தவனாயினன். அவன் பிறகு அந்தப் பக்ஷிராஜனை ஆலிங்கனஞ் செய்துகொண்டு கையிலிருந்த பெருவில்லைக் கீழேபோகட்டு வருத்தமுற்று மூர்ச்சித்துக் கீழே விழுந்து லக்ஷ்மணனும் தானுமாக ரோதனஞ் செய்தனன். ஜடாயு தானொருவனே அகப்பட்டு ஒருவரே நடந்து செல்லும்படி மிகவும் இடுக்கான வழியில், மனஇரக்கத்துடன் தனக்கு ஸஹாயமாவார் ஒருவருமின்றி அடிபட்டு மிக்க வருத்தத்துடன் பெருமூச்செறிந்துகொண்டிருக்கக் கண்டு ராமன் வருத்தம் பலமடங்குவளரப் பெற்று லக்ஷ்மணனைப் பார்த்து மொழிந்தனன்:—'ராஜ்யத்தைப் போக்கடித்துக்கொண்டனன். வனத்தில் வாஸஞ் செய்யும்படி நேர்ந்தது. ஸீதையும் காணமற்போயினள். இவ்வனத்தில் ஸஹாயமாயிருந்த ஜடாயுவும் அடிபட்டனன். இப்படிப்பட்ட என் தௌர்ப்பாக்யம் அக்னியையும் கொளுத்திவிடுமே. இப்பொழுது நான் தாபந்தீருகைக்காக ஜலப்ரவாஹம் நிறைந்த மஹாஸமுத்ரத்தில் போய் விழுவேனாயின், அந்த நதிபதியும் கூட என்தௌர்ப்பாக்யத்தினால் உலர்ந்து போய்விடும். இது நிச்சயம். இப்படி ஒன்றின்மேல் ஒன்றாக அடர்ந்து வருகின்ற பெருந்துக்கங்களாகிற வலையில் அகப்பட்டுக்கொண்டிருக்கின்றேனே! இப்படிப்பட்ட என்னைக் காட்டிலும் மேற்பட்ட தௌர்ப்பாக்யமுடையவன் ஜங்கமஸ்தாவரங்களடங்கின இந்த ப்ரபஞ்சத்தில் எங்குமே இல்லை. என் தந்தையின் நண்பனும் கிழத்தனமுடையவனுமாகிய இந்தப்பக்ஷிராஜன் என்தௌர்ப்பாக்யத்தினால் அடிபட்டுத் தரையில் வீழ்ந்திருக்கின்றானே'

---

மாயினும் அவனைப்பற்றின ஸங்கதி ஒன்றும் தெரியாமல் தடுமாற்றமுற்று யாரேனும் ஸீதையின் செய்தியைச் சொல்வார்களாவென்று எதிர்பார்த்துக்கொண்டிருந்தானாகையால் அப்பொழுது அதுவும் ப்ரியமாயிருந்ததாகையால் (ப்ரிய ஸமாசார) மென்று கூறப்பட்டது.

என்றனன். ராமன் இங்ஙனம் பலவாறாகச் சொல்லி லக்ஷ்மணனும் தானுமாகத் தமது தந்தையைப்போல் ஸ்னேஹகௌரவத்துடன் அந்த ஜடாயுவை ஆதரித்துப் பார்த்து அவனது சரீரம் முழுவதும் தடவிக்கொடுத்தனன். இதற்குள் அறுப்புண்டு ரக்தத்தில் நனைந்து வீழ்ந்திருக்கின்ற அந்த க்ருத்ர ராஜனை ராமன் ஆலிங்கனஞ்செய்து 'எனக்கு ப்ராணன்களோடு ஸமானமாயிருக்கின்ற ஸீதை எங்கே?' என்னும் இம்மொழியைச் சொல்லி மனவருத்தம் பொறுக்கமுடியாமல் கீழே விழுந்தனன். அறுபத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ராமன் ஜடாயுவுக்கு அக்னி ஸம்ஸ்காராதிகள் செய்தல்.

ராமன் பயங்கரனான ராவணனால் அடிக்கப்பட்டுத் தரையில் வீழ்ந்திருக்கின்ற ஜடாயுவைக் கண்டு தனக்கு மிகவும் நண்பனாகிய லக்ஷ்மணனைப் பார்த்து இவ்வசனத்தை மொழிந்தனன்;—'இந்தப் பக்ஷிராஜன் என் ப்ரயோஜனங்களுக்காக முயன்று யுத்தத்தில் ராக்ஷஸனால் அடிக்கப்பட்டு விடக்கூடாத ப்ராணன்களை இப்பொழுது விட ஸித்தமாயிருக்கின்றனன். லக்ஷ்மணா! இவனுடைய இத்தேஹத்தில் இன்னம் இதோ ப்ராணன் ஸூக்ஷ்மமாயிருக்கின்றது. ஆனது பற்றியே இவன் ஹீனஸ்வரத்துடன் குரல் மெதுவாயிருக்கப்பெற்றுத் தழதழத்துப் பார்க்கின்றனன். ஜடாயூ! உனக்குப் பேசச் சக்தி உளதாயின் ஸீதையின் வ்ருத்தாந்தத்தைக் கூறுவாயாக. உனக்குச் சுபம் உண்டாகுமாக. உன்னை ராக்ஷஸன் கொன்ற விதத்தையும் கூறுவாயாக. ராவணன் எதுக்காக ஸீதையை எடுத்துக்கொண்டு போயினன்? என் ப்ராணநாயகியை எடுத்துக்கொண்டு போகும்படியான அபகாரம் யாது நான்

அவனுக்குச் செய்தனன்? பக்ஷீந்த்ரனே! சந்த்ரபிம்பம் போன்று மனோஹரமாயிருப்பதாகிய அந்த ஸீதையின் முகம் அப்பொழுது எப்படி இருந்தது? பக்ஷிராஜனே! அப்பொழுது ஸீதை என்னென்ன சொல்லினள்? தந்தையே! அன்றியும் அந்த ராக்ஷஸனது வீர்யம் எப்படிப்பட்டது? அவனது உருவம் எத்தகையது? அவன் செயல்கள் யாவை? அவனிருப்பிடம் எங்கே? நான் வினவுகின்றேன்; சொல்வாயாக' என்றனன். அனந்தரம் மனந்தீனமாகப்பெற்ற ஜடாயு, இடைவிடாமல் புலம்புகின்ற அந்த ராமனைப் பார்த்து மிகவும் ஹீனஸ்வரத்துடன் இவ்வசனத்தை மொழிந்தனன்:—'ராக்ஷஸர் தலைவனாகிய ராவணன் மஹா மாயையால் பெருங்காற்றையும் மேகங்களையும் பிறப்பித்து இருள் மூடச் செய்து ஆகாசமார்க்கத்தினால் ஸீதையை எடுத்துக் கொண்டு போயினன். என்னப்பனே! நான் இளைப்புற்றிருக்கும்பொழுது அந்த ராக்ஷஸன் என் இறகுகளை அறுத்துத் தள்ளி ஜனகராஜன் புதல்வியாகிய ஸீதையை எடுத்துக்கொண்டு தென்திசையைப் பிடித்துப் போயினன். ராமா! என் ப்ராணன்கள் மரணவேதனையால் பீடிக்கப்பட்டுத் தடுமாறுகின்றன. கண் சுழலமிடுகின்றது. [1] வெட்டிவேர்களால் செய்யப்பட்ட தலைமயிர்களையுடைய ஸ்வர்ணவ்ருக்ஷங்கள் என் கண்ணுக்குப் புலப்படுகின்றன. ராவணன் எந்த முஹூர்த்தத்தில் ஸீதையை எடுத்துக்கொண்டு போயினனோ, அம்முஹூர்த்தத்தில் தொலைந்த ஸொத்து சீக்கிரத்தில் உடையவனைச் சேரும்படியானது. ராமா! இம்முஹூர்த்தம் விந்தமென்னும் பேருடையது. காகுத்ஸ்தா! இது ராவணனுக்குத் தெரியவில்லை. ஆகையால் நீ இழந்த ஸீதையை மீளவும் பெறுவாய். ராக்ஷஸர் தலைவனாகிய அந்த ராவணன் உன் ப்ராணநாயகியை எடுத்துக்கொண்டு தூண்டுமுள்ளை விழுங்கின

1. மரணகாலத்தில் இங்ஙனம் தோற்றுமென்று ப்ரஸித்தம். கோவிந்தராஜர்.

மத்ஸ்யம்போல் தப்புவித்துக்கொண்டு போயினும் சீக்ரத்திலேயே நாசம் அடைவான். ஜனகராஜன்புதல்வியாகிய ஸீதையைக் குறித்து நீ எவ்வளவும் வருத்தப்படவேண்டியதில்லை. யுத்தத்தில் ராவணனைக்கொன்று சீக்ரத்தில் ஸீதையைப் பெற்று அந்தப் பதிவ்ரதையுடன் க்ரீடித்துக்கொண்டிருப்பாய்' என்றனன். இந்தவரையில் ஜடாயு ப்ரஜ்ஞை தவறாமல் ராமனுக்கு மறுமொழிகளைச் சொல்லிக்கொண்டிருந்தானன்றி, அப்பொழுது மரணம் மிகவும் ஸமீபித்துவருகையால் அவனது முகத்தினின்று மாம்ஸத்துடன் ரக்தம் வெளிப்பட்டுவந்தது. பக்ஷிராஜனாகிய ஜடாயு 'அவன் விச்ரவஸ்ஸின் புதல்வன்; குபேரனுக்கு நேரே உடன்பிறந்தவன்' என்று இவ்வளவுமாத்ரமே சொல்லி, இதற்குமேல் ராமன் வினவின ராவணனது வீர்யம் முதலியவற்றைச் சொல்லுவதற்கு முன்னமே துர்லபமான ப்ராணன்களை இழந்தனன். ராமன் கைகளைக் கூப்பிக்கொண்டு 'சொல்வாய்' என்று வினவிக்கொண்டிருக்கும்பொழுதே ஜடாயுவின் ப்ராணன்கள் சரீரத்தை விட்டு ஆகாயம்போயின. அப்பொழுது ஜடாயு மரணவேதனையால் தலையைத் தரையின்மேல் வைத்துக் கால்களைப் பரப்பித் தேஹத்தையெல்லாம் விலவிலவென்று உதறிக்கொண்டு ப்ராணங்களைவிட்டுத் தரையில் வீழ்ந்தனன். தலையை வணக்கிக்கொண்டு கீழே விழுந்த வேகத்தினால் நலுங்கிச் சிவந்த கண்களுடன் ப்ராணன்களை இழந்து வீழ்ந்திருக்கிற பர்வதம்போன்ற ஜடாயுவைக்கண்டு ராமன் மிகவும் அளவிறந்த பல வருத்தங்களால் வருந்தி லக்ஷ்மணனைப் பார்த்து மொழிந்தனன்:— 'இந்தப் பக்ஷி, ராக்ஷஸர்களின் வாஸஸ்தானமாகிய இந்தத் தண்டகாரண்யத்தில் பல ஸம்வத்ஸரங்கள் பயமின்றி ஸுகமாக வஸித்திருந்து இங்கேயே மரணம் அடைந்தனன். எவன் பலவாயிரம் ஸம்வத்ஸரங்கள் வயதுடையவனாகி வெகுகாலம் க்ஷேமத்துடன் இருந்தானோ, அப்படிப்பட்ட இந்த ஜடாயுவுங்கூட இப்

பொழுது அடிபட்டுத் தரையில் வீழ்திருக்கின்றனன். காலத்தை எவர்க்கும் கடக்கமுடியாது. லக்ஷ்மணு! இந்த ஜடாயு எனக்கு உபகாரஞ் செய்யவேண்டுமென்று ஸீதையை ரக்ஷிக்கமுயன்று பலவந்தனுகிய ராவணனுல் அடிபட்டிருக்கின்றனன் பார். இந்தப் பக்ஷிராஜன் தந்தை பாட்டன் காலத்தினின்று வழுவாது வந்த பெரிய க்ருத்ர ராஜ்யத்தை விட்டு என் நிமித்தமாக ப்ராணன்களை இழந்தனன். லக்ஷ்மணு! எல்லாவற்றிலும் ம்ருகம் பக்ஷி முதலிய திர்யக் ஜாதிகளிலும்கூட ஸாதுக்களும் தார்மிகர்களும் சூரர்களும் [1] சரண்யர்களுமாயிருப்பவர் அகப்படுகின்றனர். பரந்தபனே! எனக்கு ஸீதை எடுபட்டுப்போனதாலுண்டான துக்கமும், எனக்காக ஜடாயு ப்ராணன்களை இழந்ததனுலுண்டான துக்கத்தைப்போல் அவ்வளவு பெரிதாகத் தோற்றவில்லை. என்க்குப் பெருஞ்செல்வப் பெருக்குடையவரும் மஹாயசஸ்வியுமாகிய தசரதமஹாராஜர் எப்படியோ, அப்படியே இந்தப் பக்ஷிராஜனுங்கூடப் பூஜிக்கத்தகுந்தவனும் கௌரவிக்கத் தகுந்தவனுமாயிருக்கின்றனன். லக்ஷ்மணு! கட்டைகளைக் கொண்டு வருவாயாக. அவைகளினின்று அக்னியைக் கடைந்தெடுத்து என் நிமித்தமாக ப்ராணன்களை இழந்த பக்ஷிராஜனுக்குத் தஹனஸம்ஸ்காரஞ் செய்யப்போகின்றனன். பயங்கரனுகிய ராக்ஷஸனுல் அடியுண்ட இந்தப் [2] பக்ஷிலோகநாதனைச் சிதையின்மேலிட்டுத் தஹனஞ்செய்ய விரும்புகின்றனன், 'மஹாபலமுள்ளக்ருத்ர ராஜனே! யாகங்களைச் செய்பவர்களுக்கு எந்தலோகமோ, பஞ்சாக்னிமத்தியில் தவஞ்செய்கிற வானப்ரஸ்தர்களுக்கு எந்தலோகம் நேருமோ, ஸந்நியாஸிகள் எந்தலோகம் பெறுவார்களோ, பூமியிலுள்ள போகங்

1. சரண்யர் - ரக்ஷிக்கவல்லவர்.
2. பக்ஷிலோக நாதன் - பறவைக் கூட்டங்களுக்கு ப்ரபு.

-களைத் துறந்திருக்கிற [1] நைஷ்டிகர்களுக்கு எந்தலோ-கம் விளையுமோ, அந்த லோகங்களை என்னால் ஸம்ஸ்காரஞ் செய்யப்பெற்று நீயும் பெறுவாயாக. என்னிடம் அனுமதிபெற்று உத்தமங்களான விஷ்ணுலோகங்களைப் பெறுவாயாக' என்றனன். தர்மாத்மாவாகிய அந்த ஸ்ரீராமன் இங்ஙனம் மொழிந்து அந்தப் பக்ஷிராஜனை அக்னிப்ரதானஞ் செய்ய வேண்டிய சிதையின்மேல் இட்டு வருத்தத்துடன் தன்பந்துவைப்போல் மந்த்ர பூர்வகமாகத் தஹனஞ்செய்தனன். அனந்தரம் மஹாவீரனாகிய ராமன் லக்ஷ்மணனுடன் வனத்திற்சென்று பெரிய ம்ருகங்களை ஜடாயுவின் நிமித்தம் கொன்று பிண்டப்ரதானஞ் செய்யும் பொருட்டுத் தர்ப்பங்களைப் பரப்பினன். மஹாயசஸ்வியாகிய அந்த ஸ்ரீராமன் அந்த ம்ருக மாம்ஸங்களை யெடுத்துப் பிண்டமாகச் செய்து அழகாயிருக்கின்ற பசும்புல்தரையில் ஜடாயுவுக்குக் கொடுத்தனன். ப்ராஹ்மணர்கள் மரணம் அடைந்தவனுக்கு ஸ்வர்க்கத்தை விளைவிக்குமென்று ஜபிக்கும்படியான பித்ருதேவதைகளைக் குறிக்கிற யாம்யஸூக்தாதி மந்த்ரத்தை ஜடாயுவுக்காக ஜபித்தனன். பிறகு அந்த ராஜகுமாரர்கள் இருவரும் கோதாவரீநதிக்குச்சென்று அந்தப் பக்ஷிராஜனுக்கு ஜலதர்ப்பணஞ் செய்தனர். அப்பொழுது ராமலக்ஷ்மணர்கள் சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்ட க்ரமத்தின்படி ஜடாயுவை உத்தேசித்துக் கோதாவரீ ஜலத்தில் ஸ்னானஞ்செய்து அந்த க்ருத்ரராஜனுக்கு ஜலதர்ப்பணஞ்செய்தனர். அந்த ஜடாயு ஸீதாநிமித்தமாக யுத்தஞ் செய்து ராவணனால் அடியுண்டு முடிந்தானாகையால் எவராலும் செய்யமுடியாத கார்யத்தைச் செய்து மிகவும் சூரனென்னும் கீர்த்தியைப் பெற்றனன். மஹர்ஷியைப்போன்ற ராமனால் ஸம்ஸ்காரம் பெற்றவனாகையால் ஜடாயு உத்தரக்ஷணத்திலேயே புண்யங்களுக்குப் பலனாகித் தனக்கு

1. நைஷ்டிகர் - ஆயுள் முழுவதும் குருகுலவாஸஞ் செய்யும் ப்ரஹ்மசாரிகள்.



156ஓ. ராமன் ஜடாயுவுக்கு மோக்ஷங் கொடுத்தல்.

ஸுகத்தை விளைப்பதாகிய புண்யலோகத்தைப் பெற்றனன். அந்த ராம லக்ஷ்மணர்கள் ஜடாயுவினிடத்தில் புத்தியை நிலைநிறுத்தி அவனுக்கு ஜலதர்ப்பணம் செய்து அந்தப் பக்ஷிராஜன் சொன்ன வார்த்தையைத் திடமாக நம்பி அனந்தரம் ஸீதையைத் தேடுவதற்காக அதில் மனத்தை நிலைநிறுத்திக்கொண்டு தேவதைகளுக்குத் தலைவர்களாகிய விஷ்ணுவும் [1] வாஸவனும் போன்று வனத்திற்குப் போயினர். அறுபத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## அயோமுகியை விரூபஞ்செய்தலும், கபந்தனைக் காணுதலும்.

ராமலக்ஷ்மணர்கள் அங்ஙனம் ஜடாயுவுக்கு ஜலதர்ப்பணாதிகளைச் செய்து ப்ரயாணமாய்ப்புறப்பட்டு வனத்தில் ஸீதையைத் தேடிக்கொண்டு நிருதிதிக்கைப் பிடித்துப்போயினர். அந்த இக்ஷ்வாகுகுல குமாரர்கள் வில்லையும் பாணங்களையும் கத்திகளையும் தரித்து நிருதி மூலையாகச்சென்று, ஒருவரும் நடந்தறியாத ஓர் வழியைப் பிடித்துப் போயினர். அம்மஹாபலர்கள் பல புதர்களும் வ்ருக்ஷங்களும் நாற்புறமும் சூழப்பெற்றுக் கொடிகள்பலவும் படரப்பெற்றிருக்கிற அந்தத் தண்டகாரண்யத்தைக் கடந்து போயினர். அம்மஹாரண்யம் முழுவதும் மேடுபள்ளங்கள் நிறையப்பெற்றுப் புகக்கூடாமல் பயங்கரமாகப் புலப்பட்டுக்கொண்டிருப்பது. அங்கு மிகவும் பயங்கரங்களான துஷ்டகஜங்களும் ஸிம்ஹங்களும் திரிந்துகொண்டிருந்தன. அப்படிப்பட்ட அந்தத் தண்டகாரண்யத்தைக் கடந்த பின்பு அம்மஹாதேஜஸ்விகள் ஜனஸ்தானத்தைத் தாண்டி மூன்று கூப்பிடுதூரமுள்ள வழியைச் சென்று க்ரௌஞ்சாரண்யமென்னும் ஒரு வனத்தில் ப்ரவேசித்தனர். ஸீதை

---

1. வாஸவன்-இந்த்ரன்.

காணமல் போனதற்கு மிகவும் பரிதாபமுற்றிருக்கின்ற ராமலக்ஷ்மணர்கள் பல வர்ணங்களையுடைய மேகஸமூஹங்கள்போல் விளங்குவதும் பூமொக்குகள் முதலியவற்ருல் ஸந்தோஷமுற்றிருப்பது போல் புலப்படுவதும் பலவகைப் பக்ஷிஸமூஹங்கள் நிரம்பப் பெற்றதும் நாநாவித ஸர்ப்பங்களும் மிருகங்களும் அமைந்திருப்பதுமாகிய அந்த க்ரௌஞ்சாரண்யத்தை யெல்லாம், இளைப்பாறுவதற்காக ஆங்காங்கு நின்றிருந்து ஸீதையைப் பார்க்க மனோரதித்துக்கொண்டே தேடிப்பார்த்தனர். தசரதகுமாரர்களாகிய அவ்வண்ணன் தம்பிகளிருவரும் க்ரௌஞ்சாரண்யத்தைத் தாண்டி மதங்காஶ்ரமத்திற்குக் கிழக்கு பாகத்தில் மூன்று கூப்பிடுதூர வழியைக் கடந்து க்ரௌஞ்சாரண்யத்திற்கும் அவ்வாச்ரமத்திற்கும் நடுவில் தாருணமாயிருக்கின்ற ஓர்வனத்தைக் கண்டனர். அவ்வனம் பயங்கரமான ம்ருகங்களும் பக்ஷிகளும் பலவகை ஜந்துக்களும் நிறைந்திருக்கப்பெற்றுப் பயங்கரமாகி முழுவதும் வ்ருக்ஷங்களால் புகக்கூடாததுமாயிருந்தது. தசரத குமாரர்களான அவர்கள் அவ்விடத்தில் பாதாளம்போல் மிகவும் பள்ளமான ஓர் குஹையைக் கண்டனர். அது எப்பொழுதும் இருள் மூடப்பெற்றிருப்பது. அந்தப் புருஷஶ்ரேஷ்டர்கள் அந்தக் குஹைக்குச் சென்று அதனருகில் பெருஞ்சரீரமும் விகாரமானமுகமும் பொருந்தின ஒரு ராக்ஷஸியைக் கண்டனர். பிறகு அந்த ராக்ஷஸி அற்பபலமுடையவர்களுக்கு மிகவும் பயத்தை விளைவிப்பவளும் ஜுகுப்ஸைக்கிடமாயிருப்பவளும் பயங்கரமான காட்சியுடையவளுமாகிப் பயங்கரமானகண்களும் தொங்கினவயிறும் கூரான கோரைப்பற்களும் உயர்ந்த உருவமும் சொரசொரவென்றதோலும் பொருந்திப் பயங்கரமான ஸிம்ஹாதி ம்ருகங்களைப் பக்ஷிக்குந் தன்மை அமைந்து விகடமான உருவத்துடன் தலைமயிர்களை விரித்துக் கொண்டு அண்ணன் தம்பிகளாகிய அந்த ராமலக்ஷ

மணர்களுக்குப் புலப்பட்டனள். அவள் அந்த வீரர்க ளின் அருகில் வந்து, அண்ணனுக்கு முன்னே நடந்து வருகின்ற லக்ஷ்மணனைப் பார்த்து 'வா, நாம் இருவரும் க்ரீடிப்போம்' என்று அவனைப் பிடித்துக்கொண்டனள். மீளவும் அவள் லக்ஷ்மணனை அழுந்தக் கட்டிக்கொண்டு 'நான் அயோமுகியென்னும் பேருடையவள். உனக்குப் பெரும்பேருகக் கிடைத்தனன். நீயும் எனக்கு இனிய ஞயிருக்கின்றனே. நாதா! வீரனே! ஆகையால் நீ இனிப் பிழைத்திருக்கும்வரையில் பர்வதசிகரங்களிலும் நதி களின் மணற்குன்றுகளிலும் என்னுடன்கூடி விளையா டிக்கொண்டிருப்பாயாக' என்றனள். அவள் அங்ஙனஞ் சொல்லுகையில் பகைவரை அடக்குந் தன்மையுள்ள அந்த லக்ஷ்மணன் கோபித்துக் கத்தியை எடுத்து இவளது காதுகளையும் மூக்கையும் முலைகளையும் துண் டித்தனன். காதுகளும் மூக்கும் கொங்கையும் அறுப் புண்டவுடனே பயங்கரமான காட்சியையுடைய அந்த ராக்ஷஸி விகாரமான ஸ்வரத்துடன் உரக்கக் கூச்ச லிட்டு வந்தவழியே ஓடிப்போயினள். அவள் போன வுடனே சத்ருக்களை உருமாய்க்குந் தன்மையுள்ள அண் ணன் தம்பிகளாகிய அந்த ராமலக்ஷ்மணர்கள் பராக்ர மத்தைக் கைப்பற்றி வனத்தில் நுழைந்து போகையில் அவர்க்கு மேற்சொல்லப் போகிற இந்த அவசகுனங் கள் புலப்பட்டன. மஹாதேஜஸ்வியாகையால் தைர்ய முற்றவனும் நிர்மலமான மனமுடையவனுமாகி நன்ன டத்தையும் சரீரசுத்தியும் அமைந்து விளங்குகின்ற லக்ஷ்மணன் உஜ்ஜ்வல தேஜஸ்ஸுடன் ப்ரகாசிக்கின்ற தமையனைப் பார்த்துக் கைகளைக் கூப்பிக்கொண்டு இவ் வாக்யத்தை மொழிந்தனன் :—'என் இடக்கை மிகவும் துடிக்கின்றது. என்மனம் தத்தளிக்கின்றது. எனக் குப் பலவாருக அவசகுனங்கள் புலப்படுகின்றன. பெரி யோனே! ஆனதுபற்றி நீ ஸந்நாஹத்துடன் இருப்பா

யாக. ஹிதமான என்வசனத்தின்படி செய்வாயாக. இந்த அவகுசனங்கள் எனக்கே இப்பொழுது பயம் விளையுமென்று தெரிவிக்கின்றன. மிகவும் பயங்கரமான இந்த வஞ்சுலகமென்னும் பக்ஷி கூவுதலைக்கண்டால் நமக்கு யுத்தத்தில் ஜயம் உண்டாகுமென்று தெரிவிப்பது போலிருக்கின்றது' என்றனன். அங்ஙனம் அவ்விருவரும் பராக்ரமத்தினால் அவ்வனத்தையெல்லாம் ஸீதைநிமித்தம் தேடிக்கொண்டிருக்கையில் அங்கு அவ்வனத்தையெல்லாம் முறிப்பதுபோல் பெரிதான ஓர் த்வனி உண்டாயிற்று. பெரியகாற்று ஆகாசத்தையெல்லாம் மிகவும் நிறைப்பதுபோல் அவ்வனத்திலுண்டான அந்த த்வனி ஆகாசத்தையெல்லாம் நிறைப்பதுபோல் விளங்கிற்று ராமன் அந்தச் சப்தம் எங்கு உண்டாயிற்றென்று தெரிந்துகொள்ள விரும்பித் தம்பியும் தானுமாகச் சென்று ஓர் புதரில் மிகவும் பெரிய சரீரமும் விசாலமான மார்புமுடைய ஒரு ராக்ஷஸனைக் கண்டனன். அவ்விருவரும் அங்குத் தமது முன்னே இருக்கின்ற அவனருகில் போயினர். அவன் மிகவும் வளர்ந்து தலையும் கழுத்துமில்லாமல் வயிற்றில் வாயுடையவனாகி ஓர் முண்டமாயிருந்தனன். அவன் அடர்ந்து கூரான ரோமங்களுடையவனாகிப் பெரிய மலைபோல் மிகவும் உயர்ந்து கருத்தமேகம்போல் புலப்பட்டுக்கொண்டு பயங்கரனாகி மேககர்ஜனைபோன்ற கண்டஸ்வரமுடையவனுமாயிருந்தனன். அவனுக்கு மார்பிலிருக்கின்ற முகத்தில் நெற்றியில் கண்ணொன்று உண்டாயிருந்தது. அது அக்னிஜ்வாலைபோல் எரிந்துகொண்டு பெரிய இமை மயிர்களுடையதாகிக் கோரோசனை வர்ணத்துடன்கூடி அகன்று நீண்டு வேகமான பார்வையுடையதுமாகி மிகவும் பயங்கரமாயிருந்தது. அவன் பெரிய கோரைப்பற்களுடையவனாகி நாக்கினால் அடிக்கடி நக்கிக்கொண்டிருந்தனன். அவனது வாய் மிகவும் பெரிதாயிருந்தது. அவன் மிகவும் பயங்கரமான கரடி

களையும் ஸிம்ஹங்களையும் மற்றை ம்ருகங்களையும் யானை களையும் பிடித்துப் பக்ஷித்துக்கொண்டிருந்தனன். பயங்கரங்களாகி ஒவ்வொரு யோஜனை தூரம் நீண்ட கை களிரண்டையும் இப்படியும் அப்படியும் வீசிக்கொண்டு பலவகைப்பட்ட கரடிகளையும் பக்ஷிஸமூஹங்களையும் மற்றுமுள்ள ஸாதாரணம்ருகங்களையும் ம்ருகக்கூட்டங் களில் தலைமையுள்ள பற்பல பெரிய ம்ருகங்களையும் பிடித்து இஷ்டமானவற்றை அருகில் இழுத்துக்கொண் டும் இஷ்டமில்லாதவற்றை விட்டெறிந்துகொண்டும் (அல்லது-தன்னிடத்திற்கு இழுத்துக்கொண்டும் விசே ஷித்து அவைகளைப் பிடித்து உதறிப்பிச்சிக்கொண் டும்) இருந்தனன். அவன், ஸமீபித்து வந்த அவ்வண் ணன் தம்பிகள் இருவருடையவும் வழியைக் குறுக்கே மடக்கிநின்றனன். ராமலக்ஷ்மணர்கள் அவனைக்கிட்டிக் கூப்பிடு தூரவழியளவு அருகிற்சென்று, பெருஞ் சரீர முடையவனும் மிக்கபயங்கரனுமாகிப் புஜங்களால் ம்ரு காதிகளைப் பிடித்துக்கொண்டு, தேஹஸ்திதியைப் பார்க்கையில் எப்பொழுதும் தலையில்லாத வெறும் மூண் டம்போன்று மிகவும் பயங்கரமான காட்சியுடையவனா கிக் கபந்தனென்னும் பெயர்பூண்ட அவ்வரக்கனைக்கண் டனர். அந்தக் கபந்தனது புஜங்கள் மிகவும் நீண் டிருப்பவையாகையால் அவன் அந்த நீண்டபுஜங்களை நீட்டி ராமலக்ஷ்மணர்களிருவரையும் சேரவே பலமுள்ள வளவும் கெட்டியாகப் பிடித்துக்கொண்டனன். கத்தி களையும் திடமான தனுஸுக்களையும் தரித்து மிகுந்த ஒளியுடன் விளங்குகின்ற சரீரமுடையவர்களும் மஹா பலிஷ்டர்களுமாகிய அவ்வண்ணன் தம்பிகளிருவரும், கபந்தன் பிடித்து இழுத்துக்கொண்டிருக்கையில் ஸ்வா தீன மற்றவராயினர். அந்த அவஸ்தையில் சூரனாகிய ராமன் தைர்யத்தை அவலம்பித்துச் சிறிதும் மனவருத் தமுறாதிருந்தனன். லக்ஷ்மணனோ என்றால் பாலபுத்தி யுடையவனாகையாலும் தைர்யத்தைக் கைப்பற்றாதிருக்

கையாலும் மிகவும் வருந்தினன். ராமனது தம்பியாகிய லக்ஷ்மணன் வருத்தமுற்று ராமனைப்பார்த்து மொழியவும் மொழிந்தனன்:—வீரர்களில் தலைவனே! நான் ராக்ஷஸன் கையில் அகப்பட்டு ஸ்வாதீனமற்றிருக்கின்றனன்; பார். ராகவனே! என்னொருவனை விட்டு (இவன் கையில் விட்டு) நீ விடுவித்துக்கொள்வாயாக. நீ என்னை இந்தப் பூதத்திற்குப் பலியாகக் கொடுத்து ஸுகமாக ஓடிப்போவாயாக. ஸீதையைச் சீக்ரத்திலேயே பெறுவாயென்று என்னபிப்ராயம். காகுத்தனே! நீ புறப்பட்டுப் போய்த் தந்தைபாட்டன் பரம்பரையாக வந்த பூமண்டலத்தைப் பெற்று அதில் ராஜ்யபரிபாலனஞ் செய்து திவ்யஸுகங்களை அனுபவித்து என்னை எப்பொழுதும் நினைத்துக் கொண்டிருக்கவேண்டும்' என்றனன். லக்ஷ்மணனால் இங்ஙனஞ் சொல்லப்பட்ட ராமன் ஸுமித்ராபுத்ரனாகிய அந்த லக்ஷ்மணனைப் பார்த்து 'வீரனே! பயப்படவேண்டாம். உன்னைப்போன்றவர் இப்படி பயப்படமாட்டார்கள்' என்றனன். இவ்வளவில் க்ரூரனாகிய அந்த [1] தானவோத்தமன் கபந்தன் உடன்பிறந்தவர்களான ராமலக்ஷ்மணர்களைப் பார்த்து மேககர்ஜனைபோன்ற பேரொலியுடன் வினவினன்:— 'நீங்கள் இருவரும் யாவர்? வ்ருஷபத்தின் முசுப்பு போன்ற தோள்களை யுடையவர்களாகிப் பெருங்கத்தியையும் வில்லையும் தரித்திருக்கின்றீர்களே! பயங்கரமான இந்த ப்ரதேசத்திற்கு வந்து எனக்கு ஆஹாரமானீர்கள். இங்கு உங்களுக்கு என்ன காரியம் உள்ளது? சொல்வீர்களாக. எதுக்காக நீங்கள் இவ்விடம் வந்தீர்கள்? உங்களுக்கு ப்ரயோஜன மொன்றுமில்லா திருக்க எனக்குப் பார்க்கையில் இருகிருந்து பசியால் வருந்துகின்ற என்பசியைத் தீர்க்கும்பொருட்டே வந்தாற்போல் தோற்றுகிறது. வில்லுகளையும்பாணங்களையும்கத்திகளையும் தரித்துக் கூரான கொம்புகளையுடைய வ்ருஷபங்கள்

1. தானவோத்தமன்-தானவஸ்ரேஷ்டன்-தானவர்- அஸுரர்.

போல் இருக்கின்றீர்கள். ஆயினும் நீங்கள் என்வாயில் அகப்பட்டுக்கொண்டீர்களாகையால் இனி உங்களுக்கு ப்ராணன் தக்குவது அரிது' என்றனன். க்ரூராத்மாவாகிய அந்தக் கபந்தன் சொன்ன அவ்வார்த்தையைக் கேட்டு ராமன் முகம் வாட லக்ஷ்மணனைப் பார்த்து மொழிந்தனன்:— 'உண்மையான பராக்ரமமுடையவனே! முதலில் ராஜ்யத்தினின்றும் நழுவுதல், பிறகு வனவாஸம், பிறகு ஸீதையைப் பறிகொடுத்தல்' என்று இப்படி கஷ்டத்தின்மேல் இருமடங்கதிகமான கஷ்டத்தை அனுபவித்துக்கொண்டு இதுவரையிலும் என் ப்ராணநாயகியாகிய அந்த ஸீதையைப் பெற்றோமில்லை. இவ்வளவோடுதீராமல் நம்மிருவர்க்கும் ஒட்டிக்கொண்டிருக்கின்ற ப்ராணன்களையுங் கூட முடிப்பதற்கே பயங்கரமான இந்த வ்யஸனம் நேரிட்டது. புருஷஶ்ரேஷ்டனே! ஸமஸ்த ப்ராணிகள் விஷயத்திலும் காலத்தின் வீர்யம் மிகவும் ப்ரபலமாயிருக்கின்றது. அதன் வலிவுக்கு எதிரில்லை. இவ்வளவு சொல்லியென்? பார். நீயும் நானும் மஹாபலபராக்ரமசாலிகளாயினும் நம்மையும் அக்காலம் வ்யஸனங்களால் மோஹிக்கச்செய்கின்றதே! லக்ஷ்மணா! ஸமஸ்த ப்ராணிகள் விஷயத்திலும் காலத்திற்கு அஸாத்யமானது ஒன்றுமேயில்லை. யுத்த பூமியில் சூரர்களும் மிகுந்த பலமுடையவர்களும் அஸ்த்ரங்களில் கைதீர்ந்தவர்களுமாயிருப்பினும், காலம் வருமாயின், மணல்களால் கட்டப்பட்ட அணைபோல் நசித்துப் போவார்கள்' என்றனன். திடமாயிருப்பதும் அமோகமுமான பராக்ரமம் பொருந்தி மிகுந்த கீர்த்தியும் அமைந்து அதிப்ரதாபத்துடன் விளங்குகிற தசரதகுமாரனாகிய ராமன் மஹாபௌருஷசாலியான லக்ஷ்மணன் தீனனாயிருப்பது கண்டு, தைர்யத்துடன் தன் புத்தியைத் தானே நிலைப்படுத்திக்கொண்டனன். அறுபத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

—

ராமலக்ஷ்மணர்கள் கபந்தனுடைய புஜங்களை வெட்டுகையில் அவனுக்குப் பூர்வ ஜன்மஸ்மரணம் உண்டாதல்.

கபந்தன், பாசாயுதம்போன்ற தனது புஜங்களால் பிடித்துக்கொள்கையில் பிடியுண்ட அண்ணன் தம்பிகளான ராமலக்ஷ்மணர்கள் அங்கு வெறுமனே நின்றுகொண்டிருப்பதைக் கண்டு, அவன் 'க்ஷத்ரிய உத்தமர்களே! தெய்வம் உங்களை எனக்கு ஆஹாரமாகக் காட்டியிருக்கின்றது. ஆகையால் பசித்திருக்கின்ற என்னைப் பார்த்து மதிமயங்கிப் பயந்து ஏன் வெறுமனே இருக்கின்றீர்கள்? உங்களுக்கு ப்ராணன் முடிந்து விட்டது. இனித் தக்குவது ஏது?' என்றனன். லக்ஷ்மணன் அந்த வார்த்தையைக் கேட்டு மனவருத்தமுற்றுப் பராக்ரமத்தைச்செய்யமுயன்று அப்பொழுதைக்குத் தகுந்த ஹிதவாக்யத்தைச் சொல்லினன்:—'இந்த ராக்ஷஸாதமன் உன்னையும் என்னையும் சீக்ரத்தில் விழுங்கி விடுவான். ஆகையால் இவனது பெரிய புஜங்களிரண்டையும் கத்தியால் வெட்டிவிடுவோம். பயங்கரனும் பெருஞ்சரீரமுடையவனுமாகிய இந்த ராக்ஷஸன், தன் புஜங்களாலேயே பராக்ரமத்தை விளங்கச்செய்து உலகத்தையெல்லாம் அடியோடுவென்று உட்படுத்திக்கொண்டது மாத்ரமேயன்றி நம்மையுங் கொல்ல விரும்புகின்றனன். ராஜனே! அஸ்வமேதயாகத்தில் கொண்டு வரப்பட்ட ஆரண்யத்திலுண்டான பசுக்களை வதிக்கக்கூடாதது போல், பதிலொன்றுஞ் செய்யாதவர்களை அரசன் வதிக்கலாகாது' என்றனன். பயங்கராகாரமுடைய ராக்ஷஸன் இங்ஙனம் அவ்விருவரும் பேசிக்கொண்டதைக் கேட்டுக் கோபித்து உடனே வாயைத் திறந்து அவர்களை விழுங்கத்தொடங்கிக் கைகளால் இழுத்தனன். அனந்தரம் ராமலக்ஷ்மணர்கள் அந்தந்த தேசகாலங்களில் செய்ய வேண்டிய அந்தந்த கார்யங்களை



1575. ராமலக்ஷ்மணர்கள் கபந்தனது புஜங்களைத் துண்டித்தல்.

நன்கு அறிந்தவராகையால் கத்திகளை எடுத்து ஸுக மாகவே அறுக்கும்படியிருக்கையால் மிகவும் ஸந்தோஷ முற்று ஆயாஸமின்றி அவனது புஜங்களிரண்டையும் தோள்வரையிலும் துண்டித்தனர். அப்பொழுது ஸமர்த்தனாகிய ராமன் சிறிதும் தடையில்லாதபடி வேகமாகக் கபந்தனது வலப்புஜத்தைத் துண்டித்தனன். வீரனாகிய லக்ஷ்மணன் இடப்புஜத்தைத் துண்டித்தனன். நீண்ட கைகளையுடைய அந்தக் கபந்தன் கைகள் அறுப்புண்டு பெருங்கோஷத்துடன் இறைச்சலிடுந்தன்மையனாகையால் மேகம்போல் பூமியிலும் ஆகாயத்திலும் திசைகளிலும் ப்ரதித்வனி உண்டாகும்படி கர்ஜனை செய்துகொண்டு தரையில் வீழ்ந்தனன். அந்தத் தானவன் ரக்தப்ரவாஹத்தில் மிதந்துகொண்டு தனது புஜங்களிரண்டும் துண்டிக்கப்பட்டிருக்கக் கண்டு தைன்யம் அடைந்து அவ்வீரர்களிருவரையும் பார்த்து 'நீங்களிருவரும் யாவர்?' என்று வினவினன். இங்ஙனம் கபந்தன் வினவுகையில், சுபலக்ஷணங்கள் அமைந்த லக்ஷ்மணன் அம்மஹாபராக்ரமசாலிக்கு ராம வ்ருத்தாந்தத்தை இங்ஙனம் மொழிந்தனன்:—'இவன் இக்ஷ்வாகுவம்சத்தில் பிறந்த தசரதமஹாராஜரது குமாரன். ஜனங்கள் இவனை ராமனென்றழைப்பார்கள். நான் இவனுக்குத் தம்பியென்றும் எனபேர் லக்ஷ்மணனென்றும் தெரிந்துகொள்வாயாக. தேவதைகளின் ப்ரபாவம்போன்ற ப்ரபாவத்தையுடைய ராமன் ஜனஸஞ்சாரமில்லாத வனத்தில் வாஸஞ்செய்து கொண்டிருக்கையில், இவனது பார்யையை ஒரு ராக்ஷஸன் எடுத்துக்கொண்டு போயினன். நாங்கள் அவனைத் தேடிக்கொண்டே இவ்விடத்திற்கு வந்தனம். நீ யாவன்? முண்டம்போல் தலையில்லாமல் முழந்தாள்களும் முறியப்பெற்று மார்பில் விளங்கு

கின்ற முகத்துடன்கூடி இவ்வனத்தில் எதற்காகத் திரி கின்றனை?' என்று வினவினன். லக்ஷ்மணன் இங்ஙனம் வினவுகையில், கபந்தன் முன்பு தனக்கு இந்த்ரன் சொன்ன அவ்வசனத்தை நினைத்துக்கொண்டு சாபந் தீருங்காலம் வந்ததென்று மிகவும் ஸந்தோஷமுற்று மறுமொழி கூறினன்:—'புருஷஶ்ரேஷ்டர்களே! உங் களுக்கு நல்வரவா? என் பாக்யவசத்தினால் உங்கள் தர் சனம் எனக்குக் கிடைத்தது. என் பாக்யத்தினாலேயே நீங்கள் என் தோள்களிரண்டையும் துண்டிக்கும்படி எனக்கு நேரிட்டது. புருஷதிலகனே! என [1] அவிநய தோஷத்தினால் என்னுருவம் இந்த விஷமரூபம் பெற்ற விதத்தை உனக்கு உள்ளபடி சொல்லுகிறேன்; கேட்பா யாக'. எழுபதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

கபந்தன் தன் வ்ருத்தாந்தத்தைச் சொல் லிச் சாபமோக்ஷத்திற்சாகத் தன்சரீ ரத்தைக் கொளுத்தும்படி வேண் டிக்கொள்ளல்.

'ராமா! மஹாபாஹுவே! மஹாபலபராக்ரமனே! முன்பு எனக்கு, சந்த்ரனுக்கும் இந்த்ரனுக்கும் ஸூர் யனுக்கும்போல் எண்ணக்கூடாத மஹிமையுடையதும் மூன்றுலோகங்களிலும் ப்ரஸித்தமுமாகிய திவ்யரூபம் உண்டாயிருந்தது. ராமா! அப்படி அழகிய உருவத் தையுடைய நான் லோகத்திற்குப் பயத்தை விளைவிக் கும்படியான இந்தப்பெரிய உருவத்தைஏற்றுக்கொண்டு வனத்தில் ஆங்காங்குள்ள ரிஷிகளைப் பயப்படுத்திக் கொண்டிருந்தனன். பிறகு ஒருகாலத்தில் ஸ்தூலசிர ஸென்னும் முனிவர் பலவகைப்பட்ட காய்கிழங்கு முதலிய வன்ய ஆஹாரங்களை ஆராய்ந்துகொண்டிருக் கையில் நான் இந்த உருவத்துடன அவர் கொண்டுவந்த

---

1. விநயம், வணக்கம். அதில்லாமை அவிநயம்.

வன்யபதார்த்தங்களைப் பிடுங்கிக்கொண்டு அவமானஞ் செய்ய அவர்க்குக் கோபம் உண்டாயிற்று. அம்முனிவர் எனக்குக் கொடியசாபங்கொடுக்க முயன்று என்னைப் பார்த்துக் 'கொடியதும் நிந்தைக்கிடமுமாகிய இந்த உருவமே உனக்கு எப்போதும் மாருதிருக்குமாக' என்றனர். நான் கோபித்திருக்கிற அம்முனிவரைப் பார்த்து 'உம்மை அவமானித்ததற்காக எனக்கு நேரிட்ட இந்தச் சாபத்திற்கு முடிவை அநுக்ரஹிக்க வேண்டும்' என்று ப்ரார்த்திக்கையில், அவர் இவ்வசனத்தை மொழிந்தனர்:—'எப்பொழுது ராமன் ஜனஸஞ்சாரமில்லாத வனத்திற்கு வந்து உன் கைகளைத் துண்டித்து உன்னைத் தஹனஞ்செய்வானே, அப்பொழுது நீ சாபம் நீங்கப்பெற்று அழகியதும் பெருமையுடையதுமாகிய உன் ஸொந்த உருவத்தைப் பெறுவாய்' என்றனர். 'கோரரூபம் உண்டாயினும் இங்ஙனம் முண்டமாயிருத்தல் எப்படி உண்டாயிற்று' என்கிருயோ? லக்ஷ்மணு! நான் தநுவம்சத்தில் பிறந்த ஸ்ரீயென்பவனுடைய பிள்ளையென்று அறிவாயாக. நான் மிகுந்த அழகுடன் விளக்கமுற்றிருந்தனன். அப்படிப்பட்ட எனக்கு முனிசாபத்தினுலுண்டான கோரரூபமேயன்றி யுத்தபூமியில் இந்த்ரனது கோபத்தினுல் இந்தக் கபந்தரூபமும் ப்ராப்தமாயிற்று. 'இந்த்ரனேடு பொரும்படியான ஸாமர்த்யம் உனக்கு ஏது' என்கிருயோ? நான் ரிஷிசாபத்தினுல் கோரமான உருவத்தைப் பெற்றபின்பு என்குலத்திற்குச் சத்ருவாகிய இந்த்ரனை ஜயிப்பதற்காக உக்ரமான தவஞ்செய்து ப்ரஹ்மதேவனைச் சந்தோஷப்படுத்தினன். அவன் எனக்குத் தீர்க்காயுஸ்ஸைக் கொடுத்தனன். அனந்தரம் எனக்கு அஜ்ஞானமும் கர்வமும் உண்டாயின. 'தீர்க்காயுஸ்ஸைப் பெற்றனன். இனி என்னை இந்த்ரன் என்ன செய்யக்கூடும்?' என்னும் எண்ணங்கொண்ட நான் யுத்தத்தில் தேவேந்த்ரனை எதிர்த்தனன். அவ்விந்த்ரன் நூறுநுனிகளை

யுடைய வஜ்ராயுதத்தை ப்ரயோகிக்கையில். அதனல் என்துடைகள் வயிற்றிற்குள்ளும் தலை மார்புக்குள்ளும் தள்ளப்பட்டன. நான் இப்படி வெறு முண்டம்போலா யினன். இதற்குப் பொறுமல் நான் இந்த்ரனைப் பார்த்து 'ப்ரபூ! என்னைக் கொன்று யமன் வீட்டிற்கு அனுப்பி விடுவாயாக. எனக்கு இந்த நிலைமையைவிட அதுவே மேல்' என்று எவ்வளவு வேண்டிக்கொண்டபோதிலும், இந்த்ரன் 'உன்னை யமபட்டணத்திற்கு அனுப்பமாட் டேன். ப்ரஹ்மதேவன் அன்று உனக்கு மொழிந்த வார்த்தை ஸத்யமாயிருக்குமாக' என்றனன். மீளவும் நான் தேவேந்த்ரனைப பார்த்து 'வஜ்ராயுதத்தினல் அடிக்கப்பட்டனன். அதனல் துடைகளும் தலையும் முகமும் முறிந்துபோயின. வாயில்லாதிருக்கையில் ஆஹாரமெப்படி? நிராஹாரனுகி மிகவும் வெகுகாலம் எப்படி பிழைத்திருப்பேன்?' என்றனன். நான் இப்படி மொழிகையில், இந்த்ரன் ஒரு யோஜனைதூரம் நீண்ட இப்புஜங்களிரண்டைக் கொடுத்தனன. மேலும் என் வயிற்றில் கூரான கோரைப்பற்களையுடைய ஓர் முகத் தையும் கற்பித்தனன். அப்படியிருக்கிற நான் இவ் வனத்திற்கு வருகிற ஸிம்ஹங்களையும் யானைகளையும் மிருகங்களையும் புலிகளையும் நாற்புறமும் நீண்டபுஜங்க ளைப் பரப்பிப் பிடித்து இழுத்துப் பக்ஷித்துக்கொண் டிருக்கின்றனன். அவ்விந்த்ரன் என்னைப் பார்த்து 'எப் பொழுது ராமன் லக்ஷ்மணனுடன் வந்து யுத்தத்தில் உன்புஜங்களைத் துண்டிப்பானே, அப்பொழுது ஸ்வர்க் கம் பெறுவாய்' என்றனன். ராமா! ராஜஶ்ரேஷ்டனே! நான் இப்படிப்பட்ட சரீரத்தைப் பெற்றவனுகி இவ்வனத் தில் எதெது என்கண்ணுக்குப் புலப்படுமோ அதை யெல்லாம் பிடித்துத் தின்னவேண்டுமென்றே மிகவும் விருப்பமுற்றிருப்பேனன்றி ஒன்றையாவது பக்ஷிக்கத் தகாதென்று விடுகிறதில்லை. ரிஷியின் வார்த்தையை நம்பித தப்பாமல் ராமன் என்னிடம் வந்து அகப்படுவா னென்று நினைத்துக்கொண்டிருப்பேன். இங்ஙினைவை

யே முன்னிட்டு என்விகாரதேஹத்தை விடுவதற்கு மிக வும் ப்ரயத்னங்கொண்டு அதற்காக ராமன் என் கையில் அகப்படுவானே என்று அகப்பட்டவற்றையெல்லாம் பிடிப்பதற்கு என்மனம் மிகவும் பேராவலுற்றிருக்கும். ராமா! நீ அந்த ராமனே ஆகின்றனை. உனக்குச் சுபம் உண்டாகுமாக. ஏனெனில் என்னை வதிப்பது மற்றொரு வனுக்கு எவ்வளவும் ஸாத்யமன்று. இப்படி யதார்த்த மாகவே அந்த ரிஷி மொழிந்தனர். புருஷஶ்ரேஷ்டனே! நீங்களிருவரும் எனக்கு அக்னி ஸம்ஸ்காரம் செய்வீர் களாயின் பின்பு நான் ஆலோசனை சொல்லி உங்களுக் குப் புத்திஸஹாயம் செய்வேன். அவ்வளவேயன்றி உங்களுக்குத் தகுந்த நண்பனையும் தெரியச்சொல்லு வேன்' என்றனன். தனுவம்சத்தில் பிறந்த அக்கபந்தன் இங்ஙனம் சொல்லுகையில் தர்மாத்மாவாகிய ராமன், அருகிலிருந்து லக்ஷ்மணன் கேட்டுக்கொண்டிருக்கை யில், அவனைப் பார்த்து இவ்வசனத்தை மொழிந்த னன்:—'நானும் என் தம்பியும் ஜனஸ்தானத்தினின்று புறப்பட்டு ஓரிடம் போயிருக்கையில், அப்பொழுது ராவணன் நாங்களொருவரும் இல்லாதது பற்றிப் பெரும்புகழுடையவளும் பதிவ்ரதையுமாகிய என்ஸீதை யை ஸுகமாக எடுத்துக்கொண்டுபோயினன். அந்த ரா க்ஷஸனுடைய பேர்மாத்ரம் ஆப்தனுகிய ஜடாயுவால் எனக்குத் தெரியுமேயன்றி அவனது உருவமாவது இருப்பிடமாவது ப்ரபாவமாவது எங்களுக்குத் தெரி யாது. நாங்கள் துக்கத்தினால் பரிதபித்துக்கொண்டு திக்கின்றி இங்ஙனம் அலைகின்றனம்; மேலும் நாங்கள் பரோபகாரஞ் செய்துகொண்டிருப்பவர்; இப்படிப்பட்ட எங்கள் விஷயத்தில் தயைசெய்வது நிரம்பவும் தகுந் திருக்கின்றது. வீரனே! நாங்கள், யானைகள் முறித்து

வெகு காலமாகையால் நன்கு உலர்ந்திருக்கிற கட்டைகளைக் கொண்டுவந்து பெரிய பள்ளத்தை வெட்டி அதில் உன்னைக் கொளுத்தி விடுகின்றனம். உனக்கு நிஜமாகத் தெரியுமாயின், ஸீதையை எவன் எவ்விடத்திற்கு எடுத்துக்கொண்டு போயினனோ அதை எனக்குத் தெரியச் சொல்வாயாக. இப்படி உள்ளபடி சொல்வது எனக்கு எவ்வளவோ நன்மையாயிருக்கும். இப்படி எனக்குச் சுபத்தைச் செய்வாயாக' என்றனன். ராமன் இப்படி மொழிகையில் தனுவம்சத்திற் பிறந்தவனாகிய கபந்தன் அவ்வார்த்தையைக் கேட்டுப் பேசவல்லவனான ராமனுக்கும் மறுமொழி கூறவல்லவனாகையால் மிக்க மேலான வார்த்தையைச் சொல்லினன்:—'எனக்குத் திவ்யஜ்ஞானம் இல்லை. ஆகையால் ஸீதையின் போக்கை நான் அறியேன். என்னைத் தஹித்த பின்பு என்வாஸ்தவரூபத்தைப் பெற்று ஸீதையைப்பற்றி நானே சொல்ல முடியாமற்போயினும் ஸீதையை அறியவல்லவனைச் சொல்லுகிறேன். ப்ரபுவே! கொளுத்துவதற்கு முன்னம் எனக்கு உன் பார்வையைப் பறித்த மஹாவீர்யசாலியாகிய ராக்ஷஸனைத் தெரிந்து கொள்ள வல்லமையில்லை. ராமா! பாபதோஷத்தினால் என் திவ்யஜ்ஞானம் நசித்துவிட்டது. அப்படி நான் செய்த பாபகார்யத்தினாலேயே லோகநிந்தைக்கிடமான இந்த உருவம் எனக்கு நேரிட்டது. ராமா! ஸூர்யன் தன் குதிரைகள் இளைப்புற்று அஸ்தமயம் அடைவதற்கு முன்னமே என்னைப்பள்ளத்திலிட்டு நன்கு எரியும்படி தஹித்து விடுவாயாக. வீரனே! ரகுநந்தனா! நீ என்னை நன்றாகத் தஹித்த பின்பு, நான் ஸீதையை எடுத்துக்கொண்டுபோன ராக்ஷஸனை எவன் அறிவானோ அவனை உனக்குச் செல்லுகிறேன். ராமா! அவன் நீதியமைந்த நடவடிக்கையுடையவன். ஆகையால் அவனோடு நீ நட்பு செய்யக்கூடும். அவன் தீவ்ர பராக்ரமசாலி. ஆகையால் அவன் உனக்கு ப்ரீதியுடன்

ஸஹாயஞ்செய்வான். ராமா! மூன்றுலோகங்களிலும் அவனுக்குத் தெரியாத இடம் இல்லை. இவன் வேறொரு காரணத்தைப்பற்றி முன்பு ஸமஸ்தலோகங்களையும் திரிந்திருப்பவன்' என்றனன். எழுபத்தொன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

{ கபந்தன் அக்னிஸம்ஸ்காரம் அடைந்து நிஜ ரூபம் பெற்றுத் தகுந்த மித்ரனை ராமனுக்குத் தெரிவித்தல். }

வீரர்களான அந்த நரபதிகள் இங்ஙனம் கபந்தன் சொன்னதைக் கேட்டு அவன் சரீரத்தைப் பர்வதம் மறையும்படியான ஒரு பள்ளத்திலிட்டு அதில் நெருப்பை யிட்டனர். லக்ஷ்மணன் நன்றாக எரிந்த பெருங் கொள்ளிகளை நாற்புறத்திலும் இட்டுச் சிதையைப்பற்ற வைக்கையில் அது முழுவதும் எரிந்தது. அந்தக்கபந்தனது பெரும் சரீரம் நெய்மொத்தை போன்று மாம்ஸம் மிகவும் வளரப்பெற்றிருக்கையால், அதை அக்னி மெல்லமெல்லத் தஹித்தனன். மஹாபலனாகிய அந்தக் கபந்தன் பிறகு சீக்ரத்திலேயே சிதையை உதறிவிட்டு நிர்மலமான வஸ்த்ரங்களையும் திவ்யமான பூமாலையையும் தரித்துப் புகையின்றிய அக்னிபோல்ப்ரகாசித்துக் கொண்டு, அதினின்று எழுந்திருந்தனன். பிறகு அவன் மிகவும் ப்ரகாசித்துக்கொண்டு மேலான வெளுத்த வஸ்த்ரந்தரித்து விரல் முதலிய ப்ரத்யங்கங்களெல்லாவற்றிலும் மோதிரம் முதலிய பல பூஷணங்களை அணிந்து மிகவும் ஸந்தோஷமுற்று வேகமாக அந்தச் சிதையினின்று மேலுக்குக் கிளம்பினன். மஹாதேஜஸ்வியாகிய அவன் ஹம்ஸங்கள் பூட்டப்பெற்றுத் தகதகவென்று விளக்கமுற்று மிகவும் புகழை விளைப்பதான விமானத்தில் வீற்றிருந்து தன்னொளியால் பத்துத்திசைகளையும் விளங்கச்செய்துகொண்டு ஆகாயத்திற்சேர்ந்து ராமனைப் பார்த்து இவ்வாக்யத்தை மொழிந்தனன்:— ரகுகுலாலங்காரனே! நீ ஸீதையை எவ்விதத்தில் பெற

லாமோ அவ்விதத்தை உள்ளபடி கேட்பாயாக. ராமா! லோகத்தில் (ஸந்தி விக்ரஹம் யானம் ஆஸனம் த்வைதீபாவம் ஸமாஶ்ரயம் என்று) உபாயங்கள் ஆறு உள்ளவை. அவைகளைப்பற்றியே அரசர்கள் தாம் செய்கிற கார்யங்களையெல்லாம் ஆலோசித்துக் கொள்வார்கள். 'உபாயங்களால் என்' என்பாயோ? துரவஸ்தை யடைந்தவன் தன்னைப்போலவே துரவஸ்தையடைந்த மற்றவனோடு கூடிக் கார்யத்தைச் சாதித்துக்கொள்வான். ராமா! நீ பார்யை காணாதுபோகப்பெற்று மஹாவ்யஸனம் அடைந்திருப்பவனாகையால் லக்ஷ்மணனோடுகூடிய நீ துரவஸ்தையடைந்திருப்பவன். சிறந்த நண்பனே! ஆகையால் துரவஸ்தையால் பீடிக்கப்பட்டிருக்கிற நீ உன்னைப்போல் துரவஸ்தையடைந்திருக்கிற மற்றொருவனை அவஶ்யம் உனக்கு நண்பனாகச் செய்து கொள்ள வேண்டும். அப்படி செய்யாதபக்ஷத்தில் உன் கார்யஸித்தியைப் பற்றி எவ்வளவு ஆலோசித்துப் பார்க்கினும் அது உனக்கு உண்டாகுமென்று எனக்குத் தோற்றவில்லை. ராமா! அப்படிப் பட்டவனைச் சொல்லுகிறேன்; கேள். ஸுக்ரீவனென்று ஒருவானரன் உளன். அவனை அவனது அண்ணனும் இந்த்ரபுத்ரனுமாகிய வாலியென்பவன் கோபித்து ராஜ்யத்தினின்று துரத்திவிட்டனன். பலவந்தனாகிய அவ்வீரன் ஸுக்ரீவனென்பவன் பம்பாஸரஸ்ஸின் கரையில் விளங்குகிற ருஶ்யமூகமென்னும் பர்வதத்தில் நான்கு வானரர்களோடுகூட வாஸஞ்செய்கின்றனன். அவ்வானரேந்த்ரன் மஹாவீர்யமுடையவன்; தேஜஸ்வி; மிகவும் ப்ரபையுடையவன்; ஸத்யஸந்தன்; விநயமுடையவன்; தைர்யம அமைந்தவன்; மிகுந்த புத்தியுடையவன்; மிகவும் பெருந்தன்மைக்கிடமானவன்; மஹா ஸாமர்த்யமுடையவன்; ப்ரௌடன்; காந்திஸம்பன்னன்; மஹாபலபராக்ரமன். இப்படி உன்னைப்போன்ற குணமுடையவனாகையால் அவன் உனக்குத் தகுந்த நண்பன். ராமா! அவனது

அண்ணனுகிய வாலி, ராஜ்யநிமித்தமாக மஹாபலனுகிய அவனை ஊரினின்று துரத்திவிட்டனன். இப்படி உன்னைப்போல் துரவஸ்தையுமுடையவனுகையால் அவன் உனக்குத் தகுந்த நண்பன். ராமா! அவன் ஸீதையைத்தேடுவதிலும் ஹிதஞ்செய்வதிலும் உனக்கு ஸஹாயனும் ஸ்னேஹிதனுமாயிருப்பான். நீ மனவருத்தமுறவேண்டாம். இக்ஷ்வாகுகுலதிலகனே! மேலும், எது எப்படி ஆகவேண்டுமோ, அது அப்படியே ஆகுமன்றி அதை வேறுவிதமாகச் செய்ய எவர்க்கும் ஸாத்யமன்று. காலத்தை எவரும் கடக்க வல்லவரல்லரென்பது வெளிச்சமே. ராமா! நீ இங்கிருந்து புறப்பட்டுச் சீக்ரம் மஹாபலனுகிய அந்த ஸுக்ரீவனிடம் போவாயாக. ராமா! நீ இப்பொழுதே இங்கிருந்து ஸுக்ரீவனிடம் சேர்ந்து உங்களிருவரில் ஒருவர்க்கொருவர் மீளவும் த்ரோஹபுத்தி உண்டாகாதிருக்கும்படி அக்னியைச் சாக்ஷியாக வைத்துக்கொண்டு அவனுடன் ஸ்னேஹஞ் செய்துகொள்வாயாக. அந்த ஸுக்ரீவனைக் கேவலம் ஒரு வானரனுக அவமதிக்கலாகாது. அவன் வானரப்ரபு; நன்றியுடையவன் (க்ருதஜ்ஞன்;) காமரூபி; தானும் ஆபத்தை அடைந்து ஸஹாயத்தை அபேக்ஷித்திருப்பவன். ஆகையால் அவன் உன்னுடன் ஆதரத்தோடு ஸ்னேஹம் பண்ணிக்கொள்வான். மேலும் அவன் மஹா பராக்ரமசாலி. அவனை அற்பமாக நினைக்கவேண்டாம். நீங்களிருவரும் இப்பொழுது அந்த ஸுக்ரீவன் நிறைவேற்ற விரும்புகிற கார்யத்தைச் சாதிப்பதற்குச் சமர்த்தர்களே. அவனும் தன் கார்யம் நிறைவேறினும் நிறைவேறாமற் போயினும் உன் கார்யத்தை அவஶ்யஞ் செய்து முடிப்பான். அவன் ருக்ஷரஜஸ்ஸென்பவனுடைய க்ஷேத்ரத்தில் பிறந்தவன். ஸூர்யனுக்கு ஔரஸபுத்ரன்; வாலியோடு வைரம் செய்துகொண்டு அவ

னிடம் பயந்து பம்பாதீரத்தில் திரிந்து கொண்டிருக்கின்றனன். ராமா! அவ்வானரோத்தமன் ருஷ்யமூகபர்வதத்தில் வாஸஞ்செய்கின்றனன். அங்குள்ள வனங்களில் திரிந்துகொண்டிருப்பான். நீ புறப்பட்டுப்போய்ச் சீக்ரத்தில் அக்னியை மாத்ரமேயன்றி ஆயுதத்தையும் ஸாக்ஷியாக வைத்துக்கொண்டு சபதஞ்செய்து ஸ்னேஹஞ்செய்துகொள்வாயாக. அந்த வானரர்தலைவன் உலகத்தில் நரமாம்ஸத்தை ஆஹாரமாகக் கொள்ளுந் தன்மையரான ராக்ஷஸர்கள் வாஸஞ்செய்கிற ஸ்தானங்களை யெல்லாம் தன் ஸாமர்த்யத்தினால் அறிந்திருப்பவன். சத்ருக்களை அழிக்குந்தன்மையனே! ஆயிரங் கிரணங்களையுடைய ஸூர்யன் எதுவரையில் வெயில் காய்ந்து ப்ராகசிக்கின்றானோ அதுவரையில் இவ்வுலகத்தில் அந்த ஸுக்ரீவனுக்குத் தெரியாத ப்ரதேசம் கிடையாது. அவன் வானரர்களோடுகூடி நதிகளிலும் விசாலமான பர்வதங்களிலும் புகக்கூடாத பர்வதப்ரதேசங்களிலும் குஹைகளிலும் தேடி உன்பத்னியிருக்குமிடத்தைக் கண்டுபிடிக்க வல்லவன். உன்னைப் பிரிந்து பரிதபிக்கின்ற ஸீதையைத் தேடும்பொருட்டு அவன் பெருஞ்சரீரமுடைய வானரர்களை நான்குதிசைகளுக்கும் போக அனுப்புவான். அவன் ராவணன் வீட்டில் பாதிவ்ரத்யங்கெடாதிருக்கின்ற மடந்தையர் மணியாகிய ஸீதையைக் கண்டுபிடிப்பான். அந்த வானரர்தலைவன், உன் ப்ராணநாயகியான ஸீதை மேருசிகரத்தின் நுனியிலிருப்பினும் பாதாளத்தினுட் புகுந்திருப்பினும் அவ்விடம் சென்று ராக்ஷஸர்களெல்லோரையும் வதித்து உனக்கு மீளவும் கொண்டு வந்து கொடுப்பான்' என்றனன். எழுபத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## கபந்தன் ராமனுக்கு ஸுக்ரீவனிருக்குமிடத்தின் மார்க்கத்தைச் சொல்லி மறைதல்.

காரியங்களை அறிந்த அந்தக் கபந்தன் இப்படி ராமனுக்கு ஸீதையைப் பெறும் உபாயத்தைத் தெரிவித்து மீளவும் பொருளடக்கமுடைய வாக்யத்தை இங்ஙனம் மொழிந்தனன்:—'ராமா! இதோ மேற்குத் திசையைச் சார்ந்து மரங்கள் புஷ்பித்து மனத்திற்கு இனியவைகளாகி விளங்குகின்றனவே, இதுதான் ருஷ்யமூகபர்வதத்திற்குப் போக அழகான வழி. இதோ நாவல் மரங்களும் முறளமரங்களும் பலாமரங்களும் கல்லொளிமரங்களும் (அல்லது-இராளிமரங்களும்) ஆலமரங்களும் திந்துகவ்ருக்ஷங்களும் அரச மரங்களும் கோங்குமரங்களும் மாமரங்களும் தவவ்ருக்ஷங்களும் நாககேஸரமரங்களும் மஞ்சாடி மரங்களும் புங்கமரங்களும் கறுத்த அசோகவ்ருக்ஷங்களும் கடப்பமரங்களும் புஷ்பித்த அலரிச்செடிகளும் சேராமரங்களும் அசோகவ்ருக்ஷங்களும் செஞ்சந்தன மரங்களும் வேப்பமரங்களும் மற்றும் பற்பலமரங்களும் அடர்ந்து புஷ்பித்து விளங்குகின்றனவே, இதுவே அழகான மார்க்கம். நீங்கள் அந்த வ்ருக்ஷங்களின்மேல் ஏறியாவது அல்லது வலிவினால் அந்த வ்ருக்ஷங்களை முறித்துக் கீழ் விழத் தள்ளியாவது அம்ருதம்போன்ற அம்மரங்களின் பழங்களைப் பக்ஷித்துக்கொண்டு போவீர்களாக. ராமா! அந்த வனத்தைத் தாண்டினவுடனே மரங்கள் புஷ்பித்திருக்கப்பெற்று நந்தவனத்தை நிகர்த்ததும் உத்தரகுருதேசம்போல் ஸர்வகாமங்களும் ஸம்ருத்தமாயிருக்கப்பெற்றதுமாகிய மற்றொருவனம் இருக்கின்றது. அங்குள்ள வ்ருக்ஷங்கள் [1] அனைவரும் ஆசைப்படத்தகுந்த பழங்களுடையவைகளும் எவர் எதை விரும்பினும்

1. இங்கு 'ஸர்வகாமஃலா:' என்று மூலம். இதற்குக் கோவிந்தராஜர் வியாக்கியானத்தின்படி (அனைவரும்) இத்யாதி. மஹேஶ்வரதீர்த்தர் வியாக்கியானத்தின்படி (எவர்) இத்யாதி.

அவற்றையெல்லாம் கொடுக்கவல்லவைகளுமாகித் தேன்களைப் பெருக்கிக்கொண்டிருக்கும். சைத்ரரதமென்கிற குபேர வனத்தில்போல் அந்த வனத்தில் எப்பொழுதும் ஸமஸ்த ருதுக்களும் மாறுதிருக்கும். அவ்வனம் முழுவதிலும் வ்ருக்ஷங்கள் பெரிய கிளைகளுடையனவாகிப் பழங்களின் பாரத்தினுல் வணங்கி அங்குள்ள மேகங்கள் போலவும் பர்வதங்கள்போலவும் ப்ரகாசித்துக்கொண்டிருக்கும். லக்ஷ்மணன் அந்த வ்ருக்ஷங்களின் மேலேறியாவது அல்லது அந்த மரங்களைக் கீழ் விழத்தள்ளியாவது அம்ருதம்போன்ற அவைகளின் பழங்களைப்பறித்து உனக்குக் கொடுப்பான். ராமா! பிறகு வீரத்தன்மை பொருந்திய நீங்கள் ஓர் மலையினின்று மற்றொருமலைக்கும் ஓர் வனத்தினின்று மற்றொரு வனத்திற்கும் ஆக இப்படி சிறந்த ப்ரதேசங்களுக்கு மேன்மேல் நடந்து சென்று கடைசியில் பம்பையென்னும் புஷ்கரிணிக்குப் போய்ச் சேருவீர்கள். அதில் முள்ளுபோல் பொற்றுகிற மணியாம்பறல்கல்கள் அகப்படா. அதன் கரைகள் சரியாமல் ஒழுங்காயிருக்கும். அதன் துறைகள் மேடுபள்ளமில்லாமல் ஸமமாயிருக்கும். அதில் வேலம்பாசியென்பதே இராது. சேறில்லாமையால் மணல் பாய்ந்திருக்கும். தாமரைகளும் நைதல்களும் நிறைந்திருக்கும். ராமா! அதில் ஹம்ஸங்களும் தவளைகளும் க்ரௌஞ்சப்பறவைகளும் அழுகுரல் பக்ஷிகளும் ஜலத்தில் திரிந்துகொண்டு இனிதாகக் கூவிக்கொண்டிருக்கும். அழகான இந்தப் பறவைகள் ஹிம்ஸையை அறியாதவைகளாகையால் மனுஷ்யர்களைப் பார்த்துப் பயந்தோடமாட்டா. மற்றும், அவை பருத்து நெய்மொத்தை போன்றிருக்கும். அவைகளைப் பிடித்து நீங்கள் பக்ஷிக்கலாம். ராமா! அந்த ஸரஸ்ஸில் லக்ஷ்மணன், நன்றாகப் பருத்து விசேஷமுள்ளில்லாமல் மேலாயிருக்கின்ற [1] ரோஹிதம் வக்ரதுண்டம் நடமீனம் முதலிய மத்ஸ்யங்களைப் பாணங்

1. ரோஹிதம்—செங்கயல்மீன். வக்ரதுண்டம்—கோணலான முகமுடைய மத்ஸ்யம்-நடமீனம்-அயிரைமீன்.

களால் அடித்து மேல்தோல்களையும் இறகுகளையும் வாங்கிப்போகட்டு இருப்புச் சூலங்களில் குற்றிப் பசனஞ் செய்து பக்தியுடன் உனக்குக் கொடுப்பான். நீ அங்ஙனம் இஷ்டப்படி மத்ஸ்யங்களைப் பக்ஷித்துக் கொண்டிருக்கையில் இந்த லக்ஷ்மணன் புஷ்பஸமூஹங்களில் ஸம்பந்தித்திருக்கையால் தாமரை வாஸனை கமழப்பெற்றுப் பாபத்தைப் போக்கும் வல்லமை அமைந்து மிகவும் குளிர்ச்சியின்றி ஆரோக்யத்தை விளைப்பதும் ஸர்வகாலமும் அழுக்கின்றி நிர்மலமாயிருப்பதும் தாமரையிலையில் எடுக்கப்பட்டு வெள்ளிபோலும் ஸ்படிகம் போலும் தளதளவென்று விளக்கமுற்றிருப்பதுமாகிய ஜலத்தைப் பம்பாஸரஸ்ஸினின்று கொண்டுவந்து உன்னைப் பருகச்செய்வான். புருஷஸ்ரேஷ்டனே! மிகவும் பருத்திருப்பவைகளும் வனங்களில் திரிபவைகளும் பர்வதகுஹைகளில் படுத்திருப்பவைகளும் எருதுகள் போன்றவைகளுமாகிக் கர்ஜித்துக்கொண்டிருக்கின்ற அழகிய பன்றிகள் தண்ணீர்குடிக்கும்பொருட்டு வரக்காண்பாய். ராமா! நீ ஸாயங்காலத்தில் உலாவிக்கொண்டு மலர்ந்த புஷ்பராசிகளைத் தரித்திருக்கின்ற வ்ருக்ஷங்களையும் பம்பாஸரஸ்ஸினுடைய குளிர்ந்த நீரையும் காண்பாயாயின் சோகத்தைத் துறப்பாய். ராமா! நீ அங்குப் புஷ்பங்கள் நிறைந்த மஞ்சாடி மரங்களையும் புங்கமரங்களையும் மலர்ந்த நெய்தல்களையும் தாமரைகளையும் பார்த்து மனக்கவலை தீரப்பெறுவாய். ராமா! அங்கு அந்தப் புஷ்பங்களைப் பறித்துத் தொடுத்து அணிபவன் எவனுமே இல்லை. அவை வாடிப்போகா; அலர்ந்து உதிர்தலும் பெறா; புதிய புஷ்பங்கள்போலவே எப்பொழுதும் புலப்பட்டுக்கொண்டிருக்கும். அங்கு மதங்கமாமுனியின் சிஷ்யர்களாகிய மஹர்ஷிகள் சிறந்த ஸமாதியுடையவர்கள் இருந்தனர். அம்முனிவர்கள் தம் குருவான மதங்க மஹர்ஷிக்காக வன்யபதார்த்தங்களைக்கொண்டு போகும்பொழுது அவைகளின் பாரத்தால் பீடிக்கப்

பட்டவராகையில், அவர்களது தேஹத்தினின்று தரையில் வீழ்ந்த புழுக்கஜலத்துளிகள் அனைத்தும் அவரது தவமஹிமையால் அப்பொழுது புஷ்பங்களாயின. ராமா! அந்தப் புழுக்கஜலத்துளிகள் காற்றால் வீசப்பட்டுச் செடிகள்மீது படிந்து புஷ்பங்களாகி அவரது தவமஹிமையால் நாசம் அடையாதிருக்கின்றன. ராமா! அந்த மதங்கமுனியின் சிஷ்யர்கள் அனைவரும் ஸ்வர்க்கஞ்சென்றனர். அவர்களுக்குப் பரிசாரிகையும் நெடுநாளாக ஜீவித்திருப்பவளும் ஸந்நியாஸிதர்மத்திலிருப்பவளுமாகிய சபரியென்பவள் ஒருத்தி மாத்ரம் இப்பொழுதும் இருக்கின்றனள். ராமா! எப்பொழுதும் குருசுச்ரூஷையென்னும் தர்மத்திலேயே நிலைநின்றிருக்கின்ற அந்தச் சபரி, ஸர்வபூதங்களாலும் நமஸ்கரிக்கப்பட்டவனும் தேவர்களை நிகர்த்தவனுமாகிய உன்னுடைய தர்சனம்பெற்றுத்தேவலோகத்திற்குப்போவாள். ராமா! பிறகு நீ அந்தப் பம்பாஸரஸ்ஸின் [1] பச்சிமதீரத்திற்குப் போவாயாயின், அங்கு உத்தமமாயிருப்பதும் பிறர்க்குக் காணமுடியாமல் ரஹஸ்யமாயிருப்பதுமாகிய சபரியின் ஆச்ரமத்தைக் காண்பாய். அந்த வனத்திலும் மேல்சொல்லப்போகிற ருச்யமூகபர்வதத்திலும் பற்பலவகைப்பட்ட யானைகள் இருக்கின்றன. ஆனால் அந்த ஆச்ரமத்தை அங்குள்ள யானைகள் எவ்வளவும் அணுக முடியாது. ஏனென்றால் அவ்வனம் மதங்க மஹர்ஷியின் நிர்மாணத்தால் உண்டானது. (அம்மஹிமையால் அவ்வனத்தில் அந்த யானைகள் புக வல்லவையல்ல.) ராமா! நந்தனவனத்திற்கு நிகராகிச் சைத்ரரதம் முதலிய தேவவனங்களின் உத்யானங்களை நிகர்த்துப் பலவகைப் பக்ஷிகள் நிறைந்திருக்கப்பெற்ற அந்த வனத்தில் நீ மனவருத்தம் தொலையப்பெற்று விளை

---

1. மேலக்கரைக்கு

யாடிக்கொண்டிருப்பாய். அந்தப் பம்பாஸரஸ்ஸுக்குக் கிழக்கில் புஷ்பித்த வ்ருக்ஷங்கள் நிறைந்த ருஶ்யமூகபர்வதம் இருக்கின்றது. அங்கு யானைக்குட்டிகள் காப்பாக நாற்புறமும் சூழ்ந்திருக்கையால் ஏறுவதற்கு மிகவும் கஷ்டமாயிருக்கும். மேலும் பூர்வகாலத்தில் ப்ரஹ்மதேவன் 'இது ஒரு நிமித்தத்தினால் புகழ்பெறும்' என்று அனுக்ரஹித்தனன். 'அந்தப் புகழ்தானும் யாது' என்கிறாயோ? ராமா! அந்த ருஶ்யமூகபர்வதத்தின் சிகரத்தில் படுத்த புருஷன் எந்தத் தனத்தைப் பெற்றதாக ஸ்வப்னம் காண்பானோ அந்தத் தனத்தை விழித்துக்கொண்டபின்பும் தப்பாமல் அப்படியே பெறுவான். மற்றொரு அதிசயமும் உண்டு. பாபிஷ்டனும் துராசாரனும் அந்தப் பர்வதத்தின்மேல் ஏறிப்போக வல்லனல்லன். எவனாவது துராசாரமுற்ற பாபிஷ்டன் அதன்மேல் ஏறுவானாயின், ராக்ஷஸர்கள் இவனை அங்கேயே நித்ரைபோகும்பொழுது பிடித்துக் கொன்றுவிடுவார்கள். ராமா! மதங்கவனத்திலுள்ள யானைக்குட்டிகள் பம்பாஸரஸ்ஸில் விளையாடிககொண்டிருக்கையில் அந்தப் பெருக்த்வனி ஸமீபமாயிருக்கையால்ருஶ்யமூகபர்வதத்திலுங்கூடச் செவிப்பட்டுக்கொண்டிருக்கும். மேகம்போல் கறுத்து மிகவும் பலிஷ்டங்களாகிய அங்குள்ள மேலான யானைகள் ஒன்றோடொன்று போர்செய்து அடித்துக்கொண்டு ரக்தம் பெருகப்பெற்று ரக்தப்ரவாஹத்தில் நனைந்து பிறகு வேறுவேறாகக் கலந்து விளையாடிக்கொண்டிருக்கும். வனத்தில் திரிகின்ற அந்த யானைகள் பம்பாஸரஸ்ஸில் நிர்மலமும் ஸுகசீதலமாயிருப்பதும் ஆரோக்யத்தை விளைவிப்பதுமாகிய ஜலத்தைக் குடித்துக் களிப்புற்று வனங்களில் புகுந்து செல்லும். நீ அங்குள்ள கரடிகளையும் புலிகளையும் நீல

மணிகள்போல் அழகிய ஒளி விளங்கப்பெற்று ஐயசீலங்களாகிய கறுப்புப்புள்ளிமான்களையும் பார்த்துச் சோகத்தைத் துறப்பாய். ராமா! அந்தப் பர்வதத்தில் கல்லால் மூடப்பட்டிருக்கிற ஓர் பெருங்குஹை ப்ரகாசிக்கின்றது. அதனுள் புகுவது மிகவும் கஷ்டம். அந்தக்குஹையின் கீழ்த்வாரத்தில், ஓரங்களில் காய்கிழங்குகள் நிரம்பப்பெற்றுப் பலவகை ம்ருகங்களோடுகூடிக் குளிர்ந்த ஜலத்துடன் விளங்குகிற ஓர் பெரிய மடு இருக்கின்றது. ஸுக்ரீவன் நான்கு வானரர்களோடு கூடி அந்தக்குஹையில் இருக்கின்றனன். ஒரு காலத்தில் அவன் விளையாடும் பொருட்டு அந்தப்பர்வத சிகரத்தின் மேல் இருப்பான். ஒருகால் பூமியில் இருப்பான்.' என்றனன். வீர்யசாலியாகிய அந்தக் கபந்தன், அங்ஙனம் ராமலக்ஷ்மணர்களிருவர்க்கும் சொல்லிப் புஷ்பமாலைகளை அணிந்து ஸூர்யனுடைய ஒளிபோன்ற ஒளியுடையவனாகி ராமனது அனுமதியின்பொருட்டு ஆகாசத்தில் நின்று ப்ரகாசித்தனன். ராமலக்ஷ்மணர்கள் அனந்தரம் புறப்படத்தொடங்கி ஆகாயத்தில் இருக்கின்ற மஹானுபாவனாகிய கபந்தனைக் கிட்டி 'நீ இனிப் போகலாம்' என்றனர். அப்பொழுது கபந்தனும் அவ்விருவரையும் பார்த்துக் 'கார்யஸித்தியின் பொருட்டு நீங்கள் போவீர்களாக' என்று மொழிந்து அவர்கள் மிகவும் ப்ரீதியுடையவர்களாகி அனுமதி கொடுக்கப் பெற்றுப் போயினன். அப்பொழுது அந்தக்கபந்தன் அங்ஙனம் திவ்யரூபம்பெற்றுப் பேரொளியுடன் ஸூர்யன் போன்ற தேஹத்துடன் ப்ரகாசித்துக்கொண்டு ஆகாயத்தில் கொஞ்சதூரஞ் சென்று மீளவும் ராமனைப் பார்த்து நின்று ருஶ்யமூகமார்க்கத்தைக் காண்பித்துக் கொண்டு 'ஸுக்ரீவனோடு தப்பாமல் ஸ்னேஹஞ்செய்து கொள்வாயாக' என்று மொழிந்தனன். எழுபத்துமூன்றுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராமலக்ஷ்மணர்கள் சபரியின் ஆஸ்ரமத்திற்குப் போதலும், சபரி அவர்களைப் பூஜித்தலும், மதங்கசிஷ்யர்களின் ஆஸ்ரமாதிகளைக் காண்பித்தலும், சபரி பரமபதத்திற்குப் போதலும்.

ராஜபுத்ரர்களாகிய அந்த ராமலக்ஷ்மணர்கள் அந்த வனத்தில் மேற்குத்திசையைப் பிடித்துக் கபந்தன் காட்டின பம்பாஸரஸ்ஸின்மார்க்கத்தைக் குறித்து ப்ரயாணமாய்ப் போயினர். அந்த ராமலக்ஷ்மணர்கள் பர்வதங்களில் முளைத்திருப்பவைகளும் தேன்போன்ற பழமுடையவைகளுமான பல வ்ருக்ஷங்களைப் பார்த்துக்கொண்டே ஸுக்ரீவனைப் பார்க்கப் போயினர். அந்த ராகவர்கள் அன்றிரவு ஒரு பர்வதத்தின்மேல் வஸித்திருந்து மற்றைநாள் காலையில் பம்பாஸரஸ்ஸின் மேல்கரைக்குப்போய்ச் சேர்ந்தனர். அவர்கள் பம்பாஸரஸ்ஸின் பஸ்சிமதீரத்தைச் சேர்ந்து பிறகு அங்கு அழகான சபரியின் ஆஸ்ரமத்தைக் கண்டனர். அவர்கள் பலவ்ருக்ஷங்கள் சூழ்ந்திருக்கப்பெற்ற அந்த ஆஸ்ரமத்தைச் சேர்ந்து அதன் அழகைக் கண்டு மிகவும் வியப்புற்றுப் பார்த்துக்கொண்டே சபரியினிடம் போயினர். அப்பொழுது யோகஸித்தி பெற்றிருக்கின்ற அந்தச்சபரி, அந்த ராமலக்ஷ்மணர்களைப் பார்த்தவுடனே எழுந்திருந்து அஞ்சலிசெய்து ராமனது பாதங்களையும் புத்தியமைந்த லக்ஷ்மணனது பாதங்களையும் பிடித்துக்கொண்டு நமஸ்காரஞ்செய்தனள். அனந்தரம் அவர்களுக்கு விதிப்படி அர்க்யபாத்யங்களையும் ஆசமனீயத்தையும் கொடுத்து மற்றுஞ்செய்யவேண்டிய உபசாரங்களையெல்லாஞ் செய்தனள். அனந்தரம் ராமன் கொடிய வ்ரதங்களை யாசரிப்பவளும் ஸந்நியாஸிதர்மத்தில் நிலைநின்றவளுமாகிய அந்தச் சபரியைக் கண்டு 'தபோதனே! நீ தபோவிக்

னங்களையெல்லாம் வென்றுவிட்டனையல்லவா? உன் தபஸ்ஸு மேன்மேலும் வளர்ந்து வருகின்றதல்லவா? கோபத்தையும் ஆஹாரத்தையும் அடக்கிக்கொண்டு ஸுகமாயிருக்கின்றனையா? அழகாகப் பேசுந்தன்மைய ளே! நீ சாந்த்ராயணம் முதலிய வ்ரதங்களெல்லாம் கை புகப்பெற்றனையா? உன்மனம் களிப்புற்றிருக்கின்றதா? நீ செய்த குருசுஶ்ரூஷை பயன்பெற்றதா?' என்று ப்ரீதி யுடன் வினவினன். தபஸ்ஸில் நிலைநின்றவளும் ஸித்தி பெற்றவளும் ஸித்தர்களால் கௌரவிக்கப்பட்டவளும் கிழவியுமாகிய அந்தச் சபரி, ராமன் அங்ஙனம் வினவு கையில் அவனுக்கெதிரே நின்று 'இப்பொழுது உன் தர்சனத்தினால் எனக்குத் தபஸ்ஸித்தி உண்டாயிற்று. நான் நடத்தின தவமெல்லாம் ஸபலமாயிற்று. இப்பொ ழுது என் குருக்களும் நன்கு பூஜிக்கப்பட்டனர். அவர்க் குச் செய்த சுஶ்ரூஷையும் பயன்பெற்றது. புருஷஶ் ரேஷ்டனே! தேவதைகள் அனைவரிலும் சிறந்தவனாகிய (விஷ்ணுதேவனாகிய) உன்னைப் பூஜித்ததனால் இப்பொ ழுது என் ஜன்மம் ஸபலமாயிற்று. எனக்கு இனிப் பரம பதமும் ஸித்திக்கக்கூடும். சத்ருக்களை யழிப்பவனே! ரகுகுலகுமாரனே! உன் குளிர்ந்த பார்வையால் பாபங்க ளெல்லாம் தொலையப்பெற்றுப் பரிசுத்தையாயினன். உனது அனுக்ரஹத்தினால் அழிவில்லாத புண்யலோகங் களைப் (புனராவ்ருத்தியில்லாத பரமபதத்தைப்) பெறு வேன். 'ஆனால் உனது ஆசார்யர்களோடுகூடவே ஏன் நீ போகவில்லை' என்கிறாயோ? நான் சுஶ்ரூஷை செய்து கொண்டிருந்த மதங்கமுனிவரின் சிஷ்யர்களாகிய என் ஆசார்யர்கள், நீ சித்ரகூடம் வந்து சேர்ந்தபொழுதே, நிகரின்றி விளங்குகின்ற மேலான விமானங்களில் ஏறிக் கொண்டு அங்கிருந்து திவ்யலோகங்களுக்குக் கிளம்



1593. சபரி ராமனுக்கு அதிதி ஸத்காரஞ் செய்தல்.

பிப் போயினர். அவர்கள் தர்மங்களை உணர்ந்தவர்; மேலும் வரப்போகிற ஸமாசாரங்களை அறியும்படியான மஹா பாக்யமுடையவர்கள். ஆகையால் என்னைப் போன்றவர்களுக்குப் பகவானை அடைவதற்கு ஸாதனமான யோகம் இல்லாமற் போயினும் ஆசார்யர்களின் அநுக்ரஹத்தினால் பகவானுடைய அநுக்ரஹம் பெற்று அதனால் நற்கதியைப் பெறலாமென்றறிந்து அம்மஹர்ஷிகள் என்னைப் பார்த்து 'ராமன் மிகவும் பரிசுத்தமான இந்த உன் ஆஶ்ரமத்திற்கு வருவான். அப்பொழுது நீ அதிதியாகிய ராமனையும் லக்ஷ்மணனையும் அதிதி ஸத்காரத்துடன் எதிர்கொண்டு பூஜிக்கவேண்டும். நீ அந்த ராமனைப் பார்த்து, அந்த நிமித்தத்தினால் புனராவ்ருத்தியில்லாத மேலான புண்ய லோகங்களைப் பெறுவாய்' என்றனர். புருஷஶ்ரேஷ்டனே! ஆண்சிங்கமே! நான், உனக்காகப் பம்பாஸரஸ்ஸின்கரையில் விளைகின்ற பல மூலாதியான வன்யபதார்த்தங்களை அந்தந்த ஜாதியின் மாதுர்யத்தைப் பரீக்ஷித்துப் பார்த்து மிகவும் மதுரமாயிருப்பவைகளை ஸம்பாதித்துப் பத்ரமாக வைத்துக் கொண்டிருக்கின்றேன். அவற்றை நீ அமுது செய்தருளவேணும்' என்றனள். சபரி இங்ஙனம் சொல்லுகையில் தர்மாத்மாவாகிய ராமன் ஹீனஜாதியளாயினும் ஆசார்ய அநுக்ரஹத்தினால் எப்பொழுதும் ப்ரஹ்மஜ்ஞானத்திற்கு வெளிப்படாமல் அதை அநுஸந்திப்பதில் மனவூக்கங் கொண்டிருக்கின்ற அவளைப் பார்த்து இவ்வசனத்தை மொழிந்தனன்:—'தநு கபந்தன் மூலமாய், மஹாநுபாவராகிய உன் குரு மதங்கருடைய ப்ரபாவத்தை உள்ளபடி கேட்டனன். அந்த ப்ரபாவத்தைக் காட்ட உனக்கு இஷ்டமுண்டாயின், ப்ரத்யக்ஷமாகப் பார்க்க விரும்புகின்றேன்' என்றனன். ராமனது முகத்தினின்றும் புறப்

பட்ட அவ்வாக்யத்தைக் கேட்டவுடனே சபரி அவர்க ளிருவர்க்கும் அந்த மஹாவனம் முழுவதையும் காண் பித்தனள். 'ராகுநந்தனு! கறுத்து நிகுநிகுத்துப் புலப் படுகின்றமையால் பெரிய மேகம்போன்று ம்ருகங்களும் பக்ஷிகளும் நிறையப்பெற்ற இவ்வனத்தைக் காண்பா யாக. இது மதங்கவனமென்று ப்ரஸித்தி பெற்றிருக் கும். பேரொளியனே! பரமாத்மாவை அறிந்த எனது குருக்கள், மந்த்ரங்களையுணர்ந்தவர் ஆதரித்துப்போரு கிற மந்த்ரங்களால் பூஜிக்கப்படும் கங்காதிபுண்யதீர்த் தங்களை இங்கு வரவழைத்திருக்கின்றனர். இதோ! தேவபூஜாஸ்தானமாகிய திண்ணை மேற்பக்கத்தில் பேடாகப் புலப்படுகின்றது; காண்பாய். நான் நன்ருகப் பரிசரணை செய்யப்பெற்ற என் குருக்கள் கிழத்தன்மை யால் இளைப்புற்றுக் கைகள் நடுங்கப்பெற்று இதில் புஷ் பங்களால் பூஜைசெய்து கொண்டிருந்தனர். ராமா! அவரது தவமஹிமையால் அக்னிவேதிகைகள், அவர் கள் ஸமீபித்திருக்கப்பெருத இக்காலத்திலுங்கூட ஒப் பில்லாத காந்தியுடன் விளக்கமுற்றுத் திசைகளையெல் லாம் விளங்கச்செய்துகொண்டிருக்கின்றன; பார். என் குருக்கள் உபவாஸங்களால் இளைப்புற்றுச் சக்தியற்று வெகுதூரம் போகமுடியாமல் மனத்தினுல் நினைத்தமாத் ரத்தில் ஸப்த ஸமுத்ரங்களும் அவரது ஆஶ்ரமத்திற் கே வந்திருக்கின்றன; பார்! ரகுநந்தனு! அவர்கள் இந்த ஸமுத்ரங்களில் ஸ்நானஞ்செய்து வ்ருக்ஷங்களில் ஆரப் பரிமாறின மரவுரிகள், அவரது சரீரத்தில்பட்ட மஹி மையால் இப்போதும் உலராதிருக்கின்றன; பார். அவர் கள் தேவபூஜை செய்யும் பொருட்டு நெய்தல்களையும் மற்றுமுள்ள புஷ்பங்களையும் சேர்த்துக்கட்டின இந்தப் பூமாலைகளும், பக்தியின் மிகுதியோடு ஸமர்ப்பிக்கப்

பட்டவையாதலால் இப்பொழுதும் வாடாதிருக்கின்றன. நீ இவ்வனத்தை முழுவதும் பார்த்தனே; கேட்கவேண்டியவற்றையெல்லாங் கேட்டனே. இனி உன்னிடம் அனுமதிபெற்று இந்தச் சரீரத்தைவிட விரும்புகின்றனன். இந்த ஆஶ்ரமம் எவருடையதோ, நான் எவருடைய பரிசாரிகையோ, ஆத்மவேதிகளான அந்த முனிவர்களின் பாதமூலத்தைப்பெற விரும்புகின்றேன்' என்றனள். ராமனும்லக்ஷ்மணனும், அந்தச் சபரிமிகவும் தர்மம் அமைந்திருக்கும்படி ஆசார்யவைபவத்தை விவரித்துக்காட்டின வாக்யங்களைக் கேட்டு, அது யாதொரு மாயமுமின்றி யதார்த்தமாயிருப்பது மிகவுமாச்சர்ய மென்றெண்ணி மிகவும் ஸந்தோஷமுற்றனர். பின்பு ராமன் ஆசார்ய பரிசர்யையென்னும் வ்ரதத்தைக்கைவிடாமல் திடமாகப்பற்றியிருக்கின்ற அந்தச் சபரியைக்கண்டு 'நீ என்னைப் பக்தியுடன் பூஜித்தனே. இனி நீ விரும்பின லோகங்களுக்கு இஷ்டப்படி செல்வாய்' என்றனன். ராமன் இவ்வாறு கூறுகையில் ஜடைகளைத் தரித்து மரவுரியையும் க்ருஷ்ணாஜினத்தையும் உடுத்திருக்கின்ற அந்தக் கிழவியாகிய சபரி அந்த முஹூர்த்தத்திலேயே ஜீர்ணமாயிருக்கின்ற தன் சரீரத்தைவிட விரும்பி அதை அக்னியில் ஹோமஞ் செய்து ஜ்வலிக்கின்ற அக்னியைப்போல் பளபளவென்று விளங்குகிற திவ்யதேஹந்தரித்துத் திவ்யலோகம் போயினள். அந்தச் சபரி திவ்ய ஆபரணங்களையும் திவ்யமாலைகளையும் திவ்யகந்தங்களையும் திவ்யவஸ்த்ரங்களையும் தரித்து மிகவும் தளதளவென்று விளங்குகின்ற மின்னற்கொடிபோல் அங்குள்ள ப்ரதேசத்தை விளங்கச்செய்து கொண்டு காண்போர்களுக்கு மிகவும் இனியளாகப் புலப்பட்டனள். சபரி ஆத்மஸ்வரூபவிஷயமான யோகமஹிமையினால்

புண்யாத்மாக்களும் மதங்கசிஷ்யர்களுமாகிய அம்மஹர்ஷிகள் க்ரீடித்துக்கொண்டிருக்கின்ற புண்ய ஸ்தானத்திற்குப் போய்ச்சேர்ந்தனன். எழுபத்து நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

—


ராமலக்ஷ்மணர்கள் பம்பாஸரஸ்ஸுக்குப் போதல்.


அந்தச் சபரி, தன் தேஜஸ்ஸினால் ப்ரகாசித்துக்கொண்டு திவ்யலோகம் பெற்றவுடனே, ராமன் தம்பியாகிய லக்ஷ்மணனோடுகூட அம்மஹர்ஷிகளின் ப்ரபாவத்தையே சிந்தித்துக்கொண்டிருந்தனன். தர்மஸ்வபாவனாகிய அந்த ஸ்ரீராமன் மஹானுபாவர்களான அம்முனிவர்களின் ப்ரபாவத்தை நினைத்து நினைத்துத் தனக்கு ஹிதஞ் செய்பவனும் மனவூக்கமுடையவனுமாகிய லக்ஷ்மணனைப் பார்த்து மொழிந்தனன்:—'நல்லியற்கையுடையவனே! புஷ்பபலாதிகள் அற்புதமாயிருத்தல் ஸமஸ்த புண்யதீர்த்தங்களும் ஒன்று சேர்ந்திருத்தல் முதலியவற்றால் மிகவும் ஆச்சர்யத்தை விளைக்கின்ற இந்தப் பரமாத்மவேதிகளின் ஆஸ்ரமத்தைக் கண்டனம். இங்கு ம்ருகங்களும் புலிகளும் ஒன்றையொன்று ஹிம்ஸிப்பது தவிர்ந்து ஒன்றோடொன்று ஸ்னேஹித்திருக்கின்றன. பலவகைப் பக்ஷிகளும் இங்கு விளங்குகின்றன. லக்ஷ்மணா! இந்த ஏழு ஸமுத்ரங்களுடைய தீர்த்தங்களிலும் சாஸ்த்ரங்களிற் சொல்லியபடி ஸ்னானஞ் செய்தனம். பித்ரு தர்ப்பணமும் இங்கு நடத்தினம். லக்ஷ்மணா! அந்தந்த அசுபங்களெல்லாம் தொலைந்தன. இனிச் சுபம் ஸமீபித்தது. ஆதலால் என்மனம் இப்பொழுது யதார்த்தமாக ஸந்தோஷமுற்றது. புருஷஸ்ரேஷ்டனே! சுபம் வருமாயின், அது முன்னமே மனத்தில் தோற்றும்.

அங்ஙனம் மித்ரலாபம் முதலான சுபங்கள் மனத்தில் தோற்றுகின்றன. ஆகையால் சீக்ரம் புறப்படு. கண்ணுக்கு இனிதாகப் புலப்படுகின்ற அந்தப் பம்பாஸரஸ்ஸுக்குப் போவோம். அதற்கு ஸமீபத்தில் ருஶ்யமூக பர்வதம் ப்ரகாசிக்கின்றது. அந்தப் பர்வதத்திலேயே தர்மாத்மாவாகிய ஸூர்யகுமாரன் ஸுக்ரீவன் வாலி பயத்தினால் வானரவீரர்கள் நால்வரோடுகூட எப்போதும் வாஸஞ் செய்துகொண்டிருப்பான். ஸௌம்யனே! வானரஶ்ரேஷ்டனாகிய ஸுக்ரீவனைக் காண விரைகின்றனன். ஸீதையைத் தேடுவதெல்லாம் எனக்கு அவனாலன்றோ ஆகவேண்டியதாயிருக்கின்றது' என்றனன். தீரனாகிய அந்த ராமன் இங்ஙனம் சொல்லிக்கொண்டிருக்கையில், லக்ஷ்மணன் அவனைப்பார்த்து மொழிந்தனன்:- 'சீக்ரத்தில் இருவரும் அந்தப் பம்பாஸரஸ்ஸுக்குப் போவோம். என்மனமும் போகவேண்டுமென்று விரைகின்றது' என்றனன். பகைவரை யடக்குந்திறமையுடைய அந்த ஜனேஶ்வரன் ராமன் பிறகு லக்ஷ்மணனோடு கூட அந்த ஆஶ்ரமத்தினின்று புறப்பட்டுப் பம்பாஸரஸ்ஸுக்குப் போயினன். அனந்தரம் ராமன் அந்தப் புண்யஸரஸ்ஸைக் கண்டனன். முனிவர் முதலான பெரியோர்கள் அங்கு வாஸஞ்செய்து கொண்டிருந்தனர். அதில் நானாவிதமான செடிகொடிகள் நிறைந்திருக்கும்; மற்றும், குடிக்கத் தகுந்தபடி குளிர்ந்த ஜலப்ரவாஹம் பாய்ந்துகொண்டிருக்கும். மேலும், அது செந்தாமரைகளாலும் செங்கழுநீர்களாலும் சிவந்து குவியல் குவியலாகப் புஷ்பித்திருக்கின்ற ஆம்பற்கொடிகளால் வெளுத்துக் கருநெய்தல் கூட்டங்களால் கறுத்து இப்படி சித்ரகம்பளம்போல் நானாவர்ணமுடையதாகி ப்ரகாசித்துக்கொண்டிருக்கும். ராமன் ஓயாமல் ஜலப்ர

வாஹம் பெருகிக்கொண்டிருக்குந்தன்மையுள்ள அப்படிப்பட்ட பம்பாஸரஸ்ஸுக்கு தூரத்தில் சென்று அதன் ஸமீபத்தில் மதங்கஸரஸ்ஸென்று ப்ரஸித்திபெற்ற ஓர் மடுவில் ஸ்நானஞ்செய்தனன். பிறகு அந்த ராமலக்ஷ்மணர்கள் செந்தாமரைகளும் நெய்தல்களும் வெண்தாமரைகளும் செங்கழுநீர்களும் நிரம்பப்பெற்றுப் புஷ்பித்த மாந்தோப்புக்களோடுகூடி மயில்களின் கேகாரவங்களால் ஒலித்துக்கொண்டிருப்பதும் மஞ்சாடிமரங்களும் மாதுளைமரங்களும் தவவ்ருக்ஷங்களும் மருதைமரங்களும் புஷ்பித்த அலரிச்செடிகளும் நன்கு புஷ்பித்த புந்நாகவ்ருக்ஷங்களும் மாலதிப்புதர்களும் குருந்தப்புதர்களும் ஆலமரங்களும் நீர்வஞ்சிக்கொடிகளும் அசோக வ்ருக்ஷங்களும் ஏழிலைப்பாலைமரங்களும் தாழைமரங்களும் குருக்கத்திமரங்களும் மற்றும் பற்பல வ்ருக்ஷங்களும் நிரம்பப் பெற்றதும் பற்பல ஆபரணங்களை அணிந்த பெண்மணிபோல் புலப்படுவதுமாகிய அந்தப் பம்பாஸரஸ்ஸையும், அதன் ஸமீபத்தில் புஷ்பங்கள் நிறைந்திருப்பதும் நாற்புறங்களிலும் பருப்பருத்த மரங்களடர்ந்திருப்பதும் குருட்டுநாரைகள் அர்ஜுனகமென்னும் பறவை மரங்குத்திகள் கிளிகள் ஆகிய இவைகளும் மற்றும் பல பறவைகளும் கலகலவென்று குலாவப் பெற்றதுமாகிய ஓர் பெரிய வனத்தையும் பார்த்துக்கொண்டே மனக்கவலையின்றி மிக்க ஊக்கத்துடன் பக்ஷிகள் நிறைந்திருக்கின்ற அந்தப் பம்பாஸரஸ்ஸைச் சேர்ந்த மஹாவனத்தைக் கிட்டினர். ராமன் பிறகு குளிர்ந்த ஜலம் நிறைந்திருப்பதும் பற்பல பறவைகள் களித்திருக்கப்பெற்றதும் மரங்களால் ப்ரகாசிப்பதும் அழகியதுமாகிய பம்பாஸரஸ்ஸை அருகிற் சென்று கண்டனன். ராமன் நாநாவித வ்ருக்ஷங்களையும் பலவகைத் தடாகங்களை

யும் பார்த்துக் காமவெறி மீறப்பெற்றுப் பரிதாபமுற்றுப் பெரும்புகழ் பெற்ற பம்பையென்னும் மடுவைச் சேர்ந்தனன். அந்த ராமன், கரையோரங்களிலுள்ள வனங்களெல்லாம் புஷ்பித்திருக்கப்பெற்றதும் ஸாலவ்ருக்ஷங்களும் சண்பகமரங்களும் விளங்கப்பெற்று அழகாயிருப்பதும் வண்டுகள் குவியல்குவியலாக ரீங்காரஞ் செய்கையால் பெருங்கோஷமுற்றதும் பேரழகமைந்திருப்பதும் நிகரில்லாத சோலையுடையதும் ஸ்படிகம்போல் நிர்மலமான ஜலம் நிறைந்ததும் நுண்ணிய மணற்குன்றுகள் நிரம்பியதும் தாமரைகளும் செங்கழுநீர்களும் அமிதமாயிருக்கப்பெற்றதுமாகிய அந்தப்பம்பாஸரஸ்ஸைக்கண்டு உண்மையான பராக்ரமமுடைய ராகவன் அப்பொழுது லக்ஷ்மணனைப் பார்த்து இவ்வாக்யத்தை மொழிந்தனன்:—'இந்த ஸரஸ்ஸின் கரையிலேயே கைரிகதாதுக்களால் அலங்கரிக்கப்பட்டதும் பரிசுத்தமாயிருப்பதும் வருக்ஷங்கள் புஷ்பித்திருக்கப்பெற்றதுமாகிய ருஶ்யமூகமென்னும் ப்ரஸித்திபெற்ற பர்வதம் இருக்கிறதென்று முன்பு நமக்குக் கபந்தன் சொல்லினன். மஹாநுபாவனாகிய அத்தகைய ருக்ஷரஜஸ்ஸென்னும் வானரனுடைய புதல்வனும் மஹாவீர்யமுடையவனும் ஸுக்ரீவனென்று ப்ரஸித்தி பெற்றவனுமாகிய வானரன் அந்த ருஶ்யமூக பர்வதத்தில் இருக்கின்றனன். புருஷஶ்ரேஷ்டனே! நீ வானரஶ்ரேஷ்டனாகிய ஸுக்ரீவனிடம்போவாய்' என்றுரைத்து மீளவும் ஸத்யபராக்ரமனாகிய ஸௌமித்ரியைப் பார்த்து மொழிந்தனன்:—'ராஜ்யத்தைப் போக்கடித்துக் கொண்டனன். அதனால் துக்கத்திற்காளாயினன். அந்தத் துக்கங்களையெல்லாம் ஸீதையிடத்தில் மனம் பற்றி மறந்திருந்தனன். இனி அந்த ஸீதையையும் விட்டு, லக்ஷ்மணா! எப்படி ப்ராணன்களைப் பிடித்துக்

•

கொண்டிருப்பேன்' என்றனன். ராமன் மன்மதபாதையால் வருந்திச் சோகவேகத்தினால் சரீரம் முழுவதும் விலவிலத்து ஒன்றுஞ் செய்யமுடியாதிருக்கப் பெற்றுத் தான் சொல்லும் வார்த்தைகளைப் பாராட்டிச் செவியுறுகின்ற லக்ஷ்மணனைப் பார்த்து இங்ஙனஞ் சொல்லி அனந்தரம் மனோஹரமான பம்பையென்னும் தாமரையோடையில் ஸ்னானஞ்செய்யப் போயினன். பிறகு அந்த ஸ்ரீராமன் வெகுதூரத்தினின்று பெருவழி நடந்து வந்து மருகாந்தாரமாகையால் வழிநடக்கிறவர்களுக்கு ப்ரதிகூலமான கபந்தவனத்தை அனேக விக்னங்களுடன் முறையே கடந்து பார்க்க இனியவையான அரண்யங்களும் பலவகைப்பட்ட அனேக பக்ஷி ஸமூஹங்களும் நிறைந்து விளங்குகின்ற பம்பாஸரஸ்ஸைக் கண்டனன்.

எழுபத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.



ஆரண்யகாண்டம்

முற்றுப்பெற்றது.

ஸ்ரீராமசந்த்ரபரப்ரஹ்மணே நமஃ.



1. 'ஆரண்யகந்து ய: காண்டமதிபக்தி ஸமந்வித:। படேத்வா ஶ்ருணுயாத்வாபி ஸோமஸாயுஜ்யமாப்நுயாத்' (எவன் ஆரண்யகாண்டத்தை மிகுந்த பக்தியுடன் படிக்கிறானோ, அல்லது கேட்கிறானோ, அவன் ஸோமஸாயுஜ்யத்தைப் பெறுவான்) என்று ஆரண்யகாண்டத்தின் படன ஶ்ரவணபலன் ப்ரஹ்மாண்ட புராணத்தில் நூற்றுநாற்பத்தேழாவது அத்யாயத்தில் கூறப்பட்டது.